கழக வெளியீடு - ௪௫௫

திருக்குறள்

# அறத்துப்பால்

## தண்டபாணி விருத்தியுரை



பல்லாவரம்,

பொதுநிலைக் கழக ஆசிரியர், சுவாமி வேதாசலம் என்னும்

மறைமலை யடிகளின் மாணவர்,

நாகை - சொ. தண்டபாணிப் பிள்ளை அவர்கள்

எழுதியது.



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

ஸ்ரீமுக—ஆவணி

# பொருளடக்கம்

[எண் பக்கத்தைக் குறிக்கும்]

# பதிப்புரை

தமிழ்மொழியின்கண் முதன்மைபெற்றனவும், மிகப் பழையனவெனக்கொள்ளப்பட்டனவுமாகிய நூல்கள் தொல்காப்பியமும் திருக்குறளுமாம். தொல்காப்பியத்திற்கு உரை கண்டார் பலராதற்போன்று, திருக்குறளுக் குரைகண்டாரும் பலராயினர். திருக்குறள் உரை நூல்களில் மணக்குடவர், பரிமேலழகர் இயற்றிய இரண்டுரைகளுமே வழக்காற்றிலிருக்கின்றன. இவைகளிற் பரிமேலழகர் உரையே சிறந்ததெனப் பல்லோராலும் கொள்ளப்படுகின்றது. பொதுவாக, பரிமேலழகர் உரை மணக்குடவருரையிற் சிறந்து காணப்படினும், அழகர் வேறுபட் டுரைகண்ட பலவிடங்களிற் சிலவே சிறப்பாகவும், ஏனையவை சிறப்புறுதலவாகவும் உய்த்துணர்வார்க்குத் தோன்றக் கிடக்கின்றன. இவ்விரண்டு உரைகளும் அவ்வக்கால இயல்புகளை யொட்டியே எழுதப்பட்டிருக்கின்றன.

திருவள்ளுவர் எழுதிய திருக்குறட் கருத்துக்கள் எக்காலத்துக்கும், எந்நாட்டிற்கும், எச்சமயத்துக்கும் ஒத்தனவாகும என்பது தமிழ் நாட்டவரும், ஏனைய மேல்மேல் நாட்டவர்களும் கண்டதோ ருண்மைப் பொருளாகும். எனினும், சிற்சில குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் ஆரியக்கொள்கைகளுக்கேற்ப வருத்திப் பொருள் கொண்டிருப்பது இக்காலத்திய நூல் வல்லுநர்க்கும பொதுவறிவாளர்க்கும் விளங்காமற் போகாது. பரிமேலழகர் தமக்குமுன் உரை கண்ட ஆன்றோர் கருத்துக்களுக்கு மாறுனவற்றைக் கொள்ளுங்காற் சிற்சில விடங்களிற் றவறியுள்ளது அறிஞர்கட்குக் காணக்கிடக்கின்றது. இத்தகைய வேறுபாடுகளுக்கெல்லாம் ஒரு வழி காணுது குடவர் அழகர் உரைகளையே வைத்துக்கொண்டு மாறுபட்டுத் தமிழர்கள் தாம்தாம்

கொண்ட கருத்துக்களே சிறந்தனவென்று திரிபுகொண்ட மனத்துடன் குழப்ப மடைந்திருக்குங்கால் தண்டபாணிப் பிள்ளையவர்கள் திருக்குறட்கு ஒரு புத்துரை வகுக்க எண்ணியது தமிழர் செய்த புண்ணியமே யாகும். நமது தண்ட பாணிப் பிள்ளையவர்கள் திருக்குறளிற் பன்னாள ஊன்றிப் பழகி அம்மணற்கேணியைத் தொட்டுத் தொட்டு அறிவூறப் பெற்று, அறிதோ றறியாமையுங் கண்டு, அதன் கணனுந் தெளிந்து 'இதற்கு இதுவே' என ஒரு முடிவுக்கு வந்து ஒவ்வொரு குறட்பாவுக்கும் பொழிப்பு, அகலம், கருத்து, இயைபு, இலக்கணக் குறிப்புக்களேயன்றி ஆங்காங்குள்ள மொழிகளின் வரலாறுகளையும் எடுத்துக்காட்டி யுள்ளார்கள்.

இவர் நாகபட்டினம் என்னும் ஊரில் சோழிய சைவ வேளாளர் குலத்தில் சொக்கலிங்கப் பிள்ளையும் அவர் தம் மனைவியார் சுந்தரத்தம்மாளும் ஆற்றிய நோன்பின் பயனால் 2-1-1891-ல் அவர்கட்கு அருமைத் திருமகனாய்த் தோன்றினார். இளமையிலேயே குடும்பச் சுமையைத் தாங்க நேரிட்டமையின் இவர்தம் பள்ளிக்கல்வி பத்தாவது வகுப்போடு முடிவடைந்தது. பள்ளியிற் கல்வி கற்கும் போதே இவர் தமிழ் ஆங்கில மொழிகளைக் கருத்தூன்றிக் கற்றுவந்தமையின் வகுப்புக்களில் மேன்மை யடைந்தே வந்தனர். இதனால் இவர் பள்ளியை விட்டகன்றதும் புதுக் கதைகள் எழுதித் தமது குடும்ப வாழ்க்கையை ஒருவாறு செலுத்திக்கொண்டுவந்ததுமன்றித் தமிழ்ப் பெருங்காப்பியங் களிலும், தொல்காப்பியத்திலும் பயிற்சிபெற்று விளங்கினர். அக்காலத்தில் பல்லாவரம பொதுநிலைக்கழக ஆசிரியர் மறைத்திருவாளர் மறைமலையடிகள் இவர்தமக்கு ஆசிரிய ராக விருந்து நறுந்தமிழறிவை நன்கூட்டிவைத்தனர். ஆசிரியரவர்களின் முதன்மைபெற்ற சில மாணவர்களில் இவர் ஒருவராய்த் திகழ்ந்தனர்.

குடிசெய்தற்கென்றே இவர் சென்னையை விட்டு இரங்கூன் சென்றனர். அங்குத் தமது மனப்பான்மைக்குத் தக்க தொழிற் காணாது சில நாட்களில் அதனை விட்டுப் பினாங்குக்குச் சென்றனர். அவ்விடத்தில் இவரது ஆங்கிலப் புலமையைக் கண்டு ஓர் ஐரோப்பிய பாடசாலைத்தலைவர் இவரைத் தமது பள்ளியின்கண் ஓர் ஆசிரியராக அமர்த்திக் கொண்டனர். சிலநாட்களில் நீண்டதொரு விடுமுறைக் காலம் வர இவர் நாகைக்குத் திரும்பி வந்தனர். பின் இவருக்குத் திருமணம் நடைபெற்றது. இவர் மறுபடி பினாங்குக்குச் செல்லக்கூடாமை யாயினது அப்பள்ளிக்கூடத் தலைவருக்கு மிக்க வருத்தத்தை விளைத்தது.

பிறகு, இவர் சென்னை போலீஸ் டிப்டி கமிஷனர் திவான்பகதூர் S. பவானந்தம்பிள்ளை யவர்கள அமைத்த தமிழ்க் கழகத்தில் ஆசிரியராயிருந்து யாப்பருங்கலவிருத்தி தொல்—பொருளதிகாரம், இறையனாரகப் பொருள் முதலிய நூல்களை வெளியிடத் துணைபுரிந்து வந்தார். இப்போது நங்கழகத்துக்கு அமைச்சரா யமைந்திருக்கும் திரு. வ. திருவரங்கம்பிள்ளை யவர்கள் வேண்டுகோட் கிணங்கிக் 'குட்டித் திருவாசகம்' என்னும் திருக்கருவைப் பதிற்றுப்பத்தந் தாதிக்கு இவர் ஒரு நல்லுரை எழுதியிருந்தார். இந்நூன் மதிப்புரையில் 'நவசக்தி' ஆசிரியர் திரு. வி. கலியாண சுந்தர முதலியாரவர்கள் இவர்தம் உரைத்திறனைப் பற்றியும், தமிழ்க் கல்வித்துறையில் இவர் பெற்றிருந்த அளவு கடந்த ஆற்றலைப் பற்றியும் புகழ்ந்துவியந்துளார்.

இவ்வாறே இவர்தம் தமிழ்க் கல்வியறிவில் ஈடுபட்ட இக் கழக அமைச்சர், திருக்குறளுக்கு ஒரு விளக்கவுரை வகுக்குமாறு இவரைக் கேட்டுக்கொள்ள, அவ் வேண்டுகோட் கிணங்கி இவர் அவ்வாறே செய்யத் தொடங்கினர்;

அந்நாட்களில் இவர் இடையிடையே நோய்வாய்ப்பட்டு வருந்த இக்கழக அமைச்சர்தம் பேருதவியால் நோயின் கொடுமை அவ்வப்போது தணியப்பெற்றும் அறத்துப்பால் ஒன்றினையே முடித்துக் கொடுக்கக் கூடியவராயினர். இவர் நோய் காரணமாகவே 1-6-1922ல் இளமையிலேயே தமது 31-வது அகவையில் இறைவன் திருவடிநீழலடைந்தனர். 'சுதேசமித்திரன்' உதவிப் பத்திரிகாசிரியராயும், 'தனபாலன்' முதலிய புதுக்கதைகளுக்கு நூலாசிரியராயும் திகழ்ந்த நாகை திரு. சொ. கோபாலகிருட்டினபிள்ளை இவர்தம் தமையனாராவர்.

இவர் உரையியற்ற எடுத்துக்கொண்ட நூலாகிய திருக்குறள் இவர்தம் மனப்பாங்கிற்கு ஒத்ததாகவே காணப்பட்டது. இன்றேல் நோய்க்கிடையிலும் இவர் இவ்வரும் பெரு நூலுக்கு இத்தகைய உயர்ந்ததோருரை இயற்றியளிக்க முடிந்திராதென்பதே எமது துணிபு. இவ்வாறன்றி இவர் அக்காலத்தில் நோயற்ற உடல்நலம் பெற்றிருப்பாராயின் இப்புத்துரை இன்னும் எத்தகைய ஏற்றப்பெற்றமைந்திருக்குமோ யாமறியோம். இவ்வுரை நூலைப் பெற்றுக்காண்பவர்கள் இவ்வுண்மையை நன்கறிவார்கள்.

கற்றறிந் தடங்க லென்பது இவர் தமக்குற்றதோர் நல்லியல்பாகும். இவர் உள்ளத்தூய்மையும் தந்நலங் கருதாத் தன்மையும் வாய்ந்தவர். இவர் சொற்பொழிவு செய்வதிற் போராற்றலுடையவ ரல்லராயினும் உரை நூல்களும், உரைநடை நூல்களும் இயற்றுவதில் மிகவல்லவர். மிகவுஞ் சிக்கலான நூற்கருத்துக்களை "எண்பொருளவாகச் செலச் சொல்லும்" நுண்மைக் கல்வியறிவு வன்மை வாய்ந்தவர். இவர் காலத்திற்கேற்ற சீர்திருத்தத்தைப் பெரிதும் விரும்புபவர். வகுப்பு வேறுபாடும் சமய வேறு

பாடும் இவரிடம் மருந்துக்குங் கிடையா. ஆரவார வாடம் பரங்களை இவர் எள்ளளவும் விரும்பார். கல்லாதவராயினும் நற்குடிவந்த நன்மக்களையே இவர் பொருட்படுத்துவர்.

இவர்செய்த வேறு நூல்கள கனகாங்கி, சதாநந்தர், ஏகம் பஞ்சநதம், கலாசுந்தரி, மாயாவதி முதலிய புதுக்கதைக ளாகும். இவர் துணைகொண்டு வெளியிடப்பட்ட நூல்கள் பற்பல. 'நவீனகம' என்னும் ஒரு திங்கள் வெளியீட்டுக் குச் சிலகாலம் இவர் ஆசிரியராக அமர்ந்திருந்தனர்.

குடவர் அழகர்களின் உரைகளையும் பாணியவர்களின் உரையையும் ஒருசேரவைத்து ஒப்புநோக்குவார்க்குப் பாணி யவர்கள் உரையின் வேறுபாடுகள தெளிவிற் புலனுகாமற் போகா. பாணியவர்கள் ஒவ்வோர இயலுக்கும் அதிகாரத் துக்குந் தோற்றுவாய் செய்யுந்திறனும், ஒவ்வொரு குறண் மணிக்கும் பதவுரை, பொழிப்பு, அகலம, கருத்துக்கூறும் வன்மையும், முன்னுரைகளினின்றும் வேறுபடு மிடங்களை ஏதுகாட்டி நிறுவுந தன்மையும், மொழி மூலங்களை யெடுத் துக் காட்டித் தமிழ்மக்கள் தம் மொழிகளிற் சிலவற்றை ஆரிய மொழியெனவே மருண்டு கிடக்கும் பேதமையை விலக்கி யுண்மைகாட்டும் உயர்நிலையும், சொல்லாறறல்களை விரிவாக எடுத்துக் காட்டும வல்லாற்றலும், அதிகார வியைபையேயன்றி குறண்மணிகளின் இயைபையும் பொருத்திக் காட்டும் திருத்தமும் எவரும் நன்கு மதித்தற் குரியன.

ஒப்புரவறிதல், ஈகை, புலான்மறுத்தல், கூடாவொழுக்கம் என்ற அதிகாரங்களுக்குப் பாணியவர்கள் எழுதியிருக்கும் தோற்றுவாய்களையும்; 33, 55, 76, 85, 103, 134, 140, 155, 158, 161, 181, 202, 217, 218, 245, 259, 355 ஆகிய இக்குறண்மணிகட்கு அவர் எழுதியிருக்கும் விளக்க

விரிவுரைகளையும் ; 20, 21, 23, 45, 69, 71, 76, 79, 80, 88, 99, 101, 105, 107, 128, 134, 166, 178, 185, 210, 212, 228, 242, 251, 281, 297, 338 ஆகிய குறண்மணிகட்கு அவர் வேறுபட்டு எழுதியுள்ள உரைகளையும் உற்று நோக்குவார்க்குப் பாணியவர் களின் உரையின் ஏற்றம் தெள்ளிதிற் புலப்படும். இன்னும் அமிழ்தம், ஆக்ஞை முதலியவை தமிழ் மொழிகளேயென நிறுவிக்காட்டியிருப்பதும், உழவு, தோட்டி முதலிய மொழிகளின் ஆற்றலை எடுத்துக் கூறியதும் பாணியவர்களுக்குத் தமிழ்மொழியின்மீதுள்ள உண்மையன்பைத் தமிழுலகத்துக்கு நன்கறிவித்து, ஏனைத் தமிழ் மக்களும் அவ்வொழுகலாற்றைக் கடைப்பிடித்துத் தமிழின் ஏற்றத்தைப் போற்றவேண்டு மென்பதற்கு அறி குறியாகி நிற்கின்றன. பாணியவர்கள் மொழியிலக்கணங் கூறுந் திறமறிய விரும்புவோர் 127, 154, குறண்மணிகளை யும், வெஃகாமை, அழுக்காறுமை என்னுஞ் சொற்களின் மேற்குறிப்புக்களையும் நோக்கியறிவார்களாக. பாணியவர் களின் மொழிக்குமொழி உரைகூறி விளங்கவைக்கும் மாட்சியை ஒவ்வொரு குறண்மணியிடமுங் காணலாம். தாலிபுலாகநியாயமாக 286-ம் குறளைப் பார்க்க. ஆசிரியர் திருவள்ளுவர் தமது திருக்குறண் மணிகளிற் பொருட்பேறு கருதியல்லது சொற்களை வாளாதொடுத்தல்செய்யா மாட்சி யைப்பற்றிப் பாணியவர்கள் எடுத்துக்காட்டியுள்ளது மிகவும் போற்றற்பாலது; (வான் சிறப்பு 4, 7 உரைகளைப் பார்க்க.) பாணியவர்கள், வருணாசிரமதருமம் வள்ளுவர் கருத்தன்று; ஆரியர் கொள்கையது எனப் பரிமேலழகர் உரையைக் கண்டித்துக் காட்டியிருப்பதை ஒழுக்கம் என்னும் அதிகாரத் துக்குறண்மணிகளிற் காண்க. "குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே யுடம்போ டுயிரிடை நட்பு" என்னுங்

குறண்மணிக்குப் பாணியவர்கள் மணக்குடவர் உரையைச் சார்ந்து அவ் வுரையின் தகுதியை எடுத்துக்காட்டும் வன்மை மகிழ்ச்சியைத் தரத்தக்கது. பாணி யவர்கள் வேற்றுரை காணும்போதெல்லாம் முன்னுரைகள் தவறெனக் கண்ட வழி யல்லது மற்றவிடங்களில் 'ஏற்பதேற் கொள்க', 'கொள்ளத் தக்கதேற் கொள்ளுக, தள்ளத் தக்கதேற் றள்ளுக' என்று கூறும் பணிவுரை அவர்தம் உயர்குடிப் பாங்கை நன்கு புலப்படுத்துகின்றது.

பாணி யவர்கள் அறத்துப்பால் ஒன்றினுக்கே உரை யெழுதி ஏனைப்பால்களுக்கும் எழுதித் தருவதற்குமுன் இவ் வுலகை நீத்தது தமிழுலகஞ் செய்த தவக்குறைவே. இவ் வறத்துப்பாலுரையைப்போல் மற்ற உரைகளையும் தமிழுல கம் அடையக் கொடுத்து வையாமற் போனமை பெரிதும் வருந்தத்தக்கது. இதற்கு,

> "பலலான்ற கேள்விப் பயனுணாவார் வீயவும்
> கல்லாதாா வாழ்வ தறிதிரேற்—கல்லாதாா
> சேதன மெனனுமச சேறகக திண்மைபாற்
> கோதென்று கொள்ளாதாங் கூற்று"

என்னும் நாலடியார் வாக்கேயன்றி வேறுவகை யாறுதல் யாம் காண்கிலேம். ஆராய்ச்சித் துறை முற்றிய அறிஞர் கண்டு உண்மை யுணர்ந்து தம்மை யடுத்தவர்க்கும் எடுத்துக் காட்டித் தமிழ் மக்களை நல்வழிப்படுத்தக்கூடும் எனற பெரு நோக்குடன் எழுதி முடிக்கப்பெற்ற இவ் வறத்துப்பாலுரை இப்போது முதன்முதல் பதிப்பிக்கப் பெறுவதாயிற்று. இவ் வுரை தமிழ் மக்கட்கு நல்விருந்தாகுமென்று நம்பி வெளியிடு கின்றனம். யாவரும் இதனை எளிதிற் பெற்றுத் தேவர் தம் தெள்ளமிழ்தத்தை ஆரத்துய்க்கவேண்டி மிகக் குறைந்த விலையே இதற்குக் குறிக்கப் பெற்றுளது.

இத்துணைச் சிறப்பும் சால்பும் சான்ற இவ்வுரை முப்பாலின் ஒருபாலாகிய முதற்பாலுக்குமட்டுமே அமைந்தது பெரிதும் இரங்கற்பாற்று. ஏனை யிருபால்களுக்கும் இவ்வாறே உரையெழுதிக் குறைநிறைக்கும் நன்னாள் நந்நாளாகுக. செயற்கரிய செய்து பெருமையெய்திய இவ்வுரையாசிரியருக்குத் தமிழுலகம் செய்யுங் கடப்பாடு இத் தண்டபாணி விருத்தி யுரையை ஏற்றுப் போற்றுவதேயாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்தார்.

---

ஓம்

# முன்னுரை

தேவர் திருவடியென் சென்னிமிசை மேவலான்
ஆவ உணர்த்து மவை.

திருச்சிற்றம்பலக் கோவையார்க்கு உரைகண்ட பேரா சிரியர் 'திரு-என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம், என்றது அழகு' என உரைத்தார். குறள் என்பது ஒருவகைப் பாவிற் கமைந்த காரணப்பெயர். எனவே, திருக் குறள் என்னும் சொற்றொடர், 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகிய அழகினையுடைய குறட்பா' எனப் பொருள்படும். இது வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய், அவ்வகைக் குறட்பாவால் அமைந்த நூலுக்குக் காரணப் பெயராயிற்று. இனிக் குறள் என்பதே நூற்குக் கருவியாலான பெயராகக்கொண்டு அது திருவென்னும் அடையடுத்து அடையடுத்த ஆகு பெயராயிற்று என்பதுமுண்டு. அன்மொழித்தொகையாகக் கொண்டால் திரு வென்னும் அடை இந்நூலில் ஒவ்வொரு பாவுக்கும் தனித்தனியே உரித்தாதலும், ஆகுபெயராகக் கொண்டால் அவ்வடை நூன் முழுவதுக்கும் பொதுவாக உரித்தாதலும் உணர்ந்து ஏற்றவாறு கொள்க.

இனித் திரு என்பது அழகு எனவே அமைவதாக அவ்வழகின் பெற்றி இனைத்தென அறிவுறுத்துவான் வேண்டிய பேராசிரியர் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' அழகு என்றனர். இந் நோக்கம் என்பதே, செய்யுட்கு எய்துங்கால், ஆசிரியர் தொல்காப்பியனார் செய்

யுளூறுப்பென வகுத்துரைத்த முப்பத்து நான்கனுள் இன்றியமையாவென விதந்தோதப்பட்ட இருபத்தாறனுட் பத்தாவதாகிப் பாவினை அடுத்து முன்னிற்கும் நோக்கு என்னும் உறுப்பாமாறுணர்க. உணரவே, அவ் வுறுப்பிற்குரிய இலக்கணம் ஈண்டு எய்தும். அவ் விலக்கணந்தானும்,

> மாத்திரை முதலா அடிநிலை காறும்
> நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. (தொல்-செய், கOக)

என்பதாற் பெறப்படும். இச் சூத்திரப் பொருள் விரிப்புழிப் பேராசிரியர் 'கேட்டார் மறித்து நோக்கிப் பயன் கொள்ளுங் கருவி நோக்குதற் காரணம்' எனவும், 'பாட்டின் ஓசை முதலியனவெல்லாங் கேட்டாரை மீட்டுந் தன்னை நோக்கி நோக்கப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை' எனவும் விளக்கிப் போந்தார். எனவே திருக்குறள் என்னும் இச் செந்தமிழ் மாமறையின் பாக்கள் அனைத்தும் கேட்டாரை மீட்டும் தம்மை நோக்கி நோக்கப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை வாய்ந்தன என்பது போதரும். இப் பொருள் போதரவே, இந்நூற் சிறப்புணர்த்தும் திருவள்ளுவமாலையில், 'உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத்-தெள்ளுதல் அன்றே செயற்பால' எனவும், 'உள்ளுதோ றுள்ளு தோறுள்ள முருக்குமே' எனவும் இவ்வாறெல்லாம் தெரிந்துரைப்பாராயினர் புலத்துறை முற்றிய தொல்லைத் தமிழ்ப் புலவோரென்பது கடைப்பிடிக்க. கட்புலனும் உருவழகு கண்டறியப்படுதலும் செவிப்புலனும் பாவழகு கேட்டறியப் படுதலும் உணர்க.

இனிக் குறள் என்பது காரணப் பெயராமாறியாதோ எனின், குறுகிய அளவுடையதாதலின் குறளெனப்பட்டதென்க. மக்களுள் தீரக் குறியானைக் குறளன் என்ப. அவ்வாறே பாக்களுள் மிகக் குறுகியது குறள் எனப்படும்.

ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நாலியற்றாகிய பாவகை விரியினைப் பண்புறத் தொகுப்பின் ஆசிரியப்பா வெண்பா என்றாங் காயிருபாவினுள் அடங்கு மென்றார் ஆசிரியர் தொல்காப்பியனார் (செய்-௧0௫, ௧0௭). அவ் விருவகைப் பாவினுள் குறட்பா என்பது வெண்பாவின் பாற்பட் டடங் கும். மற்றவ் வெண்பாவினை அடியளவு நோக்கி நெடுவெண் பாட்டுக் குறுவெண்பாட்டு என இரண்டாக வகுத்து,

'நெடுவெண் பாட்டே முந்நா லடித்தே
குறுவெண் பாட்டி னளவெழு சீரே' (செய்-௧௫௧)

என அவற்றுக்கு முறையே பேரெல்லையும் சிற்றெல்லையும் வரையறுத்தார் தொல்காப்பியனார். எனவே, மிகக் குறுகிய தெனப்பட்ட குறட்பா, எழுசீரானாய குறுவெண்பாட்டாம். 'எழுசீர்' எனவே அவை ஈரடி யாதலும், ஈரடியுள் முதலடி நாற்சீரும் ஈற்றடி முச்சீரும் கொண்டியல்வ வாதலும் பெறப்படும். என்னை?

'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' (செய்-௩௨)
'வெணபாட் டீற்றடி முச்சீர்த் தாகும்' (செய்-௭௨)

என்றாராகலின். முச்சீரானாய ஈற்றடியுள் இறுதிச்சீர், நேர், நிரை, நேர்பு நிரைபு என்னும் நால்வகை அசையுள் ஓர் அசையாய் நிற்கு மென்பது,

'அசைசீர்த் தாகு மவ்வயி னான' (செய்-௭௩)

என்பதனாற் கொள்க. இன்னும் ஆசிரியர் தொல்காப்பியனார் அடிவகைக்கும் சீர்வகைக்கும் எழுத்து வரையறை கூறி, இன்னபா இன்ன அடி பெற்றுவரும் என்று இவையெல் லாம் நுட்பமும் ஒட்பமும் சிறக்க நிலையிட்டுரைத்தார். அவ் வாற்றான் குறட்பாவுக்கு எய்திய எழுத்தளவை விரித்துக் காட்டிச் சுட்டலுறின் உரை பெருகும். செய்யுளியல் நோக் கித் தெளிக. அங்ஙனம் தெளியுங்கால், ஒரு குறட்பாவுக்கு

உரிய எழுத்துக்கள் எவ்வாற்ருனும் ஒன்ருெழிந்த முப்பதின் ஏறுமாறில்லை என்பது காணப்படும். படவே, முப்பதுக் குட்பட்ட எழுத்துக்களில் ஓர் அரிய பொருளை நாட்டி, அசையும் சீரும் இசையும் இயன்ற பாட்டாக நோக்குப்படச் செய்த ஆசிரியரது தெய்வப் புலமையும் அவர் ஆக்கிய நூலின் ஒப்பில் பெருமையும் கூறவேண்டுமோ என்பது.

இனி, இந் நூலால் நுவலப்படுவன அறம், பொருள், இன்பம் என்பன. அற்றேல், மாந்தர்க் குறுதியென உயர்ந் தோரான் எடுக்கப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடென் னும் பொருள் நான்கனுள் வீடு ஈண்டு நுவலப்பட்டிலதோ எனின்,

'அறமுதலா அந்நான்கின் திறந்தெரிந்து செப்பிய தேவை'

என மாமூலனாரும்,

'தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனு அறமுதலா வந் நான்கும்-ஏனோருக்
கூழின் உரைத்தாற்கும'

என நக்கீரரும்,

'இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்-மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்'

என நரிவெரூஉத் தலையாரும்,

'அறமுத னான்கும் அகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்-குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார்'

எனக் கோவூர்கிழாரும் ஆகிய சான்ருேர் கூறியுள்ளது கொண்டு வீடும் ஈண்டு நுவலப்பட்டுள்ள தென்பதே துணி பென்க. அறப்பொருள் இன்பமென்று மூன்று பாலாகப்

பகுத் தோதப்பட்டு அக்காரணத்தால் முப்பாலெனவும் பெயர் பெற்ற நூலுள் வீடும் நுவலப்பட் டுளதென்பது ஒவ்வாதாம் பிறவெனின், அற்றன்று. அறம், பொருள், இன்பம் என்பன மும்முதற்பொருள். வீடென்பது அவற் றின் நிலையின்மை யறிந்து அவற்றை விடுதலே யன்றிப் பிறிதில்லை யாதலால் அவற்றின் துணைப்பொருளாய் அடங் கும். ஆசிரியர் தொல்காப்பியனார்,

'அந்நிலை மருங்கி னறமுத லாகிய
மும்முதற் பொருட்கு முரிய வென்ப' (செய்-கOசு)

என்றதூஉங் காண்க. அச்சூத்திரவுரையிற் பேராசிரியரும் 'அற-முதற்பொரு ளெனவே அவையும் அவற்றது நிலையின் மையும் அடங்கும்' என்றார். அவரே போக்கி, 'வீடென்பது செய்யுளுள் வாராதோவெனின் அறமுதலென்பது புறப்பாட் டெல்லையாகக் கூறினானென்பார் நான்குபொருளுந் தழீஇ யுரைப்ப. இனி யொருசாரார் மும்முதற்பொருட்கும் உரிய வென்பதனை எச்சப்படுத்திக் கொளப. அற்றன்று, உல கியற் பொருண் மூன்றனையுங் கூறுவான் அவற்றை மும் முதற் பொருளென்றான், அவையின்றி வீடு பெறுமாறு வேறின்மையின் வீடும் ஆண்டுக் கூறினானென்பது*. அல்லா தார் வீடென்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறா னென்ப. அங்ஙனங் கருதின் அறமுதற் பொரு ளுஞ் செய்யுட்கண் வாராவென மறுக்க' எனக் கூறுதலும் ஈண்டு நோக்கற்பாலது. அற்றே லஃதாக, நந்தம் தெய்வப் புலவர் தாமருளிச் செய்த இச் செந்தமிழ் மாமறையின்

---

* 'மும் முதற் பொருளெனவே, அவற்றது துணைப் பொரு ளாகிய அறநிலையின்மையும் பொருணிலையின்மையும் இன்பநிலை யின்மையும அடங்குமென்ப. உலகியற் பொருண் மூன்றனையும் இவையெனக் கூறி அவற்றை விடுமாறுங் கூறவே, வீடுங் கூறிற்றாம்' —என்பது நச்சினார்க்கினியர் உரை.

கண்ணே வீடென்னும் பொருண்மையைத் துணைப்பொரு ளாக அடக்கிக் கூறியதுதான் யாண்டெனின், அறத்துப் பாலுட் பாயிரவியலினும் துறவறவியலினும் என்க. இவ் வுண்மை தெரிக்கவன்றே, 'முப்பாலின் நாற்பால் மொழிந் தவர்' எனக் கீரந்தையாரும், 'வீடொன்று பாயிரம்' எனச் சிறுமேதாவியாரும் கூறுவாராயினர்.

இங்ஙனம் இத் திருக்குறணூல், நாற்பாற் பொருளையும் முப்பாலின் அடக்கிக் கூறியதாயினும், ஏனைப் பொருளும் இன்பமும் அறத்தானே நிலைபெறுவனவாதலின் இஃது அற நூல் எனவே படும் என்பது கடைப்பிடிக்க.

> 'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
> அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல'

என்றார் பிறரும். அதுபற்றியன்றே செயப்படுபொருள் என்னும் பாயிரப் பகுதியாக அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தை அமைத்தார் ஆசிரியர் என்க.

இனி, இவ்வறநூலுள் முதற்பா அகரத்திற் றொடங்கி இறுதிப்பா னகரத்தின் முடிந்தமை, இது செந்தமிழ்நூல் என்பதற் கோர் அறிகுறி போல்வதாமென்க. வாழ்க்கை நெறி இனைத்தென முற்ற முடிய விளக்கும் நூல் இஃதென் பதும் அறிவுறுத்த இந்நூலின் முதற்பா,

> 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு'

எனவும், இறுதிப்பா

> 'ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின்'

எனவும் நிற்றல் காண்க. என்னை? அவ்விரு குறள்களையும் இணக்கி நோக்குழி, உயிர்களுக்கு முதல்வன் இறைவன்

என்பதும், உயிர்கள் அவ்விறைவனடியைச் சாராது சிறிது பிணங்கி ஐம்புல இன்பங்களைத் துய்த்தலே வாழ்க்கை என்பதும் அதுவே சிற்றின்பமாம் என்பதும் பின்னர் அவ்வுயிர்கள் அவ்வைம்புல இன்ப நுகர்ச்சியைத் துறந்து இறைவன் திருவடியிற்கூடி ஒன்று கலப்பதே வீடுபேறும் என்பதும் அதுவே பேரின்பமாம் என்பதும் உணரக் கிடந்தமை யென்க.

நாகை - சொ. தண்டபாணிப்பிள்ளை.

---

## திருவள்ளுவரின் வேறு பெயர்கள்

1. நாயனார்
2. தேவர்
3. முதற்பாவலர்
4. தெய்வப்புலவர்
5. நான்முகனார்
6. மாதானுபங்கி
7. செந்நாப்போதார்
8. பெருநாவலர்

---

## திருக்குறளின் வேறு பெயர்கள்

1. முப்பானூல்
2. உத்தர வேதம்
3. தெய்வ நூல்
4. திருவள்ளுவர்
5. பொய்யாமொழி
6. வாயுறை வாழ்த்து
7. தமிழ்மறை
8. பொதுமறை

---

## நூற் பெருமை

வள்ளுவர்செய் திருக்குறளை
மறுவறநன் குணர்ந் தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி
யொருகுலத்துக் கொருநீதி.

—மனோன்மணீயம்.

---

# திருக்குறள்

## க. அறத்துப்பால்

---

### க. பாயிரவியல்

அதிகாரம் க.

### கடவுள் வாழ்த்து

க. அகர முதல எழுத்தெல்லாம் : ஆதி
பகவன் முதற்றே யுலகு.

(இதன் பொருள்) *எழுத்து எல்லாம்-எல்லா எழுத்துக் களும், அகரம் - (எல்லா எழுத்துக்கட்கும் முற்பட்டதான) அகரத்தை, முதல - (தமக்கு) முதலாக உடையன : (அது போல) உலகு-உலகமானது, ஆதி-(எல்லாவற்றிற்கும்) முற் பட்ட, பகவன் - கடவுளை, முதற்று - (தனக்கு) முதலாக உடையது (என்றவாறு.)*

(இதன் **கருத்து**.) *கடவுள் உலக முதல்வர் (என்பதாம்.)*

***முதல் - தலைமை. முதற்றே என்பதில் ஏகாரம் தேற்றம். முதல, முதற்று என்பன குறிப்பு வினைமுற்றுக்கள். ஆதிபகவன் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. உலகு-இடவாகு பெயராய் உயிரை உணர்த்தும்.***

***அனைத்திற்கும் தலைவனுதலால் இறைவன் தன்வயத்தனுதல் பெறப்பட்டது.***

காணப்பட்டதைக கொண்டு காணப்படாததன் இருப்பை விளகக வேண்டுதலின், ' ஆதிபகவன் முதற்றே உலகு ' என உலகின் மேல் வைததுக் கூறினார் ஆயினும் உலகிற்கு முதல்வன் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க. எழுததுக்கள் யாவும் அங்காப்புடனேயே பிறத்தலானும், அங்காந்தவுடனேயே உண்டாம் ஒலி அகரமாதலானும், அது சூக்கும ஒலியாய் நாதமாததிரையான இயல்பாற் பிறத்தலானும் அகர முதல் னகர விறுவாய தமிழ் எழுததுககளுக்கு மட்டுமேயன்றி ஏனை மொழிகளின் நெடுங்கணககிற்பட்ட எழுததுக்கள் அனைத்திற்கும் பிறப்பிடமாகி அவை இயங்குதற்கு இடந்தந்து நிற்றலானும், அகரத்திற்குத் தலைமை இயல்பாயிற்று. அவ்வாறே பல்லாற்றானும் இறைவற்குத தலைமை இயல்பானது கண்டுகொள்க.

அகரத்திற்குத தலைமையியல்பும் ஆதிபகவற்குத் தலைமையியல்பும் தனித்தனியே கூறி அவற்றிடை ஒப்புமை பெறவைத்தலின் இது தலைமைபற்றி வந்த எடுத்துக்காட்டுவமையாம்.

"அகர முதல வெழுத்தெல்லாம்" என்றவழி இரண்டு பொருள் வேறு வேறு கூறியதன்றி, அகரமுதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும், ஆதி பகவன் முதற்று உலகம் அதுபோல என்றானும் ஒன்றாகத துணியுமாற்றான் உவமையும் பொருளுங் கூறாமையின் வேறுபட வந்த உவமயாயிற்று" என்பது **தொல்காப்பியம்** உவமவியல் (கூ-கஉ) பேராசிரியர் உரை.

உலகிற்குத தலைவன் ஆதிபகவன் என்றதால் உலகத்துயிர்கள் அவன் அடிமைகள் என்பது தானே போதரும். அடிமைததிறம் விளங்குதல் வணக்கத்தின்கண்ணே யாதலின், கடவுளின் தலைமை கூறியபின், உயிர்கள் அவனை வணங்குதலின் இன்றியமையாமை கூறுகின்றார். (க)

உ. கற்றதனால் ஆய பயனென்கொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் ?

(இ-ள்.) வால் அறிவன் - தூய அறிவினையுடைய அக் கடவுளது, நல் தாள் - திருவடிகளை, தொழாஅர் எனின் -

வணங்காதவர்களாயின், (அவர்கள்) கற்றதனால் - கற்ற கல்வியால், ஆய - உண்டாகிய, பயன் - பலன், என் - யாது? (ஒன்றுமில்லை எ-று.)

(இ - து.) கல்வியறிவின் பயன் கடவுளைத் தொழுதல் (எ-ம்.) வால் - சுத்தம், தூய்மை.

'கொழாஅர்' என்றபாலது செய்யுளிசை நிறைக்கத் தொழாஅர் என நீண்டது. கொல் - அசைநிலை. எவன் என்னும் வினா வினைக் குறிப்புப் பெயர் என் என்று மரூஉவாகி நின்று இல்லையென்னும் பொருள் குறித்தது. நற்றாள் - திருவடி. நன்மை - பிறவிப் பிணிக்கு மருந்தாதல். தூய்தாவது இயற்கைப் பொருளே யாதலால், தூய அறிவாவது இயற்கை யறிவு, எனவே, இறைவன் இயற்கை யறிவினனாதல் பெறப்பட்டது.

கல்வியறிவா லாய பயன கடவுளைத் தொழுதல் எனின், கடவுளைத் தொழுதலா லாய பயன் என்னையோ என்றார்க்கு இன்னது எனக் கூறுகின்றார். (உ)

௩. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(இ - ள்.) மலர்மிசை - (அன்பரது நெஞ்சமாகிய தாமரை) மலரில், ஏகினான் - சென்ற இறைவனது, மாண் அடி - பெருமை பொருந்திய அடிகளை, சேர்ந்தார் - (இடைவிடாது) சிந்தித்தவர், நிலமிசை - இந் நிலவுலகத்தில், நீடு வாழ்வார் - நெடுங்காலம் உயிர்வாழ்வர் (எ-று.)

(இ - து.) இறைவன் திருவடிகளைச் சிந்தித்திருப்பவர்கள் நெடுங்காலம் உயிர்வாழ்வார்கள் (எ-ம்.)

நெஞ்சப்பை தாமரைமுக வடிவிற்றாதலான் 'மலர்' எனப் பட்டது. சேர்தல்-சிந்தித்தல், இடையறாது நினைதல்.

தன்னை நினைவாரது உள்ளக கமலததில் அவர் நினைந்த வடி வோடு விரைந்து செல்லுதலின் 'ஏகினன்' என இறந்த காலததாற் கூறினர், இறந்த காலத்தும் நிகழ்காலத்தும் எதிர் காலத்தும் ஒரு படித்தாய வருவதனை இறநத காலத்தாற் சொல்லுதல்—"வாராக காலததும நிகழுங்காலததும விரைந்த பொருள என்மனுா புலவர்" தொல் - வினை (சூ-சஎ.),—விரைவுக குறிப்பாதலின். நிலமிசை எனபதை மிசை நிலம எனக் கொண்டு மேலாகிய வீட்டுலகின் கண் எனப் பொருளுரைப்பது முண்டு

நினைவார் நினைப்பறிந்து அககணமே அவர் உள்ளத்துச் சென்று சேர்தலின் இறைவன் முற்றுணர்வினனுதல் பெறப்பட்டது, முற்றுணர்வு இல்வழி அஃதியலாதாதலின்.

துன்பத்துக்கு இடமான இவ்வுலகததில் நெடுங்காலம வாழ்தல் துன்புறுவதற்கே ஏதுவாமன்றே என்றார்க்கு அவனடி சேர்நதார்க்கு எக்காலத்தும் துன்பமில்லை என்பது வருங் குறள். (ரு)

ச. வேண்டுதல்வேண் டாமை இலான்அடி சேர்ந்தார்க்
 கியாண்டும் இடும்பை இல.

(இ - ள்.) வேண்டுதல் - (ஒரு பொருளை) விரும்புத லும், வேண்டாமை - (ஒரு பொருளை) வெறுத்தலும், இல் லான் - இல்லாத இறைவனது, அடி - பாதங்களை, சேர்ந் தார்க்கு - (இடைவிடாமல்) சிந்திப்பவர்க்கு, யாண்டும் - எக் காலத்தும், இடும்பை - துன்பங்கள், இல - இல்லாதனவாகும் (எ - று.)

(இ - து.) இறைவன் திருவடிகளைச் சிந்தித்திருப்பார்க்கு எக காலததும் துன்பமில்லை (எ - ம.)

'யாண்டும்;' என்பதற்கு 'எவ்விடததும்' எனப் பொருள் கொள்ளுதலும பொருந்தும். 'இலானடி சேர்ந்தார் யாண்டும்

இடும்பை யிலர்' என்பதும் பாடம். துன்பம் - தன்னைப்பற்றியும் தெய்வததைப் பற்றியும், பிறவுயிர்களைப்பற்றியும் வருபவை. 'வேண டுதல் வேண்டாமை இலான்' எனவே இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியோனாதல் பெறப்பட்டது.

துன்பங்களைத் தரும் வினைகள் சாாதறகிடமான உலக வாழ்க கையில் துன்பங்கள் இலவாதல் யாங்ஙனம் என்றார்கு இறைவனைச் சிந்தித்திருப்பாரை அததகைய வினைகள் சாரா என்பது வருங குறள்.

ரு. இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ - ள்.) இறைவன் - கடவுளின், பொருள்சேர் - உண்மையுள்ள, புகழ் - புகழை, புரிந்தார்மாட்டு - விரும்பின வரிடத்து, இருள்சேர் - அறியாமை சேர்ந்த, இருவினையும் - நல்வினை தீவினை இரண்டும், சேரா - வந்து பொருநதமாட்டா (எ - று.)

(இ - து.) இறைவனது புகழை விரும்பினவரிடத்து அறி யாமை சேர்ந்த இருவினைகளும் பொருநதமாட்டா (எ - ம்.)

இருள் - அறியாமை ; மயக்கம எனலுமாம். 'நரகமும் மயக்க மும் கருமையும் இருளெனல்' என்பது பிங்கலந்தை. 'இருவினை யும்' என்பதில் உமமை முற்றும்மை. பொருள் - உண்மை ; ஆசிரியர் தொல்காப்பியனாரும் உண்மை சுட்டலைப் 'பொருண்மை சுட்டல்' (தொல் - சொல - கூஉ) என்றது காண்க. இறைவன் - தலைவன். தலைமை வகிப்பதற்கு இன்றியமையாத குணமாவது ஆற்றலேயா மாதலின், 'இறைவன்' எனவே பேராற்றலுடையோனாதல் பெறப் பட்டது. புகழ்ச்சிக்குப் பெரிதும உரித்தாவதும் ஆற்றலே யாமா றறிக.

இருள்சேர் இருவினை சேராமையாற் போநத பயன் என்னை என்றார்க்கு, நிலையான பேரின்ப வாழ்க்கை பெறுதலா மென்பது வருங் குறள். (ரு)

சா. பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ளூர் நீடுவாழ் வார்.

(இ - ள்.) பொறிவாயில் ஐந்து - (மெய்வாய் கண் மூக்குச் செவி என்னும்) பொறிகளை வழிகளாக வுடைய ஐந்தவாவினையும், அவித்தான் - (அநாதியே) அவித்த இறைவனது, பொய் தீர் - பொய்யில்லாத, ஒழுக்க நெறி - ஒழுக்கமாகிய வழியில், நின்ளூர் - (நிலைபெற்று) நின்றவர்கள், நீடு வாழ்வார் - நீடூழி காலம் (பிறப்பிறப்பில்லாத வீட்டுலகில் நிலைபெற்று) வாழ்வார்கள் (எ - று.)

(இ - து.) கடவுள் காட்டிய உண்மை ஒழுகக நெறியில நின்றவர்கள் நிலையான பேரின்பத்தில நீடூழி காலம் வாழ்வார்கள் (எ-ம்.)

அருளுருவமன்றி மாயா உருவம் இறைவர்ககில்லை யாதலால், மாயா உருவததுக குள்ள பொறிகளும இல்லையாம்; ஆகவே தூய உணர்வன்றி மாயா சம்பந்தமுள்ள மாய உணர்வும் இல்லையாம்; ஆகவே மாயையிற் ளூேன்றும அவாவும் இல்லையாயிற்று. இவ்வுணமை போதரவே, பொறிவாயிலாக எழும் ஐந்துணர்வையும் அவிததவன் என்ளூர். இவ்வுலகில் நீடு வாழ்தல் ‘நிலமிசை நீடுவாழ்வார்’ என முன்னமே பெறப்பட்டமையின் ஈண்டு ‘நீடு வாழ்வார்’ என்றது வீட்டுலகில் நித்தியவாழ்க்கை பெறுதலையே குறிககும். இருவினையுஞ் சேராமை கூறியபின் இது கூறியது கொண்டும் அப்பொருள் பெறக கிடந்தது.

பொறிவாயில் ஐந்தும் இல்லாதவன் எனவே, இறைவன் தூய உடம்பினனுதல் பெறப்பட்டது. மேல் இறைவனது பேராற்றலைக் குறிப்பிததார்; ஈண்டு அவ்வாற்றற்கு எதுவாவது தூய உடம்பென்பதைக் குறிப்பித்தார்.

இறைவன் நற்ளூளைத் தொழுதார்க்குப் பயன் ‘நிலமிசை நீடுவாழ்’தலும், ‘யாண்டும் இடும்பையில’ வாதலும், வீட்டுலக இன்பத்

தில் நீடுவாழ்தலும் ஆமாயின், இறைவன் நற்றாளைத் தொழாதார்க்கு வரும் கேடென்னை என்றார்க்கு இது வென்பது வருங்குறள். (சு)

எ. தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

(இ - ள்.) தனக்கு உவமை - தனக்கு ஒப்பானது எதுவும், இல்லாதான் - இல்லாத கடவுளின், தாள் - திருவடிகளை, சேர்ந்தார்க்கு அல்லால் - அடைந்தவர்க்கு அல்லாமல் (மற்றவர்களுக்கு), மனக்கவலை - தம் மனத்தில் (கிளைக்கும்) கவலைகளை, மாற்றல் - போக்குதல், அரிது - முடியாது (எ - று.)

(இ - து.) இறைவனடி சேராதார்கருக் கவலைகள் ஒழியா (எ - ம.)

'உவமை யில்லாதான்' எனவே, தனகரு ஒப்பதும் மிக்கதும் இல்லானுதல் பெறப்பட்டது. ஒப்பிலன் எனவே பகையிலனும். என்னை? ஒப்புமை யுள்ளவிடத்தன்றிப் பகை நிகழாதாகலின். பகைவரை 'நேரார்' என்பதும் இக கருத்துப்பற்றியே எனலும் இழுக்காது. நேர் - ஒப்பு. பகைமையில்லாமை இன்பத்திற் கேதுவாதல் 'இன்பதது ளின்பம் பயகரும் இகல் என்னும், துன்பத்துட் டுன்பம் கெடின்' எனப் பிறிதோரிடதது ஆசிரியர் கூறுமாற்றான் இனிது விளங்கலின், பகைமைக் கிடமாந் தன்மையுடைய ஒப்புமையில்லான் எனவே, இறைவன் வரம்பிலின்பமுடையனுதல் பெறப்பட்டது. 'ஐந்தவித்தான்' என்பது கூறி, இது கூறினார், 'இன்பம் இடையறு தீண்டும் அவாவென்னும், துன்பத்துட் டுன்பம்கெடின் என்பது கருதி. அருமை - இன்மை குறித்தது.

இறைவனடி சேராதார்கரு மனக்கவலை எய்துமென்ப தென்னை என்றார்க்கு, அவர் அறநெறியிற் செல்லும் ஆற்றல் இலராய் வழீஇப் பிறநெறி புகுந்து பாவக் கடலில் விழுந்து தம்மைத் தாங்கிக் கரை சேர்க்கவல்லான் ஒருவனது துணையைப் பெறுதற்குக் கூடாமை பற்றித் துன்புறுவாராதலின் என்பது வருங் குறள். (எ)

அ. அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

(இ - ள்.) *அறவாழி* - அறக்கடலாகிய, *அந்தணன்* - கடவுளது, *தாள்* - திருவடிகளாகிய (புணையை), *சேர்ந்தார்க்கு அல்லால்* - சேர்ந்தவர்க்கல்லால் (பிறருக்கு), *பிற ஆழி* - (அதனின்) வேறாகிய (பொருளின்பக்) கடல்களை, *நீந்தல்* - கடத்தல், *அரிது* - முடியாது (எ - று.)

(இ - து.) கடவுளடி சேராதவர் பொருளின்பக் கடல்களைக் கடத்தல் முடியாது (எ - ம்.)

அந்தணன் - அழகிய அருளுடையவன்; உயிர்கள் மாட்டு அருளுடைய னாதலின், 'அந்தணன்' என்பது இறைவனைக் குறிப்பதாயிற்று. தண்மை - குளிர்ச்சி; அருள் அத் தன்மைத் தாதலின் தண்மை எனப்பட்டது. அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றனுள் அறத்தை முன் பிரித்ததனால் ஏனைப் பொருளுமின்பமும் 'பிற' எனப்பட்டன. ஆழி - ஆழமுடையது, கடல்.

இக் குறளில் இறைவனை 'அந்தணன்' என்றமையின் அவன் பேரருளுடையனாதல் பெறப்பட்டது.

இறைவனடி சேர்ந்தார்க்கு உளவாய நன்மைகளும் சேராதார்க்கு உளவாய தீமைகளும் இவையாகவும், சிலர் அவனடி சேராமைக்குக் காரணம் என்னை என்றார்க்கு அவர் இக் குறைபாடுடையார் என்பது வருங் குறள் : (அ)

௯. கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

(இ - ள்.) *கோள் இல்* - (தத்தமக் கேற்ற புலன்களைக்) கொள்ளுதல் இல்லாத, *பொறியின்* - (ஐம்) பொறிகளைப் போல, *எண்குணத்தான்* - எட்டுக் குணங்களையுடைய இறைவனது, *தாளை* - திருவடிகளை, *வணங்கா* - வணங்காத, *தலை* -

தலைகள், குணம் இலவே - (தமக்கேற்ற) தன்மை இல்லா தனவே யாகும் (எ - று.)

(இ - ரு.) கடவுளை வணங்காத தலைகள் தமக்குரிய தன்மையிற் குறைபா டுடையனவேயாம் (எ - ம்.)

கோள் - கொள்ளுதல், முதனிலை திரிந்த தொழிற் பெயர். 'இலவே' என்பதில் ஏகாரம் தேற்றப் பொருளது. 'பொறியின்' என்பதில் இன் ஐந்தாம் வேற்றுமை உருபு; ஒப்புப் பொருளில் வந்தது. 'கொள்ளுதல் இல்லாது' என்பது முறுகிய உணர்வுபற்றிக் கொள்ளுதல் இல்லாத எனக் கோடற்பாற்று. வணங்கா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தலை - உபலட்சணமாக மற்றை யுறுப்புக்களையும உணர்த்தும். ஊனக்கண் கொண்டு கண்டவழியும், பொறுக்க லாற்றா நோயுற ஒறுத்த வழியுமல்லாற் பிறவாற்றால் தமக் கொரு தலைவன் உளனென்றறிந்து அவனை வழிபடாதார் முறுகிய உணர்வில்லாத மடவோராதல் கண்டுகொள்க.

இறைவனுக்கு எண்குணம் உண்டு என்பது, "எட்டுவான் குணத்தீசன் எம்மான்தனை" "இறையவனை மறையவனை எண் குணத்தினானை" என்ற அப்பர், சுந்தரர் திருமொழிகளால் விளங்கும்.

எண்குணமாவன, தன் வயத்தனாதல், இயற்கை யறிவினனாதல், முற்றுணர்வுடைமை. இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேராற் றலுடைமை, தூய உடம்பினனாதல், வரம்பி லின்பமுடைமை, பேரருளுடைமை என்பனவாம். இவற்றை மேற்போந்த எட்டுக் குறளினும் பெறவைத்து எண்டவற்றைத் தொகுத்துச சுட்டிய ஆசிரியர் திறம் உளங்கொளற்பாற்று.

இறைவனடி சேராதார் மந்த உணர்வினராதல் யாங்ஙனம் பெறப்படும் என்றார்க்குப் பிறர் தாம் பிறவிப் பெருங் கடலில் விழுந்து கிடப்பதறிந்து இறைவனடியைப் புணையாகப்பற்றிக் கரை சேர்வாராக, இம்மடவோர் தாம் பிறவிக் கடலிற் கிடப்பதைத்

தானும் அறியாது மரககட்டை போல வினையலைகளான் மொத்துந் றுச் சுழன்றலையும் இயல்பைச் சுட்டுவது வருங் குறள் : (கூ)

கο. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

(இ - ள் :) இறைவன் - கடவுளின், அடி - திருவடிகளை (சேர்ந்தார்), பிறவிப் பெருங்கடல் - பிறவியாகிய பெரிய கடலை, நீந்துவர் - கடப்பார், சேராதார் - (இறைவன் திருவடிகளைச்) சேராதவர், நீந்தார் - (பிறவிப் பெருங் கடலைக்) கடக்கமாட்டார் (எ - று.)

(இ - து) இறைவன் திருவடிகளைச் சேர்ந்தவர் பிறவிக்கடலைக் கடப்பர் , சேராதவா பிறவிக்கடலைக் கடவார் (எ - ம்.)

'சேர்ந்தார்' என்னும் சொல் எஞ்சிநின்றது ; இதனைச் 'சொல்லெச்சம்' என்பர்.

இவ் வதிகாரத்தில் முதற்குறளால் உலகுயிர்களுககுத் தலைவனை இறைவன் ஒருவன் உளன் என்பதும், இரண்டாவதால் கல்வியின் பயன் கடவுளைத தொழுதல் என்பதும், அடுத்த நான்கு குறள்களால் கடவுளைத தொழுதார் பெறும் பயனும், அடுதத இரண்டு குறள்களால் கடவுளைத தொழாதார் இழக்கும் பயனும், ஒன்பதாவது குறளால் கடவுளைத தொழாதார் தன்மையும், பததாவது குறளால் பிறவியின் இயல்பும் அதன் முடிவான பயனும், கடவுளைத் தொழுதார் அப்பயனை எய்துவர் தொழாதார் எய்தார் என்பதும் கூறப் பட்டன. (ய)

---

# உ. வான்சிறப்பு

அஃதாவது மழையினது சிறப்புக கூறுதல். முற்றறிவுடைய இறைவனை முதலாகவுடைய இவ்வுலகம் சிற்றறிவுடைய உயிர்களும் அறிவற்ற சடமுமாக உள்ளது. சத்தாகிய இறைவனைச் சதசத்தாகிய உயிர்கள் அசததாகிய சடததைக கருவியாககக கொண்டு அறிகின்றன. அவ்வாறு அறிவதற்கும 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி, கடவுளின் அருள் விளககம் இன்றியமையாது வேணடப் படுதலின் முதற்கண் கடவுள் வாழ்த்துக் கூறி, அதையடுத்து ஈண்டு, அக் கடவுளை அறிதற்குக் கருவியான அசததின்பாற் பட்டு ஆககவும் அளிககவும அழிக்கவும் வல்ல ஆற்றலை ஓராற்றாற் கடவுளோடொப்ப இயற்கையிற் கொணட மழையினது சிறப்பைக் கூறுகின்றார். அசத்தைக கொணடு சததை அறியும் சதசததான உயிர்களுட் சிறந்த நீத்தாரது பெருமையை இதனை அடுத்துக கூறுவர். அதை அடுத்து, சதசததால அறியப்படும சததோடு ஒற்றுமையுடைய அறத்தினது வலிமை இனைததெனக் கூறுவர்.

மழையால் உலகம் நடைபெறுதல்

கக. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(இ - ள்.) வான் - மழையால், உலகம் - உலகத்து உயிர் கள், நின்று - (இடையறாது) நின்று, வழங்கி வருதலால் - இயங்கி வருகின்றமையால், தான் - அம்மழை, அமிழ்தம் என்று-(சாவாமருந்து எனப்படும்) அமிழ்தம் என்று, உணரல் பாற்று - அறியப்படும் தன்மையை உடையது (எ-று.)

(இ - து.) மழையால் உலகத்து உயிர்கள் இடையறாது நின்று நடைபெற்று வருகின்றமையால் அம் மழை உயிரை நிலைநிறுததும் அமிழ்தம் என்று அறியத்தக்கது (எ-ம்.)

வான் நிற்ப என்பது வான் நின்று எனத் திரிந்ததாகக் கொண்டு மழை நிற்ப உலகம் நடைபெறுதலால் எனப் பொருளுரைப்பதும் பொருந்தும்.

வழங்குதல் - இயங்குதல் - நடைபெறுதல்.

'மிருத' என்னும் வடமொழி மரணத்தைக் குறிக்குமாதலால் மரணத்தைத் தடுப்பதற்கு வடமொழியில் 'அமிருத' எனப் பெயராகி, அப்பெயரே தமிழில் அமிழ்தம் எனத் திரிந்து வழங்குகிறது என்பர். அது நிற்க. அமிழ்தம மரண நோயைத் தீர்த்தலினாலே மருந்து எனவும், உண்ணப்படுதலின் உணவு எனவும், இன்சுவைத் தாதலின் இனியது எனவும் கொள்ளப்படுகின்றது. இம் மூவகைப் பண்புகளும் அதற்குளவாதல் 'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா, மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று' (குறள்-அஉ) 'அமிழ்தினு மாற்ற வினிதே தம் மக்கள், சிறுகை யளாவிய கூழ்' (குறள்-சுச) என்னுங் குறள்களிலே நன்குணரக் கிடக்கின்றது. அமிழ்தம் என்னும் சொல்லோடு ஒற்றுமையுடைய அவிழ்தம், அவிழ், தமிழ் என்னும் தூய தமிழ்ச் சொற்கள் மூன்றும் அம் முப்பண்புகளையும் முறையே உணர்த்துவனவாம். நோய் என்பது பிணி; பிணியாவது கட்டு; அக் கட்டை அகற்றுவது அதாவது அவிழ்ப்பது அவிழ்தம் எனப்பட்டது: அதாவது மருந்து. மகரமும் வகரமும் ஒத்து நடப்பதுண்டு, 'மிஞ்சுதல் - விஞ்சுதல்', 'மேய்தல் - வேய்தல்' 'மீறுதல் - வீறுதல்' என்பவற்றிற் போல; அவ்வாறே ஈண்டும் அவிழ்தம் என்பது அமிழ்தம் என்றாயது. இனி, அவிழ் என்னும் சொல் உணவுப்பொருளாகிய சோற்றைக் குறித்தல் 'குறமகளாக்கிய வால் அவிழ் வலசி' (மலைபடுகடாம்-கஅரு) என்னும் பத்துப்பாட்டடியிலும் பிறாண்டும் காணலாகும். இச் சொல் வகரம மகரமாகி விகுதி புணர்ந்து அமிழ்தம் என்றாயது. அமிழ்தம என்பதின் திரிபாகிய அமுது என்பது உணவைக் குறித்தல் பெருவரவிற்றாதலும் உணர்க. இனி, தமிழ் என்பது இனிமைப் பொருட்டாதல் சிந்தாமணி முதலிய நூல்களிற் காணலாம். மலர் - அலர், தாய் - ஆய் புலர் - உலர் என்பவற்றிற்போல மொழிமுதல் ஒற்றொழிந்து தமிழ்ச்

சொற்கள் உண்டாதலால், இனிமை என்னும் பொருட்டாய தமிழ் மொழிமுத லொற்றழிந்து அமிழ் என்றாய் விகுதி புணர்ந்து அமிழ்தம் என்றாயது. இவ்வாறு அமிழ்தம் என்னும் சொல் தனக்குரிய முப் பண்புகளையும் தமிழ்ச்சொற்களாற்றானே காட்டி நிற்கின்றதாகலின் அதனை வடமொழித திரிபென்பதினும் தமிழ்ச் சொல்லே எனக் கொண்டு வடமொழி அமிர்தம் இததமிழ்ச் சொல்லின் திரிபெனக் கோடல் பொருத்த முடைத்தாம். ஆழ்ந்து நோக்கி ஏற்பது கொள்க. (க)

மழையால் உணவுளவாதல்

கஉ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(இ - ள்.) துப்பார்க்கு-உண்பவர்க்கு, துப்பு ஆய-சுத்த மான, துப்பு ஆக்கி - உணவுப் பொருள்களை உண்டாக்கி, துப்பார்க்கு - (அவ்வுணவுப் பொருள்களை) உண்பவர்க்கு, துப்பு ஆயதும் - (தானும்) உணவாகி நிற்பதும், மழை - மழையே யாகும் (எ-று.)

(இ - து.) உண்பவர்க்குச் சுததமான உணவுப் பொருள்களை உண்டாக்கி, அவ்வுணவுப் பொருள்களை உண்பவர்க்குத் தானும் உணவாகி நிற்பதும் மழையே யாகும (எ-ம்.)

து - உண்; துப்பு - சுத்தம், உணவு. ' துப்பாய துப்பாக்கி ' என்புழித துப்பாய என்பதற்கு வலிவான என்றேனும் உண்பதற் கான என்றேனும் பொருளுரைப்பினும் பொருந்தும். துப்பு என் பது வலிமைக்கும் ஒரு பெயராம்.

' ஆயதும் ' என்பது ' ஆயதூஉம் ' என இசை நிறைக்க நீண் டது. 'வாராக் காலத்து வினைச் சொற்கிளவி - யிறப்பினும் நிகழ் வினும் சிறப்பத் தோன்றும் - இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை ' (தொல்-சொல்-வினை-சஅ) என்பதால், நீர் உணவாகும்

என்னும் இயற்கையினை 'ஆயது' என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது.

நீர் ஒன்றுமே ஆக்கப்படுவது தாவரமே யாதலின், அஃதே ஈண்டுத் துப்பாய துப்பாயிற்று. தனக்கான உணவை நீரானே கொண்டு தான் பிறவற்றுக்கு உணவாவதன்றிப் பிறவற்றைத் தனக்கு உணவாக வேண்டுவதன்றாகலின் தாவரமே சுத்தமான உணவெனப்பட்டது. புலாலுண்ணுமையைப் பெரிதெடுத்துப் போதிக்கும் ஆசிரியர் புலாலல்லாத தாவர உணவே தூயவுணவாதலை ஈண்டு அறிவுறுத்தினரென்றல் பொருந்துமாறு கண்டு கொள்க.

உயிர்கள் இவ்வுலகில் நிலைநிற்றற்குக் காரணமாதல்பற்றி மழை அமிழ்த மெனத்தக்கதெனக் கூறினர் மேல்; ஈண்டு மழை அமிழ்தத்தினும் சிறந்த தென்பது படக் கூறினர்; எவ்வாறெனின் அமிழ்தம் தான் ஓர் உணவாவதன்றி உணவை ஆக்குவதன்று; மழையோ தானும் உணவாகிப் பிற உணவையும் ஆக்குதலாலென்க. (உ)

**மழையாலாம் உணவின்றேல் உளதாதும் துன்பம்**

கங. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

(இ - ள்.) விண் இன்று பொய்ப்பின் - மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின், விரிநீர் வியன் உலகத்துள் - கடல் (சூழ்ந்த) அகன்ற உலகத்தின்கண், பசி - பசிநோய், நின்று - (நீங்காமல்) நிலைத்து, உடற்றும் - (உயிர்களை) வருத்தும் (எ-று.)

(இ - து.) மழை பெய்யாமற் பொய்க்குமானல், கடல் சூழ்ந்த இப் பெரிய உலகத்தில் பசிநோய் நீங்காது நின்று உயிர்களை வருத்தும் (எ-ம்.)

விரிநீர் - கடல் வியன் - அகலம். உடற்றுதல் - வருத்துதல். 'இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி - நின்ற இகரம் உகரமாதல் -

தொன்றியன் மருங்கிற் செய்யுளு ளுரித்தே' (தொல் -எழுத்து- உயிர்மயங் - ஙரு) என்பதால் 'இன்றி' எனற்பாலது 'இன்று' எனத் திரிந்து நின்றது.

நீர் மிகுந்த கடல் சூழ இருந்தும் பசிப்பிணி தீர்க்க அது பயன் படுதலில்லை என்பது தோன்ற 'விரிநீர் வியனுலகம்' என்றார். மழையின்றேல் வருந்தும் உயிர்கள் ஒருசிலவல்ல எண்ணிறந்தன என்பதைக குறிப்பிகக 'வியன் உலகம்' என்றார், இடப் பெருமை யால் ஆண்டு வதிதரும் உயிர்களின் பெருககமும் பெறப்படுமாகலின்.

மழை பொய்த்தலாவது வெளிறி உள்ளீடின்றிப் பரந்து கிடக் கும் மேகம் கருக்கொண்டு செறிந்து திரளாமற் சிதறி யொழிதல். (ங)

மழையின்றேல் உணவின்றாதற் காரணம்

கச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன் றிக் கால்.

(இ - ள்) புயல் என்னும் - மழை என்னும், வாரி - வருவாய், வளம் குன்றி(ய)க் கால் - தன் வளத்திற் குறைந் தால், உழவர் - உழுது பயிரிடும் குடிமக்கள், ஏரின் - ஏரினாலே, உழாஅர் - உழுதலைச் செய்யார் (எ-று.)

(இ - து.) மழை என்னும் வருவாய் தன் வளததிற் குறையு மானால் உழுது பயிரிட்டு வாழும் குடிமககள் ஏர் பிடிதது உழுதலைக் கைவிடுவர் (எ-ம்.) (ஆதலின் பசிநீக்கும் உணவுக்கு முதற் காரணமான விளைபொருள்கள் இல்லையாம.)

புயல் - மழை. வாரி - வருவாய்; இஃது இப்பொருட்டாதலை 'வாரி பெருககி வளம்படுத் துற்றவை - யாராய்வான் செய்க வினை' (குறள் - ருகஉ) என்புழியுங் காண்க.

உழப்பு என்பது முயற்சி. இஃது உழ என்னும் முதனிலையடியா கப் பிறந்த தொழிற்பெயர்: உழவு என்பதும் அத் தகையதே. நமது முன்னோர் முயற்சிகள் அனைத்தினும் நிலத்தைப் பண்படுத்திப் பயிர் விளைக்கும் முயற்சியே சிறந்ததெனக் கொண்டோராதலின்

அம் முயற்சியே முயற்சி என்பது தோன்ற அதனை உழவு (முயற்சி) என்றனர். பின்னர்ப் பிற முயற்சிகளை அதனின்று வேறுபடுத்தற் பொருட்டு அப் பிறவற்றை 'உழப்பு' எனப் பிறிதொரு தொழிற் பெயர் விகுதி புணர்தது வழங்கினர். ஆகவே, உழப்பு, உழவு என இவ்விரு சொற்களும், இரு வேறு பொருளில் வழங்கி வருவனவாயினும், தொடக்கத்தில் ஒரே முதனிலையடியாகப் பிறந்து ஒரு பொருளே குறித்தனவாம் என்பது புலப்படும். உழைப்பு, உழை, உழு, ஊழ், உழல் முதலிய பிற சொற்களும் உழ என்னும் முதனிலை யடியாகப் பிறநதனவே யாதல் உய்ததுணாக, ஒவ்வொன்றுக்கும் காரணங் காட்டப் புகின் உரை பெருகுமாதலானும் அவை பற்றிய ஆராய்ச்சி ஈண்டைக்கு வேண்டுவ தன்றாகலானும் விடுத்தா மென்பது. இத்துணைதானும் ஈண்டுக்கூற ஒருப்பட்டது, 'உழார்' என்பதே சாலுமாக ஆசிரியர் 'ஏரின் உழார்' என ஒரு சொல் மிகையாகப் பெய்துரைத்தமைக்கு ஏது காணுவான் வேண்டி யென்க. அவ் வேது தானும யாதோவெனிற் கூறுதும்.

ஒப்புயர்வற்ற புலமைத் திறத்தாலே நிறுதத சொல்லும் குறித்து வரு கிளவியுமாகப் பொருட்பேறு கருதியல்லது சொற்களைத் தொடுத்தல் செய்யா மாட்சி, இத் திருக்குறளிற்போல அத்துணைச் சிறப்பிற்றாகப் பிறநூல்களிற் காண்டல் அரிதென்பது அறிவானுன்ற புலவர் பெருமக்கள் பலர்க்கும் ஒப்பமுடிந்த துணிபே யன்றோ? அங்ஙனம் பொருட்பேறு சிறக்கச் சொற்களைத் தொகுக்குந் திறன், அச் சொற்களின் பிறப்பும் வளர்ப்பும் இயலுஞ் செயலும் பிறவும் அறிந்து அவற்றை ஆளுமாற்றானே கைவருவதொன்றென்பதும் ஊகத்துக கியைந்ததேயாம். ஆகலின், ஆசிரியர் கூறிய சொற்றொட ரெல்லாம் மொழியியல் கண்டறிந்து தொடுக்கப்பட்டனவே யாதல் செல்லும். செல்லாதென்பர் ஒருசிலர். என்னை? ஆசிரியர் புலமைத் திறததை மறுக்கின்றிலம்; மற்று, அவர் பன்னூறாண்டுகட்கு முற் பட்ட காலத்தவராதலின், மேற்றிசை மதிவாணர் இற்றை நாட் செய்து போதரும் மொழியிய லாராய்ச்சியினை, ஆசிரியரேயாகப் பிறரேயாக, அற்றைநாளே யறிந்து கையாண்டா ரென்றல் பற்

றுள்ளங் காரணமாகப் பிறந்த உயர்வுநவிற்சியேயாமன்றி நடுநிலை கோடா மெய்யுரை யாமோ? என்பது அவர் கடா. அதற்கு விடை:-

மொழியிய லாராய்ச்சியினை விரித்து விளக்கும் நூல்கள் இக் காலத்திற்போல முற்காலததிற் றோனறில என்பதே கொண்டு, பண்டைத் தண்டமிழ்ப் புலவோர் மொழிப்பொருட் காரணம் ஆராய்ந்திலர், அவ் வாராய்ச்சிமுறைற்தானும் இனைத்தெனை அறிந்திலர், என்றல ஒவ்வாது. நாயனுர் காலத்துக்கு மிக முற்பட்ட காலத்தினராய தொல்காப்பியனுரே 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத தோன்ற' (தொல் - சொல் - உரிச் - கூசு) எனச் சூத்திரஞ் செய்தலின், மொழிப்பொருட் காரணம் ஆயுமாறென்றுண்டு என்பதை அவர் அறிந்து உடம்பட்டா ராகற்பால ரல்லரோ? அஃதன்றியும், நாயனுர் தாமே சொல்வன்மை என ஓர் அதிகாரம் வகுத்து ஆண்டுத் 'திறனறிந்து சொல்லுக சொல்லை' (குறள்-கூசசு) என ஆணை தருதலின், சொற்றிறம் நுனித்தறிந்து கூறியவரே யாவர் தாமும் என்பது துணியப்படும். 'நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர் - பயனில சொல்லாமை நன்று' (குறள்-ககஎ) என்ற ஆசிரியரோ, பா நிரப்புதல் வேண்டி வேண்டாச்சொற் பெய்து கூறுவர்? கூறூர். ஆதலின், ஆசிரியரது இவ்வியல்பு உளங்கொண்டு, அவர் திருவாக்குகளின் பொருள் காண்புழி, மிகையெனத் தோன் றுஞ் சொற்கட்குககாரணங் கணடு கூறல் எமககுக கடப்பாடாயிற்று. இயலுமிடதமெல்லாம் யாம் அக் கடப்பாடு கடைப்பிடிதது எம் சிறுமதிகெட்டியாங்குக் கூறும் கருத்துடையேம். அக் கருததனை நெகிழவிட்டுச் செல்லுமிடங்களில், ஆசிரியர் இயல்பென யாம் நாட்டிய கொள்கை வலிகுன்றியதென மயங்கற்க; மற்று, உரைப் பெருக்க மஞ்சியோ, எளிமை நோககியோ, அன்றி எஞ் சிற்றறிவிற் கெட்டாமை பற்றியோ அங்ஙனம் நெகிழவிட்டுச் செல்வேமாயினேம் என்றே கொள்க. இனி, யாம் காணப் புகுந்த சொற்பொருள் காண்பாம்.

உழவு என்பதன் மூலப்பொருள் முயற்சியே யாதல் முன்னர்க் கூறினும்; ஆகவே உழவர் என்பதன் மூலப் பொருள் முயற்சி

யுடையார் என்பதாம். இவ்வாற்றான், 'ஏரின் உழார் உழவர்' என்னுஞ் சொற்றொடர் 'முயற்சியுடையார் ஏராலே செய்யும் முயற்சியைக் கைவிடுவர்' எனப் பொருள்படும். ஏராலே செய்யும் முயற்சியாவது நிலத்தைப் பண்படுத்தி உண்பொருள் விளைத் தல். அதனடியாக அப் பொருளைக் காததலும் பண்டமாற்ற லும் இன்னோன்ன பிற முயற்சிகளும் உண்டாம். ஆதலின், அவ் விளைத்தல்முயற்சி வீழ அது காரணமாகப் பிறக்கும் பிற நன் முயற்சிகளும் வீழும். எனவே மககள், விலங்கினங்கள் போல, ஒரு வரை யொருவர் பறிததலும் ஒறுததலும் வருத்தலும வதைத்தலும் முதலாய தீமுயற்சிகளில் தலையிடுவரென்பது பெறப்படும். இத்தீ முயற்சிகளுக்குக் கருவியாவது ஏரன்று; வில்லும் வாளும் வேலும் கோலும் ஆய பிறவே. இக் கொடுங் கருவிகள் கொண்டு செய்யும் தீமுயற்சியால் ஆம் பயன் உலகம் சீர்குலைந்து உயிர்கள் அழிவதே யாம். ஆகவே மழையின்மையால் உலகத்துயிர்கள் அழியும் என்னும் முடிபொருளைப் புலன்கொளுமாற்றாற் குறிப்பிக்க வேண்டியே ஆசிரியர் 'ஏரின் உழாஅர் உழவர்' எனத் திருவாய்மலர்ந்தருள்வா ராயினர் என்ப துணர்க. (ச)

மழை ஆக்கவும் அழிக்கவும் வல்லது.

கரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

(இ - ள்.) எல்லாம் - (உணவு, முயற்சி, வளமை, தானம், தவம், பூசை, ஒழுக்கம் முதலிய) எல்லாவற்றையும், கெடுப்பதூஉம் - (தான் பெய்யாது பொய்த்து) அழியச் செய்வதும், கெட்டார்க்கு - (அவை) அழியப்பட்டவர்க்கு, சார்வாய் - துணையாய் (நின்று பெய்து), மற்று ஆங்கே - முன் அழித்தாற்போல (அழிந்தவற்றை மீண்டும்) எடுப்ப தூஉம் - உண்டாக்குவதும், மழை - மழையே.

(இ - து.) உணவு, முயற்சி, வளமை, தானம், தவம், பூசை, ஒழுக்கம் முதலிய எல்லாவற்றையும் தான் பெய்யாது நின்று அழிப்பதும்; அவை அழியப்பட்டவர்க்குத் துணையாய் நின்று பெய்து, முன் அழித்தாற்போல, அழிந்தவற்றை மீண்டும் உண்டாக்குவதும் மழையே.

கெடுத்தல் - அழித்தல். எடுத்தல் - எழச்செய்தல், உண்டாக்குதல். மற்று - முன் செய்ததற்கு மாறான தொழிலை உணர்த்தும் பொருளில் வந்தது. ஆங்கு - தொழில் ஒப்புமை காட்டும் உவம உருபு.

'கெடுப்பதும்' 'எடுப்பதும்' என்ற பாலன இசை நிறைக்க நீண்டன. 'கெடுப்பதும் எடுப்பதுமாகிய எல்லாம்' என்றலுமுண்டு. (ரு)

சிறுபொருளின் ஆக்கமும் மழையால்.

கசு. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
　　பசும்புற் றலைகாண் பரிது.

(இ - ள்.) விசும்பின் - மேகத்தினின்றும், துளி - மழை, வீழின் அல்லால் - விழுந்தாலன்றி, ஆங்கே - (பல வகைப் பயிர்கள் தோற்றுவதற்கு இடமான) அவ்விடத்திலே, பசும்புல் - இளம்புல்லின், தலை-முளையையும், காண்பு அரிது-காணல் முடியாது.

(இ - து.) மேகத்தினின்றும் மழை விழுந்தாலன்றிப் பல வகைப் பயிர்கள் தோற்றுவதற்கு இடமான அவ்விடத்திலே இளம் புல்லின் முளையையும் காணுதல் முடியாது.

விசும்பு - மேகம் (ஆகுபெயர்). துளி-மழை. பசுமை-இளமை. காண்பு - காணுதல்.

மற்று அசை. உம்மை வருவித்துரைக்கப்பட்டது.

மேல் எல்லாம அழிவதும் ஆவதும் மழையால் என்றார், ஈண்டு அவ்வெல்லாம் என்றவற்றுள் மிகச் சிறிய புல்லும் மழையானன்றி ஆகாது என்பது காட்டினார். ஆகவே மிகப்பெரியதும் மழையானன்றி ஆகாது என்பது பெறப்படும். (சு)

பெரும்பொருளின் கேடும் மழையால்.

கஎ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(இ - ள்.) எழிலிதான் - மேகம்தான், தடிந்து - (கடலில் உள்ள நீரை முகந்து) குறைத்து, நல்காது ஆகிவிடின்- (அக் கடலின்கண் பெய்து) கொடுக்காவிட்டால், நெடும் கடலும் - (நீர் நிறைந்த) விசாலமாகிய அக்கடலும், தன் நீர்மை குன்றும் - தனது இயல்பிற் குறையும்.

(இ - து.) மேகம் தான் கடலில் உள்ள நீரை முகந்து குறைதது, அக கடலினகண பெய்து கொடுககாவிட்டால், நீர் நிறைந்த விசாலமாகிய அக்கடலும் தனது இயல்பிற் குறையும்.

நீர்மை - இயல்பு. குன்றும் - குறையும். தடிந்து - குறைதது. தடிதல - கூறுபடுததல்; 'கடிமரந தடியு மோசை' என்பது புறநானூறு (நகூ). எழிலி - மேகம். நல்குதல் - கொடுத்தல்.

மேகம் கடல்நீரைக கொள்ளுதலை 'மழைகொளக் குறையாது புனல்புக மிகாது - கரைபொரு திரங்கு முந்நீர்' எனவரும் மதுரைக் காஞ்சி (௩௨௪-௩௨௫) அடிகளிலும் காண்க. மேகம் கொள்ளுதலாற் கடல் குறைபடுவதன்றேனும் கொள்ளும் அச்செயல் குறைத்தலேயாதலின், 'தடிந்து' என்றார் ஆசிரியர். இக கருத்தானே பரிபாடலினும் (௨௰) 'சூன்முதிர் முகில்' (௩) 'கடல் குறைபடுததநீர் கல்குறை படவெறிந்து' எனப்பட்டது. மேற்காட்டிய மதுரைக் காஞ்சி அடிகளினும் கடல் குறையாததற்குக் காரணம் புனல் புகுதலும், மிகாததற்குச் காரணம் மழை கொள்ளுதலும் ஆதலைக்

குறிப்பித்து, புனல் புகுமாறு புலப்படுக்க வேண்டிக் கடல் என்னாது முந்நீர் என்றமை காண்க.

தடி என்பது மின்னலுக்கு ஒரு பெயராகையால் ('சம்பை, வித்துரு, சபலை, தடித்துச், சஞ்சலை, கனருசி, தடி, ஒளி மின்னல்' பிங்கலந்தை), தடிந்து என்பதற்கு மின்னி எனப் பொருளுரைப்பது முண்டு. பொருட் சிறப்பு நோக்கி ஏற்றது கொள்க.

கடல் தன் இயல்பிற் குறைதலாவது 'நீர்வாழுயிர்கள் பிறவாமையும் மணிமுதலாயின படாமையும்'. கடற் பொருளுக்கு மழை வேண்டப்படுவது பற்றிப் 'பாட்டம் பொய்யாது வலைவளஞ் சிறப்ப' எனப்பட்டது நற்றிணையினும் (௩௮). பாட்டம்-மேகம்.

கடல் மிகப் பெரியதாதலோடு முற்றும் நீரால் நிறைந்தது; ஆயினும், அந் நீரை மேகம் முகந்துகொண்டு மீண்டும் தனக்குக் கொடுத்தாலன்றி அது தனக்குப் பயன்படுமா றில்லை. இதனான் மேகத்தின் உயர்வு விளங்கும்.

இக் குறட்பாவிலே மழையின் பெருமை விளங்கித் தோன்றுமாறு ஆசிரியர் சொற்களைத் தெரிந்தெடுத்துக் கோத்திருக்கும் பான்மை பாராட்டற்பாலது. கடல் என்பதே பெருமைக்கு உவமையாதல், 'கல்விக் கடல்' 'கருணைக் கடல்' 'கடலன்ன காமம்' 'நன்மை கடலிற் பெரிது' என வரும் சொற்றொடர்களால் அறியக் கிடக்கிறது. அப் பெருமை பின்னும் சிறந்து விளங்க 'நெடுங் கடல்' என்றார். இயல்பு என்னாது 'நீர்மை' என்றா, மழைநீர் வேண்டி நிற்கும் அக்கடல் நீராலே நிறைந்து நிற்கும் தன்மையதென்பதைக் குறிப்பிக்க. கெடும் என்னாது 'குன்றும்' என்றா, மழையின் உதவியை வேண்டி நிற்கும் கடலின் எழ்மை தோன்ற. இரப்பார் உளங் குன்றுதல் இயற்கை. பெரியார் சிறியாராகக் குன்றுதலே குறிக்கற்பாற்று; முரணணி ஆண்டுப் பெறப்படுதலின். குன்றும் என்னும் சொல்லின் ஆற்றல், நெடுங்கடலும் என்னும் சொற்றொடரோடு கூட்டி நோக்கப் புலனாம்; 'குன்றி னனையாருங் குன்றுவர்' (குறள் - ௯௬௫) என்றவிடத்தும் இச் சொல்லாற்றல்

வெளிப்படுமாறு காண்க. இவ்வாறு ஒரு பெரும் பொருள் மழைக்கு முன் தாழுமாறு கூறவே மழையின் பெருமை சிறந்து தோன்றும். கடல் நீரை மழை கொள்ளும்; மழைநீரைக் கடல் கொள்ளும். இவ் வாற்றான் ஒன்றற் கொன்று ஏற்றத்தாழ்வு இல்லை எனப்படும். அது படாமைப் பொருட்டு, முகந்து, குடித்து முதலிய ஏற்புடைச் சொற்கள் பிறவற்றை ஏற்புடையனவல்ல என நீக்கித் 'தடிந்து' என்றார், 'சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்' (திருமுரு - சுசு) என்பதிற் போலத் தடிதலில் வினைமுதலின் ஆற்றல் தொனிக்கின்றமையின். மேகம் என்னாது 'எழிலி' என்றார் எழுச்சியுடையது என்பது தோன்ற. பெய்யாது என்னுமல் நல்காது என்றார் மேகத்தின் வள்ளன்மை தோன்ற. 'எழிலி தான்' என்பதில் மேகம் வள்ளன்மையில் தனக்கு நிகர் தானே என நிற்கும் குறிப்புளதாதலும் காண்க. கொள்ளல், கொடுத்தல் என்னும் இருவினையும் கடல் மழை இரண்டிற்கும் உளவாகவும், கடலுக்குக் கொடுத்தல் வினையை ஒருசிறிதும் காட்டாது கொள்ளல் வினையைமட்டும் அதன் இழிவு தோன்ற அதனாற் பெறப்படும் பிறிதொரு வினையாகிய குன்றலாற் பெறவைத்ததும், மழைக்குக் கொள்ளல் கொடுத்தல் ஆகிய இரு வினையையும் பெறவைத்து, அவற்றுட் கொள்ளல் வினையைச் சிறப்பின்பாலாக்கியதும் உய்த்துணரற்பாலன. (எ)

மழையின்மையாற் பூசை கெடுதல்.

கஅ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

(இ - ள்.) வானம் - மழை, வறக்குமேல் - (பெய்யாது) வறளுமானால், வானோர்க்கும் - தேவர்களுக்கும், ஈண்டு - இவ்வுலகில், சிறப்பொடு பூசனை - (மக்களாற் செய்யப்படும்) சிறப்போடு கூடிய பூசை, செல்லாது - நடவாது.

(இ-து.) மழை பெய்யாது வறளுமானால் தேவர்களுக்கும் இவ் வுலகில் மக்களாற் செய்யப்படும் சிறப்போடு கூடிய பூசை நடவாது.

சிறப்பு - விழா. பூசை - நித்திய வழிபாடு.

நித்தியவழிபாடும் நடவாது, திருவிழாவும் நடவாது என்பது கருத்து. விழா நைமித்திகம் எனப்படும்; இது நித்தியவழிபாட்டில் நேரும் வழுவுதீரச் செயயப்படுவது; ஆதலின் இதை முற்கூறினர். 'சிறப்பொடு' என உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றனுருபு தந்து, சிறப்போடுகூடிய பூசை என்றலின் செல்லாது என ஒருமை முடிபாயிற்று. பூசனை - பூஜா என்னும் வடசொல்லின் திரிபு.

வானம் வறக்குமேல் ஈண்டு செல்லாது என்றதில் முரணணி விளங்குவது காண்க.

மழையின்மையால் தானமும் தவமும் கெடுதல்.

கக. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(இ - ள்.) வானம் - மழை, வழங்காது எனின் - (நீரைப் பெய்து) கொடாதாயின், தானம் தவம் இரண்டும் - தானமும் தவமுமாகிய இரண்டு அறங்களும், வியன் உலகம் - (இந்தப்) பெரிய உலகத்தில், தங்கா - நிற்கமாட்டா.

(இ - து.) மழை நீரைப் பெய்து கொடாதாயின், தானமும் தவமுமாகிய இரணடு அறங்களும் இந்தப் பெரிய உலகததில் நிற்கமாட்டா.

வழங்குதல் - கொடுத்தல். தானம், தவம் இரண்டும் வடசொல்: ஈகை, நோன்பு என்பன அவற்றின் பொருள். 'தானமாவது அறநெறியான் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடு கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டிசுருக்கல் முதலாயின. பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறததின் மேலும் தவம் துறவறத்தின் மேலும் நின்றன.'*

---

* பரிமேலழகர் உரை.

அறத்தின் இருவகையான இல்லறம் துறவறம் இரண்டிற்கும் முறையே சிறந்த தானம் தவம் இரண்டும் நில்லா எனவே அறநெறி இவ்வுலகில் நிலைபெறுதற்கு மழையே காரணமாதல் பெறப்பட்டது. உலகம் பெரியதாயினும், மழையானன்றி, அதற்குக கொடைப் பெருமை இல்லை என்பது தோன்ற 'வியனுலகம' என்றார். (௯)

**மழையின்மையால் ஒழுக்கம் கேடுதல்.**

௨௰. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(இ-ள்.) நீர் இன்று - நீர் இல்லாமல், உலகு - உலகியல், அமையாது எனின் - பொருந்தாதானால், வான் இன்று - மழை இல்லாமல், ஒழுக்கு - ஒழுக்கம், அமையாது - பொருந்ாது.

(இ - து.) நீா இல்லாமல் உலகியல் நடவாதானால், மழையில்லாமல் ஒழுககம் நிலைபெறாது.

உணவு உழவு பயிர் முதலியவெல்லாம் நீராலாதலை முதல் எழு குறள்களாலும் விளக்கினார். மேல் இரண்டு குறள்களாலும தெய்வ வழிபாடு தானம் தவம முதலான அறஙகள் நிலைபெறுதல் கூறினார். இக குறளால் அவை யெல்லாவற்றையும் தொகுதது உலகியல் ஒழுக்கம் என இரண்டில் அடக்கி அவையிரண்டும் மழையின்றி நடவா எனக் கூறியருளினார். இவ்வாறு தொகுததுத கூறியதிலும் எளிதிலுணரத தககதாகிய நீரின்றி உலகியல் நடவாமையை முன்னர்க் கூறி அதை எடுததுக் காட்டாக்கி மழையின்றி ஒழுக்கம் நிலையாதென்னும் அரிதுணர் உண்மையை அறிவுறுத்தியமை காண்க. (௰)



## ௩. நீத்தார் பெருமை

அஃதாவது முற்றத் துறந்த முனிவரது பெருமை. அளிக்கவும் அழிக்கவும் வல்ல ஆற்றலை இயற்கையானுடைய வான் போலாது அதனைத் தவமுதிர்ச்சியானே செயற்கையின் எய்தியோர் துறவோராதலின், அவர் பெருமை வான் சிறப்பின் பிற் கூறப்பட்டது. வானால் நிலைபெறும் ஒழுக்கத்தை உலகிற்கு உள்ளவாறு உணர்த்த வல்லோர் அவரே யாதலின் வானோடு அவர்க்கு இயைபுளதாதல் காண்க. இவ் வியைபு விளங்கவே மேலை அதிகாரத்தை ஒழுக்கத்தின் முடித்து இவ்வதிகாரத்தை அவ் வொழுக்கத்தானே துவங்கினார் ஆசிரியர் என்பதும் உணர்க

நீத்தார் பெருமை உலகோப்பியது.

௨௧. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
 வேண்டும் பனுவற் றுணிபு.

(இ - ள்.) ஒழுக்கத்து-(அருளோடுகூடிய அற) ஒழுக்கத்தில் நின்று, நீத்தார் - (அவாவினைத்) துறந்தாரது, பெருமை - மேன்மையை, பனுவல் துணிபு - நூல்களது துணிவு, விழுப்பத்து - மேன்மையானவை எனப்படும் பலவற்றுள்ளும், வேண்டும் - (இதுவே மேன்மையான தென்று) விரும்பிக் கூறும்

(இ - து.) அறவொழுக்கமுடைய துறந்தாரது பெருமையே, பெருமைக் குரியன பலவற்றுள்ளும் சிறந்தது என்பது நூல்கள் கொண்ட துணிபொருள்.

விழுப்பம் - மேன்மை. பனுவல் - நூல்.

ஒழுக்கம என்றது அருளோடுகூடிய ஒழுக்கத்தை. துறவொழுக்கத்திற்கு அருளுடைமை இன்றியமையாச் சிறப்புடைய தெனபது 'அருளொடு புணர்ந்த அகற்சியானும்' (தோல் - புறத் - ௨௧)

எனத் தொல்காப்பியனார் கூறுமாற்றான் அறியப்படும். 'தெருளா தான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின் - அருளாதான் செய்யும் அறம்' (குறள் - உசக) என்றார் நாயனாரும். அருளொடுகூடிய அவ் வொழுக்கம் இல்வழித் துறவறம் சிறப்பெய்தாது என்பதுபட 'ஒழுக்கத்து நீத்தார்' என்றார். இக் கருத்தானே ஆசிரியர் போக்கி, 'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும் - பிறன்பழிப்ப தில் லாயி னன்று' (குறள் - சக) என்றமை காண்க.

பனுவல் என்பது அறம் முதலியவற்றின் இலக்கணம் கூறும் நூல். அஃது இப் பொருட்டாதல் 'தாயபனுவல்' (தொல் - செய்- உகூ) என்பதற்குப் பேராசிரியர் கூறிய உரையான் உணர்க. பனு வல் செயத பெரியார் துணிவு பனுவன்மேல் ஏற்றப்பட்டது பனு வல் செய்த பெரியார் உயர்ந்தோ ராகலானும், உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டாகலானும் பனுவல் ஒப்பிய நீத்தார் பெருமை உலகொப்பிய தாதல் பெறப்படும்.

வேண்டுதல் - விரும்புதல்; 'வேண்டுதல் வேண்டாமை' (குறள்- ச) என்றார் முன்னும். உவப்பதன்கண குற்றமும் தோன்று கெடும் என்பதுபற்றித துறந்தார் பெருமையில் ஐயமுறாமற் பொருட்டுப் பனுவல் வேண்டுமென்பதன்று, பனுவலான் ஆராய்ந் தறிந்துகொண்ட துணிவு வேண்டு மென்பது படப் 'பனுவற் றுணிபு' என்றார்.

ஆசிரியர் ஈண்டும் பிறாண்டும் நீத்தார், துறவோர் எனக் கொண்டது அவாவின் நீஙகியோரை, இல்லம் அகல்தல் முதலாய புற அகற்சி மாததிரையே உடையாரை அன்றென்ப துணர்க.

நூற்றுணிபு கூறி உண்மை அறிவுறுத்தலின் இஃது ஆகம அளவை.

நீத்தார் பெருமை ஒப்பிலது.

உஉ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

(இ - ள்.) துறந்தார் - (யான் எனது என்னும் பற்றுக்களை) விட்டவரது, பெருமை - பெருமைக்கு, துணை கூறின் - ஒப்புமை கூறப் புகுந்தால், வையத்து - இவ்வுலகில், இறந்தாரை - (பிறந்து இருந்து) இறந்து போனவர்களை, எண்ணிக் கொண்டு அற்று - (இத்தனை பேரென்று) எண்ணி அறியப்புகுந்தாற் போலாம்.

(இ - து.) நீத்தார் பெருமைக்கு ஒப்புமை காணப் புகுவது இறந்தவர்களை எண்ணித் தொகை காணப் புகுவது போல முடியாத காரியமாம்.

துணை - ஒப்பு ஆசிரியர் பரிமேலழகர் கருதிய பொருளும் இதுவே யாதல், 'துறந்தார் துணை' (குறள்-௩௧0) என்பதற்கு அவர் கூறிய உரையான் உணரப்படும். 'துணைப் பொருளாவது ஒப்புமை கூறப்படுவது' என்றார் சேனாவரையரும் (தொல் - சொல் - கிளவி-௧௬). ஒப்புமைப்பொருள் படவே, 'துணையற' என வரும திருமுருகாற்றுப்படை (௨௩எ) அடியில் 'துணை' என்பது வந்தது. 'துணைபப' என்பது ஓர் உவம உருபெனக கூறி அதற்கு உதாரணமாக இககுறளையே காட்டினார் பேராசிரியர்; தொல்காப்பிய உவமவியல் பதினொராம் சூத்திர உரையிற் காணக.

துணை - அளவு எனினும் இழுககாது. கடவுளடியவரைக் கடவுளெனவே கருதுதல் நூற்றுணிபாகலானும், பற்றற்ற கடவுளைப் பற்றிப் பற்றைவிட்டாரே துறவோராகலானும் (குறள் - ௩௫0) துறவோா கடவுளெனவே கருதப்படல்வேண்டும். அக் கருததுக்கிசையவே நாயனாரும் 'பகவன் முதற்றே உலகு' (௧)—'தெரிவான் கட்டே உலகு' (உஎ); 'வாலறிவன்' (௨)—'வகைதெரிவான் (உஎ), 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' (௪)—'துறந்தார்' (உஉ); 'இறைவன் பொருள்சேர் புகழ்' (௫)—'நிறை மொழி மாந்தர் பெருமை' (உஅ); 'பொறிவாயி லைந்தவித்தான்' (௬)—'ஐந்த வித்தான்' (உ௫); 'அறவாழி அந்தணன்' (அ)—'அந்தணரென் போர் அறவோர்' (௩0); 'எண் குணத்தான்' (௯)—'குணமென்னும்

குன்றேறி நின்றார்' (உக) என இவ்வாறு கடவுட்கும் துறவோர்க்கும் வேறுபாடு பெரிதிலதாய்க் காட்டியுள்ளார். அவ்வாற்றான் கடவுளைத் 'தனக்குவமை யில்லாதான்' (எ) என்றார். துறவோர் தம் பெருமைக்கு உவமை யில்லாதார் என்பதுபட இக்குறளைக் கூறினாராகற்பாலர் எனக் கொள்வது ஆசிரியர் கருத்துக்கு இணங்கியதாதல் கண்டு துணை என்பதற்கு ஒப்பு என்பதே பொருளாக உரைத்தாம்.

பிறப்பின்றி இறப்பில்லை; பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்படுவது இருப்பு. ஆகவே இறந்தார் எனவே பிறந்திருந்து இறந்தார் என்பது பெறப்படும் மிகுதி குறிப்பன கடன்மணல் முதலாய பிறவும் உளவாக இறந்தார் தொகையை உவமிகதது, நீததார் பிறப் பிறப்புக்களினின்று வீடுபெற்றார் என்பது தோன்ற. 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்று திருவாதவூரடிகளும் 'அன்னை எத்தனை அன்னையோ அப்பனெத்தனை அப்பனோ, அன்றுமுதலின்றைவரைச் சனனகோடி எடுத்தெடுத்திங் கியாதனையா லழிந்ததல்லால்' என்று பிற்காலத்துப் பிறசான்றோரும் பிறப்பிறப்பின் அளவின்மை அறிவுறுத்திட்டார்கள். பிறந்து பிறந்து இறக்கும் அப் பொது வியல்பின் நீங்கியோராகலால் நீத்தார் சிறப்புடையராயினார். தன்கட் டோன்றுவன வெல்லாம் அழிதன்மாலைய வாதலின் அவற்றை நோககத் தான் நிலைபேறுடைய தென்பது பற்றி இவ்வுலகம் நிலம் எனவும் வையம் எனவும் கூறப்படும். நிலைப்பது நிலம்; வைகுவது வையம். வைகுதல் - தங்குதல். நிலையாத உலகத்தை நிலையென மயங்கி மாண்டோர் என்பதுபட 'வையத் திறந்தார்' என்றார்.

அற்று - அத் தன்மைத்து. கொண்டால் என்னும் வினையெச்சம் கொண்டு எனத் திரிந்தது. கொண்ட என்னும் பெயரெச்சம் அகரம் கெட்டுப் புணர்ந்தது எனலுமாம்.

உவமை கூறி உண்மை அறிவுறுத்தலின் இஃது உவமான அளவை. (உ)

நீத்தார் பெருமை ஒப்புயர்வற்றது.

உரு. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(இ - ள்.) இருமை - இம்மை மறுமைகளின், வகை தெரிந்து - கூறுபாட்டை அறிந்து, ஈண்டு அறம் - உயர்ந்த அறமாகிய துறவை, பூண்டார் - மேற்கொண்டவர்களது, பெருமை - சிறப்பே, உலகு பிறங்கிற்று - உலகில் உயர்ந்தது.

இமமை மறுமை என்னும் இரண்டின் தன்மையையும் அறிந்து, உயாவுடையதாகிய துறவறததை மேற்கொண்ட நீத்தாரது பெருமையே இவ்வுலகில் உயர்ந்தது. அதைவிட உயர்ந்தது வேறில்லை என்பதாம்.

(இ - து.) மேல் துறந்தார் பெருமைககு ஒப்பில்லை என்றார், உயர்ந்ததும் வேறில்லை என்பது ஈண்டுக் கூறினார். எனவே துறந்தார் பெருமை ஒப்புயர்வற்றதாயிற்று.

தேற்றேகாரம் வருவித துரைககப்பட்டது.

'இருமை என்ப திம்மையும் மறுமையும்' என்பது பிங்கலந்தை. இம்மை - இப் பிறப்பு, மறுமை - வருபிறப்பு. மறுபிறப்பின்கண் இன்பமெய்தலா மெனவும் சுவாககததின்கட் சென்று போகந் துய்க்கலாமெனவும் நல்வினையினை இப்பிறவியிற செய்வோா பலர். அவர் போலாது எததுணை இனபம் வருவதாயினும பிறவி வலையிற் பட ஒருப்படாத பெருமையுடையார் என்பது தோனற 'இருமை வகை தெரிந் தீண்டறம பூண்டார்' என்றார். எது கருதியும் மறுமை வேண்டாதார் நீததோரென்பது 'வானேயும் பெறில் வேணடேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்' எனவும், 'வானாளும செல்வமும் மண்ணரசும் யான்வேணடேன்' எனவும் சான்றோர் அருளியவாற்றான் அறியப்படும். இருமை எண்ணின்கண்ணதாகலான் 'பிறப்பு வீடு என்னும் இரண்டு' எனக் கொள்ளுதலும் உண்டு.

ஈண்டுதல் - உயர்தல்; 'கற்றீண்டு மெய்ப்பொருள்' (குறள் - கூருசு) என்றார் பிறூண்டும்: 'ஈண்டு செலன் .... ஞாயிறு' என்பது புறநானூறு (உரு). ஈண்டு என்பதற்கு இப் பிறவியில் எனப் பொருள்கொள்வதும் ஆமாயினும், அதுதான் கூறுமே கொள்ளக் கிடததலின் உயர்ந்த என்பதே ஏற்புடைப் பொருளாதலறிக. அல்ல தூஉம் வாளாதே 'அறம் பூண்டார்' எனின், 'அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை' (குறள் - சக) என்பது கொண்டு இல்லறம் பூண்டார் எனக் கோடல் சாலுமாகலின், துறவறம் பூண்டார் என்பது தோன்ற 'ஈண்டறம் பூண்டார்' என்றார் என்க. துறவோரே உயர்ந்த அறம் பூண்டார் என்பது 'தலைப்பட்டார் தீரத் துறந்தார்' (குறள் - கூசஅ) என்றதாற் பெறப்படும்.

பிறங்குதல் - உயர்தல். இஃது இப்பொருட்டாதல் 'பிறங்கு நிலைமாடத் துறந்தை போகி' எனவரும் புறப்பாட்டிற் (சுக) காண்க. பிறங்குதல் - விளங்குதல் என்பதும் உண்டு.

'இருமை' என்பதற்குப் பெருமை என்னும் பொருளும் உளதாதலின் 'பெருமையின் தன்மையை அறிநது துறவறம பூண் டார் பெருமையே உயர்ந்தது' என்று கொள்ளுதலும் பொருந்தும: பெருமையின் தன்மையாவது பெருமையுடையதன் தன்மை; அஃதாவது வீட்டின் தன்மை; 'சிறப்பென்னும் செம்பொருள்' (குறள்-கூருஅ) என்பதூஉங் காண்க. சிறப்பு - பெருமை.

உலகததில் நீத்தார் பெருமையே உயர்ந்தது எனவே அதைவிட உயர்ந்தது உலகத்தில் வேறில்லை என்று ஒழிந்ததன் அபாவம் பெறப்படுதலின் இஃது அபாவ அளவை. (௩)

நீத்தாரது ஆற்றல்.

உச. உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(இ - ள்.) உரன் என்னும் - அறிவு என்னும், தோட்டி யால் - அங்குசத்தால், ஓர் ஐந்தும்-உணரும் (புலன்களாகிய

யானை) ஐந்தனையும், காப்பான் - (நெறிதவறிச் செல்லாமற்) காப்பவன், வரன் என்னும் - மேலானது என்று கூறப்படும், வைப்புக்கு - (வீட்டு) நிலத்துக்கு, ஓர் வித்து - ஒரு விதை (போல்வான்).

(இ - து.) அறிவு என்னும் அங்குசத்தால் ஐம்புலனுன ஐந்து யானைகளையும் அடக்கியாளும் நீத்தார் முத்திநிலததிற் சென்று பயன் பட விருக்கும் விதைபோல்வர்.

உரன் - அறிவு. மணக்குடவரும் இப்பொருளே கொண்டார். திண்மை யெனப் பொருள் கொண்ட ஆசிரியா பரிமேலழகரும் 'திண்மை ஈண்டு அறிவின் மேற்று,' என இக் கருத்துடன்பட்டார். உரன் அறிவாதல் சிறுபாணுற்றுப் படையில் 'மறுவின்றி விளங்கிய (உஉக) உரன் (ககரு)' எனக் கொண்டு உச்சிமேற் புலவர்கொள் நச்சினர்க்கினியர் கூறும் உரையால் உணரப்படும்.

தோட்டி - அங்குசம். 'சரணங் கணிச்சி யங்குசந் தோட்டி' என்பது பிங்கலந்தை. தொடுதல் - வளைதல்; அங்குசம் முனை வளைந்திருததலின் தோட்டி எனப்பட்டது. (தொடு என்பதற்கு முதனிலை தொள்; இதனடியாகவே தொளை, தோள், துவள், தோணி, துணை, தூண், தொய்வு, தொன்னை, தோல், தொம்பை, தூம்பு, துலை, துாட்டு, துறட்டி, தொடு, தொடி, தோடு, தோண்டு, தொண்டு, தொண்டை, தோண்டி என்னு மிவை முதலாய பல சொற்கள் தோன்றியவாறு ஆய்ந்துணரப் புலனும்.)

ஓர்தல் - உணர்தல். ஓர் ஐந்து என்பதற்கு உணரும் வாயில்க ளாகிய ஐந்து என்னும் பொருள் போதரவே 'பொறிகளாகிய ஐந்து' என்முர் பரிமேலழகர். 'உலகமொரு மூன்றும்' என்பது போல 'ஓரைந்து' என்பதனை ஐந்து எனினுமாம்.

வைப்பு - நிலம். 'நாமநீர் வைப்பு' (குறள் - கசக) என்முர் பிறுண்டும். இவ்வுலகத்தில் 'வேட்கை வேர் வீழ்த்து முற்றிக் காத லும் களிப்பு மென்னும் கவடு விட்டு அவலம் பூதது மாதுய ரிடும்பை

காய்த்து மரணமே கனிய' நிற்கும் விதையன்று, மேலுலகத்தில் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பேரின்பக் கவடு விட்டு அறம் பூத்து அன்பு காய்த்து அருளே கனிய நிற்கும் விதை யென்பார் 'வான் என்னும் வைப்புக்கோர் வித்து' என்றார்.

யானை போலக் கட்டுக்கு அடங்குதல் அரிதாந் தன்மை உள்ளதாதல் பற்றிப் புலனை யானை என்றார். அறிவென்னும் ஒரே தோட்டியான் ஐந்து யானைகளை அடக்கினோர் என்றலின் நீத்தாரது ஆற்றல் புலப்படுமாறு காண்க.

யானை 'அறிந்தறிந்தும பாகனையே கொல்லும்' என்பவாகலின், அதனோடொப்புமையுடைய ஐம்புலனும ஒருசிறிது சோர்வுறின் உடையானைக் கெடுக்கும் என்பதும் உணரப்படும்.

புகையுளதெனவே தீ உண்டென அனுமித்தல் போல, ஐந்தி யானையை அடக்கும் எனவே ஆற்றல் உண்டென அனுமிக்க வைத்தலின் இஃது அனுமான அளவை காட்டியதாயிற்று. (௪)

நீத்தார் ஆற்றலுக்கு இந்திரனே சான்று.

௨௫. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

(இ - ள்.) ஐந்து அவித்தான் - (புலன்கள்மீது செல்கின்ற அவா) ஐந்தனையும் அடக்கியோனது, ஆற்றல் - வலிமைக்கு, அகல் - அகன்ற, விசும்பு உளார் - வானத்தில் உள்ளாரான (தேவர்களின்), கோமான் - தலைவனாகிய, இந்திரனே - இந்திரனே, சாலும் கரி - போதுமான சான்று.

(இ - து.) நீத்தாரது வலிமைக்கு வானவர் தலைவனான இந்திரனே போதுமான சான்று.

விசும்பு - வானம். கோமான் - தலைவன். கரி - சான்று.

அகலிகையை விரும்பி இந்திரன் கௌதமரால் சாபம் பெற்ற வரலாறு ஈண்டுச் சுட்டப்பட்டது. தான் அவாவினை அவியாமல்

அவித்தவனுற் சாபம் எய்தினமையின் இந்திரன் சான்றாயினன். 'ஆற்றலகல்' என உருபு விரிப்பினும் செய்யுள் சிதையாதாகலின் ஐந்தவித்தான் ஆற்றலால், தன் ஆற்றல் அகன்று சாபமெய்திய இந்திரனே சாலுங் கரி என்னும் பொருளும பயப்பிப்பான் கருதி ஆசிரியர் 'ஆற்றலகல்' எனத் தொகையாக்கினா ரெனக் கோடல் ஒவ்வும். மக்களால் பூசிக்கப்படும் தேவர்கட்குத் தலைவன் என இந்திரன் பெருமை புலப்பட 'விசும்புளார் கோமான்' என்றார். 'சாலும் கரி' என்றது முனிவரான் எய்திய சாபமும் சாபநீக்கமும் புலப்படுக்கும் யாக்கையன் இந்திரனாதலும், அவன் முனிவர்ப் பிழைத்தமையை உலகம மறத்தற் கிடனின்றி மக்கள் மணவினைக் காலத்து மகளிர் அம்மி மிதிக்கும் ஐதிகம் நிலைபெற்றதும் கருதி.

வழக்குண்மை காட்டிப் பொருள் அறிவுறுத்தலின் இஃது ஐதிகம் என்னும் அளவை. (ரு)

நீத்தார் செயற்கரிய செய்தலாற் பெருமைக் குரியர்.

உசு. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(இ-ள்.) செயற்கு அரிய - செய்வதற்கு அருமையானவற்றை, செய்வார் - செய்வோரான நீத்தார், பெரியர் - பெருமையுடையவர் (ஆவர்); செயற்கு அரிய - செய்தற்கு அருமையானவற்றை, செய்கலாதார் - செய்யமாட்டாதவர், சிறியர் - சிறுமையுடையவர் (ஆவர்).

(இ-து.) நீத்தார் செய்தற்கு அருமையானவற்றைச் செய்பவராதலாற் பெருமையுடையோராவர்; ஏனையோர் அவ்வாறு அரியவற்றைச் செய்ய மாட்டாதவர் ஆதலின் சிறியர்.

செய்தற்கு அரியவாவன ஐந்தவித்தன் முதலாயின. செயற்கெளியவாவன மனம் வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால்

புலன்களிற் செலுத்தல் முதலாயின. 'செய்க லாதார்' என்பது செய் அலாதார் என்னும் இரு சொற்கள் இடையே குகரச் சாரியை பெற்று முடிந்தது. அலாதார் - மாட்டாதார்.

பெருமையும் சிறுமையும் தத்தம் செய்கை பற்றியே அளந் தறியப்படும் என்பது 'பிறப் பொககும் எல்லா உயிர்கசூம்; சிறப் பொவ்வா - செய்தொழில் வேற்றுமையான்' (குறள் - ௯௭௨) என் பதாற் பெறப்படும.

'அரிய செய்வார் பெரியர்; நீத்தார் அரிய செய்வார்; ஆத லின் நீததார் பெரியர்' என்பது அருத்தாபத்தியால் உணரப் படும். (௬)

**நீத்தார்கண் அடங்கியது உலகம்.**

௨௭. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

(இ - ள்.) சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் - (ஐம் பொறிகளா லுணரப்படும்) ருசி ரூபம் பரிசம் சப்தம் கந்தம், என்று - என்று சொல்லப்படும், ஐந்தின் - (புலன்கள்) ஐந் தின், வகை தெரிவான் - கூறுபாட்டை அறிவான், கட்டே உலகு - இடத்ததே உலகம்.

(இ - து.) சப்த பரிச ரூப ரச கந்தம் என்னும் உணர்வுகள் ஐந்தின் கூறுபாட்டை அறியும் நீத்தார் இடததே உலகம்.

கட்டே - கண்ணதே. கண் - இடம்.

நிலன், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் இவற்றாலாயது உலகமாதலாலும், இவை உணரப்படுவது ஐம்புலன்களாதலாலும், ஐம்புலன்களின வகை தெரிந்து அவற்றைத் தம் வசப்படுததிய நீத தார் வசம் அடங்கியது உலகம் என்றார். ஒன்றைத் தன்னுள்

அடக்கியது அதை விடப் பெரியதாதல் கூறுமே அமையும். ஆதலின் உலகக் கூறுபாட்டை அறிந்து தம்முள் அடக்கிய நீத்தார் உலகிற் பெரியர் ஆவர். இதனானும் அவர் பெருமை துணியப்பட்டது.

நீத்தார் கண்ணது உலகம் என்பது, ஆயிரத்தின் கண்ணது நூறு என்பது போலச் சம்பவம் என்னும் அளவையாற் பெறப் படும். (எ)

நீத்தார் பெருமையை மந்திரங்கள் காட்டும்.

௨௮. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(இ - ள்.) *நிறைமொழி மாந்தர்* - (ஆற்றல்) நிறைந்த மொழியினையுடைய நீத்தாரது, *பெருமை* - பெருமையை, *நிலத்து* - இந் நிலவுலகின்கண், *மறைமொழி* - அவர் ஆணையாகச் சொல்லிய மந்திரங்களே, *காட்டிவிடும்* - (கண்கூடாகக்) காட்டி விடும்.

(இ - து.) ஆற்றல் நிறைந்த மொழியினையுடைய நீத்தாரது பெருமையை இந் நிலவுலகத்தின்கண் அவர் ஆணையாகக் கூறப்பட்டு வழங்கும் மந்திரங்களே கண்கூடாகக் காட்டும.

மறைமொழியாவது மந்திரம்; 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி தானே மந்திர மென்ப' என்றார் தொல்காப்பியனார் (செய்-௧௭௮). அச் சூத்திரவுரையின் கண்ணே பேராசிரியர் 'சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையராவார் ஆணையாற் கிளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமன் மறைத்துச் சொல்லும் சொற்றொடரெல்லாம் மந்திர மெனப்படும்' எனச் சூத்திரப் பொருள் உரைத்து, அகலத்தில் 'தானே யென்று பிரிததான் இவை தமிழ் மந்திரமெனற்கு' எனக் கூறி, அக கருத்தே பற்றியதென இக் குறளைக் குறித்திருப்பது உளங்கொளற்பாற்று.

'ஆக்ஞை' என்னும் வடசொல் 'ஆணை' எனத் திரிந்ததென்பர். பொருணிலை நோக்கி இது தமிழ்ச் சொல்லேயாதல் தெளிந்து கொள்க. ஆண்மை, ஆண், ஆட்சி என்பன போல ஆணை என்பதும் ஆள் என்னும் முதனிலை வினையடியாகப் பிறந்ததாதல் கூர்ந்து நோக்கப் புலப்படும்.

மந்திரங்களானே மக்கள் வருத்தமுற ஒறுக்கப்படுதலும் வருத்தமற உய்விக்கப்படுதலும் இஞ்ஞான்றும் ஆங்காங்குக் காணப்படுதலின் 'நிலத்து மறைமொழி காட்டிவிடும்' என்றார். இது காட்சி அளவையால் நீத்தார் பெருமை புலப்படுத்திற்று.

இவ் வெண்குறளானும், ஆகமம் உவமானம் அபாவம் அனுமானம் ஐதிகம் அருத்தாபத்தி சம்பவம் பிரத்தியக்ஷம் என்னும் எண் வகைப் பிரமாணங்களும் முறையே கொண்டு நீத்தாரது பெருமையும் ஒன்னார்த் தெற்று உவந்தாரை ஆக்கும் ஆற்றலும் அறிவுறுத்தப் பட்டன. (அ)

**நீத்தார் வெகுளியைத் தடுத்தல் அரிது.**

உ௯. குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்த லரிது.

(இ - ள்) குணம் என்னும் குன்று - நற் குணம் என்னும் குன்றின் (உச்சியில்), ஏறி நின்றார் - (தவ வலிமையால்) ஏறி (நிலைபெற) நின்ற நீத்தாரது, வெகுளி - கோபம், கணம் ஏயும் - கணப்பொழுது நிற்கும், (அவ்வாறு நிற்பது கணமேயாயினும்) காத்தல் அரிது - (கோபிக்கப்பட்டவர் அக் கோபத்தின் பயன் தம்பால் எய்தாமல் தம்மைக்) காத்துக் கொள்ளுதல் முடியாது.

(இ - து.) நற்குணம் என்னும் குன்றின்மீது நின்ற நீத்தார் வெகுண்டால், அவர் வெகுளி ஒரு கணப்போது நின்று பின்னர் நீங்கிவிடுமாயினும், வெகுளப்பட்டார் அவ் வெகுளியால் துன்பமுறாமல் தம்மைக் காத்துக்கொள்ள முடியாது.

வெகுளி - கோபம். குணத்தின் உயர்வும் பெருமையும் வளனும் துளங்கா மாட்சியும் கருதிக் 'குன்'றென்றார். வெகுளி தோன்றுவது கொண்டு அவர் குணத்தின் வழுவினரெனக் கொள்ளலாகாது என்பார் 'நின்றார்' என்றார். இதனால் நீத்தாரது ஒன்னார்த் தெறும் ஆற்றல் வலியுறுத்தப்பட்டது. (௯)

நீத்தார் உயிர்களிடத் தருளுடையர்.

௩௰. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(இ - ள்.) எவ்வுயிர்க்கும் - எல்லா உயிர்களிடத்தும், செந்தண்மை - செவ்விய அருள் (செய்தலை), பூண்டு ஒழுகலான் - மேற்கொண்டு ஒழுகுதலான், அறவோர் - துறவோரே, அந்தணர் என்போர் - அந்தணர் எனப்படுதற் குரியர்.

(இ - து.) எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராய் ஒழுகுதலான் துறவோரே அந்தணர் எனத் தக்கவர்.

தேற்றேகாரம் வருவித் துரைக்கப்பட்டது பிறப்புப்பற்றி அந்தணர் என்றல் பொருளில் கூற்றென்பார் அச் சொற்பொருள் உணர்த்தி அப் பொருள் எய்த நிற்போர் துறவோரே யாதலின் அவரே அந்தணர் எனப்படுதற் குரியர், பிறர் உரியரல்லர் என்றார்.

தண்மை - குளிர்ச்சி; அஃது அருள்மேலதாயிற்று, அருள் உள்ளத்தைக் குளிர்வித்தலின். அறவொழுக்கத்தைப் பற்றிப் பிறவொழுக்கத்தைத் துறந்தோராதலின் துறவோர் அறவோர் எனப்பட்டனர். வருகின்ற அதிகாரம் அறன்வலியுறுத்தலாதலின் அதனோடு இயைபுபடுத்தல் வேண்டி நீத்தார் அறவோராதலை ஈண்டுச் சுட்டினார்.

இதனால் நீத்தார் ஒன்னார்த் தெறும் ஆற்றலுடையாராயினும் உயிர்கண்மாட் டருளுடையர் என்பது கூறி உவந்தாரை யாகும்

ஆற்றலான் அவர் அருள்பெற்று மக்கள் உயயுமாறு குறிப்பிக்கப் பட்டது.

இவ்வதிகாரத்தில் முதல் எட்டுக குறள்களானும் எண்வகை அளவை கொண்டு நீத்தார் பெருமை நிலையிட்டு, ஒன்பதாவது குறளால் அவர் வெகுண்டால் வெகுளப்பட்டார் உய்த லரிதென் பதால் அவரைப் பிழையற்க என்றும், பத்தாவது குறளால் அவர் அருளுடையர் என்பதால் அவரை வழிபட்டுய்க என்றும் அறி வுறுத்தியருளினார் ஆசிரியர். (ம)



## ௪. அறன் வலியுறுத்தல்

அஃதாவது அறத்தின் ஆற்றலை அறிவுறுத்துதல்; அறத்தை வற்புறுத்திக் கூறுதல் எனினும் அமையும். முன்னதற்கு அறன், வலி, உறுத்தல் எனவும், பின்னதற்கு அறன், வலியுறுத்தல் எனவும் முறையே மும்மொழித் தொடராகவும் இருமொழித் தொடராகவும் கொள்க. அறத்திற்கு உறைவிடமாதல் பற்றி அறவோர் எனப்பட்ட நீத்தாரால் உலகில நிலைபெறுதலானும், உலகத்தாருக்கு உணர்த்தப் படுதலானும், அறத்தின் பெருமை நீத்தார் பெருமைக்குப் பிற்கூறப்பட்டது. அறமாவது நல்வினை; தர்மம் என்பது வடநூல் வழக்கு.

அறமே உயிர்கட்கு நன்மை பயப்பது.

௩௧. சிறப்பீனும் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(இ - ள்.) சிறப்பும் (ஈனும்) - வீடுபேற்றையும் தரும், செல்வமும் - (இன்பநுகர்ச்சிக்கு ஏதுவான) செல்வத்தையும், ஈனும் - தரும், (ஆதலால்) அறத்தின் ஊங்கு - அறத்தினும் மேலான, ஆக்கம் - செல்வம், உயிர்க்கு-உயிர்களுக்கு, எவன் - (வேறு) யாது (உளது)?

(இ - து.) அறம் மறுமையில் பேரின்பப்பேறான வீட்டையும், இம்மையில் இவ்வுலக இன்ப நுகர்ச்சிக்கு ஏதுவான செல்வத்தையும் தரும். ஆதலால், அறத்தைவிட மேலான செல்வம் உயிர்களுக்கு வேறு யாதுளது? ஏதுவும் இல்லை.

எண்ணும்மை விகாரத்தால் தொக்கது.

சிறப்பு - வீடு இஃது இப் பொருட்டாதல் 'சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (தொல் - கற்பியல் - ௫௧.) என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுமாற்றானும் அறியப்படும். போக்கி

நாயனுரும் 'சிறப் பென்னும் செமபொருள்' (குறள் - ௩௫௮) என்ரூர். 'எல்லாப் பேற்றினும் சிறந்தமையின் வீடு சிறப்பெனப் பட்டது' என்ரூர் பரிமேலழகர். வடமொழியினும் வீட்டைச் சிறப் பென்னும் பொருள்படக் கூறுவ துண்டென்பர்.

செல்வம், இவ்வுலக இன்ப நுகர்ச்சிக்கு ஏதுவான செல்வத்தை யாதல் 'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை - பொறுத்தானே டூர்ந்தா னிடை' (குறள் - ௩௭) என வரும் எடுத்துககாட்டான் உணரப்படும். இனபத்துள் தலையாய வீடு பேற்றையும் கடையாய உலக இன்பத்தையும் சுட்டவே இடை நின்ற சுவர்கக இன்பமும் கொள்ளப்படும்.

ஊககு - மிகுதி ; உள்ளத்தின் மிகுதி ஊககம்.

ஆககம் - செல்வம் ; ஆககப்படுவதும் ஆககுவதும் ஆகலின். 'மேன்மே லுயர்தல்' என்ரூர் பரிமேலழகர். (௧)

௩௨. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

(இ - ள்.) அறத்தின் ஊங்கு - அறஞ் செய்தலின் மேற்பட்ட, ஆக்கமும் இல்லை - செல்வமும் இல்லை, அதனை மறத்தலின் - அதனைச் செய்ய மறத்தலின், ஊங்கு - மேற்பட்ட, கேடு இல்லை - கேடும் இல்லை.

(இ - து.) அறஞ் செய்தலின் மேற்பட்ட செல்வமும் இல்லை அதனைச் செய்ய மறததலின் மேற்பட்ட கேடும் இல்லை.

அறத்தை மறப்பதால் ஆக்க மிழப்ப தொன்றே யன்று கேடு எய்துவதுமாம் என வலியுறுத்த முன் கூறியதை வழிமொழிந்து கொண்டார். (௨)

இயலும் வகையால் இயலும் இடத்தெல்லாம் ஓயா தறஞ் செய்க.

௩௩. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(இ - ள்.) ஒல்லும் வகையான் - (தத்தமக்கு) இயலும் திறத்தான், ஓவாதே - இடைவிடாமல், செல்லும் வாய் எல்லாம் - செய்தல் இயலும் இடத்திலெல்லாம், அறவினை - அறமாகிய நல்வினையை, செயல் - செய்க.

(இ - து) தத்தமக்குக் கூடிய வகையில் இடைவிடாமல் செய்யக்கூடிய இடமெல்லாம் அறம் செய்க.

ஒல்லுதல் - கூடுதல். ஓவாமை - இடைவிடாமை. செல்லுதல் - இயலுதல்; 'சிறப்பொடு பூசனை செல்லாது' (குறள் - ௧௮) என்றதும் காண்க.

இயலும் வகையாவது, பொருளாலேனும், உடலாலேனும், நாவாலேனும், நோக்காலேனும், சிந்தையாலேனும் வேறெவ்வகை தமக்குக் கூடுமோ அவ்வகையாலேனும் பிறிதோர் உயிர்க்கு நன்மை செய்தல். இயலும் இடத்தெல்லாம் என்றது, நல்வினை செய்ய இடம் வாய்த்துழி யெல்லாம்; தன் காலிற் குற்றிய முள் பிறர் காலிலும் குற்றாமல் அப்பாலெடுத்தெறிதல், நீரில் விழுந்த எறும்பு முதலியவற்றை அப்பால் எடுத்துவிடல், அயலார் புனத்தை ஆடுமாடுகள் அழிப்பக் கண்டால் அவற்றை ஓட்டிவிடுதல், வழியறியாமல் திகைப்பார்க்கு வழி காட்டிவிடுதல், எளியாரை வலியார் வருத்துழி எளியார்க்குத் துணை செய்தல் போல்வன. இவற்றையே இக்காலத்தார் குடிமக்கள் ஊழியம் என்பர். இத்தகைய செயல்கள் செய்ய என்ஞான்றும் எவ்விடத்தும் எத்தகையினர்க்கும் இயலுமாதலின் ஓவாது செய்க என்றார். அறஞ் செய்யும் தனது நிலைமை பற்றி இயலாதென் றொழியற்க என்பார் 'ஒல்லும் வகையான்' என்றும், அறஞ் செய்யப்படும் பிறர் தன்மை அல்லது பிறவற்றின் தன்மைபற்றி ஆகாதென் றொழியற்க என்பார் 'செல்லும் வாயெல்

லாம்' என்றும், நெடுநாட் செய்தேன் இனி எற்றுக் கென்று நெகிழற்க என்பார் 'ஓவாதே' என்றும் கூறினார். (௩)

**களங்கமற்ற உள்ளத்தனாதலே சிறந்த அறம்**

௩௪. மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தற
னாகுல நீர பிற.

(இ - ள்.) *மனத்துக்கண்* - (ஒருவன் தனது) உள்ளத்தினிடத்து, *மாசு இலன் ஆதல்* - குற்றம் இல்லாதவன் ஆகுதலாகிய, *அனைத்து* - அவ்வளவே, *அறம்* - தருமமாவது, *பிற* - (அஃது ஒழிந்த சொல்லாலும் உடம்பாலும் செய்வன) பிறவெல்லாம், *ஆகுல நீர* - ஆரவார இயல்பினவே.

(இ-து.) ஒருவன் தனது உள்ளத்தினிடதது குற்றம் இல்லாதவன் ஆகுதலாகிய அவ்வளவே அறம் எனப்படுவது ; ஒழிந்த புறவினைகளெல்லாம வெறும் ஆரவார இயல்புடையனவே. (எனவே அறததிற் காவன இதி னடங்கும.)

ஆகுலம் - ஆரவாரம்.

அறம் என்னும் சொல் அறு என்னும் முதனிலை யடியாகப் பிறந்து தீவினையை அறுப்பதெனப் பொருள் படும். அம் மூலப் பொருளை உட்கொணடே ஆசிரியர் ஈண்டு 'மனததுக்கண் மாசில னாதல் அனைததறன்' என்றார். அறியாமையால் விளைவது தீவினை. அறியாமையாவது இருள். அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயன். அறஞ் செய்ய இருளகலும்; இருள் அகல மெய்ப்பொருள் தோன்றும; மெய்ப் பொருள் தோன்ற பொய்ப் பொருள்கள்பால் வைதத பற்று அறும்; பற்றறப் பேரின்ப வீடெய்தும. இவ்வாறன்றி மனம் வேறு செயல் வேறாகச் செய்யும் அறவினை உள்ளத்தைப் பற்றுதலின்றாகவே, ஆண்டுள்ள இருள் அகலுமாறின்றி மேன்மேல் வளர்ந்து ஆன்மாவைக் கவர்ந்து மெய்ப்பொருளுணர்ச்சியாற் பேரின்பவீ டெய்த வொட்டாமல் தடை செய்துகொண்டே யிருக்கும். இருக்கவே, அறம் எனச் செய்தவை யெல்லாம் வெறும் ஆர

வார நீர்மையவாய்ப் பயனிலவாம். ஆதலான், 'மனத்துக்கண் மாசு இலனாதல் அனைத்தே அறன்' என்றார்.

மாசிலனாதல் அறத்திற்குக் காரணமோ, அறம் மாசிலனாதற்குக் காரணமோ என்னின், இரண்டும் ஒன்றற்கு ஒன்று காரணமாய், ஒளியும் இருள் நீக்கமும்போல உடனிகழ்வனவாய் வேறுபாடின்றித் தோன்றுமென்க.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் மக்கள் உய்யத் திரு வாய் மலர்ந்தருளிய இத் தமிழ்மறை உலகிருள் அகற்ற வந்த ஒற்றைத் தனியாழிப் பரிதி யென்னில், இக் குறட்பா அவ்வாழியின் அச் சாணி யெனத்தக்க அருமை யுடைத்தாதல் கண்டு உணர்ந்து உளங் கொளற்பாற்று　　(ச)

அறவினைக்கு ஒழியற் பாலன.

௩௫. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கு
　　மிழுக்கா வியன்ற தறம்.

(இ-ள்.) அழுக்காறு - பொறாமை, அவா - பேராசை, வெகுளி - கோபம், இன்னாசொல் - தீங்கு விளைக்கும் சொல், நான்கும் - (ஆகிய இந்த) நான்கும், இழுக்கா - குற்ற மாக (க்கொண்டு), இயன்றது - (விலக்கி) நடந்தது (எதுவோ), அறம் - (அதுவே) அறமெனப்படும்.

(இ - து.) பொறாமை, பேராசை, கோபம், தீங்குவிளைக்கும் சொல் ஆகிய இந்த நான்கும் குற்றமெனக் கொண்டு விலக்கி நடந்த தெதுவோ அதுவே அறமாம்.

இழுக்கு - குற்றம்.

மேல், அறத்திற்கு ஆவன எல்லாம் மனத்தூய்மையுள் அடங்கு மென்றார், ஈண்டு, அறத்திற்கு ஆகாதன வெல்லாம், 'அழுக்காறவா வெகுளி யின்னாச்சொல்' இந் நான்கனுள் அடங்குமென்பா ராயினர்.　　(ரு)

அறமே இறக்குங்கால் உயிர்த்துணையாவது.

௩௬. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(இ - ள்.) அன்று - பின்பு, அறிவாம் - அறிந்து செய்து கொள்வோம், என்னாது - என்று கருதி யிராமல், அறம் - அறவினையை, செய்க - (இன்றே) செய்யத்தொடங்கிச் செய்து வருக, (ஏனெனில்), பொன்றும் கால் - (உடம்பு) அழியுங் காலத்தில், அது - அவ்வறவினையே, பொன்றாத் துணை - அழியாத துணை(யாக மறுமையிலும் வருவது).

(இ - து.) இப்பொழுது விரைதல் என், பொறுத்துப் பின்பு செய்து கொள்வோம் என்று கருதியிராமல் இப்பொழுதே அறவினையைச் செய்யத் தொடங்கிச் செய்துவருக. ஏனெனில், கதுமென இவ் வுடம்பு அழியக்கூடும். அவ்வாறு அழியுங்கால், அவ்வுடம்போடு உடனழியாது உயிர்க்கு உற்ற துணையாக மறுபிறப்பிலும் செல்வது அறவினை ஒன்றுதான்.

மற்று அசை

அன்று என்பது சேய்மைக் காலத்தைச் சுட்டி நின்றது. தாம் பொருட்படுத்தாத ஒன்றை மாந்தர் செய்யா தொழிவது ஒருபுறமாக, மற்றதனைக் கருதுவதற்கும் உடம்படாது, 'பிறகு பார்த்துக் கொள்வம்' என்றல் இயல்பு. அவ் வியல்பைச் சுட்டியே நாயனார் 'அன்று அறிவாம் என்னாது' என்றார். கருதுதலும் செய்யாதானை நோக்கி அறவினை 'செய்க' என்றார், யாக்கையின் நிலையாமையினையும் அறத்தின் ஒப்புயர்வற்ற நிலைமையினையும் நோக்கக் கருதுதற்காகும் பொழுதும் கழியவிடற்பால தன்றென்பதுபட. இக் கருத்தானே மேல் நிலையாமை அறிவுறுத்துமிடத்து, 'நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை மேற்சென்று செய்யப்படும்' எனவும், 'ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப - கோடியு மல்ல பல' எனவும் கூறுவாராயினர் ஆசிரியர். (௬)

**அறத்தின் பயன் காட்சியளவையான் அறிக.**

௩௭. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
　　பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

(இ - ள்.) *அறத்து ஆறு* - நல்வினையின் பயன், *இது என* - இன்னதாம் என்று, *வேண்டா* - (ஆகமம், கருதல் முதலிய (அளவைகளான் அறிதல்) வேண்டா; *சிவிகை பொறுத்தானோடு* - பல்லக்குச் சுமப்பானோடு, *ஊர்ந்தான் இடை* - (பல்லக்கு) ஏறிச் செல்வானிடை (காட்சியளவையான் அறியலாம்).

(இ - து.) *அறத்தின் பயன் இன்னதென அறிவதற்கு அறிதற் கருமையான ஆகம அளவை கருதலளவை முதலிய பிரமாணங்கள் வேண்டா; பல்லக்குச் சுமப்போனும், பல்லக்கு ஊர்வோனும் வேறு வேறாகக் கண்ணெதிரே காணும் காட்சி அளவை ஒன்றானே அறியலாம்.*

*ஆறு - வழி. வழி உய்க்குமிடம் வழியெனப்பட்டது; ஆண்டும் அது முடிவு பெறுதலின்றி வினைபற்றி மேற் செல்லும் இயல்பினதாக லின். மேல் கருதுதலும் வேண்டா, அறஞ் செய்க என்றார், ஈண்டு, கருதாது செய்வதும் ஒக்குமோ, 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின் - எண்ணுவ மென்ப திழுக்கு' (குறள் - சசுஎ) என்பதன்றோ ஆணை என்று மயங்கற்க, காட்சியளவான் ஒன்றை அறிதல் எளிதாதலின் அவ்வெளிய வகையானே அறப்பயன் அறியக் கிடக்குங்கால் கருதித் துணிவாம் என்று காலங் கடத்தல் சாலாது என்பார் காட்சியளவை காட்டி யுரைப்பாராயினர்.*

*சிவிகை சுமந்து செல்வோன், அச் செயலானே தான் முயற்சி யுடையனாதல் வெளிப்படுக்கின்றான். சிவிகை ஊர்ந்து செல்வோன் அந் நிலையில் முயற்சி யுடையன் எனத் துணியப்படான்; புறநோக் களவில் சோம்பன் என்பதே தோற்றம். முயற்சியுடையான் ஒருவன்*

அஃதில்லாதான் ஒருவன் ஏவல்வழிப்பட்டு அவனை வருந்திச் சுமப்பானாக, 'முயற்சியில்லாத அவன் இன்புற்று இறுமாந்து அமர்ந்து செல்வனாக, இவ் விருவர் நிலைக்கும் ஏதுவானது அவ்வவர் முற்பிறப்பிற் செய்த வினையே யன்றி வேறு பிறிதில்லை எனபது தெளியப் படுதலின் அவ் விருவரும் கண்கண்ட எடுத்துககாட்டாயினர்.

'அறியலாம்' என்பது சொல்லெச்ச மாதலின் வருவித்துரைக்கப்பட்டது. (எ)

ஓவாது அறஞ் செய்யின் பிறவித் துன்பம் ஓயும்.

௩௮. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல்.

(இ - ள்.) வீழ் நாள் - (செய்யாது) கழியும் நாள், படாமை -உளவாகாமல், ஒருவன் நன்று ஆற்றின் - ஒருவன் நல்வினையைச் செய்வானாயின், அஃது - அந் நல்வினை, வாழ் நாள் - (அவன் பிறவி யெடுத்து இன்பதுன்பங்களுக்கு ஆளாகி) வாழும் காலம், வழி - (வரும்) வழியை, அடைக்கும் - (வாராமல்) அடைக்கும், கல் - கல்லாகும்.

(இ - து) ஒருவன் நாள் தவறாமல் நல்வினையைச் செய்து வருவானாயின், அந் நல்வினை அவன் பிறவியெடுதது உழலும காலம் வரும் வழியை வாராமல் தடுநது அடைககும கல் போல்வதாகும்.

படாமை என்பது இசைநிறைக்க நீண்டது.

நல்வினை தீவினை இரண்டும பிறவிக்கு ஏதுவாயினும், நல்வினையே செய்து வர, தீவினை தேயும்; தீவினை தேய, அறியாமை அகலும்; அறியாமை அகல, மெய் யுணர்வு தோன்றும; மெய் யுணர்வு தோன்ற, பிறவி துன்பங்கட்கு இடனாதல் விளங்கும்; அது விளங்க பிறவியினின்று வீடுபெற இச்சை யுண்டாம்; அஃது உண்டாக, பிறவிககுக் காரணமான முயற்சிகள் நீங்கி வீட்டிற்குக் காரணமான முயற்சிகளிற் புகுந்து வீடு பெறும். இங்ஙனம் நல்வினை

யடியாக வீடுபேறு சித்தித்தலின், பிறவி வழியை அடைப்பது நல்வினையே என்றார். (அ)

**அறத்தோடு வருவதே உண்மை இன்பமும் புகழுமாம்.**

௩௯ அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(இ - ள்.) அறத்தான் வருவதே - அறத்தோடு பொருந்தி வருவதே, இன்பம் - (அகத்தைப் பற்றிய) இன்பமாம் (புகழுமாம்), மற்ற எல்லாம் - பிற எல்லாம், புறத்த - புறத்தைப் பற்றிய (இன்பமும் இன்பத்துக்குப் புறம்பான துன்பமும்) ஆம், புகழும் இல - புகழுடையவும் அல்ல.

(இ - து.) அறத்தோடு பொருந்தி வருவதே (அகத்தைப் பற்றிய தாதலால் உண்மை) இன்பமாம், (புகழுடையதுமாம்) மற்ற எல்லாம் புறத்தைப் பற்றிய (வாதலால் பொய் இன்பமும், இன்பத்துகுப் புறம்பான துன்பமுமாம்); புகழ் உடையவு மல்ல.

அறத்தான் வருவதே இன்பம் எனக் கூறி, இதனை எதிர் மறுத்து அறத்தான் வாராத எல்லாம் புறதத, புகழில எனறமையால், இன்பத்துக்கு எதிர்மறையான துன்பம் 'புறதத புகழில' என்பவற்றோடும், புறத்த புகழில என்பவற்றுககு எதிர்மறையான 'அகத்த 'புகழுடைய' என்பவை இன்பம் என்பதனோடும் கூட்டி உணரப்படும்; படவே, அறத்தான் வருவன இன்பமும் அகத்தவும் புகழுடையவுமாம்; மற்றவை எல்லாம் துன்பமும் புறத்தவும் புகழிலவுமாம். இன்பத்துக்குட் புறம்பான துன்பம தனியே பெறப்படவே, புறத்த என்றது புறத்தைப் பற்றிய இன்பத்தைக குறிக்கும்.

அகம் என்பது உள்ளம்; உள்ளமாவது உள்ளது; அஃதாவது உண்மை; அஃதாவது சதது. ஆகவே, அகததைப் பற்றிய இனபமாவது சததான இன்பம். எனவே புறத்தைப் பறறிய இன்பமாவது அசத்தான இன்பமாம்.

'மனத்துக் கண் மாசிலனாதல் அனைத்தறன்' (குறள் - ௩௪) அறமாவது உள்ள நிலை பற்றியதென முன்னமே அறிவுறுத்தினாராகலின், அது பற்றி வரும் இன்பமும், பொன்னாலியன்ற பாவை பொற்பாவையாதல் போல, அக இன்பமாதல் ஒருதலை. இந்நிலையையே 'அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொல் நான்கும்-இழுக்கா வியன்ற தறம்' (குறள் - ௩௫) என்பதால் எதிர்மறுத் துணரக் கிடக்கும் அன்பு, அவாவறுத்தல், பொறையுடைமை, இனியவை கூறல் என்னும் அறவியல் நான்கையும் விதந்து கூறுமிடத்து, 'அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத் தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு' (குறள் - ௭௫), 'இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந் - துன்பத்துட் டுன்பங் கெடின்' (௩௬௯), 'ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்' (௧௫௬) 'சிறுமையுணீங்கிய வின்சொன் மறுமையு - மிம்மையு மின்பந் தரும்' (௯௮) என இவ் வறங்களான் இன்ப மெய்துதல் உணர்த்தப் பட்டமை காண்க.

இனி அறம் என்பது ஈகைக்கே சிறப்பாகி 'ஈதலறம்' எனப் படுமாகலான், அவ் வீகலானே இன்பமும் புகழும் உளவாதல் 'ஈத்துவக்கு மின்ப மறியார் கொல்' (௨௨௮) 'ஈவார்மே னிற்கும் புகழ்' (௨௩௨) என வரும் குறள்களாற் பெறப்படும்.

இனி, அறமுதலாகிய மும்முதற் பொருள்களில், அற மொழிய ஏனைய பொருளும் இன்பமுமாம். இவை யிரண்டுமே, அறத்தொடு கூடாத வழித் துன்பமும், புறமான பொய்யின்பமும், புகழிலவும் ஆம். பொருள் புறமேயாவது தேற்றம். ஏனை இன்பம் அகம் எனப்படுதலன்றிப் புறமாவது யாங்ஙனமோ எனின் கூறுதும். ஈண்டு இன்பமெனப் படுவது ஒருவனோடு ஒருத்தியிடை நிகழும் காம வின்பத்தினை. அவ் வின்பம் புறக கருவிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இந்திரியங்களைக் கொண்டு நுகரப் படுதலின் புறம் எனவே படும். இதுபற்றியே ஆசிரியரும், கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் - ஒண்டொடி கண்ணே யுள' (குறள் - ௧௧௦௧). என்றார். ஆயின், இக் காமவின்பத்தினை அக

மென வழங்கும் ஆன்றோர் வழக்கொடு இது முரணுதோ எனின், முரணுமாறில்லை என்க. என்னை? அறத்தின் பகுதியாகிய அன்பொடு புணர்ந்த காமத்தினையே ஆன்றோர் அகம் எனச் சிறப்பித்துக் கூறுவாராயின ரல்லது வெறும் காமவின்பத்தினை அவ்வாறு சிறப்பித்திலர் என்பது தொல்காப்பியம், இறையனாரகப் பொருள் முதலிய பண்டைத் தண்டமிழ் நூல்களான் நன்குணரக் கிடத்தலின் என்பது. இன்பம் என்பது அகவுணர்ச்சி. புறத்தைப் பற்றி அகத்தே நிகழும் இன்பவுணர்ச்சியினும் அகத்தைப் பற்றி அகத்தே நிகழும் இன்பவுணர்ச்சி நிலைபேறுடையதும் உண்மை யுடையது மாதல் பற்றியே அவ்வின்பத்தினை அகம் எனச் சிறப்பித்தார் ஆன்றோர் என்பதும் உணர்க. புறக் கருவிகள் அழி வுடையன வாதலால் அவை காரணமாக எழும் இன்பம் நிலைபே றுடையதாகா தென்பதும் உணர்க. ஒக்கும்; புறம் எனப்பட்ட அறத்தை அகம் என்ற தென்னையோ வெனின் அறத்தை அகம் என்றிலம்; அறத்தான் வரும் இன்பத்தினையே அகம் என்றும் என் பது. இன்பம் அகமாதல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது.

இனி, ஆசிரியர் பரிமேலழகர் 'அறத்தான்' என்பதற்கு, 'இல்லறத்தோடு' எனப் பொருள் கொண்டாரால் எனின், அதிகா ரத்தாற் கொள்ளக் கிடப்பது பொதுவகையில் அறம் என்பதே யன்றிச் சிறப்பு வகையாற் பின்னர்க் கூறப்படும் இல்லறமன்றாதலின் அப் பொருள் பொருந்துமாறில்லை என்பது கண்டுகொள்க. பரிமே லழகர்க்கும் அது கருத்தன்றாதல் பின்னர் அவரே 'அறஞ் செய் வாரே இம்மை யின்பமும் புகழும் எய்துவர்' எனக் கூறுவது கொண்டு உய்த்துணரப்படும். (௯)

அறவினை செய்யத் தகுவது ; பிறவினை விலக்கத் தகுவது.

௪௰. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(இ - ள்.) ஒருவற்கு - (இன்பம் பெற விரும்பும்) ஒருவனுக்கு, செயற்பாலது - (நல்வினை தீவினை என்னும்

வினைப்பகுதி இரண்டனுள்) செய்யத்தக்க பகுதி, அறனே - நல்வினையே, உயற்பாலது - (செய்யாது) ஒழியத்தக்க பகுதி, பழி(யே) - தீவினையே.

(இ - து.) இன்பம் பெற விரும்பும் ஒருவனுக்கு, நல்வினை தீவினை என்னும் இருவகை வினையள், செய்யத் தகுவது நல் வினையே; செய்யாமல் விலக்கத் தக்கது தீவினையே.

ஒரும் என்பது இரண்டிடத்தும அசைநிலை. 'அஞ்சுவ தோரு மறனே யொருவனை, வஞ்சிப்ப தோரு மவா' (குறள்-௩௬௬) எனப் பின்னர் ஒரு குறளினும் இவ்வசைநிலை வந்தது. இவ்வசைநிலை ஆசிரியர் தொல்காப்பியரால் எடுத்துக் கூறப்பட்டிலதாயினும், 'கிளந்தவல்ல' (தொல்-சொல்-இடை-௪௮) எனவரும் புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளப்படும். சிந்தாமணி முதலிய பண்டை யிலக் கியங்கள் பிறவற்றினும இச் சொல் அசைநிலையாகப் பயின்று வந்துள்ளது. தேற்றேகாரம பழிக்கும் கூட்டப்பட்டது. (௰)



## உ. இல்லறவியல்

வாழ்க்கையின் நோக்கம இன்பமே யாதலானும, அவ்வின்பம் ஐம்புல இனபமும் உயிரின்பமும், நிலையிலினபமும் நிலையுளின்பமுமா தல் நோக்கிச் சிற்றின்பம் பேரின்பம என இருதிறப்படுதலானும், அவற்றுள் முன்னது மனைவிமககளோடு இல்லின்கணிருந்து அவா வினை நெறிப்படுத்தி அறவழியில நின்றும் பின்னது அவாவினை அற வொழிதது அறவழியில் நின்றும் பெறக கிடப்பன வாதலானும் அற மும் இலலறம துறவறம் என இருபகுதிப்பட்டது. அப பகுதி இரண்டனுள் இல்லறததைப் பற்றிக் கூறும பகுதி இல்லறவியல் எனப்பட்டது. இவ்வியல் 'இல்வாழ்ககை' முதலாகப் 'புகழ்' இறுதியாக இருபது அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. சிற்றின்பம் அறிந்தே பேரின்பமறிதல் முறையாதலானும், இன்பத தின் நிலையின்மை யுணர்ந்தே நிலையான இன்பததின் மனஞ் செல்லு மாதலானும், அவாவினை நெறிப்படுததக கற்ற பிறகே அதனை அற வொழிததல் கைகூடுமாதலானும் இல்லறம் முன்னும் துறவறம் பின்னுமாகக் கூறப்பட்டன.

## ரு. இல்வாழ்க்கை

அவற்றுள் இவ்வதிகாரம் இல்வாழ்ககையினது சிறப்புக் கூறு கின்றது. இல்வாழ்க்கையாவது இலலற வாழ்ககை. அறச் சிறப்புக் கூறிப் பின்னர் அது படும் இருபகுதியுள் முற்பகுதியாகிய இல்லறம் கூறுவான் தொடங்கி முதறகண் அவ்வறச் சிறப்புக் கூறுகின்றமை யின் அதிகார முறைமை இனிது விளங்கும்.

சக. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.

(இ - ள்.) இல்வாழ்வான் என்பான் - இல்லறத்தோடு கூடி வாழ்பவன் என்று சொல்லப்படுவோன், இயல்பு

உடைய - (தத்தம் ஆசிரம நெறியில் நிற்கும்) தகுதியுடைய, மூவர்க்கும் - (பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி என்னும்) மூவர்க்கும், நல் ஆற்றின் - (அவரது) நல்ல (ஒழுக்க) வழிகளில், நின்ற - நிலைபெற்ற, துணை - துணையாவான்.

(இ - ரு.) கிருகத்தன் ஏனை மூவர்க்கும் துணையாவான்.

இல் என்பது இல்லின்கணிருந்து செய்யப்படும் அறத்திற்கு ஆயினமையின் இடவாகுபெயர். 'எனப்படுவான்' எனற்பாலது படு விகுதி குன்றி என்பான் என நின்றது; இது செயப்படுபொருள் வினைமுதல்போல நின்ற வினைமுற்றுப் பெயர். இல்வாழ்வானுடைய கிருகத்தன் ஒழிய ஏனை மூவருள் பிரமசரியன், ஆசிரியனிடத்திருந்து கல்வி பயின்று விரதங் காக்கும் ஒழுக்கமுடையவன்; வானப்பிரத்தன், இல்லைவிட்டு வனத்தின்கண் சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கமுடையவன்; சந்நியாசி, முற்றத் துறந்த யோக ஒழுக்கமுடையவன். இவருள் முன்னை இருவரும் முற்றத் துறவாமையின் ஓராற்றான் கிருகத்தனோடு ஒப்பராதலின் இம் மூவர்க்கும் உரிய ஒழுக்கத்தினை இல்லறப் பகுதியிற் கூற ஒருப்பட்ட ஆசிரியர் கிருகத்தன் துணையை நாடிநிற்கும் ஒப்புமை நோக்கிய பிறர்மதம் மேற்கொண்டு முன்னை இருவரையும் துறவியோடு கூட்டி மூவர் என்றார். இம் மூவரும் தமக்குரிய ஒழுக்க நெறிகளிற் செல்லுங் காலையில் பசி முதலியவற்றான் இடையூறு நேராமல் உண்டி முதலியன கொடுத்து உதவலான், 'நல்லாற்றின் நின்ற துணை' என்றார். (க)

இல்வாழ்வானது துணை பெறுதற்குரிய 'இயல்புடையார்' இவரெனக் கூறியபின் அத் துணைபெறுதற்குரியராயினும் அவரைப் போல இயல்பிலார் இவர் எனக் கூறுவது வருங் குறள்:

சஉ. துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.

(இ - ள்.) துறந்தார்க்கும் - (ஆதாரமானவராலே) துறக்கப் பட்டவர்க்கும், துவ்வாதவர்க்கும் - உண்ணப் பெறாத வறுமையாளர்க்கும், இறந்தார்க்கும் - (திக்கற்றவராய்ச்) செத்தார்க்கும், இல்வாழ்வான் என்பான் - இல் வாழ்வான் என்று சொல்லப்படுபவனே, துணை - துணையாவான்.

(இ - து.) ஆதாரமானவராலே விடப்பட்டவர்க்கும் வறியோர்க்கும் திக்கின்றி இறந்தவர்கும் இல்வாழ்வானே துணையாவன்.

ஈண்டுத் துறந்தாராவார், தம்மை ஆதரிகக உரிமையுடையோரால் ஆதரியாது கைவிடப்பட்டோர். இறந்தோர்க்குத துணையாவது இடுகாட்டிட்டுச் செய்யத்தகும் கிரியைகள் செயதலால். மேற் குறளில் 'இயல்புடைய மூவா' என்றமையான், ஈண்டுக கூறப்பட்ட மூவரும் தம் இயல்பின் நீங்கியோராதல் பெறுதும். இவை இரண்டு பாட்டாலும் இல்லாளோடு இல்லின்கணிருந்து வாழும அறநிலை எல்லா உபகாரத்திற்கும் உரிததாதல கூறப்பட்டது. (உ)

உண்டி முதலியன கொடுத்தலானும் பிறவகையானும் காப்பாற்றப்படற்குரியார் மேற்கூறப்பட்ட அறுதிறத்தாரேயன்றி அவரொடு கூட்டி எண்ணப்படும் பிறரும் உளரென்பது வருங குறள்:

சங. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
ஐம்புலத்தா றோம்பல் தலை.

(இ - ள்.) தென்புலத்தார் - பிதிரரும், தெய்வம் - தேவரும், விருந்து - விருந்தினரும், ஒக்கல் - சுற்றத்தாரும், தான் - தானும், என்ற - என்று சொல்லப்பட்ட, ஐம்புலத்து ஆறு - ஐந்திடத்தும் (செய்யத்தகும் அற) நெறியை, ஓம்பல் - வழுவாமற் செய்தல், தலை - சிறப்பாம்.

(இ - து.) பிதிரர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவகையினரையும் போற்றல் சிறப்பு.

ஐந்திடத்தும் செய்யத்தகும் அறநெறியைச் செய்தலாவது அவ்வைவர்க்கும் ஆவன அறிந்து செய்தல். முன் கூறப்பட்ட அறுதிறத்தாரும விருந்தினராய் அடங்குவர். இவ்வைவரையும் ஓம்பல் தலையாய அறம் எனக் கூறி விருந்தினரை இடைவைத்தமை யின் முதலிருவரையும் ஒழித்து விருந்தினர் முதலாய மூவரைமட் டும் ஓம்பல் இடையாய அறம் என்பதும், தன்னைக் கடையில் வைத்தமையின் முதல் நால்வரையும் ஒழித்துத் தன்னை மட்டும் ஓம்பல் கடையாய அறம் என்பதும் பெறப்படும்.

பிதிரர்களாவார் படைப்புக்காலத்தில் பிரமனாற் படைக்கப் பட்ட ஒரு தேவ சாதியார் எனவும் அவர்களுக்கிடம் தென்றிசை யாதலால் தென்புலத்தார் எனப்பட்டார் எனவும் கூறுவர் ஆன் றோர். தெய்வம் என்பது ஒரு சாதியாரை உணர்த்தும் பன்மைப் பெயராதலால் சாதியொருமை விருந்து - புதுமை; அஃது ஈண்டுப் புதியராய் வந்தார்மேல் நிற்றலால் பண்பாகுபெயர். ஒக்கல் - சுற் றத்தார். எல்லா அறங்களும் செய்வது தான் ஆதலால் தன்னை ஓம்புதலும் அறமாயிற்று. ஈண்டுப் பகுக்கப்பட்ட ஐவர்க்கும் ஐந்து கூறாகவே அரசர்க்குக் கடமை ஆறிலொன்றாயிற்று. இடைச்சொல் லடியாகப் பிறந்த என்ற என்னும் பெயரெச்சத்தின் ஈற்றகரம் தொக்கது. 'ஆங்கு' அசைநிலை. இதனை இடப்பொருளுணர்த்து வதாகக்கொண்டு, 'என்றாங்கு' என்பதனை 'என்று ஆங்கு' எனப் பிரித்து 'என்று அங்கே (சொல்லப்பட்ட)' என்ப பொருள் கூறு தலும் உண்டு. சொல்லப்பட்ட என்பது சொல்லெச்சம். 'இனைத் தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு-வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்' (தொல் - சொல் - கிளவி - ௩௩) என்பது விதியாதலான் 'ஐம்புலத்தும்' என நிற்றற்பாலது 'ஐம்புலத்து' என முற்றும்மை குறைந்து நின்றது. 'ஐம்புலத்து ஆறு' என்பதற்கு, 'ஐம்புலத் தும் (செய்யப்படும் அற) ஆறு' என இடையே கூட்டிச் சொன் னது குறிப்பெச்சம். தலைமையாகிய அறத்தைத் 'தலை' என்றது பண்பாகுபெயர்; ஈறு குறைந்து நின்றது.

'ஐம்புலத்தார் ஓம்பல் தலை' எனப் பாடங்கொண்டு 'ஐந்திடத்தா ரையும் ஓம்புதல் தலையான இல்வாழ்க்கை' என்றார் மணக்குடவர். (௩)

ஈண்டுக் கூறியவாற்றாற் பகுக்குங்கால் மேற்கொள்ளவேண்டிய ஒழுக்கம் இதுவென்று கூறி அவ்வொழுக்கத்தில் நின்று பகுத்துண்டலான் வரும் பயன் இஃதென்பது வருங்குறள்:

சச. பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்று மில்.

(இ - ள்.) *பழி அஞ்சி*-(பொருள் தேடுங்கால்) பாவத்துக்குப் பயந்து (தேடி), *பாத்து* - (அப்பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் என மேற்சொன்ன நால்வருக்கும்) பகுத்து, *ஊண்*-(தானும்) உண்டலை, *வாழ்க்கை உடைத்தாயின்* - (ஒருவனது) இல்வாழ்க்கை உடையதானல், *வழி* - (அவனது) சந்ததி, *எஞ்சல்* - (உலகத்தில் நிலைத்திருப்பதல்லது) அழிதல், *எஞ்ஞான்றும் இல்* - எக்காலத்திலும் இல்லை.

(இ - து.) பாவத்துக்காளாகாமல் பொருளைத் தேடி, அப்பொருளைத் தென்புலத்தார் முதலியோர்க் குபகரித்தலிற் பங்கிட்டுத் தானும் உண்ணுவோனுடைய சந்ததி அழியாது.

பிறன் பொருளைப் பாவவழியால் தான் கைப்பற்றி, அப்பொருளால் அறஞ்செய்யின், புண்ணியம் பொருளுக்குரிய அப் பிறன்பாலும் பாவம் தன்பாலும் சார்ந்து சந்ததிவிருத்தியைக கெடுக்குமாதலாற் 'பழியஞ்சி' என்றார். வாழ்வானுககும் வாழ்க்கைககும் உள்ள ஒற்றுமை பற்றி வாழ்வானது உடைமையை 'வாழ்க்கை உடைத்தாயின்' என வாழ்க்கைமேல் ஏற்றிச் சொன்னர். பழிப்பிற் கேதுவாகிய பாவத்தைப் பழி என்றது காரியவாகுபெயர். 'பகை பாவம் அச்சம் பழி என நான்கும்' (குறள் - கசசரு) என ஆசிரியர் பிறிதோரிடத்துப் பழியைப் பாவத்தின் வேருக வைத்தெண்ணுதலின் ஈண்டும் பழி என்பதற்குப் பழிப்பெனவே பொருள் கோடலும் சாலும்.

'வாழ்க்கை வழியெஞ்சல்' என்பதற்கு இல்வாழ்க்கையாகிய நிலை தனது ஒழுங்கு இடையறுதல்' எனப் பொருள் கொண்டார்

மணக்குடவர். இராமானுஜகவிராயர் இதற்குக் கூறிய வேறுரை வருமாறு:

வாழ்க்கை - (இல்லறத்தான் ஒருவனுடைய) செல்வமானது, பழி அஞ்சி - ('இட்டுண்ணான் வாழ்க்கை இடுகாட்டுள் ஏற்றுப்பனை' எனச் சான்றோர்) நிந்தித்தலுக்குப் பயந்து, பாத்தூண் உடைத்தாயின் - (பிறர்க்குப்) பகுத்து இட்டு உண்பதை உடையதானால், (அது) வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல் - (அவன்) சந்ததிக்கும் குறைபடுவது எக்காலத்தும் இல்லை. (எ-று.) இல்லறத்தான் ஒருவனுடைய என்பது அதிகாரத்தாற் பெற்றோம். வழியெஞ்சல் என்ற இடத்து வழிக்கும் எஞ்சல் என்ற நான்காம் வேற்றுமை உருபும் இறந்ததுதழுவிய எச்ச உம்மையும் செய்யுள் விகாரப் படுதலாற் குறைந்து நின்றது. அதினாலே அந்த வாழ்க்கை அவனுள்ளளவும் குறைபடாதிருப்பதுமன்றி, அவன் சந்ததிக்குங் குறைபடாதெனக் கொள்க. பகுத்துண்ணான் சந்ததியும் உலகத்து நிற்குமாதலால் அதினாலே பெரும் பயனின்மையிற் சந்ததிக்குஞ் செல்வங் குறைபடாதிருக்குமென்பதே தெளிவு.

இவ்வுரையிற் கவிராயரது நுண்மாணுழை புலமை விளங்கிக் கிடக்கின்றது. ஆயினும் அப் புலவர் பெருமான் கூறுமாறு 'பகுத்துண்ணான் சந்ததியும் உலகத்து நிற்கும்' எனக் கொண்டால் 'பகுத்துண்ணான் சந்ததிக்குஞ் செல்வம் குறைபடாது நிற்கும்' எனக் கோடலும் ஒவ்வுமன்றோ ? அறிஞர் ஆராய்ந்து கொள்க. இக்கூறிய பயன் தவறக் காணினும் அதனால் உள்ளமுடையாமைக் கன்றே அதற்கதுவே பயன் என வருங் குறளால் வற்புறுத்துவாராயினர் ஆசிரியர் என்பதும் நோக்கற்பாலது. (௪)

பாத்தூண்டார் வழி ஒருகால் யாண்டேனும் எஞ்சக் காணினும் அதுகொண்டு அவ்வறத்தைக் கைவிடற்க, அதற்கதுவே பயனும் என்பது வருங்குறள்:

௪௫. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

(இ-ள்.) இல்வாழ்க்கை-(ஒருவனது) இல்லறவாழ்க்கை, அன்பும் - (யாவரிடத்தும் செய்யத்தகும்) அன்பினையும், அறனும் - (பகுத்துண்டலாகிய) அறத்தினையும், உடைத்தாயின் - உடையதாயின், அது - அவ்வுடைமையே (இல்லறவாழ்க்கைக்கு), பண்பும் பயனும் - குணமும் பயனுமாம்.

(இ - து.) அன்பும் அறனும் உடைமையே இல்லறவாழ்க்கைக்குப் பண்பும் பயனுமாம்.

'அன்பு - தன்மனையாளிடத்துச் செய்யத்தகும் அன்பு' என்பது பரிமேலழகர் உரை; 'யாவரிடத்தும் செய்யத் தகும் அன்' பென்பது மணக்குடவர் உரை. 'அன்புடைமை' என்னும் அதிகாரத்தால் யாவரிடத்துஞ் செய்யத்தக்கது அன்பென்று ஆசிரியர் அறியவைத்தமையின் மணக்குடவர் உரையே பொருந்துவதாகக் கொள்ளப்பட்டது: ஏற்குமேற் கொள்க. மனையாளுக்கும் கணவனுக்கும் மனவொருமை யில்லாதபோது இல்லறம் இனிது நடைபெறாதாகலான் அன்புடைமை பண்பாயிற்று அறனுடைமை பயனாயிற்று என நிரனிறைப் பொருள்கோளாகக் கொண்டார் பரிமேலழகர். இல்லறவாழ்க்கைக்கு அன்பும் அறனும் உடைமையே பண்பு; அவை உடைமையே பயனும் எனக்கோடலும் இழுக்காது.

இவை மூன்று பாட்டாலும் இல்வாழ்வோன் அறஞ் செய்யுமாறு கூறப்பட்டது. (ரு)

இல்லறத்தின் பயன் இதுவெனவே, இதனிற் பெரும்பயன் தருமாறு பிறிதில்லையோ என்றாற்கு இல்லை யென்பது வருங்குறள்:

சசு. அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

(இ - ள்.) (ஒருவன்) இல்வாழ்க்கை - இல்லறவாழ்க்கையை, அறத்தாற்றின் - தருமத்தின் வழியில், ஆற்றின் -

செலுத்துவானாயின், (அவன்) புறத்தாற்றின் - (அதற்குப்) புறமாகிய வழியிலே, போய் - சென்று, பெறுவது - அடையும் பயன், எவன் - யாது? (ஒன்றுமில்லை).

(இ - து.) இல்லறத்தைச் செவ்வையாகச் செய்யின் தவநெறியிற் போய்ப் பெறும் பயன் வேறில்லை.

அறத்தாறாவது, பழி அஞ்சிப் பகுத்துண்டலும் யாவர்மாட்டும் அன்பு செய்தலும் என மேற்கூறிய நெறி; புறத்தாறாவது, இல்லை விட்டு வனத்திற் சென்று தவஞ்செய்யும் நெறி. போய் எனற்பாலது செய்யுளிசை நிறைக்க நீண்டது. தவத்தாற் பெறக்கிடைக்கும் மெய்யுணர்ச்சியும் வீடுபேறும் முறைப்படி செய்யப்படும் இல்லறத்தானும் எய்தும் என்பார், 'புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவதெவன்' என்றார். (௬)

இங்ஙனம் இல்லறத்தைச் சிறப்பித்துக்கூறவே, துறவறத்தின் பெருமை குறைவென்று கொள்ள நேருமன்றே? அது நேராமைக்கு முற்றத்துறந்த துறவோரை நீக்கி, பல்லாற்றானும் அத் துறவு நிலையை அடைய முயலும் வானப்பிரத்த நெறியார் பலரினும் இல்வாழ்வான் பெருமையுடையன் என்றதல்லது வேறில்லை என்பது வருங்குறள்:

௪௭. இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(இ - ள்.) இல்வாழ்க்கை - இல்லற வாழ்க்கையிலே, இயல்பினான் - (அதற்குரிய) தன்மையோடு, வாழ்பவன் என்பான் - வாழ்கிறவன் என்று சொல்லப்படுபவன், முயல்வாருள் எல்லாம் - (ஐம்புலன்களை விடத்) தவஞ் செய்பவராகிய எல்லாருள்ளும், தலை - சிறப்புடையவன்.

(இ - து.) இல்லற வாழ்க்கையை நெறிப்படி செலுத்துபவன் தவஞ்செய்வா ரனைவரினும் சிறப்புடையவன்.

முற்றத் துறந்தோர் மெய்ப்பொருளுணர்ந்து ஐம்புலனையும் விட்டவராதலின், முயல்வார் என்றது அந் நிலையை அடைய முயலும் தவவொழுகத்தினையுடைய வானப்பிரத்தரை. அவர் நிலை பலவகைப் படுதலின் 'முயல்வாருள் எல்லாம்' என்றார். அவர் செய்யும் தவமுயற்சி யின்றியே அதனாற் பெறத்தக்க பயனைப் பெறுதலின் 'இயல்பினான் இல்வாழ்வான் தலை' என்றார்.

துறவோரினும் உயர்வு இல்லறத்தார்க்குக் கூறுதல் ஆசிரியர் கருத்தன்றென்பது 'நீத்தார் பெருமை' எனத் தனியே ஓர் அதிகாரம் வகுத்து அதனைப் பாயிரத்தின் அமைத்ததுகொண்டே இனிது பெறப்படும். ஈண்டு 'முயல்வாருளெல்லாம' என முற்றத் துறந்த துறவோரை நீக்கிக் கூறியதால் அத்துணிபு பின்னும் வலியுறுவதாயிற்று (எ)

எய்தும் பயனால் இல்லறத்துக்குச் சிறப்புக் கூறுவது இக்குறள்; செய்யும் செயலால் அதற்குச் சிறப்புக் கூறுவது வருங்குறள்:

சஅ. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.

(இ - ள்.) ஆற்றின் ஒழுக்கி - (தவஞ் செய்வாரையும் தத்தம்) வழியிலே செலுத்தி, அறன் இழுக்கா - (தானும் தனக்குரிய) அறநெறியிலே தவறாத, இல்வாழ்க்கை - (ஒருவனுடைய) இல்லற வாழ்க்கையானது, நோற்பாரின் - அந்தத் தவஞ் செய்வோர் நிலையினும், நோன்மை உடைத்து- வலி உடையது.

(இ - ரு.) தவத்தினரைத் தவ வழியிற் செலுத்தித் தானும் தனக்குரிய நெறியில் தவறாதவனுடைய இல்வாழ்க்கை அத் தவத்தினர் நிலையினும் வலியுடையது.

நோன்மை-வலி; பொறுத்தலுமாம். வலி என்பது மணக்குடவர் கொண்ட பொருள்; பொறுத்தல் என்பது பரிமேலழகர் கொண்ட பொருள். 'மாணா மறமும் மன்பும நோன்மையும்......

வலியின் பெயரே' என்பதும், 'சமித்தலும் நோன்றலும் கமித்தலும் பொறுத்தல்' என்பதும் பிங்கலம். தவஞ் செய்வார் தம்மையடைந்த நோயையல்லது பிறரை அடைந்த நோயைப் பொறுக்கும் கடப்பாடுடைய ரல்லர்; இல்லறத்தாரோ தந் நோய்போற் பிறர் நோயும் பொறுக்கும் கடப்பாடுடையர்; ஆதலின் முன்னவர்நிலையினும் பின்னவர்நிலை பொறையுடைத்தென்பது பரிமேலழகர் உரையாற் கொள்ளக் கிடப்பது. தந் நெறியில் நிற்பதல்லது பிறிதில்லாத தவஞ்செய்வார் நிலையினும் தந் நெறியில் தாமும் நின்று தவஞ் செய்வாரையும் அவர் நெறியிற் செலுத்தும் இல்லறத்தார் நிலை வலியுடைத் தென்பதும் ஒவ்வும்.

நோற்பாரின் - என்பதில் இன் உருபு உறழ்பொருவு. (அ)

இங்ஙனம் பயனாலும் செயலாலும் இல்லறத்துக்கு எய்திய சிறப்பைப் பின்னும் வலியுறுத்தி, இதனோ டொருங்கு வைத்தெண்ணப்படும துறவறத்திற்கு மிதற்கும் உள்ள வேற்றுமை புலப்படுப்பது வருங்குறள்:

௪௯. அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை: அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.

(இ - ள்.) அறன் எனப்பட்டது - (இருவகையறத்தினும்) அறன் என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது, இல்வாழ்க்கையே - இல்லற வாழ்க்கையே; (ஏனைத் துறவறமோ எனின்,) அஃதும் - அத் துறவறமும், பிறன்-பிறனால், பழிப்பது - பழிக்கப்படுவது, இல்லாயின் - இல்லையாயின், நன்று - (அவ் வில்லறத்தோ டொப்ப) நல்லது.

(இ - து.) அறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது இல்லறமே; துறவறமும் பிறனாற் பழிக்கப்படுவ தின்றாயின் அதுபோல நன்றாம்.

பிரித்துக் கூட்டப்பட்ட ஏகாரம் பிரிநிலைப் பொருளது. இவ்வேகாரத்தால் பிரிக்கப்பட்டது துறவறமாதலின், அஃது என்னும் சுட்டு அத் துறவறத்தைக் குறித்தது. பிறன் பழிப்பதென்றது இருபத்தெட்டாம் அதிகாரத்து விரித்துக் கூறப்படும் கூடாவொழுகத்தை. எனவே, பிறன் பழிப்பதற் கிடனின்றி மனத்தையும் பொறிகளையும் அடக்குதல் அருமையுடைத் தென்பதும், அவ்வருமை யறிந்து மனத்தையும் பொறிகளையும அடககித தவ நெறியில் நின்றவிடத்தே அத்துறவறம இல்லறத்தோ டொருங்கு வைதெதெண்ணப்படும் தகுதியுடைத் தென்பதும் பெறப்படும். துறவி ஐம்புலனை அடககிப் பெறும்பயனை, இல்வாழ்வான் ஐம்புல இன்பங்களை ஆரத துய்ததுப் பெறுதல்பற்றி இல்லறம் எளிமையுஞ் சிறப்புமுடையதாயிற்றாதலின் 'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை' என்றார். அஃது என்னும் சுட்டுப் பெயா இல்வாழ்ககையைச் சுட்டுவதாக வைததுப் பொருளுரைத்தார் மணககுடவர். அன்றியும் அவர் இக்குறளை அதிகாரத்தின் இறுதியில் வைத்து, 'பழிககப்படுவதென்றது இழிகுணத்தாளாகிய மனையாளை. இனி வாழ்க்கைத் துணைநலம் கூறுகின்றாராதலின் இஃது ஈண்டுக் கூறப்பட்டது' என்றார்.

இவை நான்கு பாட்டானும் இல்லறவாழ்ககையின் மேம்பாடு விளக்கப்பட்டது. (கூ)

பல்லாற்றானும் வகுத்தக கூறிய இல்வாழ்க்கைச் சிறப்பை ஒருவாற்றால் தொகுத்தக கூறுவது வருங்குறள்:

ருய. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
　　தெய்வத்துள் வைக்கப் படும்.

(இ - ள்.) வையத்துள்-உலகத்தின்கண், வாழ்வாங்கு-(இல்லறத்தோடு கூடி) வாழவேண்டிய முறைப்படி, வாழ்பவன் - வாழ்கின்றவன், (உலகத்தானேயாயினும்) வான் உறையும் - மேல் உலகத்தில் வசிக்கும், தெய்வத்துள் -

தேவர்களுள் (ஒருவனாக), வைக்கப்படும் - வைத்து மதிக்கப்படுவான்.

(இ - து.) இல்லற வாழ்க்கையில் முறைப்படி வாழ்பவன் தேவருள் ஒருவனாக மதிக்கப்படுவான.

வாழ்வாங்கு வாழ்பவன் இவ்வுலக வாழ்க்கையை நீத்த பின்னர்த் துறக்கம புகுவது நிச்சயமாதலின் 'தெய்வத்துள் வைக்கப்படும' என்றார். இதனால் இல்வாழ்வோன், நெறிப்படி வாழின், உலகத்தாரால் தேவருள் ஒருவனாக மதிக்கபபடுதலின் புகழாகிய இம்மைப்பயனும், துறக்கம புகுவது ஒருதலை என்பது பெறவைத் தமையின் துறக்கவாழ்க்கையான மறுமைப் பயனும் பெறுவான் என்பது கொள்ளக்கிடந்தது

இவ் வதிகாரத்தில் முதல் இரண்டு பாட்டால் இல்லறவாழ்க்கை பல்லார்க்கும் உபயோகமாதலுடைத்தென்பதும, அடுத்த மூன்று பாட்டால் இல்லறவாழ்க்கையைச் செலுத்துமாறும், அடுத்த நான்கு பாட்டால் துறவறத்தினும் இல்லறத்துக்குள்ள ஏற்றம் இனைத்தென்பதும, பத்தாவது பாட்டால் இல்லறம் இம்மை மறுமைப் பயன்களை ஒருங்குதர வல்லதென முடிவுரையும் கூறியருளினார் ஆசிரியர். (ய)



## ௬. வாழ்க்கைத் துணைநலம்

அஃதாவது மேற்கூறிய இல்வாழ்க்கையை வாழ்வாங்கு வாழ இன்றியமையாத துணையாய் உடனின்றுதவி புரியும் மனையாளது மாட்சி. இதனானே மேலையதிகாரத்தோடு இதற்குள்ள தொடர்பு இனிது விளங்கும்.

௫௧. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

(இ - ள்.) *மனைத்தக்க - இல்லறத்திற்குத் தக்க, மாண்பு - மாட்சிமை, உடையளாகி - உடையவளாய், தற்கொண்டான் - தன்னை (மனையாளாக விவாகஞ் செய்து) கொண்ட கணவனுடைய, வளம் - வரவுக்கு, தக்காள் - தகுதியாக வாழ வல்லவளே, வாழ்க்கைத் துணை - இல்லற வாழ்க்கைக் குத் துணையாவாள்.*

(இ - து.) *குடித்தனத்துக் கேற்ற குணமும், கணவன் வரவுக் கேற்ற வாழ்க்கையு முடையவளே மனையாள்.*

*இவ்வாறில்லாத மனையாள் வாழ்க்கைக்குத் துணையாவதுபோகத் தடையாவது தேற்றமாதலின் தேற்றேகாரம் வருவித்துரைக்கப் பட்டது. மாட்சிமையாவது நற்குண நற்செய்கைகளுடைமை. நற்குணங்களாவன துறவோரை உபசரித்தலும், விருந்தினர்பால் அன்புடைமையும, வறியோர்பால் அருளுடைமையும் இவை போல்வன பிறவுமாம். நற்செய்கைகளாவன வாழ்க்கைக்கு வேண் டும் பொருள்களை அறிந்துகொண்டு காப்பாற்றுதலும், ஆவன ஆய்ந்து சுவைப்பட உணவு சமைத்தலும், உலகத்தோ டொத்து நடத்தலும் இவை போல்வன பிறவுமாம். வருவாய்க்குத் தகுதியாக வாழ்தலாவது, வருவாய்கரு உள்ளடங்கச் செலவு செய்து இல்லறம் நடத்தல்.*

*இம் முதற் குறளால் மனையாளது இலக்கணம் கூறப்பட் டது.* (௧)

மேற் கூறப்பட்ட மாண்பு மனையாளின்கண் இல்லையாயின் இல்லறம் பயனிலதாம் என்பது வருங்குறள் :

௫௨. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினு மில்.

(இ - ள்.) மனை மாட்சி - இல்லறத்துக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள், இல்லாள்கண் - (ஒருவனது) மனையாளிடத்தில், இல்லாயின் - இல்லையானால், வாழ்க்கை - அவ்வில் வாழ்க்கையானது, எனைமாட்சித்தாயினும் - (வேறு எவ்வகையால்) எவ்வளவு சிறப்பு உடையதானாலும், இல் - (சிறப்பு) இல்லை.

(இ - து.) நற்குண நற் செய்கைகள் மனையாளிடத்தில்லையானால் இல்வாழ்க்கை வேறெவ்வகையாலும் சிறப்பெய்தாது.

வேறுவகைச் சிறப்பாவன, குறைவற்ற செல்வம், குடிப்பிறப்பு, புகழ் முதலியன. இலலை என்பது இல் எனக் கடைகுறைந்து நின்றது. (௨)

மனைமாட்சி இல்லாளிடத்து இல்லையாயின் யாதாம் என்று மேற் கூறியதைப் பின்னும் வலியுறுத்தி மனைமாட்சி இல்லாளிடத்து உண்டாயின் யாதாம் எனவும் கூறுவது வருங்குறள் :

௫௩. இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை.

(இ - ள்.) இல்லவள் - (ஒருவனுக்கு) மனைவி, மாண்பானால் - நற்குண நற் செயல்கள் உடையவளானால், இல்லது என் - (அவனுக்கு) இல்லாதது யாது? (யாவுமுண்டு) இல்லவள் - (பிறன் ஒருவனுக்கு) மனையாள், மாணாக் கடை - நற்குண நற் செயல்கள் உடையளாகாதபோது, உள்ளது என் - (அவனுக்கு) உள்ளது யாது? ஒன்றுமில்லை.

(இ - து.) மனையாள் மாண்புடையளாகப் பெற்றவனுக்கு இல்லாதது ஒன்றுமில்லை; மனையாள் மாண்புடையளாகப் பெறாதவனுக்கு உள்ளது ஒன்றுமில்லை.

மாண்பு என்னும் குணப்பெயரை, அக் குணத்தை ஏற்றற்குரிய குணியாகும் இல்லவள்மேல் ஏற்றி இல்லவள் மாண்பானால் எனப் பண்பாகு பெயராகக் கூறியது மிகுதி காட்டுதற்பொருட்டு. குணம்-பண்பு; குணி - பண்பி. எவன் என்னும் வினாவினைக்குறிப்பின் மரூஉவாகிய என் என்பது ஈண்டு அறிவினாவாய் நின்றது, ஒன்றுமில்லையென ஐயமற அறியக் கிடத்தலின். மாண்புடையாளும் வேறே மாண்பிலாளும் வேறே யாகலின் இல்லவள் என ஈரிடத்தும் உரைத்தார். மாணாக்கடை என்பதில் கடை என்பது போது என்னும் பொருளில் வந்தது; இப் பொருளில மாணா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கடை என்பது இடப் பொருளுணர்த்தாமல், மாணாதாயின் எனப் பொருள்படுதலால் வினையெச்சவிகுதியாகக்கொண்டு மாணாக்கடை என்பது வினையெச்சம என்பது முண்டு.

இவ் விரண்டு பாட்டாலும் இல்வாழ்க்கை இனிது செல்ல இன்றியமையாது வேண்டப்படுவது இல்லாளுடைய மாட்சி என்பது சொல்லப்பட்டது. (ரு)

இல்லாளுடைய மாட்சியிற் றலைசிறந்தது இஃதென்பதும், அதனால் அவள் பிறவி பெருமை யெய்துமாறும் கூறுவது வருங் குறள்:

ருச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
　　திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) பெண்ணின் - பெண்பிறவிபோல, பெருந் தக்க - மிகவும் மேன்மையுடையன, யா உள - (வேறு) எவை உள்ளன, கற்பு என்னும் - கற்பு என்று சொல்லப்படும், திண்மை - (உள்ளத்) திடம், உண்டாகப் பெறின் - உண்டாகப் பெற்றால்.

(இ - து.) கற்பென்னும் மனஉறுதி உண்டாயிருந்தால் பெண் பிறவியினும் சிறந்தது வேறொன்றில்லை.

பெண் - என்பதற்குப் பெண்பிறவி எனப் பொருள் கொண்டது, மணக்குடவர் உரைபற்றி. 'ஒருவனெய்தும் பொருள்களுள் இல்லாளின் மேம்பட்ட பொருள்கள் யாவுள' என்று இல்லாளை அஃறிணைப்பாற் படுத்திப் பொருள் என்றார் பரிமேலழகர். இல்லாளைச் சிறப்பிக்கக் கருதிய குறளிலே அவளுக்கு உலகமொப்பிக் கொடுத்த திணைஉயர்வையும் பறித்து அவளை இழித்து அஃறிணைப் பொருளோடு ஒருசேர வைத்தல் ஆசிரியர் கருத்தெனக் கோடற்கு ஒருப்படாது மணக்குடவர் உரையே ஆசிரியர் கருத்தறிந்த உரையெனக் கொண்டாம். கற்புடைய பெண்பிறவியின் உயர்வைக் கூற வந்தவர் கற்பாவது மன உறுதியே எனக் கற்பினியலும் உடன் கூறி ஒன்றின் ஒன்றேய்த வைத்தார். இதனாலே கற்பின் சிறப்புச் சொல்லப்பட்டது. (௪)

கற்புடையாள் செயலும் அவள் கற்பின் ஆற்றலும் இனைய என்பது வருங்குறள்:

௫௫. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

(இ - ள்.) தெய்வம் தொழாள்-தெய்வத்தைத் (தெய்வமென்பதுபற்றித் தன் கணவனினும் மேலாகக் கருதித்) தொழாதவளாகி, கொழுநன்-(தன்) கணவனையே, தொழுது - (தனக்குத் தெய்வமாகக் கருதி மனத்தால்) தொழுது கொண்டு, எழுவாள் - (துயில்நீங்கி) எழுமவள், பெய் என-பெய் என்று சொல்ல, மழை பெய்யும் - மழையானது பெய்யும்.

(இ - து.) தன் கணவனையே தெய்வமாகக் கருதித் தொழுமவள் பெய்யென்றால் மழை பெய்யும்.

கணவன் உள்ளம் தனக்கும் பிறர்க்கும் பொருள் தேடுதலினும், அப் பொருள் காரணமாகப் பிறர் ஏவல்வழி நிற்பதினும், அருள் வேண்டிப் பெரியாரையும் தெய்வத்தையும் வழிபடுதலினும் இன்னோரன்ன பிறவாற்றினும் சிதறித் திண்மை குன்றும். அவ்வாறு பலபடச் சிதறவிடாது தன் உள்ளத்தைத் தன் கணவனை வழிபடுதலினும் அவற்கு ஆகவேண்டுவன செய்தலினுமே ஒருமுகப்படுத்திச் செலுத்துவதால் மனையாள் உள்ளம் திண்மையுடையதாகின்றது. கணவற்கு ஆவன செய்தலும் வழிபாடே யாகலின், மனையாள் மனம் கொண்டானை வழிபடுதல் என்னும் ஒன்றிலே முனைப்பதாகின்றது. ஆகவே, ஞாயிற்றின் கதிர்கள் சிதர்ந்து பரவாமல், நெருப்புக் கண்ணாடி வழியே குவிந்து பாயுங்கால தீயினை விளக்குமளவாக ஆற்றலின் மிகுமாறு போல, அவள் உள்ளமும் ஆற்றலின மிகுமாறு பெறப்படும். அதுபற்றியே மேலும் 'கற்பென்னும் திண்மை' என்றார். கற்பென்னும் காரணமே திண்மை என்னும காரியமாக மாறி நின்றது. 'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்-திண்ணிய ராகப் பெறின்' என ஆசிரியர் மேற் கூறும் (குறள் - சுசுசு) உண்மை யாண்டும் வழுவுதலில்லை யாதலின் கற்பினால் திண்ணியளாய மனையாள் எண்ணிய எண்ணியாங் கெய்தல் ஒருதலை. அற்றாக, அவள் பெய்யெனில் மழை பெய்யுமென்பதும் துணிவேயாம். இடையறாது துயிலினும் விழிப்பினும் தன் உள்ளத்தில் இருப்பது கணவன் வழிபாடே யாதலால் தொழுது கொண்டே எழுதல் இயல்வதாயிற்று. செயவெனெச்சம் தொழுது எனத் திரிந்து நின்றது. பரிமேலழகரும் மணக்குடவரும இவ்வாறே பொருள் கொண்டனர். பிரயோகவிவேக முடையார் இதனை மறுத்து 'எழுதல துயிலொழித லாகலான், எழுந்து தொழுவாளென முன்பின்னாகப் பொருள்படுதலன்றி, நகுபு வந்தான், ஓடி வந்தான் என்பனபோலத் தொழாநின்று துயிலெழுதல் கூடாதென்க' என்றார். தொழுதுகொண்டு துயிலெழுதல் கூடுவதே என்பது உளவியல்பற்றி உய்த்துணரப் புலனாமாதலின் அம் மறுப்புப் போலிமறுப்பென்க. 'இது கணவனைக் கனவினும நனவினும்

தெய்வமெனத் தொழுவாள் ஆணைக்குப் பூதங்களும் கீழ்ப்படியு மென்றது' என்ற மணக்குடவர் கருத்துரையும் ஈண்டு நோக்கற் பாலது.

இக்குறள் 'தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்-பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றவப் - பொய்யில் புலவன் பொருளுரை தேராய்' என்று சீத்தலைச் சாத்தனாரால் மணிமேகலை உடம் காதை ருக - ௬ம வது அடிகளில் எடுத்தாளப்பட்டது.

இதனால் கற்புடையவளது ஆற்றல் கூறப்பட்டது. (ரு).

கற்புடையவளின் இலக்கணம் கூறுவது வருங்குறள்:

ருசு. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(இ - ள்.) தற்காத்து - தன்னைக் (கற்புநிலையினின்று வழுவாமற்) காத்து, தற்கொண்டான் பேணி - தன்னைக் கொண்ட கணவனை (உண்டி முதலியவற்றாலே) பாதுகாத்து, தகைசான்ற சொல் காத்து - (தன்னைக் கொண்டவனது) நன்மை நிறைந்த சொல்லைக் (கடவாமற்) காத்து, சோர்வு இலாள் - (மேற்கூறிய நற்குண நற்செய்கைகளில்) மறவி இல்லாதவளே, பெண் - (கற்பொழுக்கமுள்ள) மனைவி யாவாள்.

(இ - து.) தன் கற்பைக் காத்துத் தன் கணவனைப் பாது காத்து அவனது சொல்லைக் கடவாமற் காதது மேற்கூறிய நற்குண நற்செயல்களில் மறவியில்லாதவளே கற்புடைய மனைவி.

'தகைசான்ற சொற்காத்து' என்பதற்கு ஈண்டுக் கூறப்பட்ட உரை இராமாநுஜ கவிராயர் உரைத்தது. பரிமேலழகரும் மணக் குடவரும் 'நன்மை அமைந்த புகழைக் காத்து' என்றனர். சொல்-புகழ். ஆசிரியர் தம் மனைவியார் இறந்தகாலத்துக் கூறியதாக வழங்கும் வெண்பாவில் 'படிசொற் கடவாத பாவாய்' என்றிருத்

தலை நோக்கக் கவிராயர் கொண்ட பொருளே ஆசிரியர் கருத்துக கியைந்ததாகத் தோன்றுகிறது. ஏற்பது கொள்க.

இது பெண்களிற் சிறந்தாளது இலககணங் கூறிற்றென்றார் மணககுடவா. (சா)

பெண்களிற் சிறந்தாட்குச் சிறப்பிலககணம் கற்புடையளாதலன்றே? அக் கற்புடைமை நிலைபெறுமாறிஃதெனபது வருங் குறள்:

ருஎ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(இ - ள்.) மகளிர் - (தம் மனைவியராகிய) மகளிரை, சிறைகாக்கும் - (கணவர், மதில் வாயில்காவல் முதலிய) சிறையினாலே பாதுகாக்கும், காப்பு - காவலானது, எவன் செய்யும் - என்ன பயனைச் செய்யும், நிறை - (அம்மகளிர் தம் மனத்தைக் கற்பொழுக்கத்திலே நிறுத்துவதாகிய) நிறையினாலே, காக்கும் - (தங்களைப்) பாதுகாத்துக்கொள்ளும், காப்பே - காவலே, தலை - சிறந்த காவலாம்.

(இ - து.) மகளிர் கற்பொழுககததால் தங்களைக் காத்துக கொள்ளும் காவலே காவலாவதன்றி ஏனைய காவல்கள் பயன்படா.

ஏனைய காவல்களைப் பிரித்து நீக்கினமையின் 'காப்பே' எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினார். நிறை - நெஞ்சைக கற்பு நெறியிலே நிறுத்தல்; 'காப்பன காததுக கடிவன கடிநது ஒழுகும் ஒழுக்கம்' என்றார் நக்கீரர். 'நிறையெனப் படுவது மறை பிறரறியாமை' என்பது கலித்தொகை.

இதனால் தற்காத்தலின் சிறப்புக் கூறப்பட்டது. (எ)

நிறுத்தமுறையே தற்கொண்டாற் பேணலின் சிறப்புக கூறுவது வருங்குறள்:

ருஅ. பெற்ருற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு.

(இ - ள்.) பெண்டிர் - (மனைவியராகிய) மகளிர், பெற்ருன் - (தம்மைக்) கொண்ட கணவனை, பெறின் - (பேணுதல்) பெறுவாராயின், பெரும் சிறப்பு - (இவ்வுலகத்திலே பலராலும் கொண்டாடப் படும்) பெரிய சிறப்பையும், புத்தேளிர் வாழும் உலகு - (இறந்த பின்) தேவர் வாழும் விண்ணுலக வாழ்க்கையினையும், பெறுவர்—.

(இ - து.) கணவனைப் பேணும் மகளிர் இம்மையிற் புகழும் மறுமையிற் சுவர்க்கமும் பெறுவர்.

பெண்டிர் சிறப்பும் உலகும் பெறுவர் என்க.

எண்ணும்மை தொக்கன. உலகு என்பது ஆகுபெயராய் உலக வாழ்க்கைக் காயிற்று. புத்தேளிர் வாழும உலகு தனியே பெறப் பட்டமையின் பெருஞ்சிறப்பு இவ்வுலகத்த தாயிற்று. பேணுதல் என்பது சொல்லெச்சம.

'பெறுவர் · · பெருஞ்சிறப்புப் புத்தேளிர் வாழுமுலகு' என்னுஞ் சொற்ருெடர்க்குப் பண்டை உரையாசிரியர்கள் வெவ்வேறு பொருள் கொண்டனர். அவை வருமாறு:

'புத்தேளிர் வாழும் உலகின்கண் அவராற் பெருஞ் சிறப்பினைப் பெறுவார்' என்ருர் பரிமேலழகர்.

'தேவர் வாழும் பெருஞ் சிறப்பினையுடைய உலகத்தைப் பெறுவர்' என்ருர் மணக்குடவர்.

'(நெடுங்காலம் அழியாது) வாழும் உலகத்திலே தேவர்களாற் (செய்யப்படும்) பெரிதாகிய திருவிழாவைப பெறுவர்' என்ருர் இராமாநுஜ கவிராயர்.

இதனல் கணவனைப் பேணுமவள் பெறும் பயன் கூறப் பட்டது. (அ)

நிறுத்தமுறையே சொற்காத்தலின் சிறப்பு விளங்க அஃதில்லையேற் படும் இழிவு கூறுவது வருங்குறள்:

ருக. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.

(இ - ள்.) புகழ் புரிந்த - புகழை விரும்பிய, இல் - மனையாளை, இல்லோர்க்கு - இல்லாதவர்க்கு, இகழ்வார்முன் - (தம்மை) இகழ்ந்துரைப்பார்முன், ஏறுபோல் - ஆண் சிங்கம் போலே (நடக்கின்ற), பீடு நடை - பெருமிதமான நடை, இல்லை - இல்லையாம்.

(இ - து) புகழை விரும்பிய மனையாளை இல்லாதவர்க்குத் தம்மை இகழ்வார்முன் தலைநிமிர்ந்து நடக்கும் பெருமித நடை இல்லையாம்.

புரிந்த என்னும் பெயரெச்சம், புரிந் என அகரம் தொக்கு நின்றது. சிங்கத்துக்குப் பெருமிதநடை இயற்கை ஆதலால் ஏறு வினையுவமமாயிற்று.

இதனாலே தகைசான்ற சொற்காவாவழி உளதாம் குற்றம் சொல்லப்பட்டது. (க)

இவ்வதிகாரத்தில் இதுகாறும் பல்லாற்றானும் வகைப்படுத்திக் கூறிய மனையாள் மாட்சியைத தொகுதது வறபுறுத்தி, அம் மாட்சியைச் சிறப்பிப்பது மக்கட்பேறெனக் கூறுமுகத்தால் வரும் அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்வது வருங்குறள் :

சுo. மங்கல மென்ப மனைமாட்சி: மற்றதன்
நன்கலன் நன்மக்கட் பேறு.

(இ - ள்.) மனை மாட்சி - இல்லாளுடைய (நற்குண நற்செய்கைகளாகிய) சிறப்பை, (ஒருவற்கு) மங்கலமென்ப - நன்மை யென்று சொல்லுவர் ; நன் மக்கட்பேறு - நல்ல

புதல்வர்களைப் பெறுதலை, அதன் - அந்தச் சிறப்புக்கு, நன் கலன் - நல்ல ஆபரணம், (என்ப - என்று சொல்லுவர் அறிவுடையோர்.)

(இ - ள்.) ஒருவனுக்கு இல்லாளுடைய சிறப்பை நன்மையென்றும், மக்கட்பேற்றை அச்சிறப்புக்கு அணிகலன் என்றும் கூறுவர் அறிந்தோர்.

அறிந்தோர் என்பது எஞ்சிநின்றது. மற்று-அசைநிலை. மற்று என்பது 'மற்றறிவாம் நல்வினை' எனபதிற் போலப் பிறபட என்னும் பொருளில வந்த தென்பது முண்டு.

இதனால் வாழ்க்கைத் துணைக்காவதோர் அணிகலன் கூறி, வருகின்ற அதிகாரத்திற்குத தோற்றுவாய செய்யப்பட்டது. (௧௦)

இவ் வதிகாரத்தில், முதற்பாட்டால மனையாளது இலக்கணமும், அடுத்த இரண்டு பாட்டுக்களால் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது மனையாளின் மாட்சி என்பதும், அடுத்த பாட்டால் கற்பின் மேம்பாடும், அடுத்த பாட்டால் கற்பின் ஆற்றலும், அடுத்த பாட்டால் கற்புடையாளின் இலக்கணமும், அடுத்த மூன்று பாட்டுக்களால் அவ்விலக்கணத்தின் விரிவும், இறுதிப் பாட்டாகிய அடுத்த பாட்டில் அதிகாரப்பட்ட வாழ்க்கைத் துணைநலமே ஒருவனுக்கு இன்றியமையாச சிறப்பாவதெனத தொகுப்புரையும், அச் சிறப்புக்கு அழகு செய்வது மக்கட்பேறென வரும் அதிகாரத்துக்குத் தோற்றுவாயும் கூறியருளினர் ஆசிரியர்.

---

# எ. மக்கட்பேறு

இருபகுதிப்பட்ட அறத்துள் இல்லறப்பகுதி கூறுவான் தொடங்கிய ஆசிரியர் முதற்கண் இல்வாழ்க்கைச் சிறப்பைக் கூறி அதனை அடுத்து அதற்கு இன்றியமையாத துணையான மனையாளின் நலத்தைக் கூறி முடிவில் அம் மனையாளின் மாட்சியே இல்வாழ்வானுக்கு மங்கலமென்றும் மக்கட்பேறு அம் மாட்சிக்கு அணிகலன் என்றுந் தோற்றுவாய் செய்தவாறே மக்கட்பேற்றை இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார். இவ்வதிகாரம் புதல்வரைப் பெறுதல் என வழங்குமாலோ எனின், (அதுவும் மக்கட்பேறெனவே பொருள்படுதலன்றிப் பிறிதில்லை யாதலின்) ஒவ்வுமென்க. அற்றேல் பயிற்சியின் உள்ள தொடரை யொழித்தது மற்றது கொண்ட தென்னையோ எனின், வருமதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்யப்பட்டதென மேற்குறித்த குறளில் மக்கட்பே றென்னும் சொற்றொடரே காணப் படுகின்றமையானும், மக்கட்பே றென்னும் அதிகாரப்பெயரும் பயிற்சியிலுள்ள தொன்றே யென்பது மணக்குடவர் உரைப் பிரதியால் பெறப்படுகின்றமையானும் கொண்டாமெனபது. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும். (அன்றியும், 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்-கைம்புலத்தார் ஓம்பல் தலை' (குறள்-௪௩) எனக் கூறினமையின், அவற்றுள் முதல்நின்ற தென்புலத்தாரை ஓம்பற்கு இன்றியமையாது வேண்டப்படுவது மக்கட்பேறாதலின்,) அம் மக்கட்பேற்றுக்கு இன்றியமையாத வாழ்க்கைத்துணையை அடுத்து இதனை வைத்தார் ஆசிரியா என்க.

இவ் வியலுக்குப் பொருளான மக்கட்பேற்றின் சிறப்பைக் கூறுவது இதன் முதற் குறள்:

௬௧. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
    மக்கட்பே றல்ல பிற.

(இ- ள்.) பெறுமவற்றுள் - (ஒருவன்) பெறும் பேறுகளுள், அறிவு அறிந்த - அறியவேண்டியவற்றை அறிதற்குரிய,

மக்கட்பேறு அல்ல - மக்களைப் பெறுதல் அல்லாதவை (ஆகிய), பிற - மற்றைப் பேறுகளை, யாம் அறிவதில்லை - யாம் மதிப்பதில்லை.

அறிவது என்பது அறிதலைச் செய்வதற்குக் காரணமான மதிப்பின்மேல் நின்றது; கண்டறிவதென்றார் மணக்குடவர். அறிவறியும் எனற்பாலது துணிவினால் அறிவறிந்த என இறந்தகாலமாயிற்று. அறிவறிதற்குரிமை ஆண்பாலதாகக்கொண்டு, அறிவறிந்த என்றமையான் மக்கள் எனனும் பெயர் பெண்பாலை ஒழித்தது நின்றதென்றார் பரிமேலழகர். 'அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார் - என்னுடைய ரேனு மிலர்' எனவும் கூறி, 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்-திண்மை யுண்டாகப் பெறின்' எனவும் கூறிய ஆசிரியர்க்கு, பெண்மக்களுக்கு அறிவுகுறிதல் உடன்பாடன்றாயின், பெண்மகளிட்குக் கற்புண்டாயினும் அஃதில்லை யெனப் படுமாதலின் ஆசிரியர்க்குப் பெண்மக்களை விலக்கல் கருததன்றாமென்க. அற்றாயின், பின்னர்த் 'தன் மகனை' (சுக) எனவும், 'தந்தை மகற்கு' (சுஎ) எனவும், 'மகன் றந்தைக்கு' (எ0) எனவும் ஆண்மக்களையே விதந்தோதுவர்கொல்லோ எனின், அற்றன்று: அது பொருட்பான்மை அறியார் கூற்று. என்னை? நஞ்சுண்டான் சாம் என்றால் நஞ்சுண்டாள் சாம் எனவும் பொருள்படுமன்றே? ஆகலின், ஒருமொழி ஒழி தன் இனங்கொளற்கு முரித்தென்க. அன்றியும், ஆசிரியர் உடன்பிறந்த ஔவைப் பிராட்டியாரே அறிவறிந்த பெண்மக்கட்கு நாயகமாய் எதிரிருக்க, ஆசிரியர் அறிவறிதல் ஆண்மக்கட்கே உரித்தென்றாரெனல் ஆசிரியரது நுண்ணறிவிற்கும் பரந்துபட்ட உணர்ச்சிக்கும் விரிந்த நோக்கிற்கும் உயரிய கருத்துக்கும் ஏதமா மென்பது காண்க.

'அறிவுடைய மக்கட்பேறு' என்பது மணக்குடவர் கொண்ட பாடம்.

இதனாலே மக்கட் பேற்றினது சிறப்புச் சொல்லப்பட்டது. (க)

அச் சிறப்புக்கு ஏது கூறுவது வருங்குறள்:

சுஉ. எழுபிறப்புந் தீயவை தீண்டா, பழிபிறங்காப்
　　பண்புடை மக்கட் பெறின்.

(இ - ள்.) (ஒருவன்), *பழி பிறங்கா-பழியுண்டாகாத, பண்புடை - (நல்வினைகளைச் செய்தற்குக் காரணமாகிய) நற்குணங்களையுடைய, மக்கள் பெறின்-மக்களைப் பெறுவானாயின், (அவனை), எழு பிறப்பும்-(வினைப்பயனாகப் பிறக்கின்ற) எழுவகைப் பிறப்பிலும், தீயவை-(தீவினைப் பயன்களாகிய) துன்பங்கள், தீண்டா- தொடா தொழியும்.*

(இ - து.) *நன்மக்களைப் பெறுவோன எழுபிறப்பிலும் துன்பமடையான்.*

*எழு பிறப்பாவன: தேவா, மக்கள், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, தாவரம் என்பன. மக்கள் செய்யும் நல்வினையால் பெற்றோர் தீவினை தேயும என்பதுபற்றி, 'எழுபிறப்பும் தீயவை தீண்டா' என்றார்.* (உ)

*எழுபிறப்புந் தீயவை தீண்டா என்றதற்குக் காரணங் கூறி மக்கட்பேறு சிறப்பெய்துவதற்காய ஏதுவை வலியுறுத்துவது வருங்குறள் :*

சுஙூ. தம்பொரு ளென்பதம் மக்கள், அவர்பொருள்
　　தந்தம் வினையான் வரும்.

(இ - ள்.) *தம் மக்கள்-தம்முடைய மக்களை, தம் பொருள்-தமது பொருள், என்ப - என்று சொல்லுவர் (அறிவுடையோர்). அவர் பொருள் - (அந்தத் தந்தையர் தேடிய பொருளுமல்லாமல்) அந்த மக்கள் தேடிய பொருளும், தம் தம் வினையான் வரும்-தங்கள் தங்களை(க் குறித்து அந்தப் புதல்வர் செய்யும் நல்) வினையினாலே தங்களை வந்தடையும் (ஆதலால்).*

(இ - நு.) மக்கள் தாம் தேடிய பொருளாற் செய்யும் வினை பெற்றோரை யடைதலால், பெற்றோர்க்குரிய பொருள் தம் மக்களே.

ஏனைப் பொருளெல்லாம் இம்மைப் பயனோடொழிவனவாக, மக்கள் தம்மைக் குறித்துச் செய்யும் நல்வினை தமக்கு மறுமையினும் பயன்படுதற் சிறப்பு நோக்கித் 'தம்பொருளென்ப தம் மக்கள்' என்றார். அவர் பொருளும் எனற்பாலது 'அவர் பொருள்' என இறந்தது தழீஇய எச்சவும்மை குறைந்து நின்றது. 'தந்தம் வினை' என்றது தம்மை நோக்கி மக்கள் செய்யும் வினை எனப் பொருள்படலால், வினை செய்வது மக்களாதலால் மக்களுக்கும் உரித்தாயிற்று; சேர்வது தம்மையாதலால் தமக்கும் உரித்தாயிற்று. ஆதலால், ஈண்டுத் தொக்கு நின்ற ஆறாம் வேற்றுமை உருபு, சாத்தனது விலைச்சீட்டு என்ற விடத்து அது உருபு சாத்தனுக்கு முரிமையாய்ச் சாத்தனை விலைக்குக் கொண்ட தலைவனுக்கு முரிமையாய் நின்றாற் போல, இருபொருளுக்கு உரிமைபட நின்றது.

இனி, மணக்குடவர் அவர்பொருள் என்பதை அம்மக்களாகிய பொருள் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கொண்டு, பெற்றோர் வினையால் மக்கள் வருதலின் அவரே தம் பொருள் என்று உரைகண்டார்.

இவை இரண்டு பாட்டானும் நன்மக்களைப் பெற்றோர் பெறும் மறுமைப்பயன் சொல்லப்பட்டது. (௩)

மக்கட்பேற்றின் சிறப்புக்குச் சிறந்த ஏதுவாகிய மறுமைப் பயனை முன்னர்க் கூறிய ஆசிரியர், மக்கட்பேற்றால் எய்தும் இம்மைப் பயனைக் கூறுவான் தொடங்கி முதற்கண் மக்களின் தொடர்பால் இன்னாத புறப்பொருளும் இனியதாகி இன்பந்தரும் என்பது வருங்குறள்:

௬௪. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

(இ-ள்.) தம் மக்கள் - தங்கள் மக்களுடைய, சிறு கை - சிறிய கைகளாலே, அளாவிய கூழ் - அளையப்பட்ட

சோறானது, அமிழ்தினும் - அமிர்தத்தைக் காட்டிலும், ஆற்ற இனிது - மிகவும் இனிமையுடையது.

(இ - து.) மக்கள் அளாவிய கூழ் பெற்றோர்க்கு அமிழ்தத்தினும் இனியதாம்.

மக்கள் தம் சிறுகையால் உணவை அளாவுதலும் அது பெற்றோர்க்கு இனிதாதலும்,

> 'படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
> உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
> குறுகுறு நடந்து சிறுகை நீட்டியும்
> இட்டுந் தொட்டுங் கௌவியும் துழந்தும்
> நெயயுடை யடிசில் மெய்பட விதிர்த்து
> மயக்குறு மககளை யில்லோர்க்குப்
> பயக்குறை வில்லைதாம் வாழு நாளே'

என்னும் புறநானூற்றினுங் காண்க. கூழ் - சோறு. ஆற்ற - மிகவும. (ச)

மக்கள் தொடர்புற்ற புறப்பொருள் இன்பம் செய்தல் கூறியது மேற்குறள்; மக்களும் மக்களெழுப்பும் ஒலியும் இன்பம செய்தல் கூறுவது வருங்குறள்:

சூரு. மக்கண்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(இ - ள்.) மக்கள்- (தம்) மக்களது, மெய் தீண்டல் - மெய்யைத் தொடுதல், உடற்கு இன்பம் - (தம்) உடம்புக்கு இன்பமாம்; அவர் - அம்மக்களது, சொல் கேட்டல் - சொற்களைக் கேட்டல், செவிக்கு இன்பம் - (தம்) காதுக்கு இன்பமாம்.

(இ - து.) தம் மக்கள் உடம்பைத் தொடுதல் தம் உடம்பிற்கு இன்பமாம்; தம் மக்கள் சொற்களைக் கேட்டல் தம் செவிக்கு இன்பமாம்.

மற்று - அசைநிலை. மழலைச் சொல்லே யல்லாமல் கற்று அறி வுடையராகி அவர் சொல்லும் சொல்லும் இன்பமா மாதலின் பொதுப்படச் 'சொல்' லென்றார். மக்கள் மெய் தீண்டல் என்ப தற்கு மககள் தமது மெய்யைத தொடுதல் எனக கொள்ளினும் ஆம். தீணடல் என்னுந் தொழிலை யொழித்துக கேட்டல் என்னுந் தொழிற்கண் வந்தமையின் மறறு வினைமாற்றென்பது முண்டு. (ரு)

சொல் இன்பந்தரும் எனப் பொதுப்படக கூறிற்று மேற் குறள்; அறிவறிந்த சொல் இன்பந்தருதல் கூறுதே யமையும். அறி வொடு புணரா மழலைச் சொல்லும பெரியதோர் இன்பஞ் செய்யு மாறு கூறுவது வருங்குறள்:

சாசா. குழலினி தியாழினி தென்பர்தம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

(இ - ள்.) தம் மக்கள் - தம் மக்களுடைய, மழலைச் சொல் - மழலைச் சொற்களை, கேளாதவர் - கேளாதவர்கள், குழல் இனிது - குழலொலி இனிது, யாழ் இனிது - யாழொலி இனிது, என்பர் - என்று சொல்லுவர்.

(இ - து.) தம் மக்களுடைய மழலையைக் கேளாதவர்களே குழலொலி முதலியவற்றை இனிய என்பார்.

எனவே மககள் மழலையினும் செவிக்கினியது வேறில்லை என்பதாயிற்று. மக்கள் மழலையைக் கேட்டவர்கள் குழலினிது யாழினிது என்று சொல்லார் என்பது குறிப்பெச்சமாய் எஞ்சி நின்றது. 'சொற்கேட்ட வின்பஞ் செவிககு' என மேற் பொது வகையாற் கூறினர். அதனுள் அடங்கி நின்ற மழலைச் சொல் இன்ப மிகுதியாற் சிறந்து நிற்கையால் ஈண்டு அதனைச் சிறப்புவகையாற் கிளநதெடுத்துச் சொன்னர். குழல், யாழ் என்பன, பொருளாகு பெயராய் அவ்வவற்றின் ஒலியை உணர்ததின.

இவை மூன்று பாட்டாலும் மக்கட்பேற்றின் இம்மைப் பயன் கூறப்பட்டது. (சா)

இவ்வாறு மக்களால் எய்தும் இம்மை மறுமைப் பயன்களைக் கூறவே, அப் பயனைப் பெறும் பெற்றோர் அவர்பாற் செலுத்தத தக்க கடப்பாடும் உண்டென்பது பெறபபடுமன்றே? அக கடப்பா டாவ தியாதென்பது வருங்குறள்:

சுஎ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

(இ - ள்.) தந்தை - பெற்றோன், மகற்கு - தன் மக னுக்கு, ஆற்றும் - செய்யும், நன்றி - நன்மையாவது, அவை யத்து - (கற்றோர்) அவையில், முந்தி - முதன்மைபெற்று, இருப்ப - இருக்கும்படி, செயல் - செய்வதாம்.

(இ - து.) பெற்றோர் மககளுக்குச் செய்யும் நனறி அவர்களைக் கல்வி கேள்வி முதலியவற்றில் சிறககச் செய்தல்.

அவையதது முந்தி யிருப்பச் செய்தலாவது அறிவு குணம் முத லியவற்றில் சிறந்திருககச் செய்தல். அவ்வாறாககின், பலர் கூடிய சபையில் கல்வியிற் சிறவாமைபற்றியோ குணங்களிற் சிறவாமை பற்றியோ இன்னோரன்ன பிறவற்றிற் சிறவாமைபற்றியோ அவர் கள் தலைகுனியவேண்டிய தின்றாம். இன்றாகவே அவர்கள் பெரு மையோடு தலைநிமிர்ந்து நன்னீர்த தடததது முழுநீர்த் தாமரை போலச் சிறந்து திகழ்ந்து முன்னிற்பார்கள் என்பது பெறப்படும். இனிப் பொருளுடையனாககுதல் முதலியன துன்பம் பயததலின் நன்மையாகா வென்பது கருத்து என்றார் பரிமேலழகியார். 'செல் வரை யெல்லாருஞ் செய்வர் சிறப்பு' (குறள் - எருஉ) என்பது ஆசிரியர்க் குடன்பாடாதலால் பொருளுடையனாக்குதலும் அவை யத்து முந்தியிருப்பச் செய்தற் கேற்றதோர் கருவியேயா மென்க. அறிவுடையாரெல்லா முடையர் என்பதுபற்றிக கல்வியாலாம் அறி வுடையனாக்கின் பொருளுடையனாக்கா விடினும் இழுக்கில்லை என்பதமையும். 'அறிவிலார் என்னுடைய ரேனு மிலர்' என்பது பற்றியும், 'நல்லார்கட்பட்ட வறுமையினின்னாதே கல்லார்கட்

பட்ட திரு' (குறள் - ௪௦௮) என்பது பற்றியும் கல்வியறிவுடைய னுக்காது பொருளுடையனுக்குதல் நன்மையாகாது எனினும் அமையும். கல்வியறிவொன்றையே கொண்டு ஆவன பிறவற்றை விலக்காமைக்கன்றே ஆசிரியர் பொதுப்பட 'அவையத்து முந்தி யிருப்பச் செயல்' என்றாரென்பது.

இதனாலே தந்தை கடன் கூறப்பட்டது. (எ)

அவையத்து முந்தியிருத்தற்காவன பலவற்றுள்ளும் இன்றி யமையாச் சிறப்பிற்றாய கலவியறிவைப் பெற்றோர் மக்கட்குப் பெறு வித்தல் கடனாவதோடு அஃது அவர்க்கு இனிமை பயப்பதுமாம் என் பது வருங்குறள்:

௬௮. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

(இ - ள்.) மா நிலத்து - இப் பெரிய உலகத்தில், மன்னுயிர்க் கெல்லாம் - நிலைபெற்ற உயிர்களுக் கெல்லாம், தம்மின் - தம்மைக் காட்டிலும், தம் மக்கள் - தம்முடைய மக்கள், அறிவுடைமை - அறிவுடையரா யிருத்தல், இனிது - இனிதாம்.

(இ - து.) உலகத்தவரெல்லார்க்கும் தம்மினும் தம் மக்கள் அறிவுடையரா யிருததல் இனியதாம்.

ஈண்டு அறிவுடைமை என்றது கல்வியாலாய அறிவுடைமையை, அவையத்து முந்தி யிருப்பச் செய்வ தததுவே யாதலின். 'மன்னுயி ரென்றது ஈண்டு அறிவுடையார்மேல் நின்றது, அறிவுடைமை கண் டின்புறுதற்குரியவ ரவராதலின். இதனால் தந்தையினும் அவையத்தா ருவப்பரென்பது கூறப்பட்டது' எனறார் பரிமேலழகியார். (அ)

பொதுவகையால் பெற்றோருவகை கூறினமையின் சிறப்பு வகையால் தாயுவகை கூறுவது வருங்குறள்:

௬௯. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(இ - ள்.) தன் மகனை, சான்றோன் என - (கல்வி குணம் முதலியவற்றில்) நிறைந்தோன் என்று (உலகத்தார்) சொல்ல, கேட்ட தாய் - அதைக் கேட்ட தாய், ஈன்ற பொழுதில் - அவனைப் பெற்ற பொழுதின் (மகிழ்ந்ததினும்), பெரிது உவக்கும் - மிகவும் மகிழ்வாள்.

(இ - து.) தன் மகனைச் சிறந்தோன் என்று பிறர் புகழக் கேட்ட தாய் அவனைப் பெற்றபொழுது மகிழ்ந்ததைக் காட்டிலும் அதிகமாக மகிழ்வாள்.

பிறர் உரை சார்பு பற்றாத மெய்யுரையாமாதலின் தன் மகனது சால்பு தன் உள்ளப் பற்றுக்கோடே பற்றியதன்று உண்மையே என்றறிந்து உவக்குமாதலின் 'கண்ட தாய்' என்னாது 'கேட்ட தாய்' என்றார். 'பெண்ணியலாற் றானாக அறியாமையிற் கேட்ட தாய் எனக் கூறினார்' என்பது பரிமேலழகர் உரை.

இதனாலே தாயுவகை சிறந்தெடுத்துக் கூறப்பட்டது. (கூ)

அவையத்து முந்தியிருப்பச் செயலும் அறிவுடையனாக்கலும் சான்றோனாக்கலும் பெற்றோர் கடமை என்பது பெறவைத்தமையின், மக்கள் கடமை இஃதென்பது வருங்குறள்:

எ௰. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்.

(இ - ள்.) தந்தைக்கு—, மகன் ஆற்றும் உதவி - மகன் செய்யும் கைம்மாறாவது, இவன் தந்தை—, என்நோற்றான் கொல் - (இவனைப் பெறுவதற்கு) என்ன நோன்பு செய்தானோ, என்னும் சொல் - என்று (உலகம்) சொல்லும் சொல் (உண்டாகும்படி நடத்தல்).

(இ - து.) மக்கள் பெற்றோர்க்குச் செய்யும் கைம்மாறாவது உலகம்புகழ நடந்துகொள்ளுதலே.

'உண்டாம்படி நடத்தல்' என்பது இசையெச்சமாக எஞ்சி நின்றது. தந்தை எனவும் மகன் எனவும் ஒருபால்மேல் வைத்துச்

சொன்னாரேனும் ஒருமொழி ஒழி தன்னினங் கொளற் குரித்தாதலால் மற்றைப் பாலையுங் கூட்டிப் பெற்றோர் மக்கள் என உயர்திணைப் பொதுப்பெயராக வைத்துக் கருத்துரை கூறினும்.

இதனாலே மக்கள் கடமை கூறப்பட்டது. (௧0)

இவ்வதிகாரத்தில், முதற் குறளால் மக்கட் பேற்றின் சிறப்பும், அடுத்த இரண்டு குறள்களால் மக்களால் ஆம் மறுமைப் பயனும், அடுத்த மூன்று குறள்களால் மககளாலாம் இம்மைப் பயனும், அடுத்த குறளால் பெற்றோர் கடமையும், அடுத்த இரணடு குறள்களால் அக் கடமையை நிறைவேற்றுவதாலாம் பயனும், இறுதிக் குறளால் மக்களது கடமையும் கூறப்பட்டன.



# ௮. அன்புடைமை

அஃதாவது மனைவியும் மக்களும் ஒக்கலும் பிறருமாகத் தம்மொடு தொடர்புடையார்கட் காதல் உடையராயிருத்தல். தொடர்பு பற்றி எழும் இவ்வன்பு சேய்க்கும் தாயர்க்குமிடையே சிறந்து தோன்றுதலின் இதனை மக்கட்பேற்றின்பின் தொடரவைத்தார். இல்லறம் இனிது நடத்தற்கும், பிற உயிர்கண்மேல் அருள்பிறத்தற்கும் காரணம் அன்பாதலின் இது வேண்டப்பட்டது. இல்லறம் இனிது நடத்தற்குக் காரணம் அன்பென்பதனை, 'அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும் - துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின் - விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை' என வரும் சிலப்பதிகார அடிகளாலும், 'அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத், தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு' (குறள்-எ௫) என வரும் ஆசிரியர் திருவாக்கானும், அருள் பிறத்தற்குக் காரணம் அன்பென்பதனை 'அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் - செல்வச் செவிலியால் உண்டு' (குறள் - எ௫எ) என வரும் ஆசிரியர் திருவாக்குப் பிறிதொன்றானும் அறிக. இல்வாழ்க்கைக்கு அன்பு இன்றியமையாத தென்பதனை 'அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை - பண்பும் பயனு மது' (குறள்-ச௫) என ஆசிரியர் முன்னமே வலியுறுத்த வாறுங் காண்க. 'குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் போல இது காண் அன்பென்று தந்து காட்ட லாகாது. அன்புடையரான குணங் கண்டவிடத்து ஈண்டு அன்புண்டு என்று அனுமிக்கற் பாற்று' என்றார் நக்கீரனார். இங்ஙனமாதலின், அஃதிதுவெனச் சுட்டிக்காட்டல் பயமின்றாமென விடுத்து, சுட்டிக்காட்ட ஏலாதாயினும் அஃது அரிதுணர் பொருளாய அகத்தடங்காது எளிதுணர் பொருளாய் வெளிப்படுவதொன்றே யென்பதை முதற்கட் கூறுகின்றார்:

எக. அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

(இ - ள்.) அன்பிற்கும் - அன்பினுக்கும், அடைக்கும் தாழ் - (பிறர் புகுந்து காண ஏதுவில்லாமல் கதவை) அடைக்குந் தாழ்க்கோல், உண்டோ - உளதோ, (இல்லை). ஆர்வலர் - அன்புடையாரது, புன்கணீர் - கண்ணில் (தோன் றும்) புல்லிய நீரே, பூசல் தரும் - (பலரும் கண்டறியத்) தூற்றும்.

(இ - து) அன்புடையாரது கண்களில் ததும்பும் புல்லிய நீரே அன்பை வெளிப்படுத்தும.

அன்பிற்கும் என்பதில் உள்ள உம்மை அன்பைச் சிறப்பித்து நிற்றலின் உயர்வுசிறப்பும்மை. அன்பு உண்மைமாத்திரம் உணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாத பொருளாகலின் அனுமான அளவையா லுணரப்படுமென்றார். புன்கணீர் என்பதற்குத தமமால் அன்பு செய்யப்பட்டவரது துன்பங் கண்டுழி அன்புடையார் பொழிகின்ற புல்லிய கண்ணீர் என இசையெச்சம் வருவித்துப் பொருளுரைத் தார் பலரும். பேராசிரியரும் 'ஆங்கவையொருபால்' என்னும் மெய்ப்பாட்டியல் (கஉ) சூத்திரஉரையில் 'அன்பென்பது அருட்கு முத லாகி மனததினிகழு நேயம ; அஃதுடையார்க்குப் பிறர்கட் டுன்பங் கணடவழிக கண்ணீா விழுமாகலின் அவ்வருளானே அன்புடைமை விளஙகு மென்பது' என்றார். அன்பாவது உள்ள நெகிழ்ச்சி. அவ்வுள்ளவேறுபாடு, அன்புடையார் அன்பிற்குரியாரைக காணி னும் கருதினும் நிகழ்வதொன்றென்பதும், அந் நிகழ்ச்சியை வெளிப் படுத்தற்குரிய மெய்ப்பாடு கண்ணீரரும்பலென்பதும், அன்பு செயப் பட்டாரது துன்பங் கண்டுழியே அது நிகழும் பிறவழியின் நிகழா தென்பதில்லை யென்பதும், அன்பினல் மீதூரப்பட்ட இருவர் ஒரு வரையொருவர் கண்டவிடதது இன்பக் கண்ணீ ரரும்பல் உண் டென்பதும் உலகவியலும உளவியலுங் கொண்டு உய்த்துணரற் பாலன.

இதனுல் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது. (க)

அனுமான அளவையால் அன்பினது உண்மை பெறப்பட்ட மையின், இனி அதன் சிறப்பைக் கூறத்தொடங்கிய ஆசிரியர் முதற்

கண் அன்புடையார் பல்லாற்றானும் உலகிற்குப் பயன்படுதற் சிறப்பைக் கூறுகின்றார்:

எஉ. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

(இ - ள்.) அன்பிலார் - அன்பில்லாதவர், எல்லாம் தமக்கு உரியர் - (பிறர்க்குப் பயன்படாமையால்) எல்லாப் பொருள்களையும் தமக்கே உரிமையாகக் கொள்பவர்; அன்புடையார் - அன்புடையவர், என்பும - (பொருளே யன்றித் தம்) உடம்பினையும், பிறர்க்கு உரியர் - பிறருக்கு உரிமையாகக் கொள்பவர்.

(இ - து.) அன்பிலார் தம் பொருளே யன்றிப் பிறர்பொருளும் தமக்கே உரியவாகக் கருதும் இயல்பினர், அன்புடையாரோ தம் பொருளே யன்றித் தம் உடம்பும் பிறருக்கே உரியதென்று கருதித் தம் பொருளையும் உடம்பையும் பிறருக்குப் பயன் படுத்தும் இயல்பினர்.

என்பும் என்றதில் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மையாய்த் தம் உடைமை எல்லாமேயன்றித் தம் என்பும் எனப் பொருள் கொள்ளக் கிடந்தது. என்பு என்பது சினையாகு பெயராய யாக்கையை உணர்த்திற்று. என்புமுரியராதல், 'தன்னகம் புக்க குறு நடைப் புறவின் தபுதியஞ்சி'த் துலைபுக்க சிபிச் சக்கரவர்த்தி முதலாயினார்கட் காண்க. துலைபுக்கது அன்பின் செயலென்பதினினும் அருளின் செய லென்பதே பொருந்துமாயினும், அருள் என்பது அன்பின் வழித்தே யாதலின் அமையும். (உ)

அன்புடையார் என்பு முரியர் பிறர்க்கு எனவே, அன்பின் செயலாகிய பிறர்க்குப் பயன்படுதற்கு யாக்கை முதற்கருவியாகவும் துணைக்கருவியாகவு முள்ளதென்பது பெறப்படும். ஆகவே, உயிர் யாக்கையோடு தொடர்புற்றமை அன்பின பயனே யென்பது வருங் குறள்:

எந. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(இ - ள்.) ஆர் உயிர்க்கு - அரிய உயிருக்கு, என்போடு - உடம்போடு, இயைந்த - பொருந்திய, தொடர்பு - தொடர்ச்சியினை, அன்போடு இயைந்த - அன்போடு பொருந்தவந்த, வழக்கு என்ப - நெறியின் பயனென்று சொல்லுவர் (அறிவுடையோர்).

(இ - து) உயிருக்கு உடம்போடுளதாய தொடர்பு அன்போடு பொருந்தவந்த வழியின் பயனும்.

பிறப்பின் அருமை ஆர் உயிர் எனப் பிறந்த உயிர்கண்மேல் ஏற்றப்பட்டது. இயையவந்த என்பது இயைந்த என விகாரப் பட்டு நின்றது. இயைந்த தொடர்பு என்பதில் தொடர்பெனவே இயைபு பெறப்படுவதாக இயைந்த தொடர்பு என மிகை படக் கூறியது உபசார வழக்குப் பற்றி, வழக்கினலாய பயனை வழக் கென்றது கருவியாகுபெயர். உடம்போடு பொருந்தினலன்றி அன்பு செய்யக் கூடாமையின், அன்பு செய்தற் பொருட்டு உயிர் உடம் போடு தொடர்புற்றதென்பதாம். ஆகவே, இத் தொடர்பின் பயன் அன்புடைமை என்பது பெறப்பட்டது. (ங)

உயிருக்கும உடம்புககும் உண்டாய தொடர்பு அன்பின் பொருட்டென்றாற்போல மக்களுக்கிடையே உண்டாம் நட்புத் தொடர்பும் அன்பினலென்பது வருங்குறள்:

எச. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

(இ - ள்) அன்பு-(தொடர்புடையாரிடத்திற் செய்த) அன்பானது, (ஒருவனுக்கு) ஆர்வம் உடைமை ஈனும் - (அக் குணமுடைய பிறரிடத்தும்) விருப்பமுடைமையைத் தரும்; அது - அந்த விருப்பமுடைமையானது, நண்பு என்

னும் - (அப் பிறர்மாட்டு) நட்புடைமை என்று சொல்லப் படும், நாடாச் சிறப்பு - அளவிடக்கூடாத சிறப்பினை, ஈனும் - தரும்.

(இ - து.) அன்பு விருப்பத்தைத் தரும்; அவ் விருப்பம் நட்பைத் தரும்.

நாடுதல் - ஆராய்தல். நாடாச் சிறப்பு - ஆராய்ந்து அளவிடக் கூடாத சிறப்பு. நட்பு அன்னதாதலைச் 'செயற்கரிய யாவுள நட்பி னதுபோல் - வினைக்கரிய யாவுள காப்பு' (குறள் - எ௮௧) என ஆசிரியர் மேற் கூறுமாற்றா னறிக. (௪)

நட்புண்டாம் அன்பினால் என்றது மேற்குறள்; இல்லற வாழ்க்கையில் இவ்வுலகி லெய்தலாம் இன்பமும், இவ்வுலகை விட்டொழிந்த பின்னை எய்தலாம் வீட்டின்பமும் அவ்வன்பினாலே உண்டா மென்பது வருங்குறள்:

௭௫. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(இ - ள்.) வையகத்து - இவ்வுலகத்தில், இன்புற்றார் - (இல்வாழ்க்கையிலே நின்று) இன்பம் நுகர்ந்தவர், எய்தும் - (இவ்வுலகை நீத்தபிறகு) அடையும், சிறப்பு - வீட்டின்பத்தை, அன்புற்று - அன்புடையவராகி, அமர்ந்த - (இல்லறத்தோடு) பொருந்திய, வழக்கு - நெறியின்பயன், என்ப - என்று சொல்லுவர் (அறிவுடையோர்).

(இ - து) இவ்வுலகத்தில் இல்லறததினின் றின்பமெய்தினர் மேலுலகில் அடையும் வீட்டின்பம், அன்போடுகூடி வாழ்ந்ததின் பயன்.

பேரின்பப் பேற்றுக்குக் காரணமாவது அன்பாதலால், அன்புடையராய் வாழ்ந்தவர் பேரின்பம் பெறுவரென்பது துணிபாயிற்று. ஆகவே, தவம் முதலியவற்றால் உடலை வருத்திப் பேரின்பம் பெற வேண்டி நிற்கும் துறவறத்தினும், உலக இன்பங்களைத் துறவாமலே

பேரின்பம் பெறுதற்குரிய இல்லறம் சிறந்த தாதலும் பெறப்பட்டது. 'அன்புற் றமர்ந்த' என்றதால் இல்லறம் இனிதாதலும் அன்போடு கூடிய வழியே என்பது பெற்றும். சிறப்பு வீடாதல் 'சிறப்பென்னும் செம்பொருள் காண்ப தறிவு' (குறள்-ஙருஅ) என்பதா லறிக. (ரு)

எசு. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

(இ - ள்.) அறியார் - அறியாதவர் (பலர்), அன்பு - அன்பானது, அறத்திற்கே - தருமத்துக்கே, சார்பு என்ப - துணை என்று சொல்லுவர்; மறத்திற்கும் - பாவத்திற்கும், அஃதே - அவ்வன்பே, துணை - துணையாம்.

(இ - து.) அறியாதவர் நல்வினைககே அன்பு துணையாம் என்பர்; தீவினைகளும் அன்பே துணையாம்.

தம் மனைவிமக்கள் முதலியோரிடத்து வைத்த அன்பினுல், அவர்கள் வேண்டுவனவற்றை அறவழியாற் பெற்றுத் தரவியலாவிடத்து கொலை களவு முதலிய மறவழியால் அவற்றைக் கைக்கொண்டு தருவோர் உளராதலை உலக நிகழ்ச்சியிற் கண்டு பாவத்திற்கு அன்பு துணையாதல் அறிக. கைகேயியின்மீது வைத்த அன்பினுல் தசரதன் செய்த மறச்செயலும், சுக்கிரீவன்மீது வைத்த அன்பினுல் இராமன் வாலிமாட்டுச் செய்த மறச் செயலும், மனைவிமாட்டு வைத்த அன்பினுல் நளன் அவளைக் கானகத்திற் காரிருளிற் பாழ்மண்டபதிற் கைவிட்டுச் சென்ற மறச்செயலும், ஐவர்மீது வைத்த அன்பினுல் கண்ணன் பல்வேறமயங்களிற் செய்த பல்வேறு மறச் செயல்களும் எடுத்துக்காட்டுக்களாம். இங்ஙனம் தீவினைகட்கும் அன்பு காரணமாயின், மேல் அது வீட்டின்பத்தையுந் தருமென்றது ஒவ்வாதாம் பிறவெனின், ஒவ்வும். யாங்ஙனமோ எனிற் கூறுதும். அறியாமையிற் கட்டுண்டு கிடக்கும் உயிர்களைப் பேரறிவனுகிய இறைவன் அவ்வறியாமையினின்று விடுவிக்கத் தனது பேரருட் பெருக்கத்தால்

பஃறிறப்பட்ட யாக்கைகளிற் புகுத்திப் பல்வேறு பிறவியைக் கொடுக்கின்றான். அவ்வியாக்கைகளினின்றும் அப் பிறவிகடோ றும் அவ்வுயிர்கள் நிகழ்த்தும் வினைகளினாலே அவற்றைப் பற்றி யிருந்த அறியாமை சிறிது சிறிதாக அகல்கின்றது. அஃதகலவகலச் சிறிது சிறிதாக அறிவு விளங்குகின்றது. அவ்வறிவு விளக்கத்திற் கேற்றாற்போல அவற்றிற்கு அன்புநிகழ்ச்சி யுண்டாகின்றது. இவ் வாற்றால் அன்பு நிகழ்ச்சிக்கு யாக்கை இன்றியமையாத தாதலி னன்றே ஆசிரியர் மேல் 'அன்போடியைந்த வழக்கென்ப ஆருயிர்கட் கென்போ டியைந்த தொடர்பு' எனக் கூறியதூஉ மென்க. இது கிடக்க. அன்பு நிகழ்ச்சி அறிவு விளககததிற் கேற்றவாறு பலதிறப் படு மெனவே, அவற்றுள் ஏற்றத் தாழ்வுக ளுண்டென்பதும் பெறப் படும். அவ்வேற்றமும் தாழ்வும் முறையே அறச்சார்பு பற்றியும் மறச் சார்பு பற்றியும் துணியப்படும். பல்பிறப்பிடை அறச்சார்பும் மறச்சார் புங்கொண்டு அன்பு நிகழ்த்தி உழன்று முடிவில் அறச்சார்பு ஒன்றே கொண்டு அன்பு நிகழ்த்தும் ஆற்றல் எய்தும். அஃதெய்திய காலத் தன்பே வீடுபேற்றிற்கு அணித்தாய காரணமாம் என்பதும, அதற்கு முற்பட்டகாலத தன்பெல்லாம் வீடுபேற்றிற்குச் சேய்த்தாய காரண மாம் என்பதும், இங்ஙனம் காலம்பற்றி வேறுபடினும் அன்பென்ப தியாண்டும் வீடுபேற்றிற்குக் காரணமாமென்பதி லிழுக்கில்லை யென் பதுமுணர்க. உணரவே தீவினைகட்கு ஒரோவழி அன்பு காரண மாயினும அது வீட்டின்பத்தைத் தருமென்றல் ஒவ்வுமென்க.

இனி, 'மறத்திற்கும் அஃதே துணை' என்பதற்கு மறத்தை நீக்குதற்கும் அஃதே துணை யெனவும், ஒருவன் செய்த பகைமை பற்றி உள்ளத்து மறம் நிகழ்ந்துழி அவனை நட்பாகக் கருதி அவன்மே லன்பு செய்ய அது நீங்குமாகலின் மறத்தை நீக்குதற்கும் துணையா மென்றா ரெனவும் பரிமேலழகர் உரைவிரித்தாரா லெனின், அன்பா வது தொடர்புடையார்கட் காதல் என அவரே உரைத்திருப்பவும் தொடர்பில்லாப் பகைவர்மாட்டு அன்பு செய்யின் என்பது முன் னொடுபின் முரணுதலின் ஒவ்வா தென்க.

இனி ஒருசாரார் அறம் என்றது அறநிலை அறம் எனவும், மறம் என்றது மறநிலை அறம் எனவும் கூறுப. அவர் கருத்துப்படி அறம் என்பது பொதுவும் அறநிலை அறம் மறநிலைஅறம் என்பன சிறப்பு மாகும். ஆகவே, அறம் என்னும் பொதுச் சொல்லையும் மறம் என்னும் சிறப்புச் சொல்லையும் விரவிக் கூறுதல் மயங்க வைத்தலாய் முடியுமாதலின் அவருரையும் ஆசிரியர் கருத்தறிந்த உரையாகாது.

இவை ஐந்து பாட்டானும் அன்பின் சிறப்புச் சொல்லப் பட்டது. (கூ)

அன்பிலாமையின் இழிவு கூறத் தொடங்குவது வருங்குறள்:

எஎ. என்பி லதனை வெயிற்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.

(இ - ள்.) என்பிலதனை - எலும்பில்லாத உடம்பை, வெயில் போல - வெயில் (காய்ந்து சுருக்குமாறு)போல, அன்பிலதனை - அன்பு இல்லாத உயிரை, அறம் காயும் - அறமானது காய்ந்து (சுருக்கும்).

(இ - து) எலும்பில்லாத உடலை வெயில் சுருங்கி வற்றச் செய் வதுபோல, அன்பிலலாத உயிரை அறம் சுருங்கி வற்றச் செய்யும்.

என்பு உடற் குறுப்பாமாதலானும், அன்பு உயிர்க்குண மாத லானும், என்பிலது அன்பிலது என்பன என்பிலுடம்பு அனபிலுயிர் எனப் பொருள் கொள்ளக் கிடந்தன. என்பிலாத உடம்பாவது தசை. தசை வெயிலிற் சுருங்கி வற்றல் இயல்பு. அவ்வாறே அன்பிலா உயிர் அறத்தாற் சுருங்கி வற்றும் என்பதாம். உயிர் சுருங்கி வற்றலாவது அறிவு விளங்கி மேன்மேலும் சிறந்த பிறவியிற் புக்கு விரிந்து வீட்டின்பத்தினை எய்துதற்கு இடமின்றி அறிவும் பிறவிச் சிறப்பும் முதலாயின சுருங்கிச் சிறுமைப்பட்டு அறியாமை யிற் கட்டுண்டு கிடத்தல். எனவே அன்பிலாதார் வீடுபேற்றிற்குச் சேயராவார் என்பதாம். (எ)

அன்பிலாத உயிர் சுருங்கி வற்றுமெனக் கூறினமையின், அதன் பயன் இதுபோலு மென்பது வருங்குறள்:

எஅ. அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பார்க்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

(இ - ள்.) அகத்து - உள்ளத்தில், அன்பு இல்லா - அன்பு இல்லாத, உயிர் வாழ்க்கை - உயிரானது (உடலோடு கூடி) வாழ்தல், வன் பார்க்கண் - வலிய பாறை நிலத்தில், வற்றல் மரம் - வற்றலாகிய மரம், தளிர்த்தற்று - துளிர்விட்டதுபோலும்.

(இ - து) அன்பில்லாத உயிர் உடலோடு வாழ்தல், பாறை நிலத்தில் வற்றல் மரம் துளிர்விட்டதுபோலும்.

எனவே, பாறைநிலத்தில் வற்றல் மரத்திற்குத் துளிர்விட்டுச் செழிததல் இல்லையாறுற்போல அன்பில்லாத உயிர்க்குப் பிறவியிற் சிறந்து வீடெய்தலாகிய பயன் இல்லையென்ப தாயிற்று. வற்ற லென்பது தொழிலாகு பெயராய் வந்த பால்பகா வஃறிணைப் படர்க்கைப் பெயர். 'வன்பாற்கண்' எனப் பாடங் கொளவாருமுளர்.

உடலுக்கு உவமம் வன்பார்; அன்பிலாமைக் குவமம் நீரிலாமை; உயிருக்கு உவமம் மரம்; இன்மையாகிய வாழ்க்கைப் பயனுககு உவமம் இன்மையாகிய துளிர். மேற்குறளால் அன்பிலாத உயிர் சுருங்குதல் பெறப்பட்டமையின் அச்சுருங்கலுககு ஏற்ப, உயிரின் உவமமாகிய மரத்தை வற்றல் என்றார். இவ்வாற்றான் உவமச் சிறப்பு உணர்ந்து கொள்க. (அ)

அன்பில்லா உயிர் உடலோடு கூடி வாழுமாயினும் அவ்வுடல் அதற்குப் பயன்படா தென்பது வருங்குறள் :

எகூ. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு.

(இ - ள்.) யாக்கை - உடம்பிற்கு, அகத்துறுப்பு அன்பு - உள்ளுறுப்பாகிய அன்பு, இல்லவர்க்கு - இல்லாதவர்களுக்கு, புறத்துறுப்பு எல்லாம் - (யாக்கையின்) வெளியுறுப்புக்களாகிய (கண், கை, கால் முதலிய) எல்லாம், எவன் செய்யும் - என்ன (பயனைச்) செய்யும்? (ஒரு பயனையும் செய்யா).

(இ - து.) அன்பில்லாதவர்க்கு உடற்பிறவி பயனற்றதாம்.

உயிர் உடம்பகத் துள்ளமையானும், அன்பு உயிர்க்குணமாகலானும் அன்பை உடம்பின் அகத்துறுப் பென்றார்.

இவை மூன்று பாட்டானும் அன்பின்மையி னிழிவு கூறப்பட்டது. (க)

இதுகாறும் கூறப்பட்ட அன்புடைமையின் சிறப்பையும் அன்பின்மையின் இழிவையும் தொகுத்துக் கூறுவது வருங்குறள்:

அ0. அன்பின் வழிய துயிர்நிலை; அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு.

(இ - ள்.) உயிர்நிலை - உயிர் நின்ற உடம்பு, அன்பின் வழியது - அன்பு (முதலாக) அதன்பின் (தானாக) நின்றது: (ஆதலால்) அஃது இலார்க்கு - அந்த அன்பு இல்லாதவர்க்கு, உடம்பு - (உள்ள) உடம்புகள், தோல் போர்த்த - தோலால் மூடப்பட்ட, என்பு - எலும்புக்கூடுகளே.

(இ - து.) அன்பில்லா உடம்பு நடைப்பிணம் போல்வதாம்.

அன்பின் வழிய துயிர்நிலை என்பது 'அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்கட்-கென்போ டியைந்த தொடர்பு' என ஆசிரியர் மேற் கூறியது கொண்டு பெறப்படும். வழி-பின். உயிர் நிற்பதற்கு இடமாதலால் உடம்பு உயிர்நிலை எனப்பட்டது. இக் குறளிற் போந்த முற்றுத் தொடர்கள் இரண்டனுள், முன்னதற்கு உயிர்நிலை எழுவாய், வழியது குறிப்புவினைப் பயனிலை; பின்னதற்கு உடம்பு எழுவாய், என்பு பெயர்ப் பயனிலை. போர்த்த என்னும் பெய

ரெச்சம் என்பென்னும் பெயரைத் தழுவி நின்றது. போர்த்த என்பதை வினைப் பயனிலையாக்கிப் பொருளுரைப்பதும், உடம்பைத் தழுவிய பெயரெச்சமாகக் கொண்டு வினைப்பயனிலை வருவித்துப் பொருளுரைப்பது முண்டு.

இதனால் அன்பு உள்வழிச் சிறப்பும் இல்வழி இழிவும் கூறப்பட்டன. (௧0)

இவ்வதிகாரத்தில் முதற்குறளால், அன்பு அனுமான அளவையாலறியப்படுமோர் உள்பொருள் என்பதும், அடுத்த ஐந்து குறள்களால் அன்பின் சிறப்பும், அடுத்த மூன்று குறள்களால் அன்பின்மையின் இழிவும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறியருளினார் ஆசிரியர்.



## ௯. விருந்தோம்பல்

அஃதாவது விருந்தினரைப் பேணல். விருந்து என்னுஞ் சொல் புதுமைப் பொருட்டாதலும், அஃது ஆகுபெயராய்ப் புதியராய் வந்தாரை உணர்த்துமாறும் முன்னர்க் கூறப்பட்டன. ஈண்டு யவ்வாறே யச்சொல் விருந்தினரை யுணர்த்தி நின்றது. இல்லற வாழ்க்கைச் சிறப்புணர்த்திய இயலில் தென்புலத்தார் முதலாய ஐம்புலத்தா ரோம்பல் தலையாய அறம் என்றார் ஆசிரியர். அவ்வைம் புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாதாரை நினைந்து செய்வன வாதலாலும், பின்னைய இரண்டும் பிறர்கணீதலன்மையானும் இடை நின்ற விருந்தோம்பல் ஏனைநான்கினும் சிறப்புடைத்தாய் இல்லறப் பகுதிகளுள் முதலாயிற்று. கொழுநனும் மனைவியும் அன்போடு கூடியல்லது செய்யப் படாமையானும், அன்பீனும் ஆர்வமுடைமை (**குறள்-எச**)க்கு விருந்தினர் இடமாதலானும் இஃது அன்புடைமையின் பின் வைககப்பட்டது.

அக. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) இல் இருந்து - மனையின்கண் இருந்து, ஓம்பி- (மனைவி மக்களையும் இடம்பொரு ளேவல்களையும்) பாது காத்து, வாழ்வ தெல்லாம் - வாழ்வதற்குச் செய்யும் செயல்க ளெல்லாம், விருந்து ஓம்பி - விருந்தினரைப் பேணி, வேளாண்மை செய்தற் பொருட்டு - (அவர்களுக்கு) உப காரஞ் செய்வதன் நிமித்தமே.

(இ - து.) இல்லிருந்து வாழ்தல் விருந்தினரைப் பேணற் பொருட்டே.

இதனால் விருந்தோம்பலின் சிறப்புக் கூறப்பட்டது. (க)

விருந்தோம்புமாறு கூறுவது வருங்குறள் :

அஉ. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) சாவா மருந்து எனினும் - (உண்ணவிருப்பது) அமிழ்தமேயாயினும், விருந்து புறத்ததா - (தன்னை நோக்கி வந்த) விருந்து (தன் மனையின்) புறத்திலுள்ளதாக, தான் உண்டல் - தானே (அவ்வமிழ்தத்தை) உண்ணுதல், வேண்டற்பாற்றன்று - விரும்பத்தக்கதன்று.

(இ - து.) விருந்திருக்கத் தான் உண்ணலாகாது.

சாவா மருந்து, பெயரெச்சத் தொடர்; பெயரெச்ச வீறு கெட்டது, சாவாமைக்குக் காரணமான மருந்து எனப் பொருள்படுதலால், பெயரெச்சம் காரியப் பொருட்டாய் வந்தது. மருந்து என்பதே அமிழ்தம் எனப் பொருள்படுதற் குரித்தாகச் சாவாமருந்து என்றது எற்றுக்கோவெனின், விருந்து புறத்ததாத் தானுண்டல் சாதலோ டொக்கு மென்னும் குறிப்புத் தோன்றற் கென்க. 'விருந்தின்றி யுண்ட பகல் நோயே யுரனுடையார்க்கு' என்றார் பிறரும்.

இதனால் அமிழ்தமே யாயினும் அதனை அருமையுடைத்தென்று கருதிக் கரந்துண்ணாது, உண்பது எதுவாயினும் அதனை விருந்தினர்க்கு வஞ்சமின்றிப் பகுத்துண்ணல் வேண்டுமென்பது கூறப்பட்டது. (உ)

அவ்வாறு விருந்தோம்பலின் பயன் கூறுவது வருங்குறள்:

அரு. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(இ - ள்.) வைகலும் - நாள்தோறும், வருவிருந்து - (தன்னை நோக்கி) வந்த விருந்தினரை, ஓம்புவான் - பாதுகாப்பவனுடைய, வாழ்க்கை - இல்வாழ்க்கையானது, பருவந்து - (வறுமையினால்) வருந்தி, பாழ்படுதல் இன்று - கேடுறுதல் இல்லை.

(இ - து.) விருந்தோம்புவான் வாழ்க்கை கெடாது.

பருவரல் - துன்பம். 'நல்குர வென்னு மிடும்பையுட் பல் குறைத் - துன்பங்கள் சென்று படும்' (குறள்-கம௪௫) என்பராத லால் வறுமையினால் என்பது வருவித்துரைக்கப்பட்டது.

இதனால் விருந்தோம்புவார்க்குக் கேடில்லை யென்பது சொல்லப் பட்டது. (௩)

விருந்து பேணுவார்க்கு நன்மையுண்டென்பது வருங்குறள்.

அ௪. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

(இ - ள்.) நல் விருந்து - நல்ல விருந்தினரை, முகன் அமர்ந்து - (இனிய) முகம் பொருந்தி, ஓம்புவான் - பேணு பவனுடைய, இல் - மனையின்கண், செய்யாள் - திருமகள், அகன் அமர்ந்து - மனம் பொருந்தி, உறையும் - தங்குவாள்.

(இ - து.) விருந்தோம்புவானுக்குச் செல்வம் பெருகும்.

திருமகள் பொருட்குரிய ளாதலால், தன் பொருள் நல்வழிப் படுதல் கண்டு அவ்விடத்தில் மகிழ்ந்து உறைவாள் என்றார். அகம் முகம் என்பன இறுதிப் போலியாய் அகன் முகன் என நின்றன. அமர்தல், மேவுதல் அல்லது பொருந்துதல் என்னும் பொருட்டு. 'அமர்தன் மேவல்' என்பது தொல்காப்பியம் (உரியியல் - அஉ). 'விருந்தின் துணைத்துணை வேள்விப் பயன்' (குறள் ' அ௭) எனப் பின்னுங் கூறுவராதலால் ஈண்டும் 'நல் விருந்து' என்றார். நல் விருந்தாவார் அறிவு ஒழுக்கம் முதலியவற்றாற் சிறந்தோர். அவ் விருந்தை முகனமர்ந்து ஓம்பல் வேண்டுமென்றார், 'முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து' (குறள் - கூ0) என்பது பற்றி.

விருந்தோம்புவார்க்குத் திருமகள் துணையாவாள் என்றது இக் குறள். (௪)

நிலமகளுந் துணைசெய்வாள் என்பது வருங்குறள் :

அரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

(இ - ள்.) விருந்து ஓம்பி - (முன்னே) விருந்தினரை உண்பித்து, மிச்சில் - (பின்) மிகுந்திருந்ததை, மிசைவான் - (தான்) உண்ணும் அவனுடைய, புலம் - நிலத்துக்கு, வித்து இடலும் - விதை விதைத்தலும், வேண்டுமோ—, (வேண்டா).

(இ - து.) விருந்துக்கிட்டுப் பின் உண்பவன் நிலம் தானே விளையும்.

தானே விளையும் என்பது குறிப்பெச்சமாய் எஞ்சி நின்றது. வித்துமிடல் என்பதிலுள்ள உம்மை, விததிடலும் எனப் பிரித்துக் கூட்டப்பட்டது. கொல் - அசைநிலை. ஓகாரம் எதிர்மறைப்பொருளது. மிகுந்தது மிச்சில்; இது மிச்சம் எனவும் வரும். இப்பொருள்பட வரும் பிறிதொரு சொல் எச்சம்; எஞ்சியது எச்சம். எஞ்சுதல்-குறைதல். மிகுதல் குறைதல் என்னும் நேர்மாறான இரு வினைகள் ஒரே பொருளைக் குறித்தல் இருவேறுவகைப்பட்ட கருத்து நோக்கத்தால். வேண்டுமளவுபோக அவ்வளவிற்கு மிகையாய் நின்றது மிச்சம் அல்லது மிச்சில்; மிகுதியுமாம். உள்ள பொருளிற் கொள்வது கொள்ளக் குறைந்தது எச்சம் அல்லது எச்சில். மிச்சில் என்பது கொள்ளப்பட்ட பகுதி நோக்கி நின்றது. எச்சில் என்பது முழுப்பொருளை நோக்கி நின்றது.

இவை மூன்று பாட்டானும் இம்மைப்பயன் சொல்லப்பட்டது. (ரு)

மறுமைப்பயன் கூறுவது வருங்குறள்:

அசா. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(இ - ள்.) செல் விருந்து - (தன்னிடத்தில்) வந்த விருந்தினரை, ஓம்பி - பேணி, வருவிருந்து - இனி வரக்கடவ

விருந்தினரை, பார்த்திருப்பான் - நோக்கிக் காத்திருப்பவன், வானத்தவர்க்கு-(மேலுலகத்தில்) கடவுளர்க்கு, நல் விருந்து-(தான்) நல்ல விருந்தின ளுவான்.

(இ - து.) விருந்தோம்புவானைத் தேவர்கள் தமக்கு விருந்தின ளுகக் கருதிப் பேணுவார்கள்.

ஆசிரியர் தொல்காப்பியனார், 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியுந் - தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த' என்றாராயினும், 'செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினு - நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்-தன்மை முன்னிலை படர்க்கையென் னு-மம்மூவிடத்து முரிய வென்ப' (கிளவியாக்கம் - உஅ) என்னும் மூற்சூத்திரத்தால் அவை மூன்றிடத்தும் வரைவின்றியா மெனவுங் கொள்ள வைத்தமையால், தன்மை முன்னிலைகட்கே சிறப்பினுரிய வருசொல், தன்கண் வருவிருந்து எனப் படர்க்கைக்கண் வந்த தமையும்.

ஈண்டு 'நல்விருந்து' என்றதில் நன்மையாவது பெறுதற் கருமை.

இதனால் மறுமைப் பயன் சொல்லப்பட்டது. (கூ)

விருந்தோம்புவான் பெறும் இம்மைமறுமைப் பயன்களுக்கு அளவு கூறுவது வருங்குறள் :

அஎ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.

(இ-ள்.) வேள்வி-(விருந்தோம்பலாகிய) வேள்வியின், பயன் - பயனுவது, இனைத் துணைத்து - இத்தன்மை அளவை யுடையது, என்பது ஒன்று இல்லை - என்று சொல்லக் கிடந் தது ஒன்றுமில்லை ; விருந்தின் - விருந்தினரது, துணை - (குணத்தகுதி) அளவே, துணை - (அதற்கு) அளவு.

(இ - து.) விருந்தினரின் குணத்தகுதி அளவே விருந்தின் பயன்.

வேதமோதல், பிரமவேள்வி; பிதிர்க்கடனாற்றல், பிதிர்வேள்வி; தேவதைகளைக் குறித்துத் தீவேட்டல், தேவவேள்வி; காகங்கைக்கிடு தல் முதலியன பூத வேள்வி; விருந்தோம்பல், மானுட வேள்வி என்பர். இவ்வைந்திணையும் ஐம்பெருவேள்வி என்பராதலின் இவற்றுள் ஒன்றான விருந்தோம்பலை வேள்வி என்றார்.

'ஒண்பிரம மேவேத மோதுதல்; ஓமம் வளர்த்தல்
எண்டெய்வம்; ஈதல்பலி யேபூதம்;—ஒணடொடியீர்,
எண்ணீர்க் கடனாற்ற லேபிதிர்; விருந்தோம்பல்
அண்ணீர்மை மானுட யாகம்'

என்னும் இவ் வெண்பாவானு முணர்க. இவற்றுள் விருந்தோம்பலையே ஆசிரியர் சிறந்தெடுத்துக் கூறுவது குறிக்கொளற் பாற்று. 'வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்' என்றார் பிறரும். ஆசிரியர்க்கு இது சிறப்பாயினமை 'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி - வேளாண்மை செய்தற் பொருட்டு' (அக) என இவ் வதிகாரத்தைத் தொடங்கினமையானும் பெற்றாம். ஆண்டு இல்லிருந்து வாழ்வதற்குச் செய்யும் முயற்சியெல்லாம் விருந்தோம்பற் பொருட்டே யென்றதற் கேற்பப் போககி ஆள்வினையுடைமை யென்னு மதிகாரத்தின்கண் 'தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே - வேளாண்மை யென்னுஞ் செருக்கு' (கூகரு) எனவும் 'தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை - வாளாண்மை போலக் கெடும்' (கூகச) எனவும் கூறினமை காண்க. இக்கருத்தானே ஆத்திரையர் பேராசிரியரும் நல்லாசிரியர் இலககணங் கூறியவழி 'வேளாண் வாழ்க்கையும்' அதற்கின்றியமையாத் 'தாஅளாண்மையும்' கூறினார். இங்ஙனம் பண்டைத் தமிழாசிரியர் பலரோடுமொப்ப 'விருந்து புறந்தரூஉம்' வேளாண்மைத் தொழிலே சிறப்புடைத் தொழிலெனக் கொண்ட நந் தெய்வப் புலவர் 'பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா - செய்தொழில் வேற்றுமை யான்' (கூஎஉ) என்றமையால், வேளாண்மைத் தொழிலுடையோரே சிறந்தோராதலும், வேளாண்மைத் தொழிலுடைமைக்

காரணத்தாற் பெயர் பெற்ற வேளாளர் அவ்வாற்ருற் சிறந்தோராதலும், தமிழ் மக்களிற் பெரும்பாலோர் இஞ்ஞான்றும் வேளாளர் எனப்படுதற் குரியராய் நிலவுதலின் தமிழ் மக்க ளனைவரும் பன்னருஞ் சிறப்புடைத் தொன்னெறி மரபின ராதலும் உளங்கொள நோக்கி நலங்கெழக் கொள்க.

விருந்தோம்பலினும், பாத்திராபாத்திர மறிந்து ஓம்பல் வேண்டு மென்பார் 'விருந்தின் துணைத் துணை வேள்விப் பயன்' என்ருர் ; இக் கருத்தானே முன்னும் 'நல்விருந் தோம்புவான்' (அ௩) என்ருர் ; பின்னும் 'தக்கார்க்கு வேளாண்மை செய்தல்' (உகஉ) என்ருர். நீரை நெல்லுக் கிறைப்பதன்றிக் காட்டு முளிப் புல்லுககுப்போய் இறைப்பாரில்லை யாதலின் அவ்வாறே தககார்கரு மிககார்க்குமே உதவுவர் விழுமியோர். அங்ஙனம் உதவின் 'உதவி உதவி வரைத்தன் றுதவி - செய்யப்பட்டார் சால்பின் வரைத்து' (குறள் - ௧0௫) ஆம்.

*'உறககுந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுஉந் தககார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்'

என்ருர் பிறரும்.

இப் பாட்டால் விருந்தோம்பற் பயனளவு கூறப்பட்டது.(எ)

விருந்தோம்பாமையின் இழிவு கூறத் தொடங்குவது வருங் குறள் :

அஅ. பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா அ தார்.

(இ - ள்.) விருந்து ஓம்பி - (தாளாண்மையாற் பொருளீட்டி அப் பொருளால்) விருந்தினரைப் பேணி, வேள்வி - அவ் வேளாண்மையை, தலைப் படாதார் - பொருந்த மாட்

*(நாலடியார்.௩அ.)

டாதார், பரிந்து ஓம்பி - (பொருளின்மையாற் பிறர்பால் இரப்பதானும் பிறவாற்றானும்) வருந்தி(த்தம் உடம்பை மட்டும்) பேணி, பற்று அற்றேம் - (யாம் பொருட்) பற்று அற்றேமாயினேம், என்பர் - என்று (பற்றற்ற துறவியர் போற்) பேசுவர்.

(இ - து.) விருந்தோம்பாதார் வறுமை யுழப்பர்.

விருந்தோம்புவான் வாழ்க்கை 'பருவந்து பாழ்படுத லின்று' (அரு) என முற்கூறியதை ஈண்டெதிர்மறுத்து விருந்தோம் பாதான் வாழ்க்கை பாழ்படு மென்றார். இப் பொருள் 'பற்றற்றே மென்பர்' என்றவழிச் சொற்குறிப்பாற் பெறப்பட்டது. பரிந்தோம்பி என்றது பொருள்களைப் பரிந்தோம்பலை எனவும் பற்றற்றேம என்றது அப் பொருளை யிழந்து பின்னை இது பொழுது யாம் பற்றுக்கோடிலராயினேம் எனப பொருள்படுமென வுங் கூறுவா. பரிந்தோம்புவார் அப் பொருளை இழத்த லரிதாத லின் அங்ஙனம் பொருள்கோடல் வலிந்துகோட லாகின்றது. ஆகாதேற் கொள்க.

தாளாண்மையாற் பொருளீட்டி வேளாண்மை செய்யமாட் டாதவர் வறுமையி லுழந்தேனுந் தம்மைப் பேணி இல்லறமுங் கடைபோக ஆற்றாது, அருளொடு புணர்ந்த மெய்த்துறவினும் செல் லாது தந்நலநாட்டராய்த் திரிதரல் பெரிதும் இகழப்படுதற் குரித்தா மென்பதும், அன்னார் துவரத் துறப்பினும் பயன பெறுவா என்ப தும் பட்ட 'துப்புர வில்லார் துவரத் துறவாமை—உப்பிற்குங் காடிக்குங் கூற்று' (௧0௫0) என மேற் கூறுதலுங் காண்க.

இது விருந்தோம்பாதார் வறுமையுழப்ப ரென்றது. (அ)

வறுமையின்றிப் பொருளுடையரேனு மவா உடையராகார் வறியரே யாவர் என்பது வருங்குறள்:

அகூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

(இ - ள்.) விருந்தோம்பல் ஓம்பா - விருந்தோம்பலாகிய அறத்தைப் பேணாத, மடமை - பேதைமையானது, உடைமையுள் - செல்வமுடையனா யிருக்குங் காலத்திற்றானே, இன்மை - வறுமை நுகர்தல் போல்வதாம்; (அது - அப் பேதைமையானது), மடவார்கண் - அறிவில்லாதவர்களிடத்திலே, உண்டு - உள்ளதாம்.

(இ - து.) விருந்தோம்பாதவர் பேதையர்; அவர் செல்வராயினும் வறியரே.

உடைமை - பொருளுடையனா யிருக்குந்தன்மை. 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' ஆகவே, வேளாண்மை செய்யாவழி அப் பொருளிருந்தும் அதனாற் பெறததக்க பயன் இல்லையாம; இல்லையாகவே அப்பொருளும் இல்லையேயாம். என்னை ? உணவாலாய பயன் பசி தீர்தல், பசிதீரப் பயன்படா உணவு உணவன்றாம். அங்ஙனமே, பொருளாலாய பயன் விருநதோம்பல்; அதற்குப் பயன்படாப் பொருள் பொருளன்றாம். ஆதலால் அப் பொருள் இலலையெனவே படும். அன்றியும, 'விருந்தோம்புவான் வாழ்க்கை பாழ்படுதலின்று' என்பதால் 'விருந்தோம்பாதான் வாழ்க்கை பாழ்படும்' என்பது பெறப்படுதலின், விருந்தோம்பாதான் பொருளுடையனாயினும் அச் செல்வ வாழ்கசை பாழ்பட்டு அவன் வறுமையுறுவான் என்பதும் பெறப்படும். அத னுணிவினான் அவனது உடைமை இன்மையெனப் படுதற்கு முரித்தென்பதுபற்றி 'உடைமையு ளின்மை' என்றார். இவ்வாற்றால் விருந்தோம்பாமை மடமையாதலுங் கண்டுகொள்க. அது வென்னுஞ் சுட்டுப்பெயர் வருவித் துரைக்கப் பட்டது.

இவை யிரண்டு பாட்டானும் விருந்தோம்பாமையின் இழிவு கூறப்பட்டது. (க)

விருந்தினர் தன்மை இனைத்தென்பது வருங்குறள்:

௯0. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ - ள்.) அனிச்சம் - அனிச்சப்பூ, மோப்ப - மோந்த பொழுது, குழையும்-வாடும் (தன்மையது) ; விருந்து - விருந்தினரோ, நோக்க - (விருந்தோம்புவூான் இனிமை யின்றிப் பார்த்தால்) பார்த்த பொழுதே, குழையும்-வாடும் (தன்மையர்).

(இ - து.) விருந்தினரை இன்முகத்தோடு ஏற்று உபசரித்தல் வேண்டும்.

*அனிச்சம் என்னும் முதற்பெயர் அதன் சினையாகிய பூவிற் காதலால் முதலாகுபெயர். நோக்கு நிகழ்ந்த பின்னரே மோத்தல் நிகழும்; கண்டு கரத்திலெடுத்தோ கிட்டச் சென்றோவன்றி மோத்தல் கூடாமையின். ஆதலின் நோகது மோத்தலினும் விரைவில் நிகழ்வது. இவ்வாற்றால் விருந்தினர் அனிச்சத்தினும் விரைவில் வாடுவர் என்பதும் அக காரணத்தான் அவர் அனிச்சப் பூவினும் மெல்லிய ரென்பதும் பெறப்படும். எனவே விருந்தினரைக் கண்டவுடனே முகமலர்ந்து இன்முகங் காட்டி வரவேற்றுப் பின்னர் இன்சொற்களாலும் இன்செயல்களாலும அவரை உபசரிக்க வேண்டுமென்றாராம். இக் கருத்தானே முன்னரும் 'முகனமர்ந்து' (அ௪) என்றார்.

இதனால் விருந்தினரை இன்முகததோடு வரவேற்றுப் பேணல் வேண்டுமென்பது பெறப்பட்டது. (௯0)

இவ் வதிகாரத்தில் முதற் குறளால் விருந்தோம்பலின் சிறப்பும், அடுத்த குறளால் விருந்தோம்புமாறும், அடுத்த மூன்று குறள்களால் அதன் இம்மைப் பயனும், அடுதத குறளால் அதன் மறுமைப் பயனும், அடுத்த குறளால் அப்பயனளவும், அடுத்த இரண்டு குறள்களால் விருந்தோம்பாமையின் இழிவும், இறுதிக் குறளால் விருந்தினர் தன்மையும் கூறப்பட்டன.

---

* அனிச்சப் பூவைச் சிலர் வாகைப் பூ எனக் கூறுவர்.

## ௧௦. இனியவை கூறல்

அஃதாவது, அன்புடை உள்ளத்தை வெளிப்படுப்பதற்கோ ரேதுவாகிய இன்மொழி கூறல். இதுவும் விருந்தோம்புவார்க்கு இன்றியமையாமையின் விருந்தோம்பலின்பின் வைக்கப்பட்டது.

௯௧. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(இ - ள்.) இன்சொல் - இனிய சொல்லானவை, ஈரம் அளைஇ - அன்போடு கலந்து, படிறு இலவாம் - வஞ்சனை யில்லாதனவான, செம்பொருள் - அறத்தினை, கண்டார் - அறிந்தவரது, வாய்ச்சொல் - வாயினின்று வரும் சொற் களாம்.

(இ - து.) அன்போடு வஞ்சனையற்று அறநெறி திறம்பாதவர் கள் வாயினின்று வரும் சொற்களே இனிய சொற்களாம்.

இன்சொலால் என்பதில் ஆல் அசைநிலை. இலவாம் என்னும் எதிர்மறைக குறிப்புப் பெயரெச்சம் ஈற்றினின்ற சொல் என்பத னொடு முடிந்தது. அன்பொடு கலத்தலாவது அன்புடைய குணத்தை வெளிப்படுத்துவது. இன்சொல்லே யாயினும் அறநிலையாகிய மெய்ம் மைக்கு மாறுபட்டு வஞ்ச முடைத்தாதல் கூடாதென்பார், 'படிறில வாஞ் சொல்' எனவும், 'செம்பொருள் கண்டார் வாய்ச்சொல்' எனவும் கூறினர். அறமானது மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கெல்லாம் செம்மையுடையதாய்த் தோன்றலின், 'செம்பொருள்' என்றார். சொல் என்பதே அமைவதாக வாய்ச்சொல் எனக் கூறினர், தீய சொற் பயிலாவாய் என்பதறிவித்தற்கு. இங்ஙனம் வரும் வேண்டா சொற்கள் 'விதப்புக் கிளவி' எனப்படும். விதப்பு—மிகுதி. 'விதப் புக் கிளவி வேண்டியது விளக்கும்' என்பது சூத்திரம்.

இதனால் இன்சொல்லுக்கு இலக்கணங் கூறப்பட்டது. (௧)

இன்சொல்லின் சிறப்புக் கூறத் தொடங்குவது வருங்குறள்.

௯௨. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
 தின்சொல னாகப் பெறின்.

(இ - ள்.) *அகன் அமர்ந்து - மனம் பொருந்தி, ஈதலின் - (ஒருவர்க்கு வேண்டியதொரு பொருளைக்) கொடுத்தலினும், முகன் அமர்ந்து - (கண்டபொழுதே இனிய) முகம் பொருந்தி, இன்சொலன் ஆகப் பெறின்-(அதனோடு) இனிய சொல்லையும் உடையவனாகப் பெற்றால், (அது), நன்று - நன்மையுடையதாம்.*

(இ - து.) *ஈதலின் இன்சொல் நன்று.*

*இன்சொல்லும் இன்முகமும் இல்வழி ஈதல் சிறவாமையின் ஈதலின் அவை நல்ல வென்றார். ஈதல் பொருள் வயப்பட்டதாக இன்சொல் தன்வயப்பட்டதாகலானும் ஈதலினும் இன்சொல் நன்றாயிற்று. இப் பொருட்கு இன்னுருபு உறழ்வுப்பொருவாம். இனி, அதனை உவமப் பொருவாகக்கொண்டு ஈதலியையாக்கடை இன் சொலனாகப் பெறின் அஃது ஈதலைப்போலவே நன்று எனலுமாம்*.*

*இதனால் இன்சொல் ஈதலின் சிறந்த தென்பது கூறப் பட்டது.* (௨)

*இன்சொல் சிறந்தமைக்குக் காரணம் கூறுவது வருங்குறள்:*

௯௩. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தா
 னின்சொ லினதே யறம்.

(இ -ள்.) *முகத்தான் அமர்ந்து - (இனிய) முகத்தாற் பொருந்தி, இனிது நோக்கி - இனிதாகப் பார்த்து, அகத்தான் ஆம் - மனத்தோடு பட்டதாகிய, இன் சொலினதே- இனிய சொற்களைச் சொல்லுத லிடத்தையுடையதே, அறம்- அறமாவது.*

---

* '*ஈகை யரிதெனினு மின்சொலினு நலகூர்தல*
*ஓகோ கொடிது கொடிதமமா ... ...'—நீதிநெறிவிளக்கம்.*

(இ - து.) அறமாவது இன்சொ லிடத்ததே.

ஈதலிடத் தன்றென்பது குறிப்பெச்சம். இன்சொலினதே என்பது இன்சொற்களைச் சொல்லுதல் என விரியும். அங்ஙனம் விரிந்தவழி ஆண்டு நின்ற சொல்லுதல் என்னும் வினைப்பெயரைக் கொண்டு முடிந்தது நோக்கி என்னும் வினையெச்சம்.

இதனால் இனியவை கூறலின் சிறப்புக்குக் காரணம் கூறப்பட்டது. (௩)

இனியவை கூறலின் பயன் கூறுவது வருங்குறள் :

௯௪. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

(இ - ள்.) யார் மாட்டும் - எல்லாரிடத்தும், இன்பு உறாஉம் - இன்பத்தை மிகுதிப்படுத்துகின்ற, இன்சொலவர்க்கு - இனிய சொல்லை யுடையவர்களுக்கு, துன்பு உறாஉம் - துன்பத்தை அதிகப்படுத்துகின்ற, துவ்வாமை - வறுமை, இல்லாகும் - இல்லையாகும்.

(இ - து.) இன்சொலுடையார் வறியராகார்.

உறுதல் - மிகுதல. 'உறுதவ நனியென வரூஉ மூன்று - மிகுதி செய்யும் பொருள வென்ப' என்பது தொல்காப்பியம். (உரியியல்-௩). துப்பு - நுகர்வு, துவ்வாமை - நுகராமை. பொறிகள் புலன்களை நுகராமைக்குக் காரணமாதல்பற்றி வறுமை துவ்வாமை எனப்பட்டது. அன்பின் வழிய தின்சொல் ஆதலானும், அந்த 'அன்பீனும். ....நண்பென்னு நாடாச் சிறப்பு' ஆதலானும், 'இடுக்கண் களைவதா நட்பு' ஆதலானும், இன்சொலுடையார்க்கு வறுமை முதலியவற்றால் இடுக்கணுறுதல் இல்லை யென்பது பெறப்படுமாகலின் 'துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும்' என்றார்.

இன்சொலவர்க்கு வறுமை யில்லை என்றது இக் குறள். (௪)

இன்சொல்லே செல்வம் என்பது வருங்குறள் ;

கூரு. பணிவுடைய னின்சொல ளாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, அணி - ஆபரணமாவது, பணிவுடையன் - (தன்னாலே பணியப்படத்தக்காரிடத்தில்) பணிவுடையவனாகி, இன்சொலனாதல் - (எல்லாரிடத்திலும்) இனிய சொல்லை யுடையனாவது; பிற - (அஃதில்லாவழி, பொன்னினும் மணியினுமாய) மற்றவை, அணி அல்ல - ஆபரணங்க ளல்லவாம்.

(இ - து.) இன்சொல்லே ஒருவனுக்கு அழகு செய்வதாம்.

செல்வத்தா லாவது அணி; அவ் வணியா லாவது அழகும் அவ் வழகுபற்றிய மதிப்பும். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' (குறள்-கஉக) என்பதால் அடக்க முடையான் ஆன்றோரால் மதிக்கப்படுதல் பெறுதும். ஆதலினால் பணிவுடைமை அணியாயிற்று. 'அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்' (குறள் - கஉஉ) என்பதனாலே அடக்கமில்லான் ஆன்றோரால் மதிக்கப்படாமையும் பெறுதும். ஆகவே, அடக்கமில்லார் பொன்னினு மணியினு மாய பிற அணிகளை உடையராயினும் அவர் ஆன்றோரால் மதிக்கப் படாமையினாலே அவ் வணிகளா லாம் பயன் அவர்க்கில்லை யாயிற்று. ஆகவே அப் பிற வணி 'அணி அல்ல' என்ப தொக்கும். பணியப்படுவாரிடத்துப் பணிந்துரையாடாமையும் இன்னாச் சொல்லேயா மாதலின் பணிவுடைமை இன்சொல்லோடு கூட்டிக் கூறப்பட்டது. இக் கருத்தானே ஆசிரியர் அடக்க முடைமையை விதந்தெடுத்துக் கூறு மதிகாரத்தில் 'தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினாற் சுட்ட வடு' (கஉகூ) என்றார்.

மற்று, அசை. 'ஆதல் ஒருவற் கணி' 'அணியல்ல பிற' என அணி என்பது செய்யுள் இருமருங்குஞ் சென்றியைந்தது.

இவை யிரண்டு பாட்டானும் இன்சொல்லின் இம்மைப் பயன் கூறப்பட்டது. (ரு)

இன்சொல்லின் மறுமைப் பயன் கூறுவது வருங்குறள்:

கூசு. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(இ - ள்.) நல்லவை - (பிறருக்கு) நன்மை தருஞ் சொற்களை, நாடி - (உள்ளத்தில் கருதி) ஆராய்ந்து, இனிய - (அவற்றை) இனிமையவாக, சொலின் - (ஒருவன்) சொல்லுவா னாகல், அல்லவை - (அறமல்லாத) தீவினைகள், தேய - குறைவனவாக, அறம் பெருகும் - நல்வினை வளரும்.

(இ - து.) இன்சொல் அறப் பயனைத் தரும்.

சொல்லின் எனற்பாலது இடை குறைந்து நின்றது.

இதனால் மறுமைப் பயன் கூறப்பட்டது. (சு)

இருமைப் பயனையும் வலியுறுத்துவன வருமிரண்டு குறள்கள் :

கூஎ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(இ - ள்.) நயன் ஈன்று - (ஒருவனுக்கு இம்மைக்கு) இன்பத்தையும் உண்டாக்கி, நன்றி பயக்கும் - (மறுமைக்கு) அறத்தையும் தரும், பயன் ஈன்று - (பிறர்க்கு நல்ல) பயனைத் தந்து, பண்பின் தலைப்பிரியா சொல் - (இனிமையாகிய) குணத்தினின்று நீங்காத சொல்.

(இ - து.) இன்சொல் இன்பமும் அறனும் தரும்.

நயம் - நயன் என இறுதிப் போலியாயிற்று. நயன் இன்பாதலை, 'நவிறொறு நூனயம் போலும் பயிறொறும் பணபுடையாளர் தொடர்பு' (குறள்-எஅங) என்புழியுங் காண்க. ஆண்டுப் பரிமேலழகரும் நயம் என்பதற்கு 'இன்பஞ் செய்தலை' எனவும் 'நயத்தினைச் செய்தலான் நயமெனப்பட்டது' எனவும் பொருளுரைத்தார். ஆசிரியர் மேல் 'துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும்'(கூஅ)என்பதால் இன்சொலவர்கரு இன்புள தாதலைக் குறிப்பாற் சுட்டியமையும் காண்க. இனி இக்குறளில் 'நயனீன்று' என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகர்

'நீதியையு முண்டாக்கி' எனப் பொருளுரைத்தார். அது சிறக்குமா யிற் கொள்க. நயம் என்பது பலபொரு ளொருசொல். 'நன்று மின்பமு நியாயமு நயமெனல்' என்பது பிங்கலம். நன்றி அறமா தலை, 'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' (குறள் - ௧௩௮) என் புழியுங் காண்க. 'நல்லவை நாடி' (௯௬) என மேற்குறளிற் கூறினு ராகலின் ஈண்டுப் பயன் என்றதற்கு நல்ல பயன் எனப் பொருள் கொள்ளப்பட்டது. பண்பு ஈண்டு இனிமைப் பண்பாதல் அதிகா ரத்தாற் பெறப்பட்டது. தலைப்பிரிதல் என்பது பிரிதல் எனவே பொருள்பட்டு ஒருசொல் நீர்மைத் தாயிற்று. அன்றித் தலை இடம் எனக் கொண்டு இடத்தினின்று நீங்குதல் என உரைப்பினு மாம்.

இது நட்பு மறனும் இன்சொலானும் என்றது. (எ)

அந்நட்பானு மறத்தானும் ஆமபயன் கூறுவது வருங்குறள் :

௯௮. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(இ - ள்.) சிறுமையுள் நீங்கிய - புன்மையினின்று நீங் கிய, இன்சொல் - இன்சொல்லானது, மறுமையும் இம்மை யும் - (ஒருவனுக்கு) மறுமையிலும் இம்மையிலும், இன்பம் தரும் - இன்பத்தைத் தரும்.

(இ - து) இன்சொல் இருமையும் பயக்கும்.

சிறுமை - புன்மை; அஃதாவது பணிவில்லாமை. மேலும், 'பணிவுடைய னின்சொல னாதல்' என்றார். ஈண்டும் அதனை வற் புறுத்திச் 'சிறுமையுணீங்கிய வின்சொல்' என்றார். சிறுமை இப் பொருட்டாதலை, ஆசிரியரே அதன் பொருள் இனிது விளங்கப் போக்கிப் 'பெருமை பெருமித மின்மை சிறுமை - பெருமித மூர்ந்து விடல்' (குறள்-௯௭௯) எனக் கூறுவதுகொண் டறிக. பரிமேலழகர் 'பிறர்க்கு நோய் செய்யாத இனிய சொல்' எனப் பொருளுரைத் தாராலெனின், பணிவில்லாமையோடு கூடிய சொல் பிறர்க்குத் துன்பம் பயப்பதே யாதலின் அஃதொக்கு மென்க. மேல் நட்பும்

அறனும் பயக்கு மென்றார்; நட்பின் பயன் இம்மை யின்பமும், அறத்தின் பயன் பேரின்பமு மாதலின், அவ் விருமை யின்பமும் இனசொலால் உண்டென்று ரீண்டு.

இவை இரண்டு பாட்டாலும் இன்சொலால் இருமைப் பயனும் ஒருங் கெய்துதல் வலியுறுத்திக கூறப்படடது. (அ)

இன்சொல் அல்லாத வன்சொற் கூறலாலாம் இழிவு கூறுவன வரும் இரண்டு குறள்கள்:

கூகூ. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(இ - ள்.) இன்சொல் - இனிய சொல்லானது, இனிது ஈன்றல் - (தனக்கு) இன்பம் தருவதை, காண்பான் - (நுகர்ந்து) அறிபவன், வன்சொல் - (பிறரிடத்தில் தான் உரையாடும்போது அவ்வினிய சொல்லை விட்டுக்) கடுஞ் சொல்லை, வழங்குவது - சொல்வது, எவன்கொலோ - என்ன (பயனைக் குறித்தோ).

(இ - து.) வன்சொல் வழங்கலாற் பயனில்லை.

கொல், அசைநிலை. ஒரொருகால் தான் இன்சொற் கூறிய வழி அதனாற் பிறர் தன்னை விரும்புதலையும், அவ் விருப்பத்தால் நட்புள தாதலையும், அந் நட்பால் நன்மைகள் பலவற்றைத் தான் இம்மையில் எய்தலையும் கண்கூடாகக் கண்டறிந்தும் ஒருவன் வன் சொல் வழங்குவது இறும்பூது பெரிதுடைத் தென்பார் 'எவன் கொலோ' என்றார். இனி இன்சொல் இனிதீன்றல் என்பதற்குப் பிறர் கூறிய இன்சொல் தனககு இன்பம் தருதலை எனப் பொருள் கொண்டார் பரிமேலழகியாரும் மணக்குடவரும். வன்சொல் வழங் கும் அறிவிலார்க்கு அவ் வறிவான் ஆய பயன் என்னையோ? பிறர்க்கு இன்பம் பயத்தலைக் கருதினார்க்கு அது பயனபடும். ஆயி னும், அன்னார்க்கது கூற வேண்டா. தம் மின்பத்தையே பெரிதாய் நாடும் தந்நல நாட்டார்க்கு, அவர் உளப்பாங்கின் வழியே சென்று

'ஏ பேதையீர், இன்சொலால் நீவிர் நலம் பெறுதலை, ஒரொருகால் உம்மையு மறியாமல் நீர் கூறிய இன்சொற் பயன் கண்டும் அறிகி லீரோ? வன்சொலால் அபபயனை எய்தி அறியீரே. அற்றாகவும் வன்சொல் வழங்கும் நுமதறியாமை இருந்தவாறு தான் என்னே!' என்றிரங்கிக கூறுவதாகலின் ஈண்டு ஆசிரியர் கருதியது தாம் சொல்லும் இன்சொல் தமக்கு இனிதீன்றலையே எனக கொண்டாம். வருங்குறளும் இக் கருத்தை வலியுறுத்தும்.

வன்சொல் வழங்கலாற் பயனின்றென்றது இக்குறள். (கூ)

வன்சொல் வழங்கல் அறியாமை என்பது வருங்குறள் :

**கOO.** இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(இ - ள்.) இனிய - இருமைப் பயன்களையும் (தரும்) இனிய சொற்கள், உளவாக - இருக்க, இன்னாத - (ஒரு நற் பயனையும் தாராத) வன் சொற்களை, கூறல் - (ஒருவன்) சொல்லுதல், (எதுபோலுமெனில்), கனி இருப்ப - (ஓரிடத் தில் இனிய) கனிகளும் இருக்க, காய் கவர்ந்தற்று - (அவற்றை விட்டு ஆண்டுள்ள இன்னாத) காய்களை விரும்பிக் கொண்டாற் போலும்.

(இ - து.) இன்சொல் நன்மை பயக்கும்; வன்சொல் தீமை பயக்கும்.

கவர்தல் - விரும்புதல்; அஃதீண்டு விரும்பிக்கொள்ளலைக் குறித்தது. 'கவர்வு விருப்பாகும்' என்பது தொல்காப்பியம். (உரி யியல் - சுஅ). கூறல் என்றதினாலே இனிய இன்னாத என்பன அவ் வப் பண்புகளையுடைய சொற்களென்பது பெற்றாம். பொருளைச் சார்ந்து நின்ற பண்புகள் உவமைக கண்ணுஞ் சென்றன. இன்னாக் காய்களோடு இனிய கனிகளும் இருப்பதைக் கண்ணாரக் கண்டும் அக்கனிகளைவிட்டு அக் காய்களை விரும்புதல் அறிவின்மை என்பது

விளங்கிக் கிடந்தது. ஆகவே இன்சொற்கள் இருக்க வன்சொற்கள் கூறுவதும் அறிவின்மை என்பது பெறப்படும்.

இச் செய்யுளில் இன்சொல் கனிபோலத் தனக்கு நன்மை தருவதென்பதும் வன்சொல் காய்போலத் தனக்குத் துன்பம் தருவதென்பதும் பெறக்கிடத்தலின், ஓராற்றான் இச் செய்யுள் இன்சொல்லின் நன்மையையும் வன்சொல்லின் தீமையையும் தொகுத்துக் கூறியதுமாம்.

இவை இரண்டுபாட்டாலும் வன்சொற் கூறலின் இழிவு கூறப்பட்டது. (௧௦)

இவ் வதிகாரத்தில் முதற் குறளால் இன்சொல்லின் இலக்கணமும், அடுத்த இரண்டு குறள்களால் இன்சொல்லின் சிறப்பும், அடுத்த இரண்டு குறள்களால் அதன் இம்மைப் பயனும், அடுத்த குறளால் மறுமைப் பயனும், அடுத்த இரண்டு குறள்களால் இருமைப் பயனுமொருங்கெய்தலும், அடுத்த குறளால் இன்சொற் சொல்லாமையாலாம் இழிவும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறப்பட்டன.



## ௧௧. செய்நன்றியறிதல்

அஃதாவது தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமை. இல்லின்கண் மனைவி மக்களோ டிருந்து அன்பு செய்து விருந் தோம்பி இனியவை கூறி இல்லறம் நடத்தலான எய்தும் பயன் பலர் கூட்டுறவும் அதுபற்றித் தனக்கும் பிறர்க்கு மிடையே குறி யாது நிகழும் உதவியுமாம். குறியா தெழுந்த அவ்வுதவியைக் குறித் தறிந்து அதன் தன்மையும் பிறவும் கண்டொழுகல் பகுத்தறிவுடைய மக்கட்குக் கடனாகின்றமையின், இனியவை கூறலின் பின், அதனை அண்மைக் காரணமாகக் கொண்டெழுந்த உதவி யறிதல் கூறப்பட் டது. உதவியறித லெனினும் செய்நன்றி அறிதல் எனினும் ஒக் கும். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும். 'இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்தியில் குற்றம் செய்நன்றி கோறலே யாகலின் அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட் டஃ தினியவை கூறலின் பின் வைக்கப்பட்டது' என்றார் பரிமேலழகர்.

௧0௧. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

(இ - ள்.) செய்யாமல் - (தனக்கு முன்னமோர் உதவி) செய்யாதிருக்க, செய்த உதவிக்கு - (ஒருவன் பிறனுக்குச்) செய்த உதவிக்கு, வையகமும் வானகமும் - மண்ணுலகத்தை யும் விண்ணுலகத்தையும் (கைம்மாறாகக் கொடுத்தாலும் அவை) ஆற்றல் அரிது - (அவ்வுதவிக்கு) ஈடாதல் இல்லை.

(இ - து) காரணமின்றிச் செய்த உதவி அளவிடற் கரியது.

ஆற்றல் - பொறுத்தல். அஃது ஈண்டு ஒப்புமை பொறுத்தலைக் குறித்து ஈடாதல் என்னும் பொருண்மைக்கண் நின்றது. மாற்றல் அரிது எனக் கொண்டு வையகத்தையும் வானகத்தையும் (ஈடாக) மாற்ற லரிது எனப் பொருள் கூறுவாரு முளர். உதவியைச் சிறப் பிப்பது ஈடாகாமையே யன்றி மாற்றலின் அருமை யன்றாதலால்

அப் பொருள் சிறவாமை யறிக. ஆசிரியர் பரிமேலழகரும் ஆற்ற லெனவே வைத்து ஒத்தலெனப் பொருள் கொண்டாராதல், 'கைம் மாறுக ளெல்லாம் காரணமுடைய வாகலிற் காரணமில்லா உதவிக்கு ஆற்ற வாயின' என அவர் கூறுமாற்றாற் பெறப்படும். 'செய்யா மைச் செய்த வென்று பாடமோதி மறுதலுதவமாட்டாமை யுள்ள விடத்துச் செய்தவுதவி யென்றுரைப்பாரு முளர்'

இது முதல் மூன்று பாட்டுக்களாற் செய்நன்றியின் சிறப்பும் பகுப்பும் கூறத் தொடங்கி இதனுல் செய்யாமற் செய்த நன்றியென் னும் பகுப்பும் அதன் சிறப்புங் கூறினர் ஆசிரியர். (௧)

பிறிதொரு பகுப்பும் அதன் சிறப்பும் கூறுவது வருங் குறள்:

௧0௨. காலத்தி ஞற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

(இ - ள்.) காலத்தினுல் - (ஒருவனுக்கு இடுக்கண் வந்த) காலத்தில், செய்த நன்றி - (அவ் விடுக்கண் களைவ தன்றிப் பிறிதொன்றும் கருதாமல் ஒருவன்) செய்த உதவி, சிறிது எனினும் - (தன்னளவிற்) சிறிதேயாயினும், ஞாலத்தின் - (அக் காலத்தைக் குறித்து நோக்க) நிலவுலகத்தினும், மாணப் பெரிது - மிகவும் பெரிதாம்.

(இ - து.) சிற்றுதவியேனும் காலத்திற் செயின் மிகப்பெரிதாம்.

காலத்தின்கண் என ஏழாம் வேற்றுமை நிற்றற்குரிய விடத்தில் காலத்தினுல் என மூன்றும் வேற்றுமை நின்றது வேற்றுமை மயக் கம். 'யாத னுருபிற் கூறிற் றாயினும் - பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்' (தொல்-வேற்றுமைமயங்கியல்-௨௩) என்பதனுல் அமையும். ஞாலத்தின் என்பதில் ஐந்தனுருபு உறழ்பொருவு. வித் துங் காலத்தால் விளையும் பயன் வேறுபடுதல் நிலத்தியல்பாதலால் அவ் வொற்றுமை கருதி 'ஞாலத்தின் மாணப் பெரிது' என்ருர்.

காலத்தினுற் செய்த நன்றி என்னும் பகுப்பும் அதன் சிறப்பும் கூறிய திக்குறள். (௨)

எஞ்சிநின்ற பிறிதொருபகுப்பும அதன்சிறப்புங் கூறுவது வருங் குறள் :

௧0௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
　　னன்மை கடலிற் பெரிது.

(இ - ள்.) *பயன் றூக்கார்* - (இவர்க்கு இது செய்தால் இன்ன பயன் தமக்கு எய்துமென்று அந்தப்) பயனைக் கருதாராகி, *செய்த உதவி நயன்* - செய்த உதவியாகிய நன்றியை, *தூக்கின்* - ஆராயின், *நன்மை* - (அந்) நன்மையானது, *கடலிற் பெரிது* - கடலினும் பெரிதாம்.

(இ - து.) பயன் நோக்காது செய்த நன்றி மிகப் பெரிதாம்.

பயன்றூக்கார் என்பது 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (தொல்-எச்சவியல-௬௧.) என்பதனால வினையெச்சத் திரிபாய் நின்றது. பிற்காலத்தார் இதனை முற்று எச்சமாயின தென்பர். நயன் நன்றாதல் முன்னர்க் கூறப்பட்டது. (குறள்-௬௭) பயன் கருதாது எழிலிக்குத் தன்னைக் கொடுக்க, எழிலி அதனை அவ்வாறே பயன் கருதாது உலகிற்குக் கொடுத்தலின் அவ் விருவாற்றானும் சிறப்பெய்தியது கடலாதலால், 'கடலிற் பெரிது' என்றார். 'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் - டென்னாற்றுங் கொல்லோ வுலகு' (குறள்-௨௧௧) எனக் கைம்மாறு கருதா உதவிக்குச் சிறப்புடை எடுத்துக் காட்டான மாரியிருக்கக் கடலைக் கூறிய தென்னோ வெனின், ஆண்டுக் கூறியது ஒப்புரவறிதலைச் சிறப்பிக்குமிடத்து, ஈண்டுக் கூறப் புகுந்தது செய்ந்நன்றி யறிதலின் சிறப்பை. முன்னது பிறர்க்குத் தான் செய்யும் உதவி குறித்தது, பின்னது தனக்குப் பிறர் செய்யும் உதவி குறித்தது. பிறர்க்குத் தான் செய்யும் உதவியைக் குறிக்குங் காலைக் கைம்மாறு கருதாமையோடு கைம்மாறு பெருமையும் ஒருங்குடைய மாரி எற்புடை எடுத்துக் காட்டாயிற்று. தனக்குப் பிறர் செய்யும் உதவியைக் குறிக்குங் காலை அவ்வுதவி கைம்மாறு கருதாததாயின் அதன் சிறப்பும் அதனுணைச்

சிறப்புடை உதவியைப் பெற்ற தான் அதனை மறவாமை வேண்டும் கடப்பாடும் ஒருங்குணர்த்தக் கருதிய ஆசிரியர்க்குக் கடலே ஏற்புடை எடுத்துக் காட்டாயிற்று. என்னை? கடல் தன்னை எழிலிகளுக் கொடுக்குங்கால் கைம்மாறு கருதுவதின் றாயினும், அதன்பால் அவ் வுதவியைப் பெற்ற எழிலி அதனை மறவாது அதற்குதவலின் என்க. எழிலி அங்ஙனம் உதவல் எற்றாற் பெறுதும் எனின், 'நெடுங் கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி—தானல்கா தாகி விடின்' (குறள்-கஎ) எனச் சொற்ற ஆசிரியர் திருவாக்கானே பெறுதுமென்பது.

இவை மூன்று பாட்டானும் முறையே காரண மின்றிச் செய்ததூஉம், காலத்தினாற் செய்ததூஉம், பயன்றூக்காராய்ச் செய்ததூஉமென நன்றி மூவகைப் படுதலும், அம் மூவகைப்பட்ட நன்றியும் அளக்கலாகாச் சிறப்புடைத் தாதலும் கூறப்பட்டன. (௩)

முற்கூறிய மூவகைச் சிறப்புடை உதவியேயாயினும், அச் சிறப்புவகையுள் அடங்காது பொதுமைகட்டடங்கிய உதவியே யாயி னும் உதவி செயப்படுவார் அவ் வுதவியைக் கொள்ள வேண்டிய முறைமை கூறுவது வருங் குறள்:

கoச. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன் றெரிவார்.

(இ - ள்.) *தினைத்துணை நன்றி* - தினையளவு உதவியை, *செயினும்* - (ஒருவன் தமக்குச்) செய்தானாயினும், *பனைத் துணையா* - (அதை அவ்வளவாகக் கருதாது) பனையளவாக, *கொள்வர்* - (உள்ளத்திற் கருதிக்) கொள்வர், *பயன் தெரி வார்* - (அக் கருத்தின்) பயனை அறிவோர்.

(இ - து) பெற்ற நன்றி சிறிதாயினும் அதைப் பெரிதாக மதிப்பார் அறிவுடையோர்.

தினை பனை என்பன சிறுமை பெருமைகட்கு உலகவழக்கிற் காட்டப்படும் அளவைகளுட் சில. கருத்தின் பயனாவது கருது வார்க்கு எய்தும் பயன்.

செய்ந்நன்றி யறியும் முறை கூறிய திக்குறள். (௪)

அம் முறைக்குக் காரணங் கூறுவது வருங் குறள் :

௧0௫. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(இ - ள்.) உதவி - (ஒருவன் தமக்குச் செய்த) உதவி, உதவி வரைத்து அன்று - அவ் வுதவியின் அளவே தனக்கு அளவாகக் கொண்டதன்று; உதவி செயப்பட்டார் - அவ் வுதவியைப் பெற்றவரது, சால்பின் வரைத்து - மேன்மையின் அளவைக்கொண்டிருக்கும்.

(இ - து.) உதவியின் அளவு அவ் வுதவியைப் பெற்றவர் தன்மையைப் பொறுத்தது.

'கைம்மாறான உதவி முனைசெய்த உதவியளவைத் தன்று' என்று பொருள் கொண்டார் பரிமேலழகரும் மணக்குடவரும்; ஏற்குமேற் கொள்க. செய்ந்நன்றி அறிதலை வற்புறுத்துக் கூறுவதே ஆசிரியர் கருத்தன்றி செய்ந்நன்றிக் கெதிர் நன்றி யாற்றலைக் கூறுவ தன்றாகலானும், மேலைக் குறளோ டிதற்கு இயைபு சிறத்தலானும் உதவி அவ் வுதவி வரைத்தென்று பொருள் கொண்டாம். ஆசிரியர் பரிமேலழகர்க்கும் இக்கருத் துடன்பாடாதல், இக் குறளுரை யிறுதியிலவா 'இவை இரண்டு பாட்டானும் மூன்று மல்லாத உதவி மாத்திரமு மறிவார்க்குச் செய்தவழிப் பெரிதா மெனபது கூறப் பட்டது' என்றுரைக்குமாற்றால் தெளியப்படும். (௫)

நன்றி மறத்தலை இம்மைப்பயன் கருதி விலக்குவது வருங் குறள் :

௧0௬. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

(இ - ள்.) துன்பத்துள் - துன்பம் வந்த காலத்தில், துப்பாயார் - (உனக்கு உதவி செய்து) பற்றுக்கோடாயினவ

ருடைய, நட்பு துறவற்க - நட்பை விடாதொழிக; மாசு அற்றார் - (அறிவு ஒழுக்கங்களாற்) குற்றமற்றவருடைய, கேண்மை - நட்பை, மறவற்க - மறவா தொழிக.

(இ - து.) உதவி செய்தார நட்பை விடலாகாது.

துப்பு - துணை. அஃதாவது பற்றுககோடு. 'அரக்கும் பவளமும் ஆயுதப் பொதுவுந - துணையும் வலியும பொலிவு நெய்யு-மனுபவமுந் தூய்மையுந் துப்பெனலாகும' என்பது பிங்கலம். 'துன்பத் துட் டுப்பாயார்' என ஈண்டுக கூறியதோடு 'துன்பததிற் கியாரே துணையாவார்' (குறள்-கஉகக) எனப் பிறிதோ ரிடததுக் கூறுவதை ஒப்பிட்டு நோககுக. இம்மையில் துன்பததுட்டுப்பாயா ரல்லாராயினும், மாசறறா கேணமை மறுமைககுறுதி பயததலின அது பற்றி அவரை நன்றி செய்தாராகவே கருதி அவர் நட்பை மறவாமை வேண்டு மென்பார, 'மறவற்க மாசற்றா கேண்மை' என்றார். கேண்மை-கேளாந தன்மை. கேள்-உறவு, நட்பு. பகைவரைக் கேளார் எனலுங் காணக. கேள், கேணமை என்னும் இவை யெல்லாம் கெழுவென்னும உரிச்சொலலடியாகப் பிறந்தன போலும். 'குருவுங் கெழுவு நிறனாகும்மே' எனனுா தொல்காப்பியம் உரியியற் (ரு) சூததிர வுரைககணணே ஆசிரியர் நச்சினாககினியர் 'இக்கெழு பொருததததை உணாததுதலுங கெழுமுத லென்னும வழககிற்கு முதனிலையாய் நிற்றலுங "கூறிய கிளவி" என்பதனாறகொள்க' என்று கூறுதலும் நோக்கற்பாலது. 'இம்மைக குறுதி கூறுவார் மறுமைக குறுதியு முடன கூறினா' என்றார் பரிமேலழகர். (௬)

நன்றி மறததலை மறுமைபபயன் கருதி விலக்குவது வருங் குறள்:

௧0௭. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவா நட்பு.

(இ - ள்.) தங்கண் - தம்மிடத்து (எய்திய), விழுமம் - துன்பத்தை, துடைத்தவர் நட்பு - நீக்கினவருடைய நட்பை,

எழுமை - எழுவகைப்பட்டவாகி, எழு - தோற்றும், பிறப்பும் - பிறப்பினெல்லாம், உள்ளுவர் - நினைப்பர் (நல்லோர்).

(இ - ள்.) துன்பத்தி லுதவிசெய்தோர் நன்றியை மறுமையிலும் மறவார் நல்லோர்.

எழுமை என்பது மும்மை நான்மை என்றாற் போல ஏழ் என்னுந் தொகை உணர்த்தி நின்றது. 'எழு பிறப்பு' என்றதில் எழு வினைத்தொகை; எதிர்காலங் குறித்து வந்தது. 'ஏழெழு பிறப்பு' என்றார் பிறரும். எழுவகைப் பிறப்பிவை என்பது முன்னர்க் கூறப்பட்டது. (குறள்-௬௨) 'எழுமையினையுடைய தம் எழுவகைப் பிறப்பினும்' எனவும், 'எழுமை யென்றது வினைப்பயன் தொடரு மேழு பிறப்பினை' எனவும் உரைத்தார் பரிமேலழகர். 'உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே—யிடுக்கண் களைவதா நட்பு' (குறள் - ௭௮௮) என்பதற் கேற்பத் துன்பமுற்றபோதே விரைந்து வந்து அதனை நீக்கினார் என்னுங் குறிப்புத் தோன்ற விழுமம் 'துடைத்தவர்' என்றார்.

இனித 'தங்கண் விழுமந் துடைத்தவர்' என்றதற்குத் 'தங் கண்களிலே நின்று விழும் நீரைத் துடைத்தவர்' என விழுமம் என்னும் முழுச் சொல்லைக் கண்ணேட்டமின்றிக் குலைத்துச் சொன்னீர்மை கெடுத்துக் கண்ணீர்மை காண்பாரு முளர். அம் என்பதும் நீருக்கொரு பெயராயினமை அவர் கண்ணழிப்புக்குக் கருவியாயிற்று. ஆமையைக் கொன்று தின்னும் நோன்புடையார்க் கிவர் இளையா ரென்ப திழுக்காது.

'செய்நன்றி கொன்ற மகற் குய்வில்லை' (குறள்-௧௧0) என்பதால் செய்நன்றி கோறல் மறுமைப் பயனை அழிக்கும் என்பது பெறப்படும். ஆதலின் அம் மறுமைப் பயன் தொடர்பும் அறிவுறுத்துவான் வேண்டி 'எழுமை யெழுபிறப்பு முள்ளுவர்' என்றார்.

இவை இரண்டு பாட்டாலும் நன்றி செய்தாரது நட்பு விடலாகா தென்பது கூறப்பட்டது. (௭)

நன்றி செய்தாரே நன்றல்லதுஞ் செய்த விடத்து ஆவது கூறுவது வருங் குறள் :

கO௮. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

(இ - ள்.) நன்றி மறப்பது - (ஒருவன் செய்த) உதவியை மறப்பது, நன்று அன்று - அறமன்று ; நன்றல்லது- (அவன் செய்த) தீமையை, அன்றே - அப்பொழுதே, மறப்பது நன்று - மறந்து விடுவது அறமாம்.

(இ - து.) ஒருவன் செய்த நன்மையை மறத்தலாகாது; அவன் செய்த தீமையை அப்பொழுதே மறததல்வேண்டும்.

தீமை மறக்கவேண்டுமென்ற திக்குறள். (அ)

அதனை மறககுமாறு கூறுவது வருங் குறள் :

கOகூ. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

(இ - ள்.) கொன்றன்ன - (தனக்கு முன்னொருநன்மை செய்தவர் பின்னர்த் தன்னைக்) கொன்றாலொத்த, இன்னா செயினும் - துன்பங்களைச் செய்தாராயினும், அவர் செய்த - (அவை யெல்லாம் முன்பு) அவர் செய்த, நன்று ஒன்று - நன்மை ஒன்றையும், உள்ள - நினைக்க, கெடும் - இல்லையாம்.

(இ - து.) ஒருதவி செய்தவர் பலதீமைகள் செய்தால் அவ்வோருதவியைக் கருதித் தீமைகளை மறக்கவேண்டும்.

'தினைத்துணை நன்றிசெயினும் பனைத்துணையாக் கொள்வர்' என்று முற்கூறினமையின் தினைத்துணை நன்றி பனைத்துணைத் தீமைக்கீடாய் அதை ஒழிக்க வல்லதாயிற்று.

நன்றல்லாத மறக்குமாறு கூறிய திகுறள். (க)

நன்றியை மறத்தலானும் கேடு கூறுவது வருங் குறள் :

ககO. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள்.) எந் நன்றி - (செய்நன்றி யறிதலைத் தவிர்த்து வேறு) எந்த அறத்தை, கொன்றார்க்கும் - சிதைத்தவர்கட்கும், உய்வு உண்டாம் - (அந்தத் தீவினையை யொழித்து) உய்யும் நெறி உண்டாம், செய் நன்றி - (ஒருவன் செய்த) உதவியை, கொன்ற மகற்கு - (தன் உள்ளத்தில் இல்லாதபடி) அழித்த மகனுக்கு, உய்வு இல்லை - உய்யும் நெறி இல்லை.

(இ - து.) செய்நன்றி மறத்தலினுங் கொடிய தீவினை வேறில்லை.

செய்நன்றி கோறலாவது, செய்த நன்றியை மறததல். வேறு தீவினைகளாவன, ஆவினைக் கோறல், மகளிர் கருச் சிதைத்தலும், பெரியோரைப் பிழைத்தலும் முதலாயின.

'ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்குங்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவே
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென்
றறம்பா டின்றே யாயிழை கணவ'

என இத் திருக்குறட் கருததையும் ஒருபுடைச் சொற்போக்கையுங் கொண்டெழுந்த புறநானூற்றுச் செய்யுள் (௩௪) ஈண்டு நோக்கற் பாலது.

இவ் வதிகாரத்தில் முதல் மூன்று குறள்களால் செய் நன்றியிற் சிறப்புடை மூவகைப் பகுப்பும் அவற்றின் சிறப்பும், அடுத்த இரண்டு குறள்களால் பொதுவகையால் எந் நன்றிக்கு மாவதோர் அளவையும், அடுத்த இரண்டு குறள்களால் இம்மை மறுமைப் பயன்கள்பற்றி நன்றி மறவாமை வேண்டு மென்பதும், அடுதத இரண்டு குறள்களால் நன்றல்லவற்றை மறத்தல் வேண்டு மென்பதும், இறுதிக் குறளால் நன்றி மறத்தலின் கொடுமையும் கூறப்பட்டன.

## கஉ. நடுவு நிலைமை

அஃதாவது தமரென்றும் பிறரென்றும் பக்கம் பாராது யாரிடத்தும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை. இது, நன்றி செய்தாரிடத்து, அந் நன்றியினை நினைத்தவழிச் சிதைத்தல் கூடுமாதலால், ஆண்டுங் கூடாதென்ற றறிவுறுத்தற்குச் செய்நன்றியறிதலின் பின் வைக்கப்பட்டது. அற்றேல் 'கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த - வொன்றுநன் றுள்ளக் கெடும்' (க0௯) என்றதனோடு இது மாறுகொள்ளுமாலெனின், கொள்ளாது. என்னை? ஆண்டுக் கருதியது அவர் செய்த தீமைகளை மறத்தலே. அதுபற்றி, அவர் அறத்தின் வழீஇயினால் அவரை ஒறுத்தல் தனக்குக் கடனாயவழி அக் கடப்பாட்டை விலக்கியவாறில்லை. ஆதலால் அறத்தின்வழி நின்று செய்நன்றியறிதலோடு நடுவுநிலைமை மாறுகொள்ளா தென்க.

**கக௧.** தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

(இ - ள்.) தகுதி யென ஒன்றுமே - நடுவுநிலைமை என்ற ஓர் அறமுமே, பகுதியான் - (தமர் பிறர் என்னும்) பகுதிதோறும், பாற்பட்டு - (அந்த நடுவுநிலைமைக் குரிய) முறைமையோடு பொருந்தி, ஒழுகப் பெறின் - நடக்கப் பெற்றால், நன்று - நல்லதாம்.

(இ- து.) நடுவுநிலை பிற அறங்க ளனைத்தினும் சிறந்தது.

தகுதியுடையதனைத் தகுதியென்றது ஆகுபெயர். ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. பகுதியான் என்பதில் ஆனுருபு, 'ஊரா ரோர் தேவகுலம்' என்பதிற்போலத் தொறுப்பொருளில் வந்தது. பெறின் என்றது அவ்வொழுக்கத்தின் அருமை தோன்ற நின்றது.

நடுவுநிலைமையின் சிறப்புக் கூறியதிக் குறள். (க)

நடுவுநிலைமையின் வன்மை கூறுவது வருங் குறள்:

௧௧௨. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து.

(இ - ள்.) செப்பம் உடையவன் - நடுவுநிலைமை யுடையவனது, ஆக்கம் - செல்வம், சிதைவு இன்றி - (பிறர் செல்வம் போல) அழிவில்லாமல், எச்சத்திற்கு - (அவன்) சந்ததிக்கும், ஏமாப்பு உடைத்து-வலிமையாதலை உடையதாம்.

(இ - து.) நடுவுநிலைமை செல்வத்தைக் காத்து வழிவழி நிலைக்கச் செயயும்.

எச்சத்திற்கும் எனற்பாலது எச்சத்திற்கு என உம்மை தொக்கு நின்றது. அவ் வும்மையால் அவனுக்கும் ஏமாப்புடைத்து என்பது பெற்றும். தான் இறந்தொழிய எஞ்சி நிற்பது சந்ததி யாதலால் சந்ததி எச்சமெனப்பட்டது.

நடுவுநிலைமை யுடையான் செல்வம் என்று மழியாது நின்று அவன் எச்சத்திற்கும் நன்மை பயக்குமென்றது இக் குறள். (௨)

நடுவுநிலைமை யில்லான் செல்வம் நன்மை பயவாதோ எனின், பயவாது, ஒருகாற் பயப்பினும் ஒழிக என்பது வருங் குறள் :

௧௧௩. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

(இ - ள்.) நன்றே தரினும் - நன்மையே பயந்தாலும், நடுவு இகந்து - நடுவுநிலைமையை நீங்கியதனால், ஆம் - உண்டாகின்ற, ஆக்கத்தை - செல்வத்தை, அன்றே - அப்பொழுதே, ஒழிய விடல் - ஒழிய விடுக.

(இ - து.) நடுவுநிலைமை யின்மையால் வரும் பொருளை விரும்பலாகாது.

'தரினும்' என்றதில் உம்மை, தருவதில்லை என்னும் எதிர்மறைப் பொருளைத் தருதலால், 'எச்சஞ் சிறப்பே யைய மெதிர்மறை - முற்றே யெண்ணே தெரிநிலை யாக்கமென் - றப்பா லெட்டே

யும்மைச் சொல்லே' (தொல்-இடைச்சொல்லியல்-எ) என்றதாற் பெறப்படும் எண்வகை யும்மைகளுள் எதிர்மறை யும்மையாம். இகந்து என்பது எச்சத்திரிபு; இகத்தலான் எனக் காரணப் பொருட்டாயிற்று. நடுவுநிலைமையை நீங்கினதினாலே வருஞ் செல்வம் நன்மையைத் தராது; ஒருகாற் றரினும் அஃது தன்னளவிற் சிறிது காலமே நின்று பின் சிதைந்து எச்சத்திற் கேமாப்பாகா தொழியும் என்பது கருத்து. ஆகவே, நடுவுநிலைமை எச்சததிற்கும் பயன் தருமென்பது மேற் குறளால் வெளிப்பட அறிவுறுத்தப் பட்டாற்போல, அதற் கெதிர்மறையான நடுவுநிலையின்மை எச்சத்திற் குப் பயன்படாதென இக குறளால் குறிப்பாக அறிவுறுததப்பட்ட தாகக் கொள்க. (௩)

மேல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் அறிவுறுத்தப்பட்ட எச்சப்பயன் நடுவு நிலைமை யுடைமை அல்லது இன்மையை அறிவதற் கொரு குறியாதல் கூறுவது வருங் குறள்:

௧௧௪. தக்கார் தகவில ரேன்ப தவரவ
ரேச்சத்தாற் காணப் படும்.

(இ - ள்.) தக்கார் - (இவர்) நடுவுநிலைமை யுடையவர், தகவிலர் - (இவர்) நடுவுநிலைமை யில்லாதவர், என்பது - என்று சொல்லப்படுவதற் குரிமை, அவரவர் - அவரவருடைய, எச்சத்தால் - மக்களால், காணப்படும் - அறியப் படும்.

(இ - து.) நடுவு நிலைமையுடையவர்க்குச் சந்ததி சிறக்கும்; அஃதில்லார்கருச் சந்ததி சிறவாது.

வித்தினாலே மரததை யறிவதுபோல எச்சத்தினாலே பெற்றோரது நலம் அல்லது நலமின்மையை அறியலாம் என்பது இதனாற் கொள்ளக் கிடக்கும். எச்சம் இன்மையாதலும் உண்டேல் தீயதாதலும் பெற்றோரது நடுவுநிலைமையின்மையினையும், எச்சம் உண்மை

யாதலும் நன்றாதலும் பெற்றோரது நடுவுநிலைமையினையும் காட்டும். இக் கருத்துக் கியையவே ஆசிரியர் போக்கிக் குடிமை யென்னும் (௯௬) அதிகாரத்தில் 'நலத்தின்கண் நாரின்மை தோன்றி னவனைக்-குலத்தின்க ணையப் படும்' (௯௫௮) எனவும், 'நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்-குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்' (௯௫௯) எனவுங் கூறினர். 'மகனுரைக்குந் தந்தை நலத்தை' (நான்மணி-௬௯) எனவும்,

'செந்நெல்லா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலா—லந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு'

எனவும் பிறர் கூறுதலுங் காண்க. 'எச்சத்திற்கேமாப் புடைத்து' (குறள்-௧௧௨) என முற்கூறினமையின், நடுவுநிலை தவறாதவருடைய எச்சம் நல்வாழ்வுடைத்தாதலும் பெறப்படும்.

இவை மூன்று பாட்டானும் நடுவு நிலைமைக்கும் எச்சத்திற்கு முள்ள தொடர்பு கூறப்பட்டது. (௪)

நடுவு நிலைமையே நிலையான செல்வமென்பது வருங் குறள்:

௧௧௫. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(இ - ள்) கேடும் - தாழ்வும், பெருக்கமும் - வாழ்வும், இல் அல்ல - (உலகத்தில்) இல்லாதவை யல்ல; (ஆதலால் தாழ்வு வந்தகாலத்தும் வாழ்வு வந்த காலத்தும் ஒருபடித்தாக) நெஞ்சத்துக் கோடாமை - உள்ளத்தில் (நடுவு நிலைமை) கோணாதிருப்பதே, சான்றோர்க்கு - அறிவொழுக்கங்களால் நிறைந்தவர்க்கு, அணி - ஆபரணம்.

(இ - து.) நடுவுநிலையே நல்லோர்க்கு அணி.

வாழ்வுந் தாழ்வும் மாறிமாறி வருதலால் வாழ்வுற்ற காலதது உளதாகும் பொன்னணி முதலியன தாழ்வுற்ற காலத்தில் இல்லையாம். ஆதலின், அவை நிலையாவாயின. நடுவுநிலையோ உள்ளத்தைப் பற்றிய தாதலால என்றும் நிலையா யுள்ள அணியாயிற்று. அணி என்பதற்கு மேற் 'பணிவுடையன். ... அணி' (குறள்-௯௫) என் புழிக் கூறியவற்றை ஈண்டும் கூறிக்கொள்க. வாழ்வுந தாழ்வும் நிலையல்ல என்பதனை 'கூத்தாட் டவைக்குழாத தற்றே பெருஞ் செல்வம் - போக்கு மதுவிளிந் தற்று' (குறள் - ௩௩௨) என்பதா லறிக.

நடுவு நிலைமையின் பயனைக் குறிப்பாகக் கூறியதிது. (௫)

நடுவு நிலையின்மையின் பயன் கூறுவது வருங் குறள்:

௧௧௬. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவோரீஇ யல்ல செயின்.

(இ - ள்.) (ஒருவன்), தன் நெஞ்சம் - தன் உள்ளம், நடுவு ஒரீஇ - நடுவு நிற்றலை நீங்கி, அல்ல - நடுவல்லவற்றை, செயின் - செய்ய நினைக்குமாயின், (அந் நினைவு), கெடுவல் யான் - யான் கெடக்கடவேன் (என்று தனக்கு உணர் வூட்டும் உற்பாதமாம்), என்பது அறிக - என்பதை அறிக.

(இ - து.) நடுவுநிலை யின்மையாற் கேடுண்டாம்.

மேற்குறளால் கேடும் பெருக்கமும் யாவர்க்கு முளவென்ப துடன்பட்டமையானும், வருங்குறளால் நடுவு நின்றார்கருந் தாழ்வுண்டாதல் ஒருப்பட்டமையானும் ஈண்டுக் குறித்தது மறுமைக்கேடாம். செய்ய நினைத்தலும் செய்ததோ டொக்குமாதலின 'செயின்' என்றார். உற்பாதமாவது பின் வரும் நன்மை தீமைகளை முனனறி விக்குங் குறி. நடுவலல செயின் மறுமைப்பயன கெடும் எனவே நடு வான செயின் மறுமைப்பயன் ஆம் என்பதூம பெறப்படும். படவே மேல் இம்மைப்பயன் பெறுவிததாற் போல இக் குறளால் மறுமைப் பயனும் ஓராற்றாற் பெறுவித்தார் ஆசிரியர் என்ப தொக்கும.

நடுவு நிலையின்மையாற் கேடுண்டா மென்ற திது. (௬)

நடுவு நிலைமையுள்ளான் இம்மையிற் கேடுறினும் அது கேடாகா தென்பது வருங் குறள் :

௧௧௭. கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(இ - ள்.) நடுவாக - நடுவு நிலைமையாக, நன்றிக்கண் - அறத்தின்கண்ணே, தங்கியான் - தங்கினவனது, தாழ்வு - கேட்டை, உலகம் - உயர்ந்தோர், கெடுவாக - கேடாக, வையாது - (உள்ளத்தில்) வையார்.

(இ - து.) நடுவுநிலை யுடையார் வறியரேனும் செல்வரே.

கெடுவென்பது முதனிலைத் தொழிற்பெயர். “உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே - நிகழ்ச்சி யவர்கட் டாகலான” என்பவாகலின் ‘உலகம்’ என்றது உயர்ந்தோரைக் குறித்தது.

இதுகாறும் நடுவுநிலைமையின் சிறப்பும் ஆற்றலும் பயனும் கூறி இனி அந் நடுவுநிலைமையினை கருத்தானும் சொல்லானும் செயலானும் போற்றுமாறு கூறுகின்றார் ஆசிரியர். (௭)

அம் மூவாற்றினுள் கருத்தால் நடுவுநிலைமையாமாறு கூறுவது வருங் குறள் :

௧௧௮. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(இ - ள்.) சமன்செய்து - (முன்னே தான்) சமனாக நின்று, சீர் தூக்கும் - (பின்னே தன்னிடத்து வைத்த பொருளை) அளவு செய்யும், கோல்போல் - நிறைகோல்போல, அமைந்து - (நடுவு நிலைமையோடு) பொருந்தி, ஒரு பால் - ஒரு

பக்கத்தில், கோடாமை - சாயாமை, சான்றோர்க்கு - அறி வொழுக்கங்களால் நிறைந்தோர்க்கு, அணி - அழகாம்.

(இ - து.) மனம் நடுநிலையிற் பிழையாமை சன்றோர்க் கழகு.

உவமை அடையாகிய சமன் செய்தலும் சீர்தூக்கலும் பொருட் கண்ணும், பொருளடையாகிய அமைதலும் கோடாமையும் உவமைக் கண்ணும் கூட்டி நான்கையும் பொருளுக்கும் உவமைக்கும் ஒப்ப உரிய அடையாகக் கொள்க. சான்றோர் சீர்தூக்கலாவது இருசாரின் நிலையினையும் முறையாக ஆராய்தல். சொற்கோடாமை வருங் குறளாற் கூறப்படுதலால ஈண்டுக் குறித்தது மனங்கோடாமையே முதன்மைபெறுவ திஃதே யாதலும் ஆண்டுப் பெறப்படும். முன்ன ரும் 'நெஞ்சத்துக் கோடாமை' (௧௧௫) எனவும், 'நெஞ்ச நடுவொ ரீஇ' (௧௧௬) எனவும் இது வற்புறுத்தப்பட்டமை காண்க. 'கோடாமை சான்றோர்க்கணி' (௧௧௬) என முற்கூறிய வழி 'நெஞ்சத்துக்கோடாமை' என விதந்து கூறினமையானன்றே ஈண் டதனைக் குறிப்பிற் பெறவைத்தா ரென்பது.

ஆகவே, மனத்தின்கட் கோடாமை கூறியதா மிகுறள். (அ)

சொற்கோடாமை கூறுவது வருங் குறள் :

௧௧௯. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

(இ - ள்.) செப்பம் - நடுவு நிலைமையாவது, சொல் கோட்டம் இல்லது - சொல்லினிடத்தும் கோணுதலில்லாத தாம். (அஃதன்ன தாவது), ஒரு தலையா - உறுதியாக, உள் கோட்டம் இன்மை - உள்ளம் கோணுதல் இல்லாமையை, பெறின் - பெற்றால்.

(இ - து.) மனக்கோட்டமின்றேல் சொற்கோட்டமின்றாம்.

எனவே சொற்கோட்டத்திற்குக் காரணமும் உட்கோட்டமே யென்பதாயிற்று. ஒரு தலையாக, என்பதற்கு ஒரு சார்பாக

(க் கோடாமை) எனவும் பொருள் கொள்ளலாமாயினும் கோடாமை என்பதே அப்பொருள் தருதலின் ஒருதலையா என்பது மிகையாக நின்று பொருட்சிறப் பழிக்கும். (கூ)

செயல்கோடாமை கூறுவது வருங்குறள்.

கஉ0. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்.

(இ - ள்.) பிறவும் - பிறர் பொருளையும், தம போல் - தம் பொருள்போல, பேணி செயின் - (கருத்திற்) பேணிச் செய்தால், வாணிகஞ் செய்வார்க்கு - வர்த்தகம் செய்வார்க்கு, வாணிகம் - நன்றாய வாணிகமாய் (ஊதியம் பெருகும்).

(இ- து.) நடுவு நிலைமை தவறாமல் வாணிகஞ் செய்வார்க்கு ஊதியம் பெருகும்.

நடுவு நிலைமை தவறாமல் வாணிகஞ் செய்தலாவது கொள்வது மிகையும் கொடுப்பது குறைவுமாகாமல் தமவும் பிறவும் ஒப்பநாடிச் செய்தல்.

> 'தமவும் பிறவு மொப்ப நாடிக்
> கொள்வ தூஉ மிகைகொ ளாது
> கொடுப்ப தூஉங் குறைப டாது
> பல்பண்டம் பகர்ந்து வீசும்'

என்னும் **பட்டினப்பாலை** அடிகளையும் நோக்குக. நடுவுநிலைச் செயல் சிறந்து தோன்றுவது நோக்கி வாணிகரை நோககிக் கூறினு ராயினும், மற்றைய இரண்டும்போல இதுவும் யாவர்க்குமுரித்தாதல் கொள்க. பேணி என்றதால் மனங்கோடாமை இதற்கும் வேண்டு மென்பது பெறுதும்.

தன்னிற் றுவக்கிச் செல்லச் செல்ல மனையாளையும் மக்களையும் விருந்தினரையும் ஒருவர்பின் ஒருவராய் உடன்கூட்டி இல்விருந் தானை அங்காடிக் கீர்த்து வந்து நிறுத்திய ஆசிரியர் திறம் உள்ளு

தோறுள்ளுதோறும் உரைவரம் பறியா வியப்புத் தருவ தாகின்றது. அங்காடிக்குச் சென்றபின் உலகிடை மி[illegible]தலை அறியாதும் அதற்குத் தக ஒழுகாதும் எங்கோடிச் சுற்றினும் இருந் திளைப்பாற இல்லிற் சிறந்த இடமில்லை யென்ப துணர்ந்து வீடுய்க்கும் வழி நாடி ஏகாதும் இருக்க இயலுமோ? இது கிடக்க. (௧௦)

இவ்வதிகாரத்தில் மூதற் குறளால் நடுவு நிலைமையின் சிறப்பும், அதற் கடுதத மூன்று குறள்களால் அதன் ஆற்றலும், அடுத்த மூன்று குறள்களால் அதன் பயனும், இறுதி மூன்று குறள்களால் அதன் வகையும் கூறப்பட்டன.

——

## கௗ. அடக்க முடைமை

அஃதாவது, மனமொழிமெய்கள் வரம்பு கடவா தடங்குத லுடையனாதல். வரம்பு கடந்தவழி சமன்செய்து சீர் தூக்கல் அமையா தாகலின், நடுவு நிலைமைக்கு இஃது இன்றியமையாது வேண்டும். எனவே அதிகார முறைமை பெறப்பட்டது. அவ் வடக்க முடைமையின் பயனும் சிறப்பும் வகையும் கூறுவான் வைதத ஆசிரியர் முதற்கட் பயன் கூறுகின்றார்.

கஉக. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

(இ - ள்.) அடக்கம் - அடக்கமுடைமை, அமரருள் உய்க்கும் - (அஃதுடையானைத்) தேவருள் (ஒருவனாகச்) செலுத்தும்; அடங்காமை—, ஆர் இருள் - அரிய நரகத்தில், உய்த்துவிடும் - செலுத்திவிடும்.

(இ - து.) அடக்கம் வீட்டின்பத்தைத தரும்; அடங்காமை நரகதுன்பத்தைத் தரும்.

உய்த்துவிடும் என்பது செய்யுமென் முற்றாய் ஒருசொல் நீர் மைப்பட்டுத துணிவுப்பொரு ளுணர்ததிநின்றது. விடு துணிவுப் பொருள் உணர்தத வந்தது. அருமை என்பது ஆர் எனத திரிந்தது. நல்வினை தீவினை யிரண்டும இம்மையிலே செய்யப்படுபொருளாக நிற்பினும் மறுமையில் தாம் வினைமுதலாக நின்று வினை நிகழ்ததிய வரை அவ் வினைப் பயனை நுகர்விததலின் உய்கக்கும் எனவும உய்த்துவிடும் எனவுங் கூறினார்.

இதனால் அடக்கமுடைமை மறுமைப் பயனைத் தரும் என்றது இக் குறள். (க)

அடக்கமுடைமையிற் சிறந்த மறுமைப் பயன் வேறில்லை என் பது வருங்குறள்.

கஉஉ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) உயிர்க்கு - மக்களுயிர்க்கு, அதனினூஉங்கு - அவ்வடக்க முடைமையின் மிக்க, ஆக்கம் - செல்வம், இல்லை - வேறில்லை; (ஆதலால்) அடக்கத்தை—, பொருளா- (உறுதிப்) பொருளாக, காக்க - காத்துக்கொள்க.

(இ - து.) அடக்கத்திற் சிறந்த உறுதிப் பொருள் இல்லை.

உயிரென்பது சாதியொருமை. அறிந்து அடங்குவது மக்களுயிரே யாதலால் உயிர் என்றது மக்களுயிரை யாயிற்று. உயிர்க் குறுதி மறுமைப் பயனே யாதலால் ஈண்டுக குறித்ததுவேயாம். (௨)

இம்மைப் பயன் கூறுவது வருங்குறள்.

௧௨௩. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

(இ - ள்.) அறிவு அறிந்து - (அடக்கமுடைமையே) அறிவுடைமை யென்றறிந்து, ஆற்றின் - நெறிவரையில் அடங்கப் பெறின் - (ஒருவன்) அடங்கப் பெறுவனேல் செறிவு - (அந்த) அடக்கமானது, அறிந்து - (நல்லோரால்) அறியப்பட்டு, சீர்மை பயக்கும் - (அவனுக்குச்) சிறப்பைத் தரும்.

(இ - து.) அடக்கமுடையான் உலகத்தால் நன்கு மதிக்கப் படுவான்.

செறிவு - அடக்கம். சொல்லின்கட் பொருள் அடக்கமுடை மையைச் சொற்செறி வென்ப செறிவறிந்து என்பதில் அறிந்து என்னும் செய்வினை செயப்பாட்டுவினைப் பொருள்பட நின்றது. ஆற்றின் என்பதில் இன்னுருபு எல்லைப் பொருளது. நல்லோரா லறியப்பட் டென்றதனால் சீாமை பயத்தல் இம்மைப் பயனாயிற்று.

இனி, இக் குறளுக்கு மணக்குடவர் கூறும் உரை ‘அடக்கப்படு வனவும் அறிந்து அறியப்படுவனவும் அறிந்து நெறியானே அடங்கப் பெறின் நன்மை பயக்கும்’ என்பதாம்.

அடக்கமுடைமையின் பயன் இதுகாறுங் கூறப்பட்டது. (௩)
இனிக் கூறப்படுவது அடக்கமுடைமையின் சிறப்பு.

௧௨௪. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

(இ - ள்.) நிலையில் திரியாது - (அற) நிலையினின்று மாறுபடாது, அடங்கியான் தோற்றம் - அடங்கினவனுடைய உயர்ச்சி, மலையினும் - மலையின் உயர்ச்சியினும், மாணப் பெரிது - மிகப் பெரிதாம்.

(இ - து.) அடக்கமுடைமையின் சிறப்பு மிகப் பெரிது.

நிலைதிரியாமை மலைக்குச் சிறத்தலின், நிலைதிரியா அடக்கம் 'மலையினும் மாணப் பெரிது' எனப்பட்டது.

அடக்கத்தின் சிறப்புக் கூறிய திக்குறள். (௪)
அடக்கஞ் சிறக்குமிடங் கூறுவது வருங்குறள்.

௧௨௫. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(இ - ள்.) பணிதல் - அடக்கமுடைமை, எல்லார்க்கும் நன்றும் - (பொதுப்பட) எல்லாருக்கும் நன்மையாம்; (ஆயினும்) செல்வர்க்கே - (அவ் வெல்லாருள்ளும்) செல்வமுடையார்க்கே, செல்வம் தகைத்து - (பிறிதொரு) செல்வம் போலச் சிறப்புடையதாம்.

(இ - து) அடக்கமுடைமை யாவர்க்குஞ் சிறப்பே யாயினும் செல்வர்க்கே பெருஞ் சிறப்பாம்.

ஈண்டுச் செல்வமுடையார் என்றது, கல்வி, குடிப்பிறப்பு, பொருள், ஒழுக்கம், அறிவு முதலியவற்றின் மிக்காரை, கல்வி முதலாயினவும் செல்வம் எனப்படுதலின். இவை பெருமிதத்தினைச் செய்தலின் இவை யுடையார் அஃதின்றி அடங்கியவழிச் சிறந்து காட்டுமாதலின் 'செல்வர்க்கே செல்வந் தகைத்து' என்றார்.

இவை யிரண்டு பாட்டானும் அடக்கமுடைமையின் சிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

அடக்கமுடைமையின் வகை கூறத் தொடங்கி மெய்யடக்கம் கூறுவது வருங்குறள் :

௧௨௬. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருமையுள் - ஒரு பிறப்பிலே, ஐந்து - ஐம்புலன்களையும், ஆமை போல் - ஆமை (தலை யொன்றும் கால்கள் நான்குமாய தன் ஐந்துறுப்பினையும், தன் புறவோ டொன்றனுள் அடக்குமாறு) போல, அடக்கின் - (ஒருவன்) அடக்குவானாயின், (அவ்வடக்கம் அவனுக்கு) எழுமையும் - (பின் வரக்கடவ) எழுவகைப் பிறப்பிலும், ஏமாப்பு உடைத்து - காவலாதலை யுடைத்து.

(இ - து.) ஐம்புலன்களையும் அடக்கினால் அது மறுமைக்கும் பயனுடைத்தாம்.

ஆமைபோல் என்றது வினையுவமம். எழுமையும் என்ற முற்றும்மையை எச்சவும்மையாகவுங் கொண்டு இம்மையும் ஏமாப் புடைத்தெனக் கொள்க. ஆமை தன் ஐந்துறுப்புகளையும அடக்கு தல் தனக்கு ஊறு வராமற பாதுகாத்துக கொள்ளுதற் பொருட் டாதலின், அதனோ டுவமிக்கப்பட்ட அவனும் தன் ஐம்புலன்களையும் அடக்குதல் தீவினையால் தனக்கு ஊறு வராமற் பாதுகாத்துக் கொள்ளுதற்பொருட் டென்ப தறிவித்தற்கு 'ஏமாப்புடைத்து' என்றார். ஏமாப்பு - காவல்.

மெய்யடக்கங் கூறிய திக் குறள். (௬)

சொல்லடக்கங் கூறுவன வரும மூன்று குறள்கள் :

௧௨௭. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(இ - ள்.) யா காவா ராயினும் - (தாம் காக்க வேண்டிய) யாவற்றையும் காக்க மாட்டாராயினும், நா காக்க - நாவு ஒன்றனையும் காக்கக்கடவர்; காவாக்கால் - (அதைக்) காக்காவிட்டால், சொல் இழுக்குப்பட்டு - சொற் குற்றத்தில் அகப்பட்டு, சோகாப்பர் - துன்பப் படுவர்.

(இ - து.) நாவடக்கமில்லார் துன்பப்படுவர்.

யா என்பது அஃறிணைப் பன்மை வினப்பெயர். அஃதீண்டு ஒன்றுங் குறையாமை என்பதுபட உம்மை குறைந்து நின்றது. அல்லல் செம்மை ஏமம் என்னும் பண்புப் பெயர்கள் புடைபெயர்ந்து வினைப்படுங்கால் அல்லாப்பு செம்மாப்பு ஏமாப்பு என வினைப்பெயராயும், அல்லாந்தார் செம்மாந்தார் ஏமாந்தார் என்றற் றொடக்கத்து முக்கால வினைமுற்றாகவும், அல்லாந்த அல்லாந்து செம்மாந்த செம்மாந்து ஏமாந்த ஏமாந்து என்றற் றொடக்கத்து எச்சவினையாகவும் நிற்றல்போலச் சோகம என்னும் பணபுப் பெயரும் அவ்வாறு வினை விகற்பங்கள் பெற்று நிற்கும். எனவே, சோகாப்பர் என்பது சோகம் என்னும் பண்படியாகப் பிறந்த எதிர்கால முற்றுவினையாய்ப் பல்லோர் மருங்கிற் படர்க்கை யுணர்த்திய ஒருசொல் எனக் காண்க. அல்லல் - துன்பம். செம்மை - நேர்மை. ஏமம் - காவல்; இன்பமுமாம். சோகம் - துன்பம்.

நாவைக காவாமையால் வருங் குற்றம் கூறிய திது. (எ)

பிறர்க்கு நன்மை கருதியவழியும் இன்னல் கருதியவழியும் என இருவழியும் நாவைக் காவாமையால் குற்றம் வருமென்பார் அது வருமாறு இஃது எனக் கூறுகின்றார் வரும் இரண்டு குறள்களால்:

கஉஅ. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

(இ - ள்.) (நற்பொருள் பயக்கக் கருதி ஒருவன் சொல்லும் சொற்களிலே) தீச் சொல் - தீய சொல், ஒன்றா

னும் உண்டாயின் - ஒன்று உண்டாயினும், பொருள் பயன் - (தான் கருதிய) பொருளின் பயன், நன்றாகாது ஆகிவிடும் - நல்லதாகாமற் போய்விடும்.

(இ - து.) நன்மை கருதிச் சொல்லும் சொற்களிலும் தீய சொல் ஒன்று கலந்தால் கருதிய நன்மை கெடும்.

தீயசொல்லாவன பொய் குறளை கடுஞ்சொல் முதலாயின. தீய வாகிய சொற்களின் பொருளாற் பிறர்க்கு வருந் துன்ப மொன்றாயினு மொருவன் பகக லுணடாவ தாயி னவனுக்குப் பிறவறங்களா லுண்டான நன்மை தீதாய் விடும் என்பர் பரிமேலழகர். மேற் கூறிய உரைக்கருத்தையு மவர் பிறர்மதமாகக் கூறினர். ஈருரையுஞ் சீர்தூக்கி யேற்பது கொள்க.

நன்மை கருதிக்கூறும் சொற்களிலே ஒரு தீச்சொல் கலப்பது சொல்லுவான் கருத்தின்றி யென்பது தோன்றத் தீச்சொற கூறின் என்னது தீச்சொல உண்டாயின் என்றார். கலப்பாலைத் துளிமோர் கெடுப்பது போலப் பல நற்சொற்களை ஒரு தீச்சொல் கெடுத்து விடும் என்பது கருத்து.

கருத்தின்மையாலே நாவைக காவாவழிப் படுங் குற்றங் கூறிய திக் குறள்: (அ)

ஒறுக்குங் கருததோடு நாவைக காவாமற் கூறுஞ் சொல்லால் வருங் குற்றம் கூறுவது வருங்குறள் :

கஉகூ. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

(இ - ள்.) (ஒறுக்கக் கருதி ஒருவன் ஒருவனை அவன் மெய்க்கண்) தீயினால் சுட்ட புண் - நெருப்பினாலே சுட்ட புண், உள் ஆறும் - (சுட்ட தழும்பு மறையாது நெடுநாட் புறத்தே காணப்படினும், மிக விரைவிலே நோய் மறையும்படி) உள்ளே ஆறிவிடும்; நாவினால் சுட்ட வடு - (ஒருவன் ஒரு வனது உள்ளத்தை வருத்தச்) சொல்லாற் சுட்ட காயம்,

ஆறாது - (புறத்தே காணப்படாவிடினும் அவன் உள்ளத்தை நோய் செய்துகொண்டு என்றும்) ஆறுதிருக்கும்.

(இ - து.) ஒருவனை நெருப்பாற் சுடுவதினும் சொல்லாற் சுடுவது மிகத் தீதாம.

தீயும் கொடுஞ் சொல்லும் சுடுதற் றொழிலான் ஒக்குமாயினும் ஆறாமையாற் கொடுஞ்சொல தீயினுங் கொடிதென்பது பெறப்படுதலின் இது குறிப்பான் வந்த வேற்றுமை யணி. சுட்ட புண் என்பது சுட்டகாரணததால் உண்டான புண் எனப் பொருள்படுதலால் உண்ட இளைப்பு என்பது போலக காரணப் பொருட்டாய் வந்த பெயரெச்சதெதாடர். சுடுதற் றொழில தீககே யுரியதன்றிச் சொற்குரியதன்றாயினும் பயனெப்புமை நோககி சொற்சுடும் எனப்படும். இன்சொல் வன்சொல் என்றற் றொடக்கத்தனவும் அன்ன. அவை தமிழ்மொழிககணேயன்றி ஏனை மொழிகள் பலவற்றுள்ளும் மிகப்பல. அவையெல்லாம்,

> 'காரா மரபின வாக்கூ றுதலு
> மென்ன மரபின வெனக்கூ றுதலு
> மன்னவை யெல்லா மவற்றவற் றியல்பா
> னின்ன வென்னுங் குறிப்புரை யாகும்'

எனவரும் தொல்காப்பியம் எச்சவியற்(உசூ) சூத்திரத்தா னமையும். இனி, நோய் செய்தலாகிய சுடுதற்றொழிலைச் செய்வது சொல்லேயாயினும் அதனை அத தொழிற்குக் கருவியாகிய நாவின்மேலேற்றி 'நாவினாற் சுட்ட' எனப்பட்டது.

இவை மூன்று பாட்டாலும் சொல்லடக்கம் கூறப்பட்டது.(கூ) மனவடககங் கூறுவது வருங்குறள்.

கருO. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(இ - ள்.) கதம் காத்து - (மனத்தின்கண்) கோபம் (தோன்றாமற்) காத்து, கற்று - (கற்கவேண்டும் நூல்களைக்)

கற்று, அடங்கல் ஆற்றுவான் - அடங்க வல்லவனது, செவ்வி - சமயத்தை, அறம் - அறமானது, ஆற்றின் நுழைந்து - (அவனை அடைதற்குரிய) நெறியிலே புகுந்து, பார்க்கும் - பார்த்துநிற்கும்.

(இ - து.) மனவடக்க முடையவனை அறம் தானே சென்று அடையும்.

கதம் - கோபம். செவ்வி - சமயம். 'போதும் பருவமும் பொழுதுஞ் செவ்வி' என்பது பிங்கலம். ஆற்றுவான் செவ்வி-ஆற்றுவான் தன்னை ஏற்றுக் கொள்வதற்கு உகந்த காலம். கல்வி பெருமிததையைச் செய்தலால் அதனை அடக்குதல் ஆற்ற லாயிற்று. அடக்கத்தின் பயனை நன்கறிந்தோன் கற்றோ னாதலால் அவன் அடங்குதல் இன்றியமையாதென்பதுபடக் கற்றடங்க லாற்றுவான் என்றார். இககருத்தானே 'ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் - பிததரிற் பேதையாரில்' (குறள் - அ௩௪) என்றார் பின்னும். 'கற்றடங்க லாற்றுவான்' என ஈண்டுப் போந்த சொற்றொடரோடு 'உற்றதற் கெல்லா முரஞ்செய்ய வேண்டுமோ - கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக் காப்பமையும்' என வரும் பழமொழி (அ௩) ஒப்பிட்டு நோககற்பாலது. வெகுளி மனத்தைப்பற்றி நிகழ்வதாதலால் ஈண்டுக் கூறியது மனவடககமாதல் பெறப்படும். 'உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா - லுள்ளான் வெகுளி யெனின்' (குறள் - ௩0௯) என்றதுங் காண்க. (௧0)

இவ்வதிகாரததில முதல் மூன்று குறள்களால் அடக்க முடைமையின் பயனும், அடுதத இரண்டு குறள்களால் அதன் சிறப்பும் அடுத்த குறளால் மெய்யடககமும், அடுத்த மூன்று குறள்களால் சொல்லடக்கமும், இறுதிக் குறளால் மனவடக்கமும் சொல்லப் பட்டன.

## ௧௪. ஒழுக்கமுடைமை

அஃதாவது உலகம் ஒப்பிய நெறியில் தவறாமை. பாய்மா வனையது உள்ளம். கவினம் பற்றி மாவினை யடக்கி உய்க்கவல் லார்க்கல்லது பிறருக்கு அது துணையாக நெறியிற் செல்வது இயலா தாயினாற்போல, உள்ளத்தை அடக்கி ஆளவல்ல ராயினார்க்கன்றிப் பிறருக்கு அது துணையாக அறநெறியிற் செல்வ தியலாதாதலின் இஃது அடக்கமுடைமையின்பின் வைக்கப்பட்டதென அதிகார முறைமை காண்க. சிறப்புப்பற்றி உள்ளத்தை அடக்கி ஆள்வ தொன்றே குறிக்கப்பட்டதாயினும், மெய்யும் மொழியும் மனத்தின் வழிய என்பதேபற்றி அவையிறறை அடக்கி ஆள்வதும் உடன் கொள்க. இவ்வொழுக்கமுடைமையின் சிறப்பும் பயனும் வகையும் கூறுவான் வைதத ஆசிரியர் முதறகட் சிறப்புக் கூறுகின்றார் :

௧௩௧. ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

(இ - ள்.) ஒழுக்கம் - ஒழுக்கமானது, விழுப்பம் தர லால் - (எல்லாருக்குஞ்) சிறப்பினைத் தருதலாலே, உயிரினும் உயிரைவிட (ச்சிறந்ததாக), ஒழுக்கம் - அவ்வொழுக்கம், ஓம் பப்படும் - பாதுகாக்கப்படுதற் குரியது.

(இ - து.) ஒழுக்கம் உயிரைவிடச் சிறந்தது.

உயர்ந்தார் தாழ்ந்தார் என்பதே ஒழுகக்த்தாற் பெறப்படுவ தொன் றாதலால் உயர்ந்தார்க்குரிய ஒழுக்கம் இழிந்தார்க்குரிய ஒழுக்கம் எனப் பாகுபடுத்திக் கூறுதல் பொருளில் கூற்றமென்பது பட 'ஒழுக்கம் விழுப்பந் தரலால்' என எல்லார்க்கு மெய்தப் பொதுப் படக்கூறினார். ஆசிரியர் கருத்திஃதாதல் இவ் வதிகாரத்திற் றானே ஒழுக்கப் பயன் கூறத் தொடங்கியதும் 'ஒழுக்கமுடைமை குடிமை யிழுக்க - மிழிந்த பிறப்பாய் விடும்' (௧௩௩) எனக் கூறுத லானும், போக்கிப் பொருட்பாலிற் பெரியாரது தன்மை கூறு மிடத்துப் 'பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா-

செய்தொழில் வேற்றுமை யான்' எனக் கூறுதலானும் இன்னோ ரன்ன பிற கூற்றுக்களானும் பெறப்படும். காலமும் இடனும்பற்றி வேறுபடும் வருணாசிரம ஒழுக்கமன்று ஈண்டுச் சுட்டியதென்பதறி வித்தற் கன்றே, அஃது எனச் சுட்டி யொழியாது விழுப்பந்தரும் அவ்வொழுக்கம் என்பதுபட ஒழுக்கமெனப் பின்னுங் கூறிய தென்க. 'மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான் - பிறப் பொழுக்கங் குன்றக் கெடும்' (குறள் - ௧௩௪) என்றது இதனை வலி யுறுத்தும். அவ்வொழுக்கம் எனச் சுட்டிடைச்சொல் வருவிக்கப்பட் டது. வீடு பெறுதற் குரிய தாகலின் உயிர் சிறப்புடைத்தாயிற்று. ஆயினும் அவ்வீட்டைப் பெறுதற்கு ஒழுக்கம இன்றியமையாத் துணையாகலின் அது சிறப்புடை உயிரினுஞ் சிறப்புடைத் தெனப் பட்டது. இது வருங்குறளானும் பெறப்படும்.

ஒழுக்கத்தின் சிறப்புக் கூறிய திக் குறள். (௧)

அச் சிறப்புக்குக் காரணங் கூறுவது வருங்குறள் :

௧௩௨. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

(இ - ள்.) தெரிந்து - (பல அறங்களையும்) ஆராய்ந்து, ஓம்பி - (அவ் வறங்களுள் இம்மை மறுமை இரண்டினும் உயிர்க்குத் துணையாவது எதுவென்று மனத்தை ஒருக்கிப்) பாதுகாத்து, தேரினும் - தெளிந்தாலும், அஃதே துணை - அந்த ஒழுக்கமே துணை (என்று தெளியப்படும். ஆதலால்), ஒழுக்கம் - அவ் வொழுக்கத்தை, பரிந்து - வருந்தியானும், ஓம்பிக் காக்க - பேணிக் காப்பாற்றுக.

(இ - து.) உயிர்க்குத் துணையாவது ஒழுக்கமே.

இசையெச்சங்கள் வருவித் துரைக்கப்பட்டன. வருந்தாதும் ஓம்புதல் உண்டாதலால் வருந்தியும் என எச்சவும்மை வருவித் துரைக்கப் பட்டது.

இவை இரண்டு பாட்டாலும் ஒழுக்கமுடைமையின் சிறப்புச் சொல்லப்பட்டது. (உ)

ஒழுக்கமுடைமையின் நற்பயனும் ஒழுக்கமின்மையின் தீப்பயனுங் கூறத் தொடங்குவது வருங்குறள் :

கஙரு. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்.) ஒழுக்கமுடைமை - (ஒருவனுக்கு) ஒழுக்கமுடைமையே, குடிமை - உயர் குல (முடையனுந் தன்மையாம்); இழுக்கம் - (அவ்வொழுக்கந்) தவறுதல், இழிந்த பிறப்பாய் விடும் - தாழ்ந்த குலம் (உடையனுந் தன்மை) ஆகிவிடும்.

(இ - து.) ஒழுக்கமே உயர்குலம் ; ஒழுக்க மின்மையே இழிகுலம்.

ஒழுக்கத்தின் பயனாகிய குல உயர்வும், ஒழுக்கமின்மையின் பயனாகிய குல இழிவும் இடையீடின்றி எய்துதலின அவ் விரைவுபற்றி ஏதுவாகிய ஒழுக்கமுடைமை ஒழுக்கமின்மை என்னும் வினைகளே உயர்குலம் இழிகுலம் என்னும் பயன்களாகக் கூறப்பட்டன.

> ‘ நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
> சொல்லள வல்லாற் பொருளில்லை - தொல்சிறப்பி
> னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
> யென்றிவற்றா னாகுங் குலம் ’

என்னும் நாலடி (கரு௯) ஈண்டு நோக்கற்பாலது.

‘ ஒழுக்க முயர்குலத்தி னன்று ’ என்றார் பிறர். தேற்றேகாரம் வருவித் துரைக்கப்பட்டது.

குலஉயர்வு ஒழுக்கத்தா லெய்துமென்ற திக் குறள் (ங)

அதற்கு எடுத்துக்காட் டுரைப்பது வருங்குறள் :

கங்ச. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(இ - ள்.) *பார்ப்பான் - அந்தணன் (ஒருவன்) ஓத்து - (தான் கற்ற) வேதத்தினை, மறப்பினும் - மறந்தானாயினும், கொளல் ஆகும் - (அதனால் தன் குலஉயர்வு கெடாதாகையி னாலே மறந்த அம் மறையை மீண்டுங் கற்றுக்) கொள்ளுதல் கூடும்; (ஆனால்) ஒழுக்கம் குன்ற - (அவனது) ஒழுக்கம் குறையுமானால், பிறப்பு - (அதனால் அவனுடைய) குலஉயர்வு, கெடும் - கெட்டுப்போம்.*

(இ - து) *பார்ப்பானுக்கு உயர்வு அவனுடைய ஒழுக்கத்தி னாலே யாம்.*

*வேதத்தை மறததலாற் பெருங்கேடில்லை யெனவே கல்வியி னும் ஒழுககம் சிறந்த தாயிற்று. கற்றதை மறவாமையே ஆவது. ஒருகால் மறப்பினும் மீண்டுங் கற்றலாம் எனப் பொருள்கொள்ளக் கிடத்தலால் மறப்பினும் என்றதில் உம்மை இழிவு சிறப்பு. இனி இதனை எதிர்மறை யும்மையாகக் கொண்டு 'மறந்தவழி இழிகுலத் தானுமாதலின் மறகக லாகா தென்னுங் கருததான் மறப்பினும் என்றார்' என வுரைத்தார் பரிமேலழகர்; 'ஒழுக்கங் குன்றப் பிறப்புக் கெடும்' என்பதனோடு டஃதியையாமை கண்டு கொள்க. எழுதப் படாது ஓதப்பட்டே வந்தமையால் வேதம் ஓத்தெனப்பட்டது; 'எழுதாக் கிளவி' எனவுங் கூறுவர். பார்ப்பான் உயர்வுடையனு வது ஒழுக்கத்தால் எனக் காட்டினமையின் இஃது எடுத்துக்காட் டாயிற்று.*

*பிறப்புயர்வு ஒழுககமின்றேல் இல்லையா மென்ற திக்குறள் (ச)*

*அதனை உவமையான் விளக்குவது வருங்குறள் :*

கஙரு. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

(இ - ள்.) அழுக்காறுடையான்கண் - பொறாமையுடைய வனிடத்திலே, ஆக்கம் போன்று - செல்வம் (இல்லாதது) போல, ஒழுக்கம் இலான்கண் - ஒழுக்கமில்லாதவனிடத் திலே, உயர்வு இல்லை - உயர்ச்சி இல்லை.

(இ - து) ஒழுக்கமில்லையேல் உயர்வில்லை.

பிறனொருவனுடைய குல உயர்வு கண்டு, பிறப்பினால் இழிந்த வன் பொறாமையடைதல் உண்டாதலால், அவ் விழிபிறப்பினானை நோக்கி, 'ஏஏ பேதாய், பிறப்பு எல்லா உயிர்க்கும் ஒக்கும். நினது பொறாமைக்கிடமாகிய அவன் பிறப்பினால் உயர்ந்தவ னல்லன்; உயர்ந்த ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தொழுக உடன்பட்டவர் குலத் திற் பிறந்ததால் அவனும் அவ்வாறொழுகுவான் என்னும் துணிவி னால் உலகம் அவனை உயர்வுடையவனாகக் கொள்கின்றது. அவன் அவ்வாறொழுகத் தவறுவானாயின் அவ் வுலகமே அவனை அவ் வுயர்நிலையினின்றொதுக்கி இழிவுபடுத்தும். நீ இழிந்த ஒழுக்கத்தினை மேற்கொண்டார் வழித்தோன்றினமையின் நீயும் அவர்போல ஒழு குவை என்னும் துணிவினால் உலகம் உன்னை இழிந்தவனாகக் கொள்கிறது. நீ அவ்வாறொழுகாது உயர்ந்த ஒழுக்கமுடைய னாவையேல் உன்னை இழித்தொதுக்கிய அவ்வுலகமே உன்னை உயர்த்துக் கொள்ளும். இங்ஙனம் உயர்வுந் தாழ்வும் அவ்வவர் ஒழுக் கத்தினாற் பெறப்படுவனவேயன்றி வேறில்லை யாதலின் நீ அவமே அவனைக்கண்டு பொறாமைப்பட்டுக் குலத்தாற் கெட்டதேயன்றி ஆக்கமுங் கெட் டுழலாதை. நின் ஒழுக்கத்தைச் சீரிது நேரிது மாக்கிக் கொள்' என்று அவனைத் தெருட்டித் திருத்துவான் கருதிய ஆசிரியர், அழுக்காறுடையானை ஒழுக்கமிலானுக் குவமையாக்கிக் கூறினார். அழுக்காறுடையான்கண் ஆக்கங் கெடுதல் 'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ - முண்பதூஉ மின்றிக் கெடும்' (குறள் - கசுசு) என மேற் கூறுமாற்றாற் பெறப்படும். சுற்றமும் ஆக்கமாய் அடங்கும்.

ஒழுக்கமிலான் உயர்வில்லான் என்றதிக் குறள். (ரு)

ஒழுக்கமுடையான் அறிஞன் என்பது வருங்குறள்:

௧௩௬. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) இழுக்கத்தின் - (ஒழுக்கந்) தவறுகிறதினாலே ஏதம் - (தமக்கு இழிவென்னும்) குற்றம், படுபாக்கு - உண்டாதலை, அறிந்து—, உரவோர் - அறிவுடையோர், ஒழுக்கத்தின் ஒல்கார் - ஒழுக்க முடைமையிற் குறைவுபடார்.

(இ-து.) அறிவுடையோர் ஒழுககத்தில் தவறார்.

ஒல்குதல் - சுருங்குதல் - குறைதல். ஒழுக்கத்தின் குறைவு அதனை உடையார்மேல் ஏற்றப்பட்டது. உரன் - அறிவு; உரவோர் - அறிஞர். உரன் வலியுமாதலின் உரவோர் வலியருமாம். படுபாக்கு - படுதல் - உண்டாதல். பாகதென்பது ஈண்டு வினையெச்சயிறுதியன்று; தொழிற்பெயர் இறுதியாம். 'பின முன்' என வரும் தொல்காப்பிய வினையியற் (௩௨) சூததிரவுரைக்கண் ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'வேபாக்கறிந்து என்பது வேதலை அறிந்தென்னும் பொருள் தருதலின் எச்சமன்று' எனக் கூறலுங் காண்க. பரிமேலழகரும் தொழிற்பெயராகவே பொருளுரைத்தார். ஒழுக்கங் குறையார் அறிவுடையார் எனவே ஒழுககமுடைமை அறிவுடைமையாயிற்று; ஒழுக்கமின்மை அறிவின்மை யாதலும் அருததாபததியாற் பெறப்படும். (௬)

ஒழுக்கமுடைமையும் இன்மையும் முறையே அறிவுடைமையும் இன்மையு மாதற்குக் காரணங் கூறுவது வருங்குறள் :

௧௩௭. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

(இ - ள்.) (எவரும்) ஒழுக்கத்தின் - ஒழுக்கத்தினாலே, மேன்மை எய்துவர் - (இவ்வுலகில்) மேம்பாட்டை அடைவர் இழுக்கத்தின் - (அவ்வொழுக்கத்தினின்றும்) தவறுதலாலே, எய்தாப் பழி - (தாம்) அடைதற்குரியதல்லாத பழியை, எய்துவர் - அடைவர்.

(இ - து.) ஒழுக்கமுடைமையால் மேன்மையும் அஃதின்மை யால் தாழ்மையு மடைவர்.

ஒருவன்மீது அடாப்பழி கூறப்படுமாஞல், அவன் ஒழுக்கந் தவறினவனுயின் உலகததார் அவ்வடாப்பழியும் அவனுக்கு ஒவ்வு மென்று கொள்வரென்பார் 'எய்தாப் பழி' என்ருர. பழி உலகத ததாகவே மேன்மையும் உலகத்ததாம்.

ஆகவே, ஒழுக்கத்தின் இம்மைப்பயனைத தொகுத்துக கூறியதா மிக் குறள். (எ)

மறுமைப் பயனைத தொகுத்துக் கூறுவது வருங் குறள் :

கஙௌ. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

(இ - ள்.) (எவருக்கும்) நல்லொழுக்கம்-நல்லஒழுக்கம், நன்றிக்கு - அறத்திற்கு, வித்தாகும் - காரணமா(கிப் பே ரின்பமாகிய மறுமைப் பயனைத் தரு)ம்; தீயொழுக்கம் - தீய ஒழுக்கம், என்றும் - இம்மையிலே யன்றி மறுமையினும், இடும்பை தரும் - (பாவத்திற்குக் காரணமாகித்) துன்பத்தைத் தரும்.

(இ - து.) நல்லொழுக்கம் மறுமையினும் இன்பம் தரும்; தீயொழுக்கம மறுமையினும் துன்பந் தரும்.

நல்லொழுக்கம் அறததிற்குக் காரணமாம் என்றதால் தீயொழுக் கம் பாவத்திற்குக் காரணமாதலும், தீயொழுக்கம் துன்பந் தரும் என்றதால் நல்லொழுக்கம் இன்பந் தருதலும் பெறப்படும்.

இவை ஆறுபாட்டாலும் ஒழுக்கமுடைமையின் நற்பயனும் ஒழுக்கமின்மையின் தீப்பயனுங் கூறப்பட்டன. (அ)

ஒழுக்கம் சொல்லாலும் செயலாலும் வெளிப்படுவதொன்ருக லின் அவ்வாற்ருன் இருவகைப் பட்ட அவற்றுள் சொல்லாலாம் ஒழுக்கம் கூறுவது வருங் குறள் :

கஙகூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

(இ - ள்.) வழுக்கியும் - மறந்தும், தீய - தீயசொற்களை, வாயாற் சொலல் - (தமது) வாயாற் சொல்லும் தொழில்கள், ஒழுக்கமுடையவர்க்கு—, ஒல்லா - முடியா.

(இ - து.) மறந்தும் தீயசொற்களைச் சொல்லலாகாது.

தீயசொற்களாவன பிறருக்குத தீமை விளைக்குஞ் சொற்கள். சொற்கள் பலவாதலால் சொல்லுதற் றொழிலும் பலவாயினவென்று கொண்டு ஒல்லா எனப் பன்மைவினையான் முடித்தார். 'ஒல்லாதே' என ஒருமைவினையாகப் பாடங்கொண்டார் மணக்குடவர். சொலல் என்பதே அமைவதாக வாயாற் சொலல் என்றார் தீயசொற் பயின்றறியாத வாய் என்பதறிவித்தற்கு.

சொல்லொழுக்கங் கூறிய திக் குறள். (கூ)

செயலொழுக்கங் கூறுவது வருங் குறள் :

கசய. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(இ - ள்.) உலகத்தோடு - உயர்ந்தாரோடு, ஒட்ட ஒழுகல் - பொருந்த ஒழுகுதலை, கல்லார் - கல்லாதவர், பல கற்றும் - பல (நூல்களைக்) கற்றும், அறிவிலாதார் - அறிவில்லாதவராவர்.

(இ - து.) கல்வியறிவின் பயன் உலகொப்ப ஒழுகுதல்.

உலகம் உயர்ந்தோராதல் முன்னம் கூறப்பட்டது. உயர்ந்தோரோடு பொருந்த ஒழுகுகலாவது உயர்ந்தோர் பலரும் நடந்து காட்டியவாறு நடத்தல்*; இதனை அடிப்படுதல் என்ப. கல்விக்குப் பயன் அறிவும் அறிவுக்குப் பயன் ஒழுக்கமுமாதலால்,

* The lives of great men all remind us
To make our lives sublime.

அவ்வொழுக்கத்தைக் கல்லார், பல கற்றும் அறிவிலாதார் என்றார். மேலும், ஒழுக்கமுடைமை அறிவுடைமை எனப்படும் 'ஒழுக்கத்தி னெல்கார் உரவோர்' என்றதூஉம், போலகி அறிவுடைமையைப் பற்றிக் கூறுமிடத்து 'எவ்வ துறைவ துலக முலகத்தொ - டவ்வ துறைவ தறிவு' (சஉசு) என்பதூஉங் காண்க. அறத்தோ டொட்ட என்றது உலகத்தோடொட்ட என்றார், நூல்கள் கூறிய அறங்கள் கால வேறுபாட்டானும் இட வேறுபாட்டானும் புறத் தோற்றத் தளவிலே வேறுபடுத லுண்டாதலால் அவ்வேறுபா டறிந் தொழுகும் உயர்ந்தோ ரொழுக்கத்தைப் பின்பற்றல் வேண்டுமென்ப தறிவித்தற்கு. (௧௰)

இவை இரண்டு பாட்டானும் ஒழுக்கத்தின் வகை கூறப்பட் டது.

இவ் வதிகாரத்தில் முதல் இரண்டு குறள்களால ஒழுக்கமுறை மையின் சிறப்பும், அடுத்த ஆறு குறள்களால் நல்லொழுக்கத்தின் பயனும் தீயொழுக்கத்தின பயனும், இறுதி இரணடு குறள்களால் ஒழுக்கமுடைமையின் வகையும் கூறப்பட்டன.



## கரு. பிறனில் விழையாமை

அஃதாவது வேட்கை மயக்கத்தால் பிறனுடைய இல்லாளை விரும்பாமை. மேல் அதிகார இறுதியில் உலகத்தோ டொட்ட ஒழுகல் கூறப்பட்டது. அவ்வகை யொழுக்கத்திற் சிறந்தது பிறனில் விழையாமை யாதலால் இஃது ஈண்டு வைக்கப்பட்டது. என்னை? பசி நீர் வேட்கை, இணைவிழைச்சு, உறக்கம் என்பன எல்லா உயிர் களுக்கும் இயல்பி னுள்ளன. அவற்றுள் இணைவிழைச்சு என்ப தொன்றும் மக்களொழிந்த ஏனை உயிர்த்தொகுதிக்கண் வரம் பின்றி நிகழ்கின்றது. மக்களோ தத்தம் இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்றவாறு அவ் விணைவிழைச்சென்னும் உயிர்க்குணத்தின் இயக் கத்தை ஆன்றோ ரொப்பிய பல்வேறு வகைப்பட்ட வரம்பிற் குட் படுத்தியுள்ளனர். அவ் வரம்பினுளொன்று பிறனில்விழையாமை. 'ஏதிலான் தாரநம்பி யெளிதென விறந்தபாவம்' (சிந்தாமணி-1769) என்பதில் இறந்த என்பதற்கு 'உலகியலையிறந்த' எனப்பொருள் கூறினர் நச்சினார்க்கினியரும். ஆகவே அவ் வரம்பினுட் பட்டொழு கல் உலகத்தோடொட்ட ஒழுகலாகி மேலதிகாரத்தோ டியைதலின் இஃது ஈண்டு வைக்கப்பட்டதென்க. இவ் வதிகாரத்தில் பிறனில் விழைதலின் இழிவும் பயனும், பிறனில் விழையாமையின் சிறப்பும் பயனும் கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் பிறனில் விழை தலின் இழிவு கூறுகின்றார்:

கசக. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை
தறம்பொருள் கண்டார்க ணில். [ஞாலத்

(இ - ள்.) பிறன் பொருளாள் - பிறன் ஒருவனுக்குப் பொருள்போல உரியளானாளை, பெட்டு ஒழுகும் - விரும்பி ஒழுகுகின்ற, பேதைமை - அறியாமை, ஞாலத்து அறம் பொருள் - உயர்ந்தோர் வகுத்த அறநூலையும் பொருள்நூலை யும், கண்டார் கண் - அறிந்தவரிடத்தில், இல் - இல்லை.

(இ - து.) பிறன்மனையாளை விரும்புவது அறியாமை.

ஒருவனுக்கு உரிய பொருளாவது, அவ்வொருவனுக்கே பயன் படுதற்குரியது. ஒருவன் உடைமை பிறனுக்கும் பயன்படுமாலெனின், அங்ஙனம் பயன்படுதல் உடையான் விருப்பத்திற் கியையவே யன்றிப் பிறிதில்லை யாதலின், ஆண்டும் அது உடையானுக்கே பயன்படுத லாயிற் றென்க. அவன் விருப்பமின்றிப் பிறனுக்குப் பயன்பட்ட தெனின் அங்ஙனம் பயன்படுதல் பொருணூலுக்கு மாறு பட்டுக் குற்றமாதல் காண்க. இங்ஙனம் உரிமைப்படுதல் பொருளின் இயல்பு 'கொண்டார்க் குரிய ரொண்டொடி மகளிர்' என்பவாத லின் அவ்வுரிமையாதல் ஒப்புமை நோக்கிப் 'பொருளாள்' என்றார். அத்துணையே யன்றி இழிவு குறித்தா ரல்லரென்க. அறம் பொருள் என்பன அவற்றை உணர்த்தும் நூல்களுக்காதலின் ஆகுபெயர். 'உலகத்தோ டொட்ட ஒழுகலறிந்தார்கண் இல்லை' என்பார் 'ஞாலத தறம்பொருள் கண்டார்க ணில்' என்றார். பிறனில் விழைதல் அறிஞர் வகுத்த அறத்தாற்றிற்குப் புறம்பாவதோடு, ஒரு வனுக் குரிய பொருளைப் பிறனொருவன் கைக்கொள்ளுதல் களவாகிப் பொருள்நூல் வகுதத குற்றங்களுள் ஒன்றாதலும் நோக்கி 'அறம் பொருள் கண்டார்க ணில்' என்றார். 'கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று' (சிலப்பதிகாரம், வழக்குரை காதை - வரி - ௬௪) என்பவாத லால் களவு அரசனால் ஒறுககப்படுங் குற்றமாகிப் பொருட்பகுதியுள் அடங்கினமை காண்க. களவு அறத்துககுப் புறம்பாகி அறநூலுள் விலக்கப்படுவனவற்றுள் ஒன்றாகி அடங்கினமைக்குச் சான்று ஆசிரியர் கள்ளாமையை அறப்பாலுள் அடக்கிக் கூறுவதே சாலும். அறத்தியைபு விளக்க 'ஒழுகும்' எனவும் பொருளியைபு விளக்கப் 'பொருளாள்' எனவும் கூறினர். மேலதிகாரத்து ஒழுக்கமுடைமையை வகைப்படுத்துமிடத்து அது புறப்பொருள் என்பது தோன்ற சொல்லொழுக்கமும் செயலொழுக்கமும் என இரண்டே கூறினா ராசிரிய ராதலானும், இன்பம் அகவொழுக்கமாய் வேறாதலானும் அவ்வின்பமொழிய ஏனை அறமும் பொருளுமே ஈண்டுக் கூறப்பட்டன. அத்துணையே யன்றி, பிறன்மனை விழைதல்

இன்பநூலுடையார்க் குடன்பா டென்னுங் கருத்தால் இன்பநூல் விலக்கப்பட்டதன்று.

பிறன்மனை விழைதல் பேதைமை யென்ற திக குறள். (க)

அது பேதைமை யாமாறு கூறுவது வருங் குறள் :

கசஉ. அறன்கடை நின்றரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

(இ - ள்.) அறன்கடை - (காமங் காரணமாகப்) பாவத்தின்கண், நின்றரு ளெல்லாம் - நின்றவர் எல்லாருள்ளும், பிறன் கடை - (பிறனது மனையாளை விரும்பி அப்) பிறனது (மனைவாயிற்) கடையில், நின்றாரின் - (சென்று) நின்றவரைப் போல, பேதையார் - மூடர், இல் - இல்லை.

(இ - து.) இன்பம் விரும்பித் துன்பமே பெறுதலால், பிறன் மனைவிழைதல் பேதைமை.

அறத்தினின்று நீக்கப்பட்ட தாதலால், பாவம் அறன்கடையாயிற்று. பொதுமகளிரை விழைவார் அறத்தையும் பொருளையுமே இழப்பர். பிறன் மனையாளை விழைவாரோ, அறத்தையும் பொருளையும் இழப்பதோடு அச்சத்தால் தாம் விழைந்த இன்பத்தையும் இழத்தலால் அவர்போற் 'பேதையாரில்' என்றார். எனவே அவர்க்கு அறக்கேடும் பொருட்கேடும் மேற் குறளாற் பெறப் பட்டாற்போல அவற்றொடு இன்பக் கேடும் இக் குறளால் பெறப்பட்டது.

பிறன்மனைவிழைவார் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையு மிழப்ப ரென்ற திக குறள் : (உ)

அங்ஙனம் இழப்பதால் அவர்கெய்தும் இழிவு கூறுவது வருங் குறள் :

கசங. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.

(இ - ள்.) தெளிந்தார் இல் - (தம்மை) ஐயுறாதவருடைய இல்லாளிடத்தே, தீமை - தீவினை (செய்தலை), புரிந்து -

விரும்பி, ஒழுகுவார் - நடப்பவர், மன்ற - நிச்சயமாக, விளிந் தாரின் - செத்தவரின், வேறல்லர் - வேறாகார்.

(இ - து.) பிறன்மனை விழைவார் பிணத்தோ டொப்பர்.

'தெளிந்தாரிற தீமைபுரிந் தொழுகுவார் விளிந்தாரே' என்பது பட 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற' என்றார். மன்ற வென்பது தேற்றப் பொருள் தருவதோ ரிடைச்சொல். 'மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்' என்பது தொல்காப்பியம் (இடையியல் - கஎ). இச் சொல்லை 'தெளிந்தார்' என்பதனொடுங் கூட்டி இருமருங்குஞ் சென்று பொருள்பயப்பதாகக் கொள்ளினும் அமையும். உயிர்க்குப் பயன் அறம்பொருள் இன்பங்களை நுகர்ந்து வீடு பெறுதல். அறம் பொருள் இன்பங்களைப் பிறனில் விழைவார இழப்பர் என்பது மேலே பெறப் பட்டமையின் அவற்றின் வழியே வீடுபெறுதலும் அவர்க்கில்லை என்பதாயிற்று. எனவே அவர் உயிர்ப்பயன் பெறாது பிணததோடொப்பராதல் காண்க. மேலிரண்டு குறள்களால் பிற னில் விழைவார் அறம்பொருளின்பங்களை இழததல் பெறப்பட்டாற் போல, அவற்றோடு வீட்டையும் அவர் இழததல் இக குறளாற் பெறப்பட்டமை காண்க. பிறன்மனை விழைந்தொழுகல் அப் பிறனால் அயிர்க்கப்பட்டவர்க் காகாமையின் 'தெளிந்தாரில்' என்றார். புரிதல் - விரும்பல; செல்தலுமாம்.

பிறனில் விழைவார் பயனிழப்ப ரென்ற திக்குறள். (௩)

பெருமையு மிழப்ப ரென்பது வருங் குறள் :

கசச. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

(இ - ள்.) தினைத்துணையும் - (காம மயக்கத்தால்) தினை யளவாயினும், தேரான் - (தமது பிழையைக்) கருதாது, பிறன் இல் - பிறனுடைய இல்லின்கண், புகல் - (அவன் மனையாளை விழைந்து) செல்லுதல், எனைத்துணையராயினும் - எவ்வளவு பெருமை யுடைய ராயினும், என் ஆம் - (அவர்க்கு) யாதாய் முடியும்? (சிறுமையாகவே முடியும்).

(இ - து.) பிறன்மனை விழைவார் சிறுமையடைவர்.

எல்லாப் பெருமையும் உடையராயினும் பிறனில் விழைவோர் சிறுமையடைவர் என்பதற்கு 'இந்திரனே சாலுங் கரி'. பெருமை பற்றி முன்னர் எனைத்துணையர் எனப் பன்மைப்பாலாற் கூறிப் பின்னர் பிறனில் புகும் இழிவு கருதித் தேரான் என ஒருமைப்பாலாற் கூறியது 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி - பன்மைக் காகு மிடனுமா ருண்டே' (தொல்காப்பியம் - எச்சவியல் - சுரு) என்பதால் அமையும். உம்மைகள் இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்பு, பின்னது இழிவு சிறப்பு. தேரான் பிறன் என்பதற்குத் தம்மை ஐயுறாத பிறன் என்று பொருள் கூறுவாரு முளர்.

பிறன்மனை விழைதலின் இழிவு இந் நான்கு பாட்டானும் கூறப்பட்டது. (ச)

பிறன்மனை விழைதலின் பயன் கூறுவன வருமிரு குறள்கள்

கசரு. எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

(இ - ள்.) எளிது என - (எய்துதல்) எளிதென (க் கருதி), இல் இறப்பான் - (பின் விளைவு கருதாது பிறனுடைய) இல்லாளிடத்து (முறை) கடந்து செல்லுமவன், எஞ்ஞான்றும் - எக்காலும், விளியாது - அழியாது, நிற்கும் பழி - நிலைபெறும் பழியை, எய்தும் - அடைவான்.

(இ - து.) பிறனில் விழைவான் பழிக்காளாவான்.

தீயினை மூட்டுதல் எளிதும் அதனை அவித்தல் அரிதுமாமாறு போல் இல்லிறத்தல் எளிதாயினும் அதனால் வரும் தீப்பயனைத் தடுத்தல் அரிதென்பதுபட 'எளிதென இல்லிறப்பான்' என்றும் 'விளியாது நிற்கும்பழி' என்றும் கூறினார். இறத்தல் - கடத்தல். அஃதீண்டு நெறிகடந்து செல்லுதற் காயிற்று.

பிறனில் விழைதலின் இம்மைப் பயன் கூறிய திக்குறள். (ரு)

மறுமைப்பயனுங் கூட்டிக் கூறுவது வருங் குறள் :

௧௪௬. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

(இ - ள்.) இல்லிறப்பான்கண் - (பிறன்) மனையாளிடத்து நெறிகடந்து செல்லுமவனிடத்தில், அச்சம் பகை பழி பாவம் என நான்கும் - அச்சமும் பகையும் பழியும் பாவமும் என்ற இந்த நான்கு தீப் பயன்களும், இகவாவாம் - (ஒருகாலும்) நீங்காவாம்.

(இ - து.) பிறனில் விழைவான் பாவத்திற்கு மாளாவான். அச்சம் பகை பழி பாவம் என நிகழ்ச்சிமுறைப்பட நிற்றல் வேண்டுவன பிறழ்ந்து நின்றன செய்யுளாதலின். பாவம் என்றது பாவத்தின் பயனாகிய நிரயத்தை. அச்சமுதற் பழியிறுதியாகிய மூன்றும் இம்மைப் பயன்; பாவம் ஒன்றும் மறுமைப்பயன். இம்மைப் பயன அச்சத்திற் றொடங்கிப் பகையொடு சென்று பழியின் முடிவது. மேற்குறளில் முடிவான இம்மைப்பயனாகக் கூறிய பழியை ஈண்டும் வழிமொழிந்து கொண்டார், அஃது இம்மையின் வருமாற்றையும் மறுமையிற் போமாற்றையும் புலப்படுக்க. மறுமையிற் போமாறு நிரயம். பிறனில் விழைவான அச்சம் எய்தலை,

புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சந்
துய்க்கு மிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்.

என்ற நாலடியாரினும் காண்க. நாலடியாருடையாரும் இக் குறட்கியையவே 'பிறன்றார நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவமென் - றச்சத்தோ டிந்நாற் பொருள்' என்றார். முன்னிற்க வேண்டிய அச்சம் எதுகை நோக்கி ஈண்டுப் பின்னின்றதாயினும் எஞ்சிய மூன்றும் முறைப்பட நின்றமை மேற்கூறிய முறைவைப்பை வலியுறுத்தும்.

இவை இரண்டு பாட்டானும் பிறன்மனை விழைதலின் பயன் கூறப்பட்டது. (௬)

பிறனில விழையாமையின் சிறப்புக கூறுவன வருமிரு குறள்கள் :

கசஎ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

(இ - ள்.) பிறன் இயலாள் - பிறனுக்கு உரியளாய் அவன் இயல்பின்வழி நிற்பவளுடைய, பெண்மை - பெண் மைக்குணத்தை, நயவாதவன் - (களவிற் கொள்ள) விரும் பாதவன், அறன் இயலான் - அறவியல்போடு, இல்வாழ் வான் என்பான் - இல்வாழ்வான் என்று சிறப்பித்துக் கூறப்படுதற் குரியன்.

(இ - து.) பிறன்மனை விழையாதவனே இல்வாழ்வான்.

இயலான் என்பதில் ஆன் உருபு உடனிகழ்ச்சிக்கண் வந்தது. என்பான் என்றது எனச் சிறப்பிதததுக் கூறப்படுவான் என்றவாறு; 'வேளாளனென்பான் விருந்திருக்க வுண்ணுதான்' என்புழிப் போல. பெண்மைக் குணமாவன அச்சம் நாணம் மடம் பயிர்ப்பு என்பன. பயிர்ப்பை இலேசாற் றழுவி 'அச்சமு நாணு மடனுமுந் துறுத்த - நிச்சமும் பெணபாற் குரிய வென்ப' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும் (களவியல் - அ). இவற்றின் விளக்கத்தை நக்கீரனார் பொருளுரையிற் காண்க. இப் பெண்மைக குணம் நான்கும் மகளிர் கற்புக்குக காவலாய் நிற்பன. இக் காவலை அழித் தன்றிப் பிறன்மனையாள் தோள்தோய்த லியலாதாகலின், பிறன் மனை விழைவான் அவ் வரணைக் கவர்ந்து கொள்ள விரும்புதல் ஒரு தலையாதலின் 'பெண்மை நயவாதவன்' என்றார்.

பிறனில் விழையாமை இல்வாழ்வார்க்குச் சிறப்பென்ற திக் குறள். (எ)

ஏனை மூவர்க்கும் அது சிறப்பாதல் கூறுவது வருங் குறள் :

கசஅ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(இ - ள்.) பிறன்மனை நோக்காத—பிறன்மனையாளை (அடைய விருப்பி உள்ளத்திற்) குறியாத, பேராண்மை - பெரிய ஆண்டகைமை, சான்றோர்க்கு - (அறிவு ஒழுக்கங் களில்) நிறைந்தவருக்கு, (ஆன்ற) அறன் ஒன்றோ - (நிரம் பிய) இல்லற மாவ தொன்றுகாறோ? ஆன்ற ஒழுக்கு - நிரம்பிய ஒழுக்கமுமாம்.

(இ - து.) பிறன்மனை விழையாமை எல்லாருககும் சிறந்த ஒழுக்கமாம்.

மேல் 'அறனியலா னில்வாழ்வான்' என்றமையின் ஈண்டு அறனைவது இல்லறம் என்பது பெறப்படும். ஆன்ற வென்பது அறத் துககுங் கூட்டப்பட்டது. புறப்பகைகளை அடக்கும் ஆண்மை யுடையார்க்கும அகப்பகையாகிய காமத்தை அடககுதல் அரிதாத லின் அதனை அடககியோரது ஆண்மையைப் பேராண்மை என்றார். பிறன்மனை நோககாமை ஆண்மையிற் பெருமையுடைத் தெனவே பிறன்மனை நோக்கல் பெண்மையிற் சிறுமையுடைத தென்பதும் பெறுதும். ஆண்மையாவது ஆளுந்தன்மை என்றார் நச்சினார்க் கினியர். தன உள்ளததை அடக்கி ஆள வலனின்றிப் பிறன்மனை விழைவானது ஆணமை தனக்குரிய தன்மையிற் பிழைத்ததாம். பிழைதத ஆண்மை பிழையாப் பெண்மையிற றாழ்மையாதல் ஆசிரி யர் கருததாயிறறு. என்னை? மேற் 'பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னுணுடைப் பெண்ணே பெருமை யுடைதது' (குறள் - கூ0 எ) என்றாராகலின் என்பது.

இவை யிரண்டு பாட்டானும் பிறனில் விழையாமையின் சிறப்புக் கூறப்பட்டது. (அ)

பிறனில்விழையாமையின் பயன்கூறுவன வருமிரு குறள்கள் :

கசகூ. நலக்குரியார் யாரெனி னுமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

(இ - ள்.) நாமநீர் வைப்பின் - அச்சந்தரும் கடலால் சூழப்பட்ட உலகத்தில், நலக்கு உரியார் - எல்லா நன்மை களும் எய்தற்குரியார், யார் எனின் - யாவர் என்றால், பிறற்கு உரியாள் - பிறனுக்கு உரியவளது, தோள் தோயா தார் - தோளைச் சேராதவர்.

(இ - து.) பிறன்மனை விழையார்தார் இம்மையில் எல்லா நன் மைகளையும் பெறுவர்.

நலத்துக்கு எனற்பாலது நலக்கு என அத்துச்சாரியை குறைந்து நின்றது. நாம் என்பது அச்சக் குறிப்புணர்ததுவதோ ருரிச்சொல். அஃதீண்டு அகரச்சாரியை பெற்று நாம வென நின் றது. 'பேநாம் உருமென வரூஉங் கிளவி - யாமுறை மூன்று மச்சப்பொருள' என்பது தொல்காப்பியம் (உரியியல் - சுஎ). கண் வரமபறியாப் பரப்பும் கோல் நிலை அறியா ஆழமும் ஒய்வு காணுப் புரட்சியும் முடிவுகாணு முழக்கமு முடைய தாதலின் அச் சந் தரும் கடல் என்றார். இல்லிறப்பானுககு அச்சம் இகவாதாக (குறள் - கசசு) இல்லிறவானுக்கு, அச்சந் தருவனவற்றால் அவன் சூழப்பட்டிருப்பினும், அச்சம் இல்லை யென்பது குறிப்பிற் பெற ' நாமநீர் வைப்பிற் பிறற்குரியா டோடோயா தார் ' என்றார். அச் சத்தைத் தரத்தக்க ஆரவாரம் புறததே காணப்படினும் அகததே அமைதி நிறைந்திருப்பது கடலாதலால், புறவாரவாரம் பெரிதாயி னும் பிறனில் விழையார் அக அமைதியுடையார் என்பதும் குறிப்பிற் பெறப்படும். அளவிடப்படாப் பொருளுடைமையும் கடற்குணடு, உலகத்திற்கும் அஃதுண்டு. வைப்பு—உலகம்; முன்னும் 'வானென் னும் வைப்' பென்றார் (குறள் - உசு). அளவறியாப் பலபணடம் வைத்து நிறைத்த பண்டசாலை போல்வதாகலின் வைப்பாயிற்று. வளமுடைக் கடல்சூழ வளமுடையுலகத் துள்ள அவர் 'நலக்குரியார்' எனவே அவ் வளத்தாலும் நலமெலலாம் அவர் எய்தற் குரியா ராம்.

' வைப்பில் நலக்குரியார் ' என்றதால் பிறன்மனை விழையார்க் குரிய இம்மைப் பயன் கூறியதா மிக் குறள். (க)

மறுமைப்பயன் கூறுவது வருங் குறள் :

௧௫௦. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

(இ - ள்.) *அறன் வரையான்* - (ஒருவன்) அறத்தைத் (தனக்கு) உரிமையாகச் செய்து கொள்ளாதவனாகி, *அல்ல செயினும்* - (அறம்) அல்லாதவற்றைச் செய்தாலும், *பிறன் வரையாள்* - பிறன் ஒருவனுடைய எல்லைக்கண்ணே நிற்பவளுடைய, *பெண்மை* - பெண்மையை, *நயவாமை* - விரும்பாதிருப்பது (ஒன்றும் அவனுக்கு உண்டாயின்), *நன்று* - (அதுவே) அறமாம். (எனவே அதுவே அறப்பயனைத் தருமென்பதாயிற்று.)

(இ - து.) பிறன்இல் விழையாமை அறத்தின் பயனாகிய மறுமைப் பேற்றைத் தரும்.

நன்று - அறன்; 'வீழ்நாள் படாமை நன்றாற்றின்' (குறள் - ௩௮) என்றதும் காண்க. அக்குறளை அறத்தின் மறுமைப்பயனுங் கூறிற்று. 'அல்ல செயினும்' என்பது செய்யாமையே சிறந்தது எனப் பொருள் தருதலால் உம்மை எதிர்மறைக்கண்ணது.

இவை இரண்டுபாட்டானும் பிறனில் விழையாமையின் பயன் கூறப்பட்டது. (௧௦)

இவ் வதிகாரத்தில், முதல் நான்கு குறள்களாற் பிறனில் விழைதலின் இழிவும், அடுத்த இரண்டு குறள்களால் அதன் பயனும், அடுத்த இரண்டு குறள்களால் பிறனில் விழையாமையின் சிறப்பும், இறுதி யிரண்டு குறள்களால் அதன் பயனும் கூறப்பட்டன.

# கரு. பொறையுடைமை

அஃதாவது ஒருவன் தம்பக்கல் பிழை செய்தவழித் தாம் அவனை ஒறுக்க முற்படாது அதைப் பொறுத்திருத்தல். ஒருவன் பிறன்மனை விழைந்தொழுகின், அவன் அப் பிறன்பக்கல் பிழை செய்தவனாகின்றான். பிழைசெய்யப்பட்டான் அதனை அறிந்தவழிப் பிழை செய்தானை ஒறுக்கக் கருதல் இயல்பு. அஃதேயன்றியும் அப் பிழையை அயலார் அறிந்தவழி அவர் பிழை செய்தானைவிட்டுப் பிழை செயப்பட்டானை இகழ்ந்து பேசலும் இயல்பு. அங்ஙனமவர் பேசலும் பிழை. இவையேயன்றியும் கற்பு நிலைதவறிப் பிறன்வயப் பட்ட மனையாளும் தன்னைக்கொண்ட கொழுநன்பாற் பிழைசெய்தவளாகின்றாள். இங்ஙனம், ஒருவன் பிறன்மனை விழைந்தொழுகலான், அவனும், அப்பிறன் மனையும், அயலாரும் ஆகிய மூத்திறத்தாரும் அப் பிறன்பக்கல் பிழை செய்தவர்களாகின்றார்கள். அம் மூவர் பிழையினையும் பிழைசெயப் பட்டானவ்வொருவன பொறுக்குமிடத்துப் பொறையுடைமை சிறந்துகாட்டுமாதலின் இது பிறனில் விழையாமையின் பின் வைக்கப்பட்டது. இவ் வதிகாரத்தில் பொறையுடைமையின் சிறப்பும் பயனும் பொறுக்கப்படும பிழையின் வகையும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கட் பொறையுடைமையின் சிறப்புக் கூறுகின்றார்.

கருக. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

(இ - ள்.) அகழ்வாரை - (தன்னைத்) தோண்டுகின்றவரை, தாங்கும் - (வீழாமற்) சுமக்கும், நிலம் போல - நிலத்தைப்போல, தம்மை இகழ்வார் - தம்மை இகழ்வாரை, பொறுத்தல் தலை - பொறுத்தல் தலைமையான அறமாம்.

(இ - து.) பொறையுடைமை சிறந்த அறமாம்.

இகழ்தல் மிகையாயின சொல்லுதலேயன்றிச் செய்தலுமாம். தன்னை வெட்டுமவனைத் தாங்கு நிலம் போல எனவே, தம்மைக்

கொன்றாலன்ன பிழை செய்தாரையும் பொறுத்தல் சிறந்த அறமாம் என்பது பெறப்படும்.

பிழையைப் பொறுக்க வேண்டுமென்ற திக் குறள். (௧)

மறக்கவும் வேண்டுமென்பது வருங் குறள் :

௧௫௨. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(இ - ள்.) (பொறுத்தல் சிறந்த அறமாதலால்,) என்றும் - எக் காலத்திலும், இறப்பினை - (பிறர் செய்த) மிகையினை, பொறுத்தல் - பொறுக்க ; அதனை மறத்தல் - அம்மிகையினை உட்கொள்ளாது அப்பொழுதே மறந்துவிடுதல், அதனினும் நன்று - அப் பொறுத்தலினும் நல்லது.

(இ - து.) ஒருவன் செய்த பிழையைப் பொறுத்தலினும் மறத்தல் நன்று.

இறப்பு - மிகுதி. அது மேற்கூறியவாறு சொற்பற்றியும் செயல் பற்றியும் இருவகைப்படும். பொறுததாலும் செய்யப்பட்ட பிழை உள்ளத்திருததலின் அதனை மறத்தல் நன்றென்றார். அப்பொழுதே மறததல் நன்றெனப்பட்டது மேலே 'நன்றல்லதன்றே மறப்பது நன்று' (குறள்-௧0அ) என்றாராகலின். பொறுததல் என்பது வியங்கோள். மறததல் என்பது வினைப்பெயர். பொறுத்தலினும் நன்று என்றதால் பொறையுடைமை நன்று என்பதாயிறறு. அல்லதூஉம் பொறுத்தலையும் வினைப்பெயராக்கொண்டு நன்றென்பதை முன்னுங் கூட்டி இறப்பினைப் பொறுத்தல் என்று நன்றென்பது மொவ்வும்.

பொறையுடைமை நன்றென்ற திக் குறள். (௨)

அது வன்மையுமாம் என்பது வருங் குறள் :

௧௫௩. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

(இ - ள்.) இன்மையுள் இன்மை - (ஒருவனுக்கு) வறுமையுள்ளும் வறுமையாவது, விருந்து ஒரால் - விருந்தி

னரைப் (பேணுது) விலக்குதல். (அது போல) வன்மையுள் வன்மை - வன்மையுள்ளும் வன்மையாவது, மடவார் - (அவ தறியாது மிகைசெய்த) அறிவிலாரை, பொறை - பொறுத் தல்.

(இ - து.) பொறையுடைமை ஒருவற்கு வலிமையாம்.

'உடைமையு ளின்மை விருந்தோம்ப லோமபா மடமை' (குறள்-அஅகூ) என்றாராகலின் ஈண்டும அதனை வலியுறுத்தி 'இன் மையுளின்மை விருந்தொரால்' என்றார். விருந்தோம்பாமை வறுமை யாதற்கு ஆண்டுக் கூறியவற்றை ஈண்டுந் தந்துரைத்துக கொள்க. 'இன்மையுள் இன்மை' 'வன்மையுள் வன்மை' என்பன 'இன் பத்து ளின்பம்' (குறள்-அருசு) 'செல்வத்துட் செல்வம்' (குறள்-சுகக) என்புழிப் போல அவற்றின் மிகுதி குறித்தன. ஓடு நீரைத தடுத்து நிறுததின் அஃது ஆற்றலின் மிகுமாறுபோல ஒறுக்க ஓடும் உள்ளததை ஓடா தடக்கிப் பொறுத்தவழி அதுவு மாற்ற லின் மிகுமென்பது உளவிய லாதலின் 'வனமையுள் வன்மை பொறை' என்றார். 'அகரமுதல' என்னுங் குறள்போல இதுவும் எடுத்துக் காட்டுவமை. இவ்வுவமையின் விளககம் ஆண்டுக் கூறப் பட்டது.

பொறையுடைமை வன்மையா மென்ற திக் குறள். (ரு)

சால்புமா மென்பது வருங் குறள் :

கருசு. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை
போற்றி யொழுகப் படும். [யுடைமை

(இ - ள்.) (ஒருவன்) நிறையுடைமை - சால்புடைமை, நீங்காமை வேண்டின் - (தன்கணின்று) நீங்காமையை வேண்டுவானாயின், (அவனால்) பொறையுடைமை - பொறை யுடைமையானது, போற்றி - (தன்கண் அழியாமற்) காத்து, ஒழுகப்படும் - ஒழுகப்படல் வேண்டும்.

(இ - து.) பொறையுடையார் சான்றோராவர்.

சால்புடைமையாவது அறிவு ஒழுக்கம் முதலிய மேன்மைகள் யாவும் நிறைந்திருத்தல்; மேன்மக்களைச் சான்றோ ரெனலுங் காண்க. நிறை யென்பது தனிவினைப் பெயர். நிறைவு, நிறைதல், நிறைய, நிறைந்த முதலிய வினைவிகற்பங்களெல்லாம் இதனடியாகப் பிறக்கும். குறைக்கு மறுதலையான இந் நிறையும் வேறே, நிறு என்னும் பகுதியடியாகப் பிறந்த நிறை என்னும் பண்புப் பெயரும் வேறே. பிற் கூறிய நிறை ஆண்மைக்குணத்தி ளொன்று. களவிய லுரை கண்ட ஆசிரியர் நக்கீரனார் 'தலைமகற்கு அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்பன குணம்...........நிறையென்பது எனவோ வெனின் காப்பன காத்தூக கடிவன கடிந்து ஒழுகும் ஒழுகம்,' என்றார். இப் பொருளும் ஈணடைக்கு ஒவ்வும் மணக்குடவர் இப் பொருளே கொண்டார்.

பொறையுடைமை சால்பா மென்ற திக் குறள். (௪)

மதிப்புடைமையுமா மென்பது வருங் குறள்:

௧௫௫. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

(இ - ள்.) ஒறுத்தாரை - (தமக்குத் தீங்கு செய்தாரைப் பொறாது) ஒறுத்தவரை, ஒன்றாக - ஒரு பொருளாக, வையார் - (அறிவுடையார் தம் மனத்துட்) கொள்ளார்; (அவ் வறிவுடையாரே) பொறுத்தாரை - (தீங்கு செய்தாரைப்) பொறுத்தவரை, பொன் போல் - பொன்னைப் போல, பொதிந்து வைப்பர் - (தம் உள்ளத்திற்) பிணித்து வைப்பர்.

(இ - து.) பொறையுடையார் அறிவுடையோரால நன்கு மதிக்கப்படுவர்.

பொதிதல் - பிணித்தல். ஒறுத்தார் பொறையுடைமையிற் பிழைத்தா ராகலின் அவர் அறிவுடையார் மதிப்பிற்கு உரியரல்லராயினர். 'பொன் போல்' என்றார் உலோகங்கள் பலவற்றுள்ளும்

அருமையும் அழகும் மதிப்பும் சிறந்து நிறலோடு வன்மை மிக்கு எத்துணை மெல்லிதாக அடித்துப் பரப்பினும் ஒடியாது நின்று பொறுமை காட்டுவது பொன்னாகலின்.

இவை ஐந்து பாட்டானும் பொறையுடைமையின் சிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

பொறுமையுடைமையின் பயன் கூறுவன வருமிரண்டு குறள்கள் :

௱௫௬. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

(இ - ள்.) ஒறுத்தார்க்கு - (தமக்குத் தீங்குசெய்தானைப் பொறாது) ஒறுத்தவர்க்கு (உண்டாவது), ஒரு நாளை இன்பம் - (ஒறுத்த அவ்) வொருநாளை யின்பமே; பொறுத்தார்க்கு - (அவனைப்) பொறுத்தவர்க்கு (உண்டாவதோ), பொன்றுந் துணையும் - (தாம்) சாமளவும், புகழ் - (தாம் செத்தபின்னும் அழியாது உலகம் உள்ளளவும் நிற்பதாகிய) புகழாம்.

(இ - து.) பொறையுடையார் இம்மையிற் புகழ் பெறுவர்.

ஒருநாளை இன்பமாவது அந் நாள் ஒன்றினும் கருதியது முடித்தேம் என்னுந் தருக்கால் வரும் பொய்யின்பம். நல்லது செய்து எந் நாளும் அழியாத புகழைப் பெற்றேம் என்னும் கருத்தால் வரும் இன்பம் தம் வாழ்நாள் உள்ளளவும் மாறாத மெய்யின்பமா மென்ப தறிக. நிலையில்லாவுலகத்து நிலையுடையது புகழாதலை 'ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்-பொன்றாது நிற்பதொன்றில்' (குறள் - ௨௩௩) என ஆசிரியர் மேற் கூறுமாற்றாற் காண்க.

இம்மைப் பயன் கூறிய திக் குறள். (௬)

மறுமைப் பயன் கூறுவது வருங் குறள் :

௱௫௭. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

(இ - ள்.) பிறர்—, திறனல்ல - செய்யத் தகாதவற்றை, தன் - தன்னிடத்தே, செய்யினும் - செய்தாலும், (தான்) நோ - (அப் பிறருக்கு அதனால் வரும் மறுமைத்) துன்பத்துக்கு, நொந்து - பரிந்து, (அவர் பால்) அறனல்ல- (ஒறுக்குங் கருத்தோடு தனக்கு) அறமல்லாதவற்றை, செய்யாமை - செய்யாதிருத்தல், நன்று - (ஒருவனுக்கு அறமாகி மறுமையிலும்) நன்மை பயக்கும்.

(இ - து.) பொறையுடைமை மறுமைப் பயனைத் தரும்.

செய்யினும் என்பது செய்தலிழிவு, அதைச் செய்யினும் எனப் பொருள்படுதலால் உம்மை இழிவு சிறப்பு. அறனல்ல என்றதால் அவை செய்யாமை அறம் என்பது பெறுதும். அறத்தின் பயன் மறுமைக்கு நன்றாதல் முன்னர்க் கூறினும். எனவே இது மறுமைப் பயன் கூறியதாதல் கண்டுகொள்க. இதற் கியையவே திறனல்ல செய்வார் தந் தீவினைப் பயனாக மறுமையில் நிரயத் துன்பத்துக் காளாவார் என்பது பட 'நோ' என்றார். நோ என்பது முதனிலைப் பெயர். திறனல்ல செய்தாரைப் பொறுத்தலே யன்றி அவர்க்குளதாகும் நிரயத் துன்பத்துக்கு இரங்குவர் சான்றோர் என்பதனை,

> ' தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
> றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை
> யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
> பரிவதூஉஞ் சான்றோர் கடன் '

என்ற நாலடி (௫௮) யினும் காண்க.

இவை யிரண்டு பாட்டானும் பொறையுடைமையின் பயன் கூறப்பட்டது.. (எ)

பொறையுடையார் பொறுக்கும் பிழைவகைகளுள் ஒன்று கூறுவது வருங் குறள் :

கருஅ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.

(இ - ள்.) மிகுதியான் - மனச் செருக்கால், மிக்கவை (தம்மிடத்துத்) தீங்கு, செய்தாரை - செய்தவரை, தாம்—, தம் தகுதியான் - (அறிவுடையோர்) தம்முடைய பொறுமையால், வென்று விடல் - வென்று விடக் கடவர்.

(இ - து.) செய்கையாற பிழைத்தாரைப் பொறுமையால் வென்று விடலாம்.

பொறையின்றிப் பிழைசெய்தாரை ஒறுக்க முயன்ற வழி அது கைகூடினும் கூடும்; கூடாமற் போயினும் போம். கூடாவழி முயற்சி வறிதாகித் தோல்வியும், கூடியவழி அவர் ஆன்றோர் மதிப்பை இழத்தலோடு தாஞ் செய்தது அறனல்ல தாகி மறுமைப் பயனையும் இழப்பதொருதலை. ஆதலின் ஒறுத்தல் எவ்வாற்றானும் தோல்வி யாயிற்று. பொறுததலோ பொன்றுந் துணையும் புகழாக்கி மறுமைக்கும் நன்றாதலால் வெற்றியாயிற்று.

செயலாற் பிழைத்தாரைப் பொறுத்தல் கூறிய திக குகள். (அ)

சொல்லாற் பிழைத்தாரைப் பொறுததல் கூறுவது வருமிரு குறள்கள்:

கருகூ. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

(இ - ள்.) இறந்தார்வாய் - (நெறியைக்) கடந்தார் வாயினின்று (வரும்), இன்னாச் சொல் - கொடிய சொற்களை, நோற்கிற்பவர் - பொறுக்க வல்லவர், (இல்லறத்தாரே யாயினும்) துறந்தாரின் - துறந்தவரைப்போல், தூய்மை யுடையர் - தூயதன்மை யுடையராவர்.

(இ - து.) தீச் சொற்களைப் பொறுப்பவர் துறவியர் போல்வார்.

தூய்மை - அகத்தழுக்கின்மை. வாய் என்றார் தீய சொல்லேயன்றி நற்சொல் பயின்றறியாத தென்பதற்கு. இறந்தார்வாய் -

இறந்தாரிடத்து எனினுமாம். நோற்றல் தவமாதலின் துறந்தாரிற் றூய்மை யுடையர் என்றார். இன் உருபு உவமப்பொருவு. நோற்கிற்பவர் என்பதில் கில் என்பது ஆற்ற லுணர்த்துவதோர் இடைச்சொல்.

தீச்சொல்லைப் பொறுப்பார் நோற்பா ரென்றதிக் குறள். (௯)
அவர் பொறுப்பாரிற் றலைமையுடையா ரென்பது வருங் குறள்:

**கசுo. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு**
**மின்னாச்சொ னோற்பாரிற பின்.**

(இ - ள்.) உண்ணாது - (ஊணாதியவற்றை) உண்டலைத் தவிர்ந்து, நோற்பார் - (பசி நோய் முதலியவற்றைப்) பொறுப்பவர், பெரியர் - (எல்லாரினும்) பெரியராவர்; (ஆயினும்) பிறர்சொல்லும்—, இன்னாச்சொல் - தீச் சொற்களை, நோற்பாரின் - பொறுப்பவரின், பின் - பின்(னாகவே அவர் பெரியராவது).

(இ - து.) இகழ்வாரைப் பொறுப்பார் நோற்பாரிற் பெரியர்.

பிறர் - அறிவிலாதார். பெரியர் என்பது ஆக்கவினைகுறிப்புச் சொல். ஆவர் என ஆக்கச் சொல் வருவித் துரைக்கப்பட்டது. நோற்பாரின் என்பதில் இன்னுருபு எல்லைப் பொருட்டு. பசிநோய் முதலியன யாதானு மொரு காரணம்பற்றி மறையும். தீச்சொல்லா னாம் நோயோ, 'தீயினாற் சுட்டபுண் உள்ளாறு மாறாதே—வாயினாற் சுட்ட வடு' (குறள் - கஉகூ) என்றவாறு மாறாத நோயாதலின் அதனைப் பொறுப்பாரின் பின்னாயினர் உண்ணாது நோற்பார்.

இவை இரண்டு பாட்டாலும் பிறர் மிகைகசச் சொல்லியன பொறுத்தல் கூறப்பட்டது. (கo)

இவ் வதிகாரத்தில் முதல் ஐந்து குறள்களாற் பொறையுடைமையின் சிறப்பும், அடுத்த இரண்டு குறள்களா லதன் பயனும், அடுத்த குறளால் தீச் செயலைப் பொறுததலும், இறுதி யிரண்டு குறள்களால் தீச்சொற்களைப் பொறுத்தலும் கூறப்பட்டன.

# கஎ. அழுக்காறாமை

அஃதாவது, பிறர் ஆக்கங் கண்டு பொறாமை கொள்ளாதிருத்தல். இது பொறையுடைமையோடு ஒருபுடை ஒப்பதாதலின் மேலையதிகாரத்தோ டிதற்குள்ள இயைபு கண்டுகொள்க. அழுக்காறு என்பது ஒரு சொல் என்றார் பரிமேலழகர். ஒருசொல் நீர்மைப் பட்டதென்பது அவர் கருத்துப்போலும். முதனிலை யிறுதி யொற்றிரட்டியும் இயல்பின் நின்று காலவிடைநிலை முதலிய புணர்ந்தும் காலங்காட்டு மியற்கை குற்றுகர வீற்றவாய ஈரெழுத்தொருமொழி கட கண்ணன்றி இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழிகட்கண் காண்டலரிது. ஆகவே, அழுக்கற்று எனவும் அழுக்கறுப்பான் எனவும் ஆசிரியர் வினைவிகற்பங் கொள்ளுதலின், அழுக்கறு என்னும் முதனிலை அழுக்கு அறு என்னும் இருசொற் புணர்ந்து பொருளால் ஒருசொல் நீர்மைப்பட்டதெனல் அமையும். 'அழுக்கற்றகன் றாருமில்லை' (குறள்-கஎ௰) என்னுமிடத்து 'அழுக்காற் றகன்றாருமில்லை' எனப் பாடங்கொண்டார் மணக்குடவர். அது செல்லுமாயின் அழுக்காறு என்பது பொருளானே யன்றிச் சொல்லானும் ஒரு சொல்லே யாதலும் செல்லும். இது செல்லுமேல் அழுக்கறு என்னும் முதனிலை பொறாமைகொள்ளெனப் பொருள்படுங் காரணம் கண்டுணர்தற் கரிதாம். இனி இதனை இருசொல் ஒருசொல் நீர்மைப்பட்டதாகவே கொண்டு யாங்காணும் பொருட்காரணம் ஒரு சிறிது கூறுதும். அறு என்பது வகு வென்னும் பொருட்டு வகுக்கப்பட்டது வழி. அறுக்கப்பட்டது ஆறு. ஆறெனினும் வழியெனினும் ஒக்கும். அழுக்கான ஆற்றில் உள்ளத்தைச் செலவிடுதல் அழுக்கா றாயிற்று.

இவ் வதிகாரத்தில் அழுக்காறாமையின் சிறப்பும் அழுக்காற்றின் தீப்பயனும் அவையிரண்டற்கும் முறையின் உரிய நற்பயனும் தீப்பயனும் முறையே கூறுவான் வைத்து முதற்கண் அழுக்காறாமையின் சிறப்புக் கூறுகின்றார் ஆசிரியர்.

௧௬௧. ஒழுக்காறுக் கொள்க வொருவன் றன்னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

(இ - ள்.) ஒருவன்—, தன் நெஞ்சத்து - தன் உள்ளத்தின் கண்ணே, அழுக்காறு இலாத இயல்பு - பொறாமையில்லாத தன்மையை, ஒழுக்காறுக் கொள்க - (சிறந்த) ஒழுக்கத்திற்குரிய நெறியாகக் கொள்ளக் கடவன்.

(இ - து.) பொறாமையின்மையே ஒழுக்கநெறி.

ஒழுக்கமாவது செலவு; நடக்கை யெனினுமாம். ஓரிடத்தை நாடி நடந்து செல்வோர் ஆறலை கள்வரும் நஞ்சுடை யரவமும் நெஞ்சுடை யருவி னஞ்சுவர மண்டும் விலங்கினமும் திரிதரக் கல்லும் முள்ளும் செறிதரு சாரற் சிறுவழி செல்லின் ஏதமுறுத லொருதலை யன்றிக் குறித்த விடஞ் சேர்த லரிதாதலால் நடக்கும் நெறி குற்ற மற்ற தன்மைத்தாக வேண்டுமென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின் ஒழுக்க ஆறு அழுக்கு ஆறிலாத இயல்பிற்றாகக் கொள்க என்றார். இங்ஙனம் நிலத்து நெறியோ டொத்தது உளத்து நெறியுமென்பார் 'நெஞ்சத்து' என்றார். எனவே அழுக்காறுடையான் ஒழுக்கம் செவ்விதிற் செல்லாது சீர்குலைந்து இடைகெட்டுப் பயனற்றொழியு மென்ற தாயிற்று. ஆகவே ஒழுக்கம் செவ்விதாவதோடு ஒழுக்காறும் அழுக்காறிலாது செவ்விதாக வேண்டுமென்பது விளங்கிக் கிடந்தது.

பொறாமை யின்மையே நன்னெறியென்ற திக்குறள். (௧)
அந்நெறியே பெரும்பே றென்பது வருங் குறள்:

௧௬௨. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

(இ - ள்.) யார்மாட்டும் - யாவரிடத்தும், அழுக்காற்றின் - பொறாமை கொள்ளுதலினின்று, அன்மை பெறின் - நீங்குதலை (ஒருவன்) பெறுவானாயின், விழுப்

பேற்றின் - சிறந்த பேறுகளில், அஃது ஒப்பது இல் - அப்பேற்றினை ஒப்பது (வேறு ஒன்று அவனுக்கு) இல்லை.

(இ - து.) பொறாமையின்மை ஒரு சிறந்த பேறாகும்.

பிறவியின் பயன் அறம் பொருள் இன்பங்களைப் பெற்று வீடு பெறுதல். ஆதலின் வீடு பேறே பிற பேறுகள் அனைத்தினும் சிறந்ததாயிற்று. அறத்தோடு ஆற்றின் ஒழுகியல்லது வீடு சேர்தல் ஆகாது. இக் கருத்தானே முன்னும் 'ஆற்றி னொழுக்கி அறனிழுக்கா வில்வாழ்க்கை - நோற்பாரின் நோன்மை யுடைத்து' (குறள் - சூஅ) என்றார். அங்ஙனம் இழுக்கின்றி ஆற்றின் ஒழுகுதல் அவ்வாறு நல்லாறாயினன்றி இயலாது. அஃதியலாதாகவே ஒழுகிப் பெறும் வீடுபேறு பெறுதலு மியலாதாம். இவ்வாற்றான் அழுக்காறல்லா வாறு வீடுபேற்றிற்கு இன்றியமையாததாய் அதனோடொத்த சிறப்பிற்றாயிற்று. ஆகவே, அழுக்காற்றினன்மை விழுப்பேறாய வாறு காண்க. பொறாமை கொள்வதால் தன்னோடே அழுக்காதலின் பொறாமை கொள்ளப்படுவாரைக் குறியற்க என்பார் 'யார்மாட்டும்' என்றார்.

இவை யிரண்டு பாட்டானும் அழுக்காறாமையின் சிறப்புக் கூறப்பட்டது. (உ)

அழுக்காற்றினேதங் கூறுவன வருமாறு குறள்கள் :

கசுரு. அறனாக்கம் வேண்டாதா னென்பான்
பேணா தழுக்கறுப் பான். [பிறனாக்கம்

(இ - ள்.) பிறன் ஆக்கம் - பிறனது செல்வம் (கண்டவழி), பேணாது - உவவாமல், அழுக்கறுப்பான் - அழுக்காறு செய்பவன், அறன் ஆக்கம் - (மறுமைக்கு) அறத்தையும் (இம்மைக்குச்) செல்வத்தையும், வேண்டாதான் - வேண்டாதவன், என்பான் - என்று சொல்லப்படுதற்குரியன்.

(இ - து.) அழுக்காறு இருமைக்கும் நன்மையாகாது.

ஆறுசெய்தல் எனினும் அறுத்தல் எனினும் ஒக்கும். பாடு செய்தல் படுத்தலாதலுங் காண்க. எனவே அழுக்கறுத்தலாவது அழுககாறு செய்தலாம்.

அழுக்காற்றின் வருங்கேடு கூறியதிக் குறள். (௫)

கேடுவருதற் கேது கூறுவது வருங் குறள் :

௧௬௪. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) (அறிவுடையோர்) இழுக்காற்றின் - குற்றமுடைய வழியினலே, ஏதம் - துன்பம், படுபாக் கறிந்து - உண்டாதலை அறிந்து, அழுக்காற்றின் - (குற்றமுடைய வழியாகிய) பொறாமையினலே, அல்லவை செய்யார் - அறனல்லாதவைகளைச் செய்யார்.

(இ - து.) அழுக்காற்றினலே துன்பமுண்டாம்.

அறனல்லவாவன, செல்வம் கல்வி குடிப்பிறப்பு முதலியன வுடையார்கருத் தீங்கு நினைத்தலும் செய்தலும் அவரைப் புறம் பழித்துக் கூறலுமாம். படுபாக்கென்பது தொழிற் பெயராய்ப் படுதல் எனப் பொருள்படுமாறு முன்னர்க் கூறினும். (குறள்-௧௩௫) இழுக்காறும் அழுக்காறும் சொற்பொருளில் வேறுபடா. தீயவழியிற் சென்றால் துன்ப முண்டாதல் உலகில் கணகூடாகக் காணக் கிடப்பதொன்றும். அழுக்காறு தீயவழியாதல் முடிந்தது. முடியவே, அழுககாறு தன்னளவிற்றனே துன்பஞ் செய்தலும் உடன் முடிந்தது. அற்றாக அழுக்காற்றினின்று அல்லவையுஞ் செய்தால் துன்பம் பெரிதுண்டாதல் சொல்லவேண்டுமோ ? வேணடா என்பதற் கன்றே ஓர் ஆற்றின் ஏதமறிந் தவ்வாற்றின் அல்லவை செய்யார் என அறிவுறுத்தினு ராசிரியர் என்பது. (௪)

வருங் குறளாலும் இக் கருததை விளக்குகின்றார் :

கசுரு. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியும் கேடீன் பது.

(இ - ள்.) அழுக்காறுடையார்க்கு - பொறாமை யுடையவர்கட்கு, ஒன்னார் - பகைவர், கேடு ஈன்பது - கேட்டைத் தருதல், வழுக்கியும் - தவறினும், அது - (அவர்க்கு உடைமையாகிய) அப் பொறாமையே, சாலும் - (கேடீனப்) போதுமானது.

(இ - து.) அழுக்காறொன்றே ஒருவனைக் கெடுக்கவல்லது.

அதுவே சாலும் என்றபாலது அதுசாலும் எனப் பிரிநிலை யேகாரம் தொக்கு நின்றது. ஒன்னார் கேடீன்பது வழுக்கியும் என்னுஞ் சொற்றொடர் அழுக்காறுடையார் நட்கப்படார் என்பதும் பகைக்கப்படுவர் என்பதும் பகைப்போர் அவர்க்குக் கேடு சூழ்வர் என்பதும் குறிப்பிற் றந்து நிற்றல் காண்க. இவையெல்லாம் இல்லையாயினும் கேடுறுதல் ஒருதலை யென்பார் 'வழுக்கியும் அது சாலும்' என்றார்.

அழுக்காறுடையான் கெடுவானென்ற திக்குறள். (ரு)

கெடுமாறு கூறுவது வருங் குறள்:

கசுசு. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) கொடுப்பது - (ஒருவன் பிறர்க்கொன்றைக்) கொடுப்பதன்கண், அழுக்கறுப்பான்-பொறாமைப் படுபவன் (தானேயுமன்றித் தன்), சுற்றம் - சுற்றமும், உடுப்பதூஉம் - உடுக்கும் ஆடையும், உண்பதூஉம் - உண்ணும் உணவும், இன்றிக்கெடும் - இல்லாமற் கெடும்.

(இ - து.) பொறாமை ஒருவனை உடுக்க உடையும் உண்ண ஊணும் அறக் கெடுக்கும்.

சுற்றமென்பதில் இறந்தது தழீஇய எச்சவும்மை குறைந்து நின்றது. கொடுப்பதழுக்கறுப்பா னென்பதற்கு ஊழ்வினையுந்

தாளாற்றலும் ஒருவற்குக கொடுக்கும் செல்வம் கல்வி முதலிய வற்றைக் கண்டு பொறாமை கொள்வானெனினும் அமையும். சுற்ற முடுப்பதூஉம் என்பதற்குச் சுற்றமாகிய ஆடையை உடுப்பதும் என உருவகவணிபெறக் கொண்டு பொருளுரைப்பினுமாம் 'குடிப்பிறப் புடுத்து' என்றார் பிறரும். ஆடைபோலச் சுற்றப்படுதலின் சுற்றமாயிற்று. 'சுற்றமாச் சுற்று முலகு' (குறள் - ௫௨௫) என்றதூஉங் காண்க அழுக்கறுப்பானது சுற்றங் கெடுமென்ப திலும் சுற்றமும் உணவுமின்றிக் கெடுவான் அழுக்கறுப்பான் என்பதே சிறந்து காட்டுகின்றது. ஏற்குமேற் கொள்க.

உடையுமுணுங் கெடுமென்ற திக குறள். (௬)

வறுமை குடிகொள்ளு மென்பது வருங் குறள் :

**௧௬௭. ஒளவித் தழுக்கா றுடையானைச் செய்யவ**
**டௌவையைக் காட்டி விடும்.**

(இ - ள்.) அழுக்காறு உடையானை - பொறாமையுடைய வனை, செய்யவள் - இலக்குமி, ஒளவித்து - (தானும்) பொறா மல், தௌவையை - (தனக்கு) மூத்தாளாகிய (மூதேவிக்கு), காட்டி விடும் - (நீ சேர்ந்திரு என்று) காட்டி(த்தான்) நீங்கு வாள்.

(இ - து.) பொறாமை யுடையவனிடம் மூதேவி குடிகொண் டிருப்பாள்.

ஒளவியமாவது மனக்கோட்டம்; பொறாமையும் மனக்கோட்ட மேயாதலால் அதுவும் ஒளவியமாயிற்று. ஒளவித்தழுக்காறுடையானை என்பதற்கு மனதைக் கோட்டுவித்து அழுக்காறுடைய ஞயினனை எனப் பொருள்கோடலுமுண்டு. தௌவையை என்றது உருபு மயக்கம்.

பொறாமையுடையவனைத திருமகள் சாராள் என்ற திக்குறள்.

இம்மையி லவற்கு அஃதாதலோடு மறுமையில் நிரயமுமா மென்பது வருங் குறள் :

௧௬௮. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

(இ - ள்.) அழுக்காறு என - பொறாமையென்று சொல்லப்படும், ஒரு பாவி - ஒப்பற்ற பாவி, திருச்செற்று - (தன்னையுடையானுக்கு இம்மைக்கண்) செல்வத்தைக் கெடுத்து, (மறுமைக்கண் அவனை) தீயுழி உய்த்துவிடும் - நரகத்திற் செலுத்தி விடும்.

(இ - து.) பொறாமையுடையவனுக்கு மறுமைப் பயன் நரகமாம்.

பண்புக்குப் பண்பியாந் தன்மை யில்லையாயினும், அழுக்காறாகிய பண்பு, தன்னை உடையானை இருமையுங் கெடுத்தற் கொடுமை பற்றி அதனைப் பாவி எனப் பண்பியாக்கிக் கூறினார், கொடியானைப் பாவி என்னும் உலகவழக்கு நோக்கி. இதனை ஏது உருவக மென்பா. தன்கட் செல்வாரை ஓரிடத்தில் உய்த்தலே ஆற்றினியற்கை யாதலால் உய்த்துவிடும் என்றார். பிற பாவநெறிகள் இருமையும் தீமை பயப்பனவாயினும், அவற்றிற் செல்லுவார்க்கு அப்பொழுது ஒரு வகைப் போலியின்பம் காட்டித் தம்மைத் தூயனபோற் றோற்றுவிக்கின்றன. இவ் வழுக்காறோ அதுதானுமின்றித் தான அழுக்குடையதாதலைத் தெரியவைத்தே தன்கட் செல்வார்க்கு இருமையிலும் தீமை விளைக்கின்றதாதலின் 'ஒரு பாவி' என்றார். 'தீயுளி' என்று பாடங்கொண்டார் மணக்குடவர்.

இவை யாறு பாட்டானும் அழுக்காறுடைமையது தீப்பயன் கூறப்பட்டது. (அ)

அழுக்காற்றின் தீப்பயனும் அழுக்காறாமையின் நற்பயனும் தொகுத்துக் கூறுவன வருமிரு குறள்கள்:

௧௬௯. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும்.

(இ - ள் :) ஔவிய நெஞ்சத்தான்-பொறாமை பொருந்திய உள்ள முடையவனுக்கு, ஆக்கமும் - செல்வமும், செவ்வியான்-(பொறாமை யில்லாமையாற்) செவ்விய நெஞ்ச முடையவனுக்கு, கேடும் - வறுமையும் (உளவாயின்), நினைக்கப்படும் - (அவை) ஆராயப்படுதல் தக்கது.

(இ - து.) அழுக்காறுடையானுக்குச் செல்வமும் அழுக்காறில்லானுக்கு வறுமையும் உளவாயின் அவை உளவாயினவாறு ஆராயத்தக்கது.

உளவாயின் என்பது குறைந்து நின்றது அழுக்காறேதுவாகச் செல்வமுளதாதலும், அழுக்காறின்மையேதுவாக வறுமையுளதாதலும், கூடாமையின் அவற்றிற்கு ஏதுவாவது வேறியாது என்றாராயின் பழவினை யென்பது பெறப்படுமாதலின் 'நினைக்கப்படும்' என்றார். 'ஒளிப்பினு மூழ்வினை யுருத்துவந் தூட்டு' மென்பதையும் விளககவெழுந்த சிலப்பதிகாரத்தில்,

> 'இம்மைச் செய்தன யானறி நல்வினை
> யும்மைப் பயன்கொ லொருதனி யுழந்தித்
> திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்த'

தெனக் கோவலன் கூறுமாற்றாற் செவ்வியான் கேட்டுக்கு ஏது நினைக்கப்பட்டவாறறிக.

அழுக்காறுடையா னுக்கத்திற்கும் ஏனையான் கேட்டிற்கும் ஏது ஆராயததக்க தென்ற திக் குறள் : (௯)

அவ் வாராய்ச்சிக்குக் கருவி செய்வது வருங் குறள் :

௧௭௦. அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(இ - ள்.) அழுக்கற்று - அழுக்காறு செய்து, அகன்றாரும் இல்லை - பெரிய ராயினாரும் இல்லை; அஃது இல்லார்- அழுக்கா றில்லாதவராகி, பெருக்கத்தில் - பெருகுதலினி னின்று, தீர்ந்தாரும் இல் - நீங்கினவருமில்லை.

(இ - து.) பொறாமையால் ஆக்கமும் பொறாமையின்மையாற் கேடும் வருதல் இல்லை.

எனவே பொறாமையின்மை ஆக்கத்தையும், பொறாமை யுடைமை கேட்டையுந் தருமென்பது பெற்றாம். மேற்குறளிற் சுட்டப்பட்ட ஆராய்ச்சிக்கு இக் குறள் கருவி செய்தவாறு கண்டு கொள்க. இல்லார் என்னும் குறிப்புமுற்று வினையெச்சமாயிற்று. 'அழுக்காற் றகன்றாரும்' எனப் பாடங்கொண்டார் மணக்குடவர். 'அழுக்காற் றகன்றார்' என்னின் வேற்றுமைத் தொகைத்தொடரும், 'அழுக்கற் றகன்றார்' என்னின் வினையெச்சத் தொடருமாம். அழுக்கு என்பதொடும் புணர்ந்த அறு என்னும் முதனிலை இரட்டி இறந்தகாலங் காட்டிற்று. ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவான இல்லை என்னும் குறிப்பு முற்று இல் எனக் கடைகுறைந்துநின்றது.

இவ்விரண்டு பாட்டாலும் அழுக்காறுடைமை யின்மைகளின் பயன் தொகுத்துக் கூறப்பட்டது. (௧௦)

இவ்வதிகாரத்தில் முதல் இரண்டு குறள்களால் அழுக்காறாமையின் சிறப்பும், அடுத்த ஆறு குறள்களால் அழுக்காற்றின் தீப்பயனும், இறுதியிரண்டு குறள்களால தொகுப்புரையும் கூறப்பட்டன.

## கஅ. வெஃகாமை

அஃதாவது பிறர்க்குரிய பொருளை வௌவக் கருதாமை. பிறர் பொருளுடையராகக் கண்டவழி அவர்பால் அழுக்காறு கொள்ளுதலே யன்றி அவர் பொருளைக் கவரக கருதுதலும் குற்றமாம் என்பதற்கு இதனை அழுக்காறாமையின் பின் வைத்தார். எனவே அதிகாரத் தொடர்பு விளங்கிற்று. வெஃகுதலாவது விரும்புதல். '...... வேட்ட லாழ்தல் வெஃகலும் விருப்பம்' என்பது பிங்கலம். 'படுபயன் வெஃகி' 'சிற்றின்பம் வெஃகி' 'அருள் வெஃகி' என இவ் வதிகாரத்திற்றானே பெறப்படும் ஆட்சி நோககியும் வெஃகல் விருப்பமாதல்கண்டு கொள்க. விருப்பத்திற்குப் பிறிதொரு பெயராகிய காமம் என்பது தனது பொதுப்பொருளின் நீங்கி மகளிர்பால் இணைவிழைச்சு கருதிச் செல்லும் விருப்பத்தைக் குறித்தல் வழக்காயினாற்போல, இவ் வெஃகலும் பிறர் பொருளை வௌவச் செல்லும் விருப்பத்தைக் குறித்தல் வழக்காயிற்று. இதற்கு முதனிலை வெஃகு என்னுங் குற்றுகரவீற்றுச் சொல். இஃது எதிர்மறையாகாரமும் பண்பிறுதி மையும் பெற்று வெஃகாமை என எதிர்மறைப் பண்புப்பெய ராயிற்று.

இனி, இவ் வதிகாரத்தில் வெஃகுதலின் தீங்கும் வெஃகாமையின் நன்மையும் அவற்றின் தொகுப்பும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் வெஃகுதலின் தீங்கு கூறுகின்றார்.

களக. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

(இ - ள்:) நடுவின்றி - (பிறன் பொருள் கோடல் நமக்கு நன்றன்று என்னும்) நடுவு நிலைமை யில்லாமல், நன் பொருள் - (பிறனுடைய) நல்ல பொருளை, வெஃகின் - (ஒருவன்) விரும்பினால், (அவ் விருப்பம்) குடி பொன்றி - (அவன்)

குடியை அழியச் செய்து, குற்றமும் - பல குற்றங்களையும் ஆங்கே தரும் - அப்பொழுதே (அவனுக்குக்) கொடுக்கும்.

(இ - து.) வெஃகுதல் ஒருவன் குடியைக் கெடுத்து அவனுக்குப் பல குற்றங்களையும் தரும்.

ஒருவன் குடியை வளர்த்து அவனுக்கும் அவனை அடுத்தார்க்கும் பல நன்மைகளைத் தரத்தக்கது அவனுடைய பொருளாதலால் 'நன்பொருள்' என்றார். பிறன் குடி வளர்தற்குப் பயன்படும் பொருளைக் கவர்ந்துகொள்ள விரும்புதல் அவன் குடியைக் கெடுக்க விரும்புதலோடொக்கு மாதலின், பிறன் குடியைக் கெடுக்க விரும்புவான் தன் குடியே கெடப்பெறுவான் என்பதுபடக் 'குடி பொன்றி' என்றார். பொன்றுவித்து எனற்பாலது பொன்றி என நின்றது. பொன்ற வென்பது பொன்றி யெனத் திரிந்து நின்றதாகக் கூறிச் செய்தென்பதைச சொல்லெச்சமாகக் கொண்டார் பரிமேலழகர்.

பிறன்பொருளைக் கவரக் கருதுதல் குற்றமென்றதிக் குறள். ()

பிறன் பொருளைக் கவரக் கருதி முயலுதல் குற்ற மென்பது வருங் குறள்:

௧௭௨. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

(இ - ள்.) படுபயன் - (பிறன்பொருளைக் கவர்ந்தால் தமக்கு அப் பொருளால்) வரும் பயனை, வெஃகி - விரும்பி, பழிப்படுவ செய்யார் - (அப் பொருளைக் கவர்ந்து கொள்ளுதற்குப்) பழியானவற்றைச் செய்யார், நடுவன்மை - நடுவுநிலையல்லாததை, நாணுபவர் - அஞ்சுபவர்.

(இ - து.) பிறன்பொருளைக் கவர்ந்து கொள்ள முயலுதல் நடுவுநிலை யாகாது.

நடுவு - நீதி. ஈண்டு நடுவாவது ஒருவன் பொருட்குப் பிறன் உரியனல்லன் என்பது. 'நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை - யன்றே யொழிய விடல்' (குறள் - ககங) என மேலுங் கூறியதால், 'படுபயன் வெஃகி' என்றும் 'நடுவன்மை' என்றும் கூறினர். நாணுதல் - நன்றல்ல செய்ய அஞ்சுதல். 'பிறர் பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக் - குறைபதி யென்னு முலகு' (குறள் - க0கரு) ஆதலால், 'பழிப்படுவ செய்யார்...நாணுபவர்' என்றார்.

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யற்க வென்றதிக் குறள். ()

அப் படுபயனுஞ் சிறிதே யென்பது வருங்குறள் :

கஎ௩. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

(இ - ள்.) சிற்றின்பம் வெஃகி - (பிறர்பொருளால் தாம் அடையக்கூடிய) நிலையில்லாத இன்பத்தை விரும்பி, அறனல்ல செய்யார் - அறனல்லவற்றைச் செய்யமாட்டார், மற்றின் பம் - (அறத்தான் வரும்) நிலையுள்ள இன்பத்தை, வேண்டு பவர் - விரும்புபவர்.

(இ - து.) பிறன் பொருளைக் கவர்ந்துகொண்டு அதனாற் பெறும் இன்பம் நிலையுள்ளதாகாது.

மற்றை என்பது மற்றென நின்றது. பாவத்தான் வருதலின் விரைவினழியும் என்பார் சிற்றின்பம் என்றார். மற்றின்பம் என்றது அதற்கினமாகி நீடு நிற்கும் இன்பத்தை. மற்றை யென்னும் இடைச் சொல் இனங் குறித்தலை 'மற்றைய தென்னுங் கிளவி தானே-சுட்டு நிலை யொழிய வினங்குறித் தன்றே' (தொல்காப்பியம்-இடைச்சொல் லியல் - கரு) என்பதாலறிக. அறத்தான் வருதலே நீடுநிற்கு மின்ப மாதல் 'அறத்தான் வருவதே யின்பம்' (குறள் - ௩௯) என்றதாற் பெறப்படும். ஈண்டுச் சிறிதும் பிறிதுமாகப் பகுத்தோதியது ஐம்புல இன்பமே; காம வின்பத்தினையும் வீட்டின்பத்தினையு மெனக் கொள் ளற்க.

இன்பங் கருதி வெஃகாமை வேண்டுமென்றதிது. (௩)

இன்மை கருதியும் வெஃகற்க வென்பது வருங்குறள் :

௱எ௪. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(இ - ள்.) புலம் வென்ற - ஐம்புலன்களையும் அடக்கி மேம்பட்ட, புன்மையில் காட்சியவர் - குற்றமில்லாத உணர்வுடையவர், இலம் என்று - (யாம்) வறுமையுடையேம் என்று (கருதி, அது நீங்குதற்பொருட்டு), வெஃகுதல் செய்யார் - (பிறர் பொருளை) விரும்பார்.

(இ - து.) வறுமை காரணமாகவும் பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ள விரும்புத லாகாது.

புலத்தை வெல்லுதலாவது ஐம்புலன்களையும் நெறிகடவாது அடக்கி ஆளுதல். இல்லறத்தார்க்கும் இது வேண்டப்படுவ தென்பதற்கு அடக்கமுடைமை கூறிய அதிகாரத்தில் 'ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றி - னெழுமையு மேமாப் புடைத்து' (குறள்-கஉ௬) என்றார். புன்மையில் காட்சியாவது ஒன்றை ஒன்றாகத் திரித்துணரும் திரிபில்லா அறிவு. வென்ற என்னும் பெயரெச்சம் காட்சியுடையாரையும், இல் என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் காட்சியையும் தழுவி நின்றன. மாறுபாடில்லாத உணர்ச்சி யின்றேல் அறத்தாறறிந்து அதில் ஐம்புலன்களையும் அடக்கிச் செலுத்துதல் இயலாதாகலின் புலம் வெல்வார் புன்மையில் காட்சியராதல் இன்றியமையாதாயிற்று. அவ்வாறானவர் வறுமையுழத்தற் கேதுவில்லை. என்னை ? 'செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந் - தாற்றி னடங்கப் பெறின்' (குறள் - கஉ௩) என்பதாகலான். அவர்க்கு வறுமை யிலதாகவே வெஃகுதலு மில்லையாம் ; ஊழ்வினையால் வறுமையுறினுமவர் தமது புன்மையில் காட்சியால் வெஃகுதல் அறத்தாறன்றென்று கண்டு அவ்வாற்றிற் புலத்தைச் செல்லவிடா தடக்குவர் என்றவாறாயிற்று.

குற்றமற்ற அறிவுடையோர் வெஃகா ரென்றதிது. (௪)

வெஃகின் அவ்வறிவு பயனுளதாகாதென்பது வருங்குறள் :

௧எ௫. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(இ - ள்.) (அறிவுடையோர்) வெஃகி - (பொருளை) விரும்பி, யார்மாட்டும் - யாவரிடத்தும், வெறிய செயின் - மயக்கத்தோடு கூடிய செயல்களைச் செய்தால், அஃகி - நுண்ணிதாகி, அகன்ற - (பல நூல்களிலுஞ் சென்று) விரிந்த, அறிவு என் ஆம் - (அவருடைய) அறிவு என்ன பயனுடையதாம்?

(இ - து.) பிறருடைமையை விரும்பி அல்லாத செய்தல் அறிவுடைமை யாகாது.

வெறியாவது கலக்கம். தீயன செய்தல் கலங்கிய அறிவினலன்றித் தெளிந்த அறிவினலன் ருதலால் தீயவற்றை வெறிய என்ருர். மேலோர்மாட்டுத் தீய செய்தல் அவரால் இழிக்கப்படுதற்கும் கீழோர்மாட்டுத் தீயசெய்தல் அவரால் ஒறுக்கப்படுதற்குங் காரணமாமாதலால் 'யார்மாட்டும்' என்ருர். அறிவிற்குப்பயன் அல்வழி யொழித்து நல்வழி சேறல் ; 'சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ - நன்றின்பா லுய்ப்ப தறிவு' (குறள் - ௪௨௨) என்பர் பின்னும் ஆகவே வெஃகி வெறிய செய்வார் அறிவுடையராயினும் அவர் அறிவாற் பெறக்கிடந்த பயனில்லையாயிற்று.

பொருள் வெஃகிப் பொல்லாத செய்தலால் அறிவின் பயன் கெடும் என்றதிக்குறள். (௫)

அருட்பயனுங் கெடுமென்பது வருங்குறள் :

௧எ௬. அருள்வெஃகி யாற்றின்க ணின்ருன் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(இ - ள்.) அருள் வெஃகி - (துறவறத்திற்குரிய) அருளை விரும்பி, ஆற்றின்கண் நின்ருன் - (அது பெறுதற்குரிய) நெறியாகிய இல்லறத்தின்கண் நின்றவன், பொருள் வெஃகி - (பிறனுடைய) பொருளை விரும்பி (அவ் விருப்பத்தை முடிக்

கத் தக்க), பொல்லாத சூழ - தீய (நெறிகளை) எண்ண, கெடும் - கெடுவான்.

(இ - து.) பிறன் பொருளை விரும்புதல் அறப்பயனைக் கெடுக்கும்.

கெடுதலாவது இரண்டறங்களையுஞ் சேர விழத்தல். எண்ணிய துணையானே கெடும் எனவே செய்தவழிக் கெடுதல் கூற வேண்டா. (இல்லறத்தினின்று அன்பு செய்து அதன் வழியே) அருளுடைமை பெற்றுத் துறவறத்திற் சேறல் நெறியாதலின் 'அருள்வெஃகி யாற்றின்க ணின்றான்' என்றார். இல்லறத்திற்கு அன்புடைமை இன்றியமையாததாதல் முன்னமே சொல்லப்பட்டது (அதிகாரம்-அ). அன்பின் வழியத ருளாதல் 'அருளென்னு மன்பீன் குழவி' (குறள்-எடுஎ) என்பதா லறிக. அருளின் வழியது துறவறமாதல் துறவறவியலிற் பெறப்படும். இனி, 'அருள்வெஃகி யாற்றின்க ணின்றான்' என்பதற்கு இறைவன் அருளை விரும்பி இல்லறநெறியிலே நின்றவன் எனக் கூறிக் 'குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்-மடிதற்றுத் தான்முந் துறும்' (குறள்-க0௨௩) என்பதை மேற்கோள் காட்டுவது மமையும்.

வெஃகுதல் அறப்பயனைக் கெடுக்குமென்ற திது. (௬)

வெஃகி வந்த பொருளும் தன் பயன்கெடு மென்பது வருங் குறள்:

களஎ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

(இ - ள்.) வெஃகி ஆம் - (பிறர்பொருளை) விரும்பிக் கவர்ந்து கொள்ளுதலினாலே உண்டாகின்ற, ஆக்கம்- செல்வம், விளைவயின் - (நுகர்தலாகிய) பயன்படுங்காலத்தில், ஆம் பயன் - உண்டாகத்தக்க பயன், மாண்டற்கு அரிது - நன்றாதல் இல்லை, (ஆதலால்) வேண்டற்க - (அவ்வாக்கத்தை) விரும்பா தொழிக.

(இ-து.) வெஃகுதலாற்றான் வந்த பிறர்பொருள் ஒருவனுக்கு நன்றாகாது.

'விளைவயின் பயன் மாண்டற்கரிதாம்' எனக்கொண்டு பொருளுரைப்பினும் பொருந்தும். இப்பொருட்கு ஆம்பயன் முற்றுத்தொடர். முற்கூறிய பொருட்கு அஃது எச்சத் தொடர். விளைவயின் என்பதை வினைத்தொகையாக்க் கொண்டால் விளையும் வயின் எனவும், பண்புத தொகையாகக் கொண்டால் விளைவுவயின் எனவும் விரிக்க. பண்புத்தொகையாங்கால் விளை யென்பது முதனிலைத் தொழிற் பெயராம்.

இவை யேழு பாட்டாலும் வெஃகுதலின் தீங்கு கூறப் பட்டது. (எ)

வெஃகாமையின் நன்மை கூறுவன வருமிருகுறள்கள்:

௱எஅ. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

(இ-ள்.) செல்வம் அஃகாமைக்கு - (ஒருவன் தன்) செல்வம் சுருங்காமைக்கு, யாதெனின் - யாது (செயல் வேண்டும்) என்றால், பிறன் கைப்பொருள் - பிறனுடைய கைப்பொருளை, வெஃகாமை வேண்டும் - (தான் கொள்ள) விரும்பாதிருத்தல் வேண்டும்.

(இ-து.) வெஃகாதான் செல்வம் அஃகாது.

செல்வதொடு சேர்ந்த நான்காம் வேற்றுமை யுருபு அதனிற் பிரித்து அஃகாமையொடு கூட்டப்பட்டது. வெஃகாமை என்னும் (எதிர்மறைப் பண்புப் பெயரை முடிக்க வந்த வேண்டும் என்னும்) வினை யாதென்னும் வினுப்பெயரையும் முடிக்கச் சென்றது. வேண்டும் எனினும் செயல்வேண்டு மெனினும் ஒக்கும். இனிச் செல்வத்திற்கு அஃகாமை (க்காரணம்) யாதெனின், பிறன் வேண்டும் கைப்பொருள் வெஃகாமை எனக் கொண்டு பொருளுரைத்தார் ஆசிரியர் பரிமேலழகர். சிறக்குமேற் கொள்க. கைப்பொருள் என்றார் கைபோல உடையார்க் குதவலின்.

செல்வம் சுருங்கா தென்ற திக்குறள். (அ)
செல்வம் சேரு மென்பது வருங்குறள் :

களக௯. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

(இ - ள்.) அறன் அறிந்து - (இது) அறமென்றறிந்து, வெஃகா - (பிறன் பொருளை) விரும்பாத, அறிவுஉடையார் - அறிவுடையவரை, திரு - திருமகள், திறன் அறிந்து - (அடைவதற்கேற்ற) வகையினை அறிந்து, ஆங்கேசேரும் - அவ்வகையாலே அடைவாள்.

(இ - து.) வெஃகாமை செல்வத்தைத் தரும்.

அடைதற்கேற்ற வகையாவது காலம் இடம் செவ்வி முதலியன. மேல் 'அறம்பார்க்கு மாற்றி னுழைந்து' (குறள் - ககூ௦) என்றவாறே ஈண்டுத 'திறனறிந் தாங்கே திரு சேரும்' என்றதையுங் கொள்க.

இவை யிரண்டு பாட்டாலும் வெஃகாமையின் நன்மை கூறப்பட்டது. (௯)

வெஃகலின் தீமையினையும் வெஃகாமையின் நன்மையினையும் தொகுத்துக் கூறுவது வருங்குறள்:

கஎ௰. இறலீனு மெண்ணது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) எண்ணாது வெஃகின் - (பின்விளைவைக்) கருதாது (பிறர் பொருளை) விரும்பினால் (அவ் விருப்பம்), இறல் ஈனும் - (அவனுக்கு) அழிவைத்தரும்; வேண்டாமை என்னும் செருக்கு - (பிறர் பொருளை) விரும்பாமை என்னும் உள்ளப் பெருமை, விறல் ஈனும் - வெற்றியைத் தரும்.

(இ - து.) வெஃகாமை ஆக்கும் ; வெஃகுதல் அழிக்கும்.

வெஃகுவார்க்கு அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் இலவாதலை இறல் எனவும், வெஃகாதர்க்கு உள்ளத்தை அடக்கி அறம் பொருளின்பங்களை ஆளுதற்காந் திறன் உளதாதலை விறல் எனவும் கூறினார். விறல் - வன்மை. செருக்கு - உள்ளமிகுதி.

இவ் வதிகாரத்தில் முதல் ஏழு குறள்களால் வெஃகுதலின் தீமையும், அடுத்த இரண்டு குறள்களால் வெஃகாமையின் நன்மையும் இறுதிக் குறளால் அவை யிரண்டின் தொகுப்பும் கூறப்பட்டன.

---

## ௧௯. புறங்கூறாமை

அஃதாவது காணாதவழிப் பிறரை இகழ்ந்துரையாமை. முகத்தெதிரே பிறரை இகழ்ந்து கூறுதல் செய்யாது அவர் புறத்தே கூறுதலாயிற்று. அது செய்யாமை புறங்கூறாமை. அழுக்காற்றின் வரும் மனக் குற்றம் வெஃகுதல்; அவ்வாற்றின் வரும் மொழிக் குற்றம் புறங் கூறல். ஆதலின் அழுக்காறாமையைத் தொடர வெஃகாமையினையும் வெஃகாமையினைத் தொடரப் புறங் கூறாமையினையும் வைத்தார். எனவே அதிகாரத் தொடர்பு பெறப் பட்டது அல்லாதூஉம் புறங்கூறல் பிறர் புகழை வெஃகி வௌவுதலோ டொக்குமாதலின் வெஃகாமை வேண்டுவார்க்குப் புறங் கூறாமையும் வேண்டுமெனற்கு இஃதீண்டு வைக்கப்பட்டதெனலு மொன்று.

இவ்வதிகாரத்தில் புறங்கூறாமையின் நன்மையும் புறங்கூறலின் (கொடுமையுங்) குற்றமும் அவற்றை நீக்குமாறும் முறையே வைத்த ஆசிரியர் முதற்கட் றங்கூறாமையின் நன்மை கூறுகின்றார்.

> ௧௮௧. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
> புறங்கூறா னென்ற லினிது.

(இ - ள்.) ஒருவன் -, அறம் கூறான் - அறமாயினவற்றைக் கூறாதவனாகி, அல்ல செயினும் - (அறம்) அல்லாதவற்றைச் செய்தாலும், புறங்கூறான் - (பிறனொருவனைப்) புறத்தே இகழ்ந்துரையான், என்றல் - என்று (உலகத்தோரால்) சொல்லப்படுதல், இனிது - நன்றாம்.

(இ - து.) யாது கூறினும் யாது செய்யினும் புறங்கூறா திருத்தல் நல்லது.

அறமாயின கூறுதலாவது இகழ்ச்சிக்குரிய செய்தவனை யணுகி அவன் முகத்தெதிரே அவன் செயலின் தன்மையும் பயனும் இனைய

வென எடுத்துக்காட்டி அவன் நல்வழிப்படுதற் காவன கூறுதல். அங்ஙனங் கூறுதல் கூறப்பட்டானுக்குக் கடிய தாயினும் ஒவ்வு மென்பது 'கண்ணின்று கண்ணறச் சொல்லினும்'(௧அ௪) என்பதா னும் 'அறஞ்சொல்லு நெஞ்சத்தான்' (௧அரு) என்பதானும் தெளிக. அல்லவை செய்தலாவது இழிவந்தன செய்தானென்று ஒருவன்பாற் பழிவந்தன செய்தல். ஒருவின் இழிவு குறித்தல்லது புறங்கூறுதல் வேறில்லையாதலின் அவ் வியைபுபற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. இனி 'அறங் கூறான்' என்பதற்கு அறன் என்று வாயாற் சொல்லுவதும் செய்யானுகி என்றார் பரிமேலழ கரும் மணக்குடவரும். ஆவது கொள்க. ஒருவன் இழிந்தன செய் தால் 'எரிவாய் நரகத்து வீழ்வன்கொல்லோ, உலகம் பழிக்க வாழ் வன்கொல்லோ, இம்மைப் பயனிழப்பன் கொல்லோ, வெம்மைத் துயருழப்பன்கொல்லோ' என்று பரிவது சான்றோர் கடன். அவ் வளவில் அமைய இயலாதாயின் செம்மை நெறிகாட்டி அவனைத் திருத்துதல் கடன். இவ்விரண்டும் விட்டு அவனை ஒறுக்கமுற்படல் சான்றோர்க் கணியன்று. ஆயினும் ஒறுத்தலினும் புறங்கூறல் மிகக் கொடி தென்பார் 'அறங்கூறானல்ல செயினு மொருவன் - புறங் கூறானென்ற லினிது' என்றார். இக் கருத்து வருங் குறளாலும் வற்புறுத்தப்படும்.

புறங்கூறாமையின் நன்மை கூறியது இக் குறள். (௧)

புறங்கூறலின் குற்றங் கூறுவன வரும் ஐந்து குறள்கள்:

௧அ௨. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

(இ - ள்.) அறன் அழீஇ - அறமாயினவற்றை அழித்து, அல்லவை செய்தலின் - அறமல்லாதவற்றை (ஒருவன்பாற்) செய்தலினும், புறன் அழீஇ - (அவனைப்) புறத்தே இகழ்ந்து ரைத்து, பொய்த்து நகை - (அவன் முகத்தெதிரே) பொய் யாக நகை செய்தல், தீது - தீயதாம்.

(இ - து.) ஒருவனுக்குத் தீங்கு நேரே செய்தலினும் அவனைப் புறத்தே இகழ்ந்துரைத்து அவன் எதிரே நகைசெய்தல் கொடிது.

அறனழீஇ என்பது அறனொழித்து என்னும் பொருள்பட நின்றது. இனி இதனை அறமாயினவற்றை அழித்துப் பேசி எனக் கொண்டு நிரனிறைப் பொருள் கோடலும் அமையும். இன் உருபு உறழ்பொருவு. நகை நகு என்னும் முதனிலையடியாகப் பிறந்த தொழிற்பெயர். அழீ என்பது அளபெடுத்துச் சொல்லிசை நிறைத்தது. ஒருவனைப் பற்றிப் பிறனொருவன் கூறும் இகழ்ச்சியுரை மெய்யும் ஆகலாம், பொய்யும் ஆகலாம். எதிரே புகழ்ந்துரைத்துப் புறத்தே இகழ்ந்துரைத்தவழியே அவ்வீருரையும் ஒன்றை யொன்று மறுத்துப் பொய்ப்படுவன. ஆதலின் அது தீதென்பார் 'தீதே - புறனழீஇப் பொய்த்து நகை' எனறார் இதனானே போக்கியும 'முகத்தினினிய நகாஅ அகத்தின்னா வஞ்சரை யஞ்சப்படும' (குறள் அஉச).

புறங்கூறிவாழ்தல் பொய்வாழ்க்கை என்ற திக்குறள். (உ)

அது சாதலினும் தீதெனபது வருங்குறள்:

கஅ௩. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

(இ - ள்.) புறங்கூறி - (எதிரே இனிக்கப் பேசிப்) புறத்தே இகழ்ந்துரைத்து, பொய்த்து - பொய்ப்பட்டு, உயிர் வாழ்தலின் - உயிர்வாழ்ந்திருத்தலினும், சாதல் - இறந்தொழிதல், அறங் கூறும் ஆக்கம் - அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தினை, தரும் - கொடுக்கும்.

(இ - து.) புறங்கூறி வாழ்தலினும் சாதல் நல்லது.

பொய்யாவது உள்ளீடில்லாமை. அஃதாவது யானையுண்ட விளங்கனி போல்வது. அஃது இல்லாமையோ டொக்கும். ஆதலின் அத்தகைய உயிர் இருந்தும் இல்லாமையோ டொக்கும். ஆயினும், இருந்து புறங்கூறுதலால் மேன்மேலும் பாவத்தை யீட்டியதனால் மறுமைப் பயனைக் கெடுத்தலினாலும், இல்லா திறந்தொழி

தல் புறங்கூறிப் பாவத்தை யீட்டுதற் கிடனின்றி மறுமைப்பயனைக் கெடாது காத்தலினாலும் பின்னது முன்னதின் மேலாயிற்று. அறம் அறநூலுக்கானமையின் ஆகுபெயர். கொடுக்கும் எனற்பாலது தரும் என நின்றது வழுவமைதி.

புறங்கூறலிற சாதல் நன்றென்ற திக்குறள், (௩)
ஆதலின் புறங்கூறி வாழற்க வென்பது வருங்குறள்:

௧௮௪. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

(இ - ள்.) கண்நின்று - (ஒருவன்) கண்ணெதிரே நின்று, கண் அறச் சொல்லினும் - கண்ணோட்டம் கெடப் பேசினாலும், முன் இன்று - (அவன்) எதிரேயில்லாமல், பின் நோக்காச் சொல் - பின் விளைவைக் கருதாத சொற்களை, சொல்லற்க - பேசாதொழிக.

(இ - து.) ஒருவனை முகத்தெதிரே அவனைக் கண்ணோட்டமின்றிப் பேசினாலும் பேசலாம்; புறத்தே இகழ்ந்துரைத்தல் கூடாது.

பின்விளைவைப் பின்னென்றது ஆகுபெயர். சொல்லுவான் தொழில் சொன்மே லேற்றப்பட்டது. ஒருவனிடத்தில்லாத குற்றத்தை உள்ளதாகக் கொண்டு அவனெதிரே அவனை யிழித்துரைத்தலும், குற்றமுள்வழியும் நயம்படவுரைத்து அவனைத் திருத்தக் கருதாது அவன் மனம் புண்படவுரைத்துக் கடிதலும் கண்ணோடாமையே. அக் கண்ணோடாமையை ஒழித்தலே தக்கது ஒழியாது கொள்ளினுங் கொள்க, புறங்கூற லொன்று மொழிக என்று பொருள்கொள்ளக் கிடத்தலால் உம்மை எதிர்மறைப் பொருட்டு. அறங்கருதி ஒருவனைத் திருத்துதற்கு முற்படுவார்க்குக் கண்ணோட்டங் கைகூடுமோ வெனின், கூடு மென்றற் கன்றே ஆசிரியர் பொருட்பாலில் கண்ணோட்டமென வோ ரதிகாரம் வகுத்து ஆண்டுக் 'கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க் குரிமையுடைத்திவ் வுலகு' (குறள்-௫௭௮) என்றாரென்க. இவை மூன்றுபாட்டும் புறங்கூறற் கொடுமை கூறின.

அறங்கருதிக் கண்ணறக்கூறலு மாமென்றதிது. (௪)

அறங்கருதிற் புறங்கூற லாகாதென்பது வருங்குறள்:

௧அரு. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

(இ - ள்.) (பிறரைத் திருத்துங் கருத்துடையேன் என்று பறையறைந்து புறங்கூறித் திரிதருவான் ஒருவன்) அறம் சொல்லும் - (தான் பறையறையுமாறு) அறத்தைக் கருதிக் கூறும், நெஞ்சத்தான் அன்மை - மனமுடையவன் அல்லாமை, புறஞ்சொல்லும் - புறத்தே (பிறர் பழி) கூறுகின்ற, புன்மையால் - (அந்த) இழிகுணத்தானே, காணப் படும் - அறியப்படும்.

(இ - து.) புறங்கூறுவான் அறங்கருதிக் கூறுவானல்லன் என்பது அப் புறங்கூறல் கொண்டே தெளியப்படும்.

அறஞ் சொல்லு நெஞ்சத்தான் அன்மை என்பதற்குப் புறஞ் சொல்லுவா னொருவன் அறனை நன்றென்று சொல்லினும் அது நன்மனத்தனாய்ச் சொல்லுகின்றா னல்ல னென்பதனை எனப் பொருள் கண்டார் பரிமேலழகர். அதிகார இயைபுபற்றி யாங் கொண்ட பொருட்கு மிதற்கும் வேறுபாடு கண்டறிந்து சிறப்பது கொள்க.

புறஞ்சொல்லுவானது தீய கருத்துத் தானே வெளிப்படு மென்றதிக் குறள்: (ரு)

அவனது பழியும் வெளிபபடுக்கப்படு மென்பது வருங்குறள்:

௧அசு. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறந்தெரிந்து கூறப் படும்.

(இ - ள்.) பிறன் பழி கூறுவான் - பிறனொருவனுடைய பழியை (அவன் புறத்திலே) கூறுபவன், தன்பழியுள்ளும் - தன்னுடைய பழிகள் பலவற்றுள்ளும், திறம் தெரிந்து

(தன் உள்ளத்தை உளைக்கும்) தன்மையுடையவற்றை அறிந்து, கூறப்படும் - (பிறனாற் பழித்துக்) கூறப்படுவான்.

(இ - து.) பிறன்பழி கூறுவான் தூற்றப்படுவான்.

திறந்தெரிந்து கூறப்படுதல் தன்னாற் புறங்கூறப்பட்ட பிறனுமாகலாம், வேறு பிறனுமாகலாம். பிறன்பழிகூறல் புறத்தென்பது அதிகாரத்தாற் பெற்றாம். வருகின்றவற்றிற்கும் இஃது ஒக்கும். தன்பழி மறந்து பிறன்பழி கூறுதல் ஏதந்தருமென்பார் இவ்வாறு கூறினார். பின் அதிகார முடிவினும் 'ஏதிலார் குற்றம்போற் றங் குற்றங் காண்கிற்பிற் - றீதுண்டோ மன்னு முயிர்க்கு' என்றதூஉங் காண்க. திறம் என்பது திறத்தையுடைய பழிகளுக்கானமையின் ஆகுபெயர். இனி இதற்கு வேறுரை கூறினாரு முளர் அவ்வுரையும் ஒக்குமாதலின் அதனையுங் கூறுகின்றாம்:—

பிறன்பழி கூறுவான்—, தன்பழி - (இப் புறங்கூறுதலாகிய) தன்னுடைய நிந்தையை, உள்ளும் திறன் - (மேன்மக்கள்) நினைக்குந் தன்மையை, தெரிந்து - (சான்றோராலே) தெரிந்துகொண்டபின், கூறப்படும் - சொல்லக் கடவது.

இவ்வுரையின் விரிவெல்லாம் கண்டுரைத்துக்கொள்க.

புறங்கூறுவார் பழிக்கப் படுவரென்றதிக் குறள். (௬)

பகைக்கவும்படுவர் என்பது வருங்குறள் :

௧அ௭. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்.

(இ - ள்.) நகச் சொல்லி - மகிழுமாறு இனிய சொல்லி, நட்பாடல் தேற்றாதவர் - (அயலவரொடு) நட்புச் செய்தலை அறியதாவர், கேளிர் - கேண்மை செய்தொழுகிய கிளைஞரையும், பகச்சொல்லி - (அவர் தம்மைவிட்டு) நீங்குமாறு (புறம் பழித்துச்) சொல்லி, பிரிப்பர் - பிரியப் பண்ணுவர்.

(இ - து.) புறங்கூறுவார் தமக்குற்ற நட்பினரையும் இழப்பர்.

கேளிராவார் பழமையாய் வந்த நட்புரிமையாற் கிளைஞராயி

ஞோர். 'கேட்டினு முண்டோருறுதி கிளைஞரை - நீட்டி யளப்ப தோர் கோல்' (குறள் - எ௯௬) என்றதுங் காண்க. கெழுதகைமை யொடு வந்த நட்பாவது கேண்மை. இவ்வாற்றான் ஒருபொரு ளிருசொற்போலத் தோன்றும் நட்புக்கும் கேண்மைக்கும் வேறு பாடு காண்க. கேளிராவார் நட்டாராதலை அதன் எதிர்மறையாய கேளார் பகைவராதல் கொண்டும் உணர்க. இக் கருத்தானே ஆசிரி யர் பழகிய நட்பைக் குறிக்குங்கால் கேண்மை யென்பாராயினர். அதனைப் பொருட்பாலில் நட்பதிகாரம் முதலிய அதிகாரங்கள் பலவற்றுள்ளுங் காண்க. கேளிரையும் எனற்பாலது சிறப்பும்மை தொக்கு நின்றது. தேற்றாதவா என்பதில் தேற்றாமை தன் வினைப் பொருட்டு. தேற்றாதவராவார் இம்மைக்குறுதியாவது நட்பென்று அறியாதவர்.

நட்டாரைப் புறங்கூறுவார் தன்மை கூறிய திக்குறள். (எ)

அயலார்மாட் டவர் செயல் கூறுவது வருங்குறள்:

௧௮௮. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலர் மாட்டு.

(இ - ள்.) துன்னியார் குற்றமும் - (நட்புரிமையால் தம் மொடு) நெருங்கியாரது குற்றத்தையும், தூற்றும் மரபினார் - (புறத்தே) தூற்றும் வழக்கமுடையோர், ஏதிலார் மாட்டு - அயலாரிடத்தில், என்னை கொல் - (செய்வது) யாது கொல்லோ?

(இ - து.) நட்டாரைப் புறங்கூறுவார் அயலாரைப் புறங் கூறப்பின்வாங்கார்

செய்வது என்பது எஞ்சி நின்றது. செய்வதென்னை என்பது அறிவினுவாய்த் தூற்றுதல செய்வா ரென்பது சொல்லாமே அறியக் கிடந்த தென்னும் பொருள்பட நின்றது. தூற்றுதல் - பலருமறி யப் பழியாயினவற்றைக் கூறிப் பரப்புதல். என்னர்கொல் என்று பாடங்கொண்டு எவ்வியல்பினர் எனப் பொருள் கூறுவாறுமுளர்.

தமர் பிறர் என்ற வேற்றுமையின்றி எல்லார்க்கும் பகைவ ராவர் புறங்கூறுவார் என்றதிக் குறள். (அ)

அவ்வாற்றாற் புறங்கூறுவார் பூமிக்குச் சுமையாவது கூறுவது வருங்குறள்:

௧௮௯. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

(இ - ள்.) புறன் நோக்கி - (பிறர்) எதிரில்லாத இடம் பார்த்து, புன்சொல் உரைப்பான் - (அவர்க்குப் பழிப்பான) ஈன சொற்களைச் சொல்கின்றவனது, பொறை - (உடற்) சுமையை, வையம் - நிலமானது, அறன் நோக்கி - (பொறை யுடைமையோர்) அறமாவது கருதி, ஆற்றுங்கொல்-பொறுக் கின்றது போலும்.

(இ - து) புறங்கூறுவான் பூமிக்குச் சுமை.

எல்லாவற்றையும் பொறுததல் நிலத்துககு இயல்பாயினும் இது பொறுத்தல அரிதென்பது பட ‘அறனோககி யாற்றுங்கொல்’ என்றார். தனக்கும் பிறர்க்கும் பயன்படாதானைப் பூமிககுச் சுமை யும் சோற்றுககுக கேடும் என்னும் வழக்கினையு நோக்கி இவ்வாறு சொன்னாரென்க. ஈண்டுக் காட்டிய வழக்குரையில் முற்பகுதியை ஈண்டேயன்றிப் பின்னும் பலவிடத்தில் எடுததாணடனர் ஆசிரியர் (குறள் - ௫௭0, ௫௭௨, ௯௯0, ௧00௩ காணக). சோற்றுக்குக கேடு என்னும் பிற்பகுதி வழக்கையும் நல்குரவு கூறுமிடத்து ‘உப்பிற்குங் காடிககுங் கூற்று’ (குறள்-௧0௫0) எனக் கொணடாளுதல் காண்க. கொல்லென்னும் இடைச்சொல் ஈணடு ஐயங்குறித்து நின்றது.

இவை ஐந்துபாட்டானும் புறங்கூறலாற் படுங்குற்றம் கூறப் பட்டது. (௯)

அக் குற்றத்தை அகற்றுமாறு கூறுவது வருங்குறள்:

௧௯0. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

(இ - ள்.) ஏதிலார் குற்றம்போல் - (புறங்கூறுதல் கருதி) அயலார் குற்றங்களைக் கண்டறிவதுபோல, தம் குற்றம் காண்கிற்பின் - (புறங்கூறலாகிய அதனுனும் பிற வாற்ருனும்) தமக்கு உளவாகுங் குற்றங்களையும் காணவல்ல ராணுல், மன்னும் உயிர்க்கு - (அவாது) நிலைபேறுடைய உயிர்க்கு, தீது உண்டோ - வருவதொரு துன்பம் உண்டோ? (இல்லை).

(இ - து.) பிறர் குற்றம்போல் தங் குற்றம் காணபார் புறங் கூறமாட்டார்.

பிறர்பால் அழுக்காறுந் தம்பாற் பற்றுமின்றி நடுநின்று காண்ட லருமை நோக்கிக் ' காண்கிற்பின் ' என்ருர். கில் ஆற் றலுணர்த்துமோ ரிடைச்சொல். இறைவனு முலகமுதற்காரணமும் உயிர்களும் என்றுமழியா நிலைபேறுடையவாதலின் ' மன்னுமுயிர் ' என்ருர். யாக்கையொழிய அதனோ டொழியு முயிரன்ருதலால் அஃதவ்வியாக்கையினின்று செய்யும் வினைப்பயன் யாக்கை யொழித்துச் செல்லுழியுந் தொடருமென்ப தறிவித்தற்கும் ' மன்னு முயிர் ' என்ருரென்க. (ம)

இவ் வதிகாரத்தில், முதற் குறளால் புறங் கூருமையின் நன்மையும், அடுத்த மூன்று குறள்களாற் புறங்கூறலின் கொடுமை யும், அடுத்த ஐந்து குறள்களால் புறங்கூறலின் தீப் பயனும், இறுதிக் குறளால் புறங்கூருமைக்கு ஆகும் பயனும் கூறப்பட்டன.

## உ௰. பயனில சொல்லாமை

அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம் பொரு ளின்பமாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என நாக்குற்றம் நான்கு. அவற்றுள் பொய் துறவறத்தார்க் கல்லது அறவொழித்தல் கூடாமை யின் அதை நீக்கி, இல்லறத்தார் ஒழித்தற்காம் ஏனை மூன்றனுள் இனியவை கூறலாற் கடுஞ் சொல்லையும், புறங் கூறாமையாற் குறளை யினையும் நீக்கி எஞ்சி நின்ற பயனில் சொல்லை இவ்வதிகாரத்தால் விலக்குகின்றார். ஆதலானும் புறங்கூறலும் பயனில சொல்லலே யாதலானும் புறங்கூறாமையைத் தொடரப் பயனில சொல்லாமை வைக்கப்பட்டதென அதிகாரத் தொடர்பு காண்க.

இவ்வதிகாரத்தில் பயனில சொல்லுதலின் தீமையும் பயனில சொல்லாமையின் நன்மையும் அவை யிரண்டின் தொகுப்பும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கட் பயனில சொல்லு தலின் தீமை கூறுகின்றார்.

ககூக. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

(இ - ள்.) பல்லார் முனிய - (அறிவுடையார்) பலரும் வெறுப்ப, பயனில சொல்லுவான் - பயனிலவாகிய சொற் களைச் சொல்லுவான், எல்லாரும் எள்ளப்படும் - எல்லாரா லும் இகழப்படுவான்.

(இ - து.) பயனில சொல்லுதல் எல்லாராலும் இகழப்படும்.

சொற்பயனறிவார் அறிவுடையா ராதலால் பல்லார் என்றது அவர்மே னின்றது. அறிவுடையோர் கருத்தைத் தாமுங் கொள்ளு தல் பொதுமக்களியல் பாதலின் இவரையு முள்ளடக்கிப் பின் 'எல் லாரும்' என்றார். எல்லாரும் என்பதில் விரிந்து நிற்கவேண்டிய மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது.

பயனில கூறல் இகழ்ச்சிக் கேதுவாமென்ற திது. (௧)

தீமைக்கு மேதுவா மென்பது வருங்குறள் :

௧௯௨. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

(இ - ள்.) *பயனில - பயனில்லாத சொற்களை, பல்லார் முன் - (அறிவுடையார்) பலர் முன்னே, சொல்லல் - சொல்லு தல், நயனில - இனிய வல்லாதவற்றை, நட்டார்கண் - கிளை ஞரிடத்து, செய்தலின் - செய்வதினும், தீது - தீமையுடைய தாம்.*

(இ - து.) *பயனில கூறல் தீதாய் முடியும்.*

*இனியவல்லாதவை யாவன வெறுக்கத் தக்க செயல்கள். சொல்லல் என்பதாற் பயனில சொல்லாதலும், செய்தலின் என்பதால் நயனில செயலாதலும் பெற்றாம். நட்டார்கண் வெறுப்பன செய்தல் அவர் நட்பை இழத்தற்கேதுவா மாதலின் அது தீதாயிற்று. அதனினும் இது தீது என்றதால் அது ஒருகாற் பயன் பிழைக்கினும் பிழைக்கும் இது பிழையாது என்பதாயிற்று. இது பிழையாப் பய னுவது அறிவுடைய பல்லார் நட்பைப் பெறக்கூடா திழத்தல் என் பது உவமையாற் பெறக் கிடக்கும்.*

*பயனில கூறல் நயனில செய்தலிற் றீதென்ற திக்குறள்.* (௨)

*பயனில கூறுவான் நயனிலனே யென்பது வருங்குறள் :*

௧௯௩. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

(இ - ள்.) *பயனில - பயனில்லாத பொருளை, பாரித்து உரைக்கும் உரை - (ஒருவன்) விரித்துச் சொல்லுஞ் சொல் (தானே), நயனிலன் என்பது - (அவன்) இனிமையில்லாத வன் என்பதை, சொல்லும் - (பலருக்கும்) அறிவிக்கும்.*

(இ - து.) *பயனில சொல்லல் இனிதாகாது.*

பயனில சொல்லுதல் பல்லாரால் முனியப்படுதலின் (குறள்-௧௯௧) அது சொல்லுவானும் நயனிலனாயினன். நயனிலனாவான் வெறுக்கப்படுவான். இனி நயனாவது நீதியெனக் கொண்டு ஈண்டும் பின்னும் பொருள் கூறினால் பரிமேலழக ரெனின், நயன் என்பது பலபொருள் ஒருசொல்லாதலின் அதுவு மமையும். மனப்பட்டது கொள்க.

பயனில்சொல் நய னீக்கு மென்ற திக்குறள்  (௩)

நயனொடு நன்மையும் நீக்குமென்பது வருங்குறள் :

௧௯௪. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

(இ - ள்.) பல்லாரகத்து - (அறிவுடையார்) பலரிடத்து, பயன்சாராப் பண்பில் சொல் - (ஒருவன் கூறும்) பயனும் பண்புமில்லாச் சொற்கள், நயன்சாரா - இனியவாகாவாய், நன்மையின் நீக்கும் - (அவனை) நற்பயன் (பெறுதலினின்று) நீக்கும்.

(இ - து.) பயனில்சொல் நன்மை தராது.

பண்பாவன இனிமையும் உண்மையும் முதலாயின. நன்மை யாவன ஆன்றோர் மதிப்பும் நட்பும் முதலாயின. சொல்லுவான் சொற்களில் இல்லாத பயனும் பண்பும் சொல்லுவானுக்கும் இல்லாவாயின.

பயனில் சொல் நலத்தைத் தாராதென்ற திக்குறள்.  (௪)

உள்ள நலத்தையுங் கெடுக்கு மென்பது வருங்குறள் :

௧௯௫. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(இ-ள்.) நீர்மை யுடையார் - (நல்ல) தன்மையுடையார், பயனில சொலின் - பயனில்லாத சொற்களைச் சொல்லுவராயின், சீர்மை - (அவருடைய) பெருமை, சிறப்பொடு -

(தன்ஞேடியைந்த) நன்கு மதிப்புடனே, நீங்கும் - (அவரை விட்டு) ஒழியும்.

(இ - து.) பெரியோர் பயனில சொல்லின் அவர் பெருமை அழியும்.

சீர்மை-பெருமை, கனம் அல்லது புகழெனினும் ஒக்கும். இப் பொருண்மையினே, 'சிறுமை பல செய்து சீரழிக்கும்' (குறள்-கூகூ௪) என்புழி விளங்கக் காணலாம். பெரியாரைப் பிழையாமை கூறுமிடத்துப் பெரியாரைச் 'சீரார்' (குறள்-கூ00) என்றதுங் காண்க. சீர் என்னும் இப் பலபொருள் ஒருசொல் இடநோக்கிப் பொருள் கொள்ளப்படும். 'சீர்மை சிறப்பொடு' என்புழி ஒடு என்பது 'அதஞே டியைந்த ஒருவினைக் கிளவி' (தொல்காப்பியம்-வேற்றுமையியல்-கஙு)யாய் வந்த மூன்ரும் வேற்றுமை யுருபு.

பயனில சொல்லின் சீர்மை யழியு மென்ற திது. (௫)

சீர்மை யழிவதா லாம்பயன் கூறுவது வருங்குறள் :

கசுசு. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

(இ - ள்.) பயனில் சொல் - பயனில்லாத சொற்களை, பாராட்டுவானை - பலகாலும் சொல்லுபவனை, மகன் எனல் - மக்களுள் ஒருவன் என்று சொல்லுதல் ஒழிக; மக்கள் பதடி எனல் - மக்களுள் பதர் என்று சொல்லுக.

(இ - து.) பயனில்சொல் பதர் போல்வதாம்.

மகனும் மகளும் மக்களின் ஒருமையாதலின் மக்களுள் ஒருவன் என்ரும், பின் மக்கட்பதடி என்பது நோக்கி. பதடியாவது பதர். 'பதடி பதரே பொல்லுமாகும்' என்பது பிங்கலம். உள்ளீடின்றி இலேசானதைப் பதர் என்ப. சீர்மை கனமெனினும் அமையு மென்பது மேற் கூறினும். ஆகவே, அந்தக் கனம் நீங்கப் படுவர் என்று கூறியதையடுத்து, அதஞல் அவர் இலேசென்னும் பதர்த் தன்மை எய்தினராவ ரென்ற இயைபு கண்டுகொள்க. எனல்

என்னும் வியங்கோண்முற் றிரண்டனுள் முன்னது எதிர்மறையி லும் பின்னது உடன்பாட்டிலும் வந்தன. தொல்காப்பியனார் வியங்கோ ளீறு கிளந்தெடுத்துக் கூறாது, எழுத்ததிகாரத்து உயிர் மயங்கியலுள் (சூ - அ) அகர வீற்றுச் செய்கை கூறுகின்றுழி 'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவி' என்றதால் மெய் யூர்ந்து வரும் அகரவீறும், பிறண்டு உடம்பொடு புணர்த்தலால் அல்லீறும் ஆலீறும் கூறினாரென்றார் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும். தொல்காப்பியம் வினையியல் (உக - ம்) சூத்திரத்திற்கு அவருரை காண்க. அச் சூத்திரவுரையிற்றானே நச்சினார்க்கினியர், "'மக னெனல் மக்கட் பதடி யெனல்' என உடம்பாடும் மறையுமாய் வருதலுங் கொள்க" எனக் கூறியிருத்தலுங் காண்க.

இவை யாறு பாட்டாலும் பயனில கூறலின் தீமை சொல்லப் பட்டது. (௬)

பயனில சொல்லாமையின் நன்மை கூறுவன வருங்குறள்கள்:

௧௯௭. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

(இ - ள்.) சான்றோர் - (கல்வி யறிவொழுக்கங்களால்) நிறைந்தோர், நயன் இல - இன்பமில்லாத (சொற்களை), சொல்லினும் சொல்லுக - சொல்ல வேண்டினும் சொல்லக் கடவர்; பயனில - பயனில்லாத சொற்களை, சொல்லாமை - (அவரும் பிறரும்) சொல்லாதிருத்தல், நன்று - நன்மையாம்.

(இ - து) பயனில சொல்லாமை யாவர்க்கும் நன்மை.

இனியவை கூறலும் ஓர் அறமாதலின் சான்றோர் நயனிலவுஞ் சொல்லார், ஒருகாற் சொல்லினும் அமையும் என்பார் 'சொல்லினுஞ் சொல்லுக' என எதிர்மறையும்மை கொடுத்துக் கூறினா. அவ்வா றமைவதும் சான்றோர்க்கே என்பார் 'சொல்லுக சானறோர்' என் றார். முன்னர் 'கண்ணின்று கண்ணறச் சொல்லினும்' (குறள் . ௧௮௪) என்புழியும் இது கொள்க. பயனில சொல்லுதல் சான்

ேரார்க்கே ஆகாதெனவே ஏனையோர்க்கும் ஆகாதாதல் சொல்ல வேண்டாவாயிற்று.

பயனில சொல்லாமை நன்றென்ற திக்குறள். (எ)

பயனில சொல்லாமை அறிவுடைமை என்பது வருங்குறள் :

௧௯௮. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

(இ - ள்.) அரும்பயன் - (அறிதற்கு) அரிய பயன்களை, ஆயும் அறிவினார் - ஆராய வல்ல அறிவுடையோர், பெரும் பயன் இல்லாத சொல் - மிக்க பயன் இல்லாத சொற்களை, சொல்லார் - சொல்ல மாட்டார்.

(இ - து.) அறிவுடையர் நிறைந்த பயன் இல்லாத சொற்களைச் சொல்லலாகாது.

அறிதற்கரிய பயன்களை ஆராய வல்லார் எனவே, தாம் சொல்லும் சொற்கள் தமக்கும் பிறர்கும் பயனுடையவா அல்லவா என அறிதலோடு அப் பயன் சிறிதா பெரிதா எனவும் அறியவல்லர் அவர் என்பது முடிந்தது. அதனோடு, யாண்டும் அரும் பயனே நாடித்தேடும் அவர் தம் கூற்றிற் சிறுபயனுடையவற்றைக் கொள்ளு தல் ஒவ்வா தென்பதும் முடிந்தது. ஆதலால், பெரும்பயனில்லாத சொற்களைச் சொல்லா ராதல் அவர்க்குக கடனாயிற்று

பெரும் பயனில்லாத கூறாமை அறிவுடைமை என்றதிது. (அ)

ஆகவே, பயனேயில்லாத கூறல் மயக்க அறிவு என்பது வருங் குறள் :

௧௯௯. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

(இ - ள்.) மருள் தீர்ந்த - மயக்கத்தின் நீங்கிய, மாசு அறு காட்சியவர் - தூய அறிவுடையோர், பொருள் தீர்ந்த -

பயனில் நீங்கிய சொற்களை, பொச்சாந்தும் - மறந்தும், சொல்லார் - சொல்லமாட்டார்.

(இ - து.) தூய அறிவுடையோர் பயனில்லாத சொற்களை மறந்துஞ் சொல்லார்.

பொச்சாப்பாவது, மகிழ்ச்சியில் மறவி. பயன் உண்மையும் இன்மையும் அறிதற்கு அறிவு தெளிந்திருத்தல் இன்றியமையாது. தூய அறிவாயின் அஃதியாண்டும் தெளிந்திருக்கும். மாசுடை அறிவாயின் மகிழ்ச்சி மீறிய ஓரோவோரமயங்களில் கலங்கித் தெளிவிலதாகும். அப்பொழுது உண்மை இன்மையாகவும் இன்மை உண்மையாகவுந் தோன்றி மயக்கத்தைச் செய்யும். அம் மயக்கத்தையுடையோர் பயனில கூறல் சாலும். அம் மயக்கம் இல்லோர்க்கு அஃது சாலாதென்பார் 'பொச்சாந்தும் சொல்லார்' என்றார் எனவே பயனில சொல்வார் மயக்க அறிவினராவர் என்பதாயிற்று

இவை மூன்று பாட்டாலும் பயனில சொல்லாமையின் நன்மை கூறப்பட்டது. (க)

இதுகாறுங் கூறப்பட்டவற்றைத் தொகுத்துக் கூறுவது வருங்குறள் :

உ00. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

(இ - ள்.) சொல்லின் - சொற்களில், பயனுடைய - பயனுடைய வற்றை, சொல்லுக -; சொல்லின் பயன் இலாச் சொல் - சொற்களில் பயனில்லாத சொற்களை, சொல்லற்க- சொல்லா தொழிக.

(இ - து.) பயனுடையவற்றைச் சொல்லுக; பயனில்லன வற்றைச் சொல்லா தொழிக.

'சொல்லுக பயனுடைய; சொல்லற்க பயனில' என்பதே கருதிய பொருள் பயக்கும். இருகாற் 'சொல்லின்' என்றதும், 'சொல்லற்க பயனில' என்பதே சாலுமாகப் 'பயனிலாச் சொல்' என்றதும் மிகையாம் பிறவெனின், அற்றன்று; அது சொற்பின்

வருநிலை யென்னும் அணிநோக்கி யமையுமென்பது. ஒக்கும்; பயனில சொல்லாமையைக் கிளந்தெடுத்து வற்புறுத்த வந்த விடத்தில், 'நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர் பயனில சொல்லாமை நன்று' (குறள் - ௧௯௭) என்று கூறியதனணித்தாகச் சொன்னயங்கருதிப் பொருட்பயன் இல்லாச் சொற்களை எழுசீரா னியன்றதொரு பாட்டில் மூச்சீராகத் தொடுத்து வைப்பரோ ஆசிரியர் என்பது கடா. அதற்கு விடை: பயனென்ற துணையானே பொருட்பயனே என்று கொள்ளற்க; கேட்போர்க்கு இனிமைபயத்தலும் ஒரு பயனேயாம். குழலெழீஇ யாழெழீஇத் தண்ணுமை யிசைத்து ஒருவனை யின்புறுத்தல் பயனில்செய்கையெனக் கடியப்படாதன்றே? அங்ஙனமே ஒருவனை யின்புறுத்துதல் ஒன்றே கருதிச் சொல்லுஞ் சொற்களும் பயனுடையவேயாம்; அல்லவென்று கடியப்படாதென்பதற்கு இவ்வாறு உடம்பொடு புணர்த்துச் செய்யுட் செய்தா ரென்பது. இக் கருத்தானன்றே **பேராசிரியரும்** நூலிற் கடியப்படுங் குற்றமாவன விவையெனக் கூறும் தொல்காப்பியச் சூத்திர (**மரபியல் - ௧௦௮**) உரையின் கண்ணே, 'கூறியது கூறன் முன்வைத்த தென்னையெனின், அது நூலுட்போலச் செய்யுட்கண்ணும் பயன்பட வரின் அமையுமென்றற்கென்பது' எனக கூறுவாராயின ரென்க. எனினும், சொல்லின்பம் ஒன்றே கருதி ஒரோவழிச் செய்யுட் செய்தல் பிறர்க்காயின் ஒவ்வும். தெய்வப் புலவராய நம் முதற்பாவலர்க் கொவ்வாது. என்னை? பிறர் பலர் செய்த 'சொல்லாற் பரந்த பா'ப் போலாது எந்தம் வள்ளுவனார் சுருங்கிய சொல்லால் 'தினையளவு போதாச் சிறு புன்னீர் நீண்ட - பனையளவு காட்டும் படித்தா'கச் செய்யுட் செய்தமை புலவர் பலர்க்கும் ஒப்ப முடிந்த தாகலின் என்பது. அல்லாதூஉம் 'அரும்பய னாயு மறிவின'ராய அவர் 'பெரும் பயனிலாத' சொல்லுவரோ என்பது. அஃதொக்கும். 'புலமிக்கவரைப் புலமைதெரிதல் - புலமிக்கவர்க்கே புலனாம்' (**பழமொழி - எ**) என்பவாதலால் 'அரும்பயனாயு மறிவின'ரது சொல்லிற் பெரும்பயன் கொள்ளுதல் 'அரும்பய னாயு மறிவினர்'க்கே ஆமென்பது பெறுதலின், ஆசிரியர் கூறிய இச் செய்யுளிற் பெரும்பயன் கொள்ளுதல் அவர்க்கே இயலும்

என்பது. ஆயின், அரும்பயனுயு மறிவினோராய ஆசிரியர் பரிமேலழ கர்க்கு அஃது ஆகாமற் போன தென்னையோ, சிறுபயனிற்றாக அவர் கொண்ட பொருளே யன்றோ மேற்கூறிய தெனின், பெரும்பயன் கொள்ளற் காகாமல் அவர் அச் சிறுபயன் கொண்டு கூறினாரல்லர். அரும்பய னுயு மறிவினோராவார் எவர் உரையுமின்றி ஆசிரியர் சொற்ற அமுதத் திருவாக்கிற் பெரும்பயன்கொள்ள அறிவாராதலின் அன்ன ரல்லாச் சிற்றறி வினர்க்கே தாம் கூறும் உரையென்பதை உளங் கொண்டு எளிதிற் பெறக்கிடக்கும் பொருளினையே விளங்கச் சொல்லி யொழிந்தார் என்பது. ஈண்டேயன்றி வேறியாண்டியாண் டிஃ தொவ்வுமோ ஆண்டெல்லா மிவ்வாறே கொள்க. அத்துணைத் தகுதிநோக்கிச் செல்லுதல் இற்றைநாட் சாலாதென்று அவர் கூறா தொழிந்த பெரும்பயனைக் கூற ஒருப்படுவார் இச் செய்யுட்குக் கூறும் பிறிதொரு பொருளாமாறு :

சொல்லின் - (கருதிய பொருளைச்) சொல்லியாக வேண்டுமா யின், பயனுடைய சொல்லுக - பயன் உள்ள சொற்களையே சொல் லுக. சொல்லின் - சொற்களில், பயன் நிலாச் சொல் - பயன் (நிலை பெற்று) நில்லாத சொற்களை, சொல்லற்க - சொல்லா தொழிக.

(இ - து.) சொன்னால் பயனுடையவற்றைச் சொல்லுக; பயன் நிலைபேறில்லாச் சொற்களைச் சொல்லா தொழிக.

'சொல்லின்' என்பன இரண்டுள் முன்னது செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; பின்னது ஏழாமவேற்றுமை யுருபடுத்த பால்பகாவஃறிணைப் பெயர். சொன்னால் என்பதாற் பயந்த தென்னையோ வெனின், சொல்லாமற் சொல்லலே சிறந்த தென்னும் குறிப்புப் பயந்தது. சொல்லாமற் சொல்வதை அன்றாலின் கீழிருந்து அறமுதலாய நான்கினையும் நால்வர்க்குச் சொன்னமை கொண்டு தெளிக. எனவே குறிப்பா லுணர்த்தக் கூடாதவற்றையே சொல் லாற் சொல்க என்றதாயிற்று. சொற்களிற் பயன் நில்லாத சொற் களைச் சொல்லற்க என்றதாற் பெறக்கிடப்ப தியாதோ வெனின், சொற்களில் ஒருசொற் பலபொருளவாயும், பலபொரு ளொரு சொல்லாயும் வருவன பல. அவற்றுள் குறித்த பயனை மனத்திற்

பசுமரத்தாணி போலப் பதியச் செய்வனவற்றை இடநோக்கித் தேர்ந் தெடுத்துக் கூறுக என்பது பெறக்கிடந்தது. அதற்குதாரணம் இத் திருக்குறணூலிற் பல விடத்தும் பல்கிக் கிடக்கக் காணலாம். இவ் வதிகாரத்திற்றானே முன்னர் 'சீர்மை நீங்கும்' (கசஅரு) எனக்கூறிப் பின்னர் 'மக்கட் பதடி' (கசஅசு) என்றதுங் காண்க; அன்றியும் 'பதடி' எனக்கூறிய அக் குறளிற்றானே 'பயனில்சொல்' எனச் சொல்லைப் பெயராக வைத்து நெல்லெனவும் மொழி யெனவும் இருபொருள் தர நிறுத்தியது காண்க. 'நெல்லும் புகழுஞ் சொல்லுஞ் சொல்லே' என்பது பிங்கலம். பயனில் நெல்லாவது பதரேயாம். இவ்வாறதற்கு இரட்டுற மொழிந்தார் இராமானுஜ கவிராயர் இது கிடக்க.

இங்ஙனம் தெள்ளிதிற் புலப்படும் எளிய பயனும் அரிதிற் புலப்படும் பெரியபயனும் கொள்ள வைத்தமையால் எளியார்க்கு எளிய பயனும் அரியார்க்கு அரிய பயனும் உளவாகும்படி சொற்க ளைத் தெரிந்தெடுத்துச் சொல்லுக என்பதும் உடம்பொடு புணர்த்தி உணர்த்தினு ராசிரியர் என்று கொள்க.

இவ்வதிகாரத்தில் முதல் ஆறு குறள்களால் பயனில சொல்லு தலின் தீமையும்; அடுத்த மூன்று குறள்களால் பயனில சொல்லாமை யின் நன்மையும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறப்பட்டன.

---

## உக. தீவினையச்சம்

அஃதாவது தீய செய்தற் கஞ்சுவது. இதுகாறும் விலக்கப் பட்ட தீயனவற்றையும் அவற்றுளடங்காது எஞ்சிநின்ற பிற தீவினை களையும் தொகுத்து விலக்குதல் கருதிற்று இவ் வதிகாரம். நாண் வழிக்காசு போலவும் நீர்வழி மிதவை போலவும் உள்ளமெவ்வழி அவ்வழிச் செல்வது வினையாதலால், உள்ளம் தீவழிச்செல்ல அஞ்சி நல்வழிச் செல்லுமாயின் வினையும் அவ்வழிச் செல்லுமென்பதே பற்றித் தீவினை யச்சம் என உள்ளத்தின் தொழிலாக்கிக் கூறினார். மேலையதிகாரத்தில் பயனில்சொல் தீச்சொல் என்பதுபட வுரைத்து அதை விலக்கினார். தீச்சொல்லே யன்றித தீவினையும் விலககப்படுவ தென்பதை இவ்வதிகாரத்தாற் கூறுகின்றாராதலின் அதிகார இயைபு கண்டு கொள்க.

இவ்வதிகாரத்தில், தீவினைக்கு அஞ்சுதலின் சிறப்பும் அஞ் சாமையின் இழிவும், தீவினைக்கு அஞ்சுதற்காய காரணமும், தீ வினைக்கு அஞ்சாமையின் தீமையும், தீவினைக்கு அஞ்சுதலின் நன் மையும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் தீவினைக்கு அஞ்சுதலின் சிறப்பையும் அஞ்சாமையின் இழிவையும் தொகுத்துக் கூறுகின்றார்.

உ0க. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) தீவினை என்னும் செருக்கு - தீவினை என்று சொல்லப்படும் மயக்கத்துக்கு, தீவினையார் - பாவிகள், அஞ் சார் - அஞ்சமாட்டார் ; விழுமியார் - (பாவிகளல்லாத) சீரியர், அஞ்சுவர்—.

(இ - து.) தீவினைக்கு அஞ்சுவோர் சீரியர் ; அஞ்சாதவர் பாவியர்.

செருக்காகிய காரணத்தைக் காரியம் போலக் கூறியதோர் உபசார வழக்கு. 'பிறப்பென்னும் பேதைமை' (குறள்-௩௫௮) என்பதும் அது. 'தீவினையால் வரும் செருக்கு' எனக் காரண மாவது தீவினையென்று கொண்டாராற் **பிரயோக விவேகமுடையார்** (செய்யுள்-௩௮) எனின், அது அறிவு நூலொடும் அதிகாரப் பொருளொடும் மாறுபடுதல் கண்டு கொள்க. செருக்கென்னும் பலபொரு ளொருசொல் ஈண்டு மயக்கத்தை யுணர்த்திற்று. மயக்க மாவது ஆணவ மயக்கம். 'யானென தென்னுஞ் செருக்கு' (குறள்-உ௩௫) என்புழிப்போலக் கொள்க. தீவினையார் ஆணவமயக்கம் பெரிதுடையாராதலால் அவர் அஞ்சாமையும், விழுமியார் ஆணவ மயக்கம் பெரிதகன்றவ ராதலால் அவர் அஞ்சுவதும் இயல்பாயின. அவை யியல்பாயினவாறு யாதோவெனின், ஆணவமயக்கமாவது அறியாமையான் வந்த மயக்கமாதலானும், தீயின் இயல்பினை அறியாது மயங்கி விட்டிற்பூச்சித் தீயினை அஞ்சா தணுகி மாள்வது கண்கூடாகக் காணக் கிடப்ப தொன்றாகலானும், 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ - தஞ்ச லறிவார் தொழில்' (குறள் - ௪உ௮) என்பதாகலானும் மயக்கமுடையார் தீவினைக்கஞ்சாமையும் மயக்கமில்லார் தீவினைக் கஞ்சுதலும் இயல்பாயின வென்பது. இவ்வாற்றானும் செருக்குக் காரணமும் தீவினை காரியமுமாதல் காண்க. "மேற்றொட்டுச் செய்து கைவந்தமையான் 'அஞ்சார்' என்றும், செய்தறியாமையான் 'அஞ்சுவர்' என்றுங் கூறினார்" என்றார் **பரிமேலழகர்**.

தீவினைக்கு அஞ்சுதலின் சிறப்புக் கூறியதிது. (க)

அஞ்சுதற்குக் காரணங் கூறுவன வருமிரு குறள்கள் :

உ0உ. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

(இ - ள்.) *தீயவை* - (தனக்கு இன்பம் பயத்தலைக் கருதிச் செய்யும்) தீவினைகள், *தீய பயத்தலால்* - (கருதிய வின்பம் பயப்பதை யொழித்துத் துன்பமாகும்) தீமை

களையே தருதலால், தீயவை - (அத்தகைய) தீவினைகள், (ஒருவனால்) தீயினும் - நெருப்பினும் (கொடியவாக), அஞ்சப்படும் - அஞ்சப்படத்தக்கன.

(இ - து). தீவினை நெருப்பினுங் கொடிது.

நெருப்புக் கொடிதாயினும் யாண்டுங் கொடிதன்று; நல்லதாமிடனுமுண்டு. அஃதியாண்டோ வெனல் வேண்டா; அடிசிலாக்கவும் இருள் நீக்கவும் குளிர் போக்கவும் அருக்கலானவற்றை அருக்கவும் உருக்கலானவற்றை உருக்கவும் பயன்பட்டு நமக்கது நல்லதாதல் நாளு நாம் கண்கூடாகக் காணக் கிடப்பதொன்றே. இங்ஙனமது பயன்கொள்ளவும் நிற்கு நிலைமை நோக்கியன்றே ஆசிரியர் அதனை அரசரோ டொப்பிட்டு 'அகலா தணுகாது தீக்காய்வார் போல்க - விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்' (குறள் - ௬௯௧) என்பாராயினர் என்பது. இக் கருத்தே பற்றிப் பிறரும் 'அழலி னீங்கா னணுகா னஞ்சி - நிழலினீங்கா னிறைந்த நெஞ்சமோ - டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம் - அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே' (நன்னூல் - ௪௬) எனத் தீயினை ஆசிரியனோ டொப்பிட்டுக் கூறுவாராயதூஉமெண்க. 'பிறிதொரு காலத்தும் பிறிதொரு தேயத்தும் பிறிதோ ருடம்பினுஞ் சென்று சுடுதல் நீக்கின்மையின் தீயினுமஞ்சப் படுவதாயிற்று' என்றார் பரிமேலழகர் இதுவும் ஒவ்வும். மேல் 'வினைப்பகை வீயாது பின்சென் றடும்' (குறள் - உ0௭) என்றதும், 'தொடிற்சுடி னல்லது...... விடிற்சுடலாற்றுமோ தீ' (குறள் - ௧௧௫௯) என்றதுங் காண்க.

தீயவை தீயவே பயக்குமென்ற திக் குறள். (உ)

ஆதலால் தீயன கடித லறிவுடைமை யென்பது வருங்குறள்:

உ0௩ அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(இ - ள்.) செறுவார்க்கும் - (தம்மைப்) பகைப்பவருக்கும், தீய செய்யா விடல் - தீயவற்றைச் செய்யாது விடுதல், அறிவினுள் எல்லாம் - (தமக்கு உறுதி நாடும்)

அறிவுகள் எல்லாவற்றுள்ளும், தலை என்ப - முதன்மை (யாகச் சிறந்தது) என்று சொல்லுவர் (நல்லோர்).

(இ - து.) பகைவர்க்குத் தீமை செய்யாமை சிறந்தது.

'ஈதலிசைபட வாழ்த லதுவல்ல - தூதிய மில்லை யுயிர்க்கு' (குறள் - உ௩௧) என்பவாதலானும், அவ் வூதியத்தைத 'தீய செறு வார்க்குஞ் செய்யா'து விடுவார் ஈதலின்றியே எய்துத லானும் அவர் தலைசிறந்த அறிவுடையா ராயிற்று. என்னை? 'ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப் - பொன்றுந் துணையும் புகழ்' (குறள் - கருசு) ஆகலா னென்பது. செறுவார் பகைவரா தலை 'செறுவார்க்கு முள்ளழிக்க லாகா வரண்' (குறள் - சஉக) என்புழியுங் காண்க. செறுதல் அழித்தலுமாம். 'உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்-சேரா தியல்வது நாடு' (குறள் - எ௩௪) என்புழிச் செறுதல் இப் பொருட்டாதல் காண்க. எனவே 'செறு வார்க்கும் தீய செய்யாவிடல்' என்பது தன்னைக் கொல்வார்க்கும் தீமை செய்யா தொழிதல் எனவும் பொருள் கொள்ளக் கிடந்தது. முன்னையதினும் இப் பொருள் சிறந்து காட்டிற்று. இதற்கு மெய்ப்பொருளுயனூர் செயல் சிறந்ததோர் எடுத்துக்காட்டு மாகும். ஆயினும், இல்லறத்தி னிற்பார் எல்லாரும் இதை மேற்கொண் டொழுகல் இயலாதென்பதை யுட்கொண்டும், இவ்வாறொழுகி னது சாலச் சிறந்த தென்பதை அறிவுறுத்த வேண்டியும் போலும் ஆசிரி யர் பகைஞ ரென்றேனும் கொலைஞ ரென்றேனும் கூறாது செறுவார் என அவ் விருபொருளும் பயப்பக் கூறியது. செய்யாது எனற்பா லது செய்யா எனக் கடைகுறைந்து நின்றது.

இவை யிரண்டு பாட்டானுந் தீவினைக்கு அஞ்சுதற்காய காரணம் கூறப்பட்டது. (ரு)

தீவினைக் கஞ்சாமையின் கேடு கூறுவன வரும் ஆறு குறள்கள்:

உ0ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(இ - ள்.) மறந்தும் - மறந்தாலும், பிறன்கேடு சூழின் - பிறனுக்குக் கேடு (தரும் தீவினையைச் செய்யக்) கருதினால், சூழ்ந்தவன் கேடு - (அங்ஙனங்) கருதியவன் கெடுதற்கான வினையை, அறம் சூழும் - அறக்கடவுள் கருதும்; (ஆதலால்) மறந்தும் பிறன்கேடு சூழற்க - மறந்தாலும் பிறனுக்குக் கேடு (விளைக்கும் தீவினையைச் செய்யக்) கருதா தொழிக.

(இ - து.) மறந்தும் தீவினைசெய்யக் கருதுதல் ஒழிக.

'மறந்தும் பிறன்கேடு' என்னுஞ் சொற்றொடர் சூழற்க என்னும் முற்றொடும் சூழின் என்னும் எச்சத்தோடும் தனித்தனியே இயைந்து நின்றது. கேடென்பன விரண்டும் காரியவாகு பெயர். அறக்கடவுள் கருதுதலாவது அவன் கெடத் தான் அவனைவிட்டு நீங்கக் கருதல். தீவினை செயப்பட்டான் தீவினை செய்தானை ஒறுப்பினும் ஒறுக்கும்; ஒறுக்கப் பிற்படினும் படும்; ஒறுக்கா தொழியினும் ஒழியும். அவனுக்கு முற்பட்டு அறக்கடவுள் அவனை ஒறுத்தல் ஒருதலை யென்பார் 'சூழின் அறஞ்சூழும்' என்றார்.

தீவினை சூழற்க வென்றதிது.		(ச)

தீவினை செய்யற்க வென்பது வருங்குறள்.

உ0ரு. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) இலன் என்று - (யான்) வறியன் என்று (கருதி, அது தீர்தற் பொருட்டு ஒருவன்), தீயவை செய்யற்க - தீவினைகளைச் செய்யா தொழிக; செய்யின் - செய்வானாயின், பெயர்த்தும் - பின்னும், இலன் ஆகும் - வறியனாவான்.

(இ - து.) வறுமை கருதித் தீவினை செய்யின் அவ்வறுமை மிகும்.

மற்று - அசைநிலை. இலன் என்பன இரண்டில் முன்னது தன்மை யொருமையினும், பின்னது படர்க்கை யொருமையினும்

வந்த எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்கள். அன் விகுதி தன்மை யொருமையிற் குறிப்பு வினையைச் சார்ந்து வருதலை 'உளனு வென்னுயிரை யுண்டு' (குறிஞ்சிக்கலி-௨௨) என்புழியும், 'இலனெ ன்னு மெவ்வ முரையாமை' (குறள்-௨௨௩) என்புழியுங் காண்க. ஈரிடத்தும் இலமென்று பாடமோது வாரும் உளர். அவர்க்கு முன்னதாய இலம் தன்மைப் பன்மைக் குறிப்பு முற்றும் பின்னதாய இலம் வறுமைப் பொருட்டுமாம். இலம் வறுமை யாதலை 'இலம்பா டொற்கமா யிரண்டும் வறுமை' என்னும் தொல்காப்பிய உரியியற் சூத்திரத்தானும் (௩௬௰) 'இலமென்னு முரிச்சொல் பெரும்பான்மையும் பாடென்னுந் தொழிற் பற்றி யல்லது வாராமையின் இலம்பா டென்றார்' எனச் சேனாவ ரையர் ஆண்டுக் கூறிய உரையானும் உணர்க. மணக்குடவர் முன்னர் இல மென்றும் பின்னர் இலனென்றும் பாடங் கொண் டார். பெயர்த்தும் இலனாகும் என்றதால் பொருள் இலனாதலோடு கல்வி ஒழுக்கம் முதலிய வற்றையும் இழப்பன் என்பதும் பெறப் படுதல் காண்க.

தீவினை வறுமை பயக்கு மென்ற திக்குறள். (௫)

துன்பமும் பயக்கு மென்பது வருங்குறள் :

௨0௬. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

(இ - ள்.) நோய்ப்பால - துன்பஞ் (செய்யும்) பகுதிய (வாய பாவங்கள்), தன்னை அடல் வேண்டாதான் - தன்னை வருத்துதலை வேண்டாதவன், தீப்பால - தீமைப்பகுதிய (வாய வினைகளை), தான் பிறர்கண் செய்யற்க - தான் பிற ரிடத்திற் செய்யா தொழிக.

(இ - து) தீவினை செய்வானைப் பாவங்கள் வருத்தும்.

தீவினை யடுமென்ற திக்குறள். (௬)

அஃதடுமாறு கூறுவது வருங்குறள்.

உ0எ. எனைப்பகை யுற்றரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

(இ - ள்.) எனைப் பகை உற்றாரும் - எத்தகைய பகையுடையாரும், உய்வர் - (அதனால் வரும் துன்பத்தினின்று ஒருவாற்றால்) தப்புவர்; வினைப்பகை - தீவினையாகிய பகை, (அவ்வாறு தன்னை உடையாரைத் துன்பத்தினின்று தப்ப விடுதல் இன்றி) வீயாது பின் சென்று - (அவரை) நீங்காமல் (அவர் சென்ற சென்ற இடத்தெல்லாம்) பின்தொடர்ந்து சென்று, அடும் - வருத்தும்.

(இ - து) தீவினை செய்தார் உய்யார்.

வீதல் - நீங்குதல். 'நிழறன்னை வீயாது' எனப் பின் வருங் குறளினுங் காண்க. 'வீயா விழுமம்' (குறள் - உ௮௪) என்பர் போக்கியும். 'வீயா - துடம்பொடு நின்ற வுயிரு மில்லை' (புறம் - ௩௬௩) என்புழியும் வீதல் இப் பொருட்டு. அடுதல் - வருத்துதல்; வருத்துதல்-துன்புறுத்தல். மேற்குறளினுங் காண்க. 'இன்பங் கடன் மற்றுக் காமம் அஃதடுங்கால் - துன்ப மதனிற் பெரிது' (குறள் - ௧௧௬௬) என்புழி யது பின்னும் தெளிவாக விளங்கிற்று. அடுதல் கொல்லுதலுமாமாயினும் அப்பொருட்குச் சென்றசென்ற விடத்தெல்லாம் சென்று கொல்லுமெனல் ஒவ்வாது, என்னை? ஒருகாற் கொல்லப்படுவது பலகாற் கொல்லப்படுவ தின்றாகலின் என்க. உய்தல் தப்புதலாதலை 'உயற்பால தோரும் பழி' (குறள் -௬0), 'எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை - செய்ந்நன்றிகொன்ற மகற்கு' (குறள்-௧௧0) என்புழியும் பிறாண்டுங் காண்க.

தீவினை பிறவிகடோறும் தொடருமென்றபடி. (எ)

தொடருமாற்றை விளக்குவது வருங்குறள்.

உ0அ. தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

(இ - ள்.) தீயவை செய்தார் கெடுதல் - தீவினைகளைச் செய்தவர்கள் கெடுதல், (எத்தன்மைத்தெனின்) நிழல் - (ஒருவன்) நிழல், தன்னை வீயாது - (தான் எங்குச் செல்லினும்) தன்னை விட்டு நீங்காது, அடி உறைந்தற்று - (தன்) அடிக்கண்ணே (தொடர்ந்து சென்று) தங்கிய தன்மைத்து.

(இ - து.) தீவினை ஒருவனை நிழல்போலத் தொடர்ந்து வருத்தும்.

ஈண்டுப் பொருளாவன தீயவை செய்தாரும் அவர் கேடும்; உவமமாவன ஒருவன் உருவும் அவன் நிழலும். இவற்றிடைப் பொதுவின் நின்ற நீங்கா துடனுறைதற்கண்ணே உவமஞ் சென்றது. எனவே உருவினை நிழல் நீங்காது தொடர்தல் போலத் தீவினை செய்வாரைக் கேடு நீங்காது தொடரு மென்பதாயிற்று. அன்றியும், ஓர் உருவின் நிழல் அவ்வுருவினையே போலுமன்றிப் பிறிதோருருவினைப் போலாதாகலின், தீவினை செய்வாரைத் தொடர்வது தீமையே யாதல் இயைபுடைத் தென்பது மாயிற்று.

தீவினை பற்றினால் விடாதென்ற திது. (அ)

ஆதலின் அதை நெருங்கலு மாகா தென்பது வருங்குறள்:

உ0௯. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

(இ - ள்.) (ஒருவன்) தன்னைத்தான் காதலனாயின் - தன் நலத்தைத் தான் விரும்புதலுடையனாயின், தீவினைப்பால் - தீவினையாகிய பகுதி, எனைத்தொன்றும் - எத்தன்மையதாமொன்றனையும், துன்னற்க - பொருந்துத லொழிக.

(இ - து.) தீவினைத் தொடர்புக்கு இடங்கொடுத்தலாகாது.

துன்னுதல் - பொருந்துதல்; 'துன்னியார் துன்னிச் செயின்' (குறள்-௪௯௪) என்புழியுங் காண்க. நல்வினை தீவினை என வினைப் பகுதி யிரண்டாகலின் 'தீவினைப் பால்' என்றார். ஒன்றைக் காதலிப்பது அதன் நலத்தைக் காதலிப்பதே யன்றிப் பிறிதில்லை

யாதலின் தன்னை என்றது தன் நலத்தை யாயிற்று. தீயவை செய்தார் தாமே கெடுதலை மேல் விளக்கினாராகலின் ஈண்டு இவ்வாறு கூறினார்.

இவை யாறுபாட்டாலும் தீவினை செய்தலின் தீமை கூறப்பட்டது. (கூ)

தீவினை செய்யாமையின் நன்மை கூறுவது வருங்குறள் :

உகO. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

(இ - ள்.) (ஒருவன்) மருங்கு ஓடி - கொடிய வழியிற் சென்று, தீவினை செய்யான் எனின் - தீவினைகளைச் செய்யானாயின், (அவன்) அருங்கேடன் - கேடு இல்லாதவன், என்பது அறிக - என்பதை அறிந்துகொள்க.

(இ - து.) தீவினை செய்யாதவனுக்குக் கேடில்லை.

அருமை - இன்மை. அருங்கேடன் - கேடரியன் ; சொற்கள் நிலைமாறின. வேள்வி செய்தவர் எனற்பாலது செய்த வேள்வியர் என மாறி நிற்றலும் காண்க. (கO)

இவ் வதிகாரத்தில் முதற் குறளால் தீவினையஞ்சலின் சிறப்பும் அஞ்சாமையின் இழிவும், அடுத்த இரு குறள்களால் தீவினை அஞ்சற் காய காரணமும், அடுத்த ஆறு குறள்களால் தீவினை யஞ்சாது செய்தலின் தீமையும், இறுதிக் குறளால் தீவினை அஞ்சிச் செய்யாதொழிதலின் நன்மையும் கூறப்பட்டன.

## ௨௨. ஒப்புரவறிதல்

அஃதாவது உலக நடையினை அறிந்து செய்தல். உலகநடையினை அறிதலாவது உலகம் நடைபெறுவது மக்கள் பலர் கூடி ஒருவர்க்கொருவர் உபகாரம் செய்து வாழ்வதாற்றான் என்னும் உண்மையினை அறிதல். அவ்வுண்மை யாங்ஙனம் பெறப்பட்டதோ வென்னின், யாம் நாடோறுங் கண்கூடாகக் கண்டுங் கொண்டும் வருதலாற் பெறப்பட்டதென்க. என்னை? நாம் உண்ணும் ஊணும் உடுக்கும் உடையும் இருக்கும் இல்லமும் துய்க்கு மின்பமும் இவற்றின் தொகுப்பாக வாழும் வாழ்க்கையும் நம்மில் ஒவ்வொருவரும் பிறருதவி யின்றித் தாமே யமைத்துக்கொண்ட வாகாது, பலருதவியுங் கூடியமைந்த வாதலி னென்பது. ஒருவன் உண்ணும் ஒருபிடி சோறுதானும், உழுவாரும் விதைப்பாரும் அறுப்பாரும் தெழிப்பாரும் குவிப்பாரும் காப்பாரும் விற்பாரு மின்றி அவனுக்கு எய்துமாறில்லை. இன்னும், நிலத்தில் விளையும் நெல், இலையிற் சோறாவதற்கு எத்துணை மக்கள் உதவியை நாடிற்றென்று ஊடுருவி நோக்கிக் கணிப்பி னத்தொகை இறும்பூது பயக்கும். அவரெல்லாம் பண்டமு மேவலுங் கொள்வாருங் கொடுப்பாருமாய்க் கருதப்படினும் ஊன்றி நோக்குவார்க்கு அவரெல்லாம் ஒப்புரவென்னுங் கடப்பாடு பற்றி ஒழுகினல்லது உலக நடை இடையூறுபடு மென்பது தெள்ளிதின் விளங்கும். ஆகவே, ஊதிய நோக்கிய வாணிகத்தினளவி னில்லாது கைம்மாறு வேண்டாக் கடப்பாடு நாடி உயர்ந்து செல்வது பெறுதற்கரிய மக்கட் பிறவியைப் பெற்றார்க்குச் சிறந்து காட்டிற்று. எனவே, ஒப்புரவறித லாவது பிறர்க்குதவுங் கடப்பாடறிந்துதவ லென்பதாயிற்று. மேலை யதிகாரத்தில் தவிரத் தகுவனவற்றுள் முற் கூறப்படாதவற்றையெல்லாம் தொகுத்துத் தீவினையெனக் கூறி அவற்றை அஞ்சித் தவிர்தல் வேண்டு மென்பது கூறப்பட்டது. இவ்வதிகாரத்தில், செய்யத் தகுவனவற்றுள் முற் கூறப்படாதவற்றை யெல்லாந் தொகுத்து ஒப்புர வெனக் கூறி அதனை அறிந்து செய்தல் வேண்டு மென்பது கூறப்படுகின்றது. இவ் வாற்றான் அதிகார இயைபு காண்க. அல்லதூஉம், மேல் அஞ்சத்தகுவது கூறினர்; 'அஞ்சுவ - தஞ்ச

லறிவார் தொழில்' (குறள் - ௬உ௮) என்ப தாகலான், அவ்வறிவார் தொழிலோ டியைபுற்றுக் கிடந்தது அறிவ தறிதல் என்பதே பற்றி ஈண்டு அறியத்தகுவது கூறினார் என்றலுமாம்.

இவ் வதிகாரத்தில் ஒப்புரவினது சிறப்பும், ஒப்புரவுடைமைக்கு மஃதின்மைக்கு முள்ள ஏற்றத் தாழ்வுகளும், ஒப்புரவு செய்யுமாறும், முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் ஒப்புரவினது சிறப்புக் கூறுகின்றார்:

உகக. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

(இ - ள்.) மாரிமாட்டு - (தாம் உயிர்வாழ்தற்கு இன்றியமையாது வேண்டப்படும் நீரைத் தருகின்ற) மேகங்களிடத்து, உலகு - உலகத்துயிர்கள், என் ஆற்றும் - என்ன (கைமாறு) செய்கின்றன? (ஒன்று மில்லை. ஆதலால் மாரி போல உலகிற்குப் பயன்படும் மேன்மக்கள் செய்யும்) கடப்பாடு - ஒப்புரவுகளும், கைம்மாறு வேண்டா - கைமாறு நோக்குவன வல்ல.

(இ - து.) கைமாறு கருதாது பிறர்க் குதவுக.

கொல், ஓ - அசைநிலை. உதவிசெய்த லெவ்வாற்றானும் தவிரத் தகுவதன்று என்பதைக் கடப்பா டென்னுஞ் சொல்லே விளக்கி நின்றது. கடப்பாடு, ஒப்புரவு, உதவி, உபகாரம், வேள்வி, வேளாண்மை, கொடை என்னும் இவை முதலியன ஒரு பொருளன. இவற்றுட் கடப்பாடென்பது கடமையாதலும் 'கடமையைத் தொலைத்தேன்' என்னும் வழக்கால் அது தவிரப்படுவதன்றாதலும் அறிக. கடப்பாடென்ற வளவிலே கைமாறு வேண்டப்படாதாதல் பெறப்படு மாதலால் அதிகார வசத்தால் பெறப்பட்ட ஒப்புரவே கைம்மாறு வேண்டா கடப்பாடு; கடப்பாடென்பது காரணம் விளக்கி நின்றது யாங்ஙனமோ வெனின், ஒப்புரவாவது கடப்பாடாதலால், கைம்மாறு வேண்டா என இங்ஙன மென்க. செய்வாரது வேண்டாமை செயல்களின் மேனின்றது.

ஒப்புரவு செய்தல் மக்கள் கடமை யென்றறிது. (க)

மக்கள் முயற்சியும் பொருளும் அதற்கே யென்பது வருங் குறள்:

உகஉ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ-ள்.) *தாளாற்றி* - (ஒருவன் தொழில்களில்) முயன்று, *தந்தபொருள் எல்லாம்* - ஈட்டிய பொருள் முழுதும், *தக்கார்க்கு* - தகுதியுடையவர்க்கு, *வேளாண்மை செய்தற் பொருட்டு* - உபகாரம் செய்தற்காக.

(இ-து.) ஒருவன் பொருள் தேடுதல் நல்லார்க் குபகாரம் செய்யும் பொருட் டாதல் வேண்டும்.

எனவே, தானே யுண்டற் பொருட்டும் வைத்து இழத்தற் பொருட்டு மன்றென்ப தாயிற்று. ஈண்டுக் கொள்ளப்பட்ட பொருளே மணக்குடவரும் கொண்டார். ஆசிரியர் பரிமேலழகர் தக்கார்க்காயின் தாம் தந்த பொருளெல்லாம் வேளாண்மை செய்தற் பொருட்டாம் என்று கொண்டார். அது வலிந்து கொண்டதாதலோடு 'உதவி வரைத்தன் றுதவி யுதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து' (குறள்-க0ௐ) எனக் கூறியதாற் பெறப்படும் பயனைக் கருதாத தாதலும் கண்டுகொள்க. இக் கருத்தே பற்றிப் பின் வந்த சான்றோரும் 'தக்கார்க்கே ஈவர் தகார்க்களிப்பா ரில்லென்று - மிக்கார்க் குதவுவார் விழுமியோர் - எக்காலும் - நெல்லுக் கிறைப்பது நீரன்றிக் காட்டுமுளிப் புல்லுக் கிறைப்பரோ போய்' என்பாராயினர். வேளாண்மை செய்தற்குப் பொருளீட்டல் வேண்டு மென்பதும் பொருளீட்ட முயற்சி வேண்டு மென்பதும் ஈண்டுப் பெறப்பட்டன. 'தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே - வேளாண்மை யென்னுஞ் செருக்கு' (குறள் - சுகங) என்பதுங் காண்க.

பொருளாலாம் ஒப்புரவென்ற திக்குறள். (உ)

ஒப்புரவுபோல நல்லவாவன வேறில்லை யென்பது வருங்குறள்.

உ௧௩. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற.

(இ - ள்.) ஒப்புரவின் - ஒப்புரவினைப் போல, நல்ல பிற - நல்லன பிறவற்றை, புத்தேள் உலகத்தும் - தேவருலகத்தி லும், ஈண்டும் - இவ்வுலகத்திலும், பெறல் அரிது - பெறுதல் அரிது.

(இ - து.) ஒப்புரவுபோல நல்லதொன்றை இவ்வுலகத்திலும் பெற முடியாது; தேவருலகததிலும் பெற முடியாது.

கொள்வோருங் கொடுப்போரு மில்லாமல் எல்லாரும் ஒரு தன்மையரானோர் தேவராதலால் அவருலகத்தில் ஒப்புரவு செய்ய இயலாமையின் ஆண்டு அஃது அரிதாயிற்று. ஒருவர்க்கு ஆகிப் பிறி தொருவர்க்கு ஆகாத ஈகை முதலியன போலாது இஃது எல்லாருக் கும் ஒப்ப ஆவதொன்றாதலால் ஈண்டு அருமையுடையதாயிற்று. ஈண் டருமையாயது இது போல்வது பிறிதின்மையால். பெறற்கரிதென் றும் பாடமுண்டு.

இவை மூன்று பாட்டாலும் ஒப்புரவினது சிறப்புக் கூறப் பட்டது. (௩)

ஒப்புரவுடைமையின் ஏற்றமு மஃதின்மையின் தாழ்வுங் கூறு வது வருங்குறள் :

உ௧௪. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

(இ - ள்.) உயிர் வாழ்வான் - உயிரோடு கூடி வாழ்பவ னுவான், ஒத்தது அறிவான் - உலகநடை யறிந்து உபகாரஞ் செய்பவன்; மற்றையான் - அதை யறிந்து செய்யாதவன், செத்தாருள் வைக்கப்படும் - (உயிருடையவனே யானாலும்) செத்தவருள்ளே ஒருவனுகக் கருதப்படுவன்.

(இ - து.) ஒப்புரவு செய்யாதவன் பிணத்தோ டொப்பன்.

உயிருக்கு உரிய அறிவுடைமை காணப்படாததினலே, ஒப்புர வறியாதவன் உயிரில்லாப்பிணம் போன்றான். வைக்கப்படுதலாவது உள்ளத்தில் வைக்கப்படுதல்; அஃதாவது கருதப்படுதல்.

ஒப்புரவுண்மை யின்மைகளின் வேறுபாடு கூறியதிது. (௪)

ஒப்புரவு செய்யுமாறு கூறுவன வரும் ஐந்து குறள்கள் :

உகரு. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

(இ - ள்.) உலகு அவாம் - உலகத்தார் விரும்புகின்ற, பேர் அறிவாளன் - (ஒப்புரவறியும்) பெரிய அறிவுடையா னது, திரு - செல்வம், ஊருணி நீர் - ஊரார் நீர் உண்ணுதற் கிடமான குளத்தின் நீர், நிறைந்தற்று - நிறைதல் போலும்.

(இ - து.) அறிவுடையான் செல்வம் விரும்பி வந்தார் கொள்ளு மளவு பயன்படும்.

உண்ணப்படுவது உணி யென வினைமுதலாய் நின்றது. அறி வாளனுதலால் செல்வம் பொருட் செல்வம் கல்விச் செல்வம் இரண் டினையும் குறிக்கும். விரும்பி வருவார் வேட்கைக்கும் தேவைக்கும் போதிய அளவாக ஊருணி நீர்தருதல் போல அறிவாள னும் தனது இருபெருஞ் செல்வத்தை அவாவி வேண்டி வந்தார்க்கு அவர் அவாத் தீர வேண்டுமளவு கொடுப்பானுதலோடு, ஊருணி நீர் கொள்ளக் குறையாது வருவாயால் என்றும் நிறைந்திருத்தல் போல அவன் செல்வமும் கொள்ளக் குறையாது வருவாயால் என்றும் நிறைந் திருக்கும் என்பது பெறுதும். உலகவாம் என்பதற்கு உலக நடையை விரும்பிச்செய்யும் என்றார் பரிமேலழகர்; அதிகாரங் கருதிப்போலும். அது கருதின் வருவித்துங் கொள்ளப்படலாம். மனப்பட்டவாறு கொள்க. பின்வரு மிரு பாட்டுக்கட்கும் இஃதொக்கும்.

அறிவாளன் திரு பயன்படுமாறு கூறியதிது. (௫)

நயனுடையான் திரு பயன்படுமாறு கூறுவது வருங்குறள்.

உகசு. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

(இ - ள்.) செல்வம் - செல்வமானது, நயனுடையான் கண் - (ஒப்புரவு செய்யும்) இனிமையுடையவனிடத்தே, படின் - உண்டாகுமாயின், (அது) பயன் மரம் - பயன்தரும் மரம், உள்ளூர் - ஊர்நடுவே, பழுத்தற்று - பழுத்தல் போலும்.

(இ - து.) நயனுடையான் செல்வம் நெருங்கினார் பலர்க்கும் இனியதாய்ப் பயன்படும்.

நயன் விரும்புதற்குரிய இனிமைக் குணமாதல் முற் கூறப்பட்டது. ஒப்புரவு செய்தல் அத்தகைய தாதலால் அதனை நயன் என்றார். ஊர் நடுவுட் பயனுடைய மரம் பழுத்தால் அப் பழங்கள் தாமே கனிவுமிகுதியாற் கீழ் விழுந்து நெருங்கிச் செல்வார் பலரும் விரும்பிக் கொள்ள அவர்க்கு இனிமை பயத்தல் போல, இனிமைக் குணம் மிகுந்தவன் தன் உள்ளக் கனிவால் தன்னை நெருங்கினார்க் கெல்லாம் தன் செல்வத்தை வலியக் கொடுத்து அவர்க்கு இன்பம் பயத்தலைக் கருதுவான் என்பதாயிற்று. ஊருள் எனற் பாலது உள்ளூர் என முன்பின்னாக மாறி நின்றது போலி. ஆல் - அசை. படுதல் - உண்டாதல்; எற்பாடு என்பதன்கண்ணும் படுதல் இப் பொருட்டாதலை விளக்கினார் ஆசிரியர் **சிவஞானயோகிகள்; தொல்காப்பியச் சூத்திரவிருத்தி** காண்க; 'உலகநீதி பலவற்றுள்ளும் ஒப்புரவு சிறந்தமையின் அதனையே நயன் என்றார்' என்பது **பரிமேலழகர்** உரை.

நயனுடையான் செல்வம் பயன்படுமாறு கூறியதிக் குறள் : (சு)

பெருந்தகையான் செல்வம் பயன்படுமாறு கூறுவது வருங் குறள் :

உகஎ. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

(இ - ள்.) செல்வம் - செல்வமானது, பெருந்தகையான் கண் - (ஒப்புரவு செய்யும்) பெரியதகைமையுடையா னிடத்

தில், படின் - உண்டானல், (அது) மருந்தாகி - (வேரும் அடியும் கிளையுங் கொம்பும் இலையும் பூவும் காயும் கனியும் விதையுமாய தன் உறுப்புக்கள்யாவும் பிணிகட்கு) மருந்தாகி, தப்பா - தப்பாத, மரத்தற்று - மரத்தைப் போலும்.

(இ - து.) பெருந்தகையான் செல்வம் பலரது வறுமைப் பிணியை நீக்கப் பயன்படும்.

தப்புதலாவது வேண்டுவார் சென்று கொள்ளுதற் கரிதான மலையுச்சி முட்புதர் முதலிய இடங்களில் நின்றுதல், கண்ணுக்கு எளிதிற் புலப்படாத மறைவிடங்களில் நின்றுதல், கால வேறு பாட்டால் இலை பூ காய் கனி முதலிய உறுப்புக்களில் வேண்டுவது குறைந்தாதல் பயன்படாமற்போதல். அங்ஙனம் பயன்படாமை யில்லாத மரம், வேண்டுவார்க்கு எளிதிற் கிடைத்துத் தன்னுடைய உறுப்புக்களை அவர் சிதைத்துக் கொள்ளவும் தன் கேட்டைக் கருதாது, தனக்கு உயிரேயனைய வேரை அவர் வெட்டிக் கொள்ளினும் வருந்தாது கொடுத்துப் பிணியுற்றார்ப் பிணியைத் தீர்த்தற்குப் பயன்படுதல்போல, பெருந்தகைமை யுடைமையானும், தன் உதவியை நாடுவார்க்கு எளிதிற் கிடைப்பனய், தன் செல்வம் அவர் கொள்வதாற் குறைபடுவதைச் சிறிதும் கருதாது, பிறர் வருத்தம் நீங்கத் தனது உயிரையே கொடுக்க வேண்டினும் வருந்தாது கொடுத்து வறுமைப்பிணியுற்றார் வறுமையைத் தீர்த்துப் பயன் படுதலைக் கருதுவான் என்பதாயிற்று.

இவை மூன்று பாட்டானும் ஒப்புரவு செய்தல் அறிவுடைமையும் இனியதும் பெருந்தகைமையும் ஆம் என்பதும், அறிஞரும் இனியரும் பெருந்தகையாளரும் எனக் குணவேறுபாட்டால் மூவேறு வகைப்பட்டார் ஒப்புரவு செய்யுங்கால் அது பயன்படுமாற்றின் வேறுபாடும், ஊருணியும் பயன்மரமும் மருந்தாகித் தப்பா மரமும் தாம் பயன்படுமாற்றிற் சிறிது வேறுபடினும் தம் பொருளைப் பிறர்க்குப் பயன்படுத்தலல்லது தமக்கே பயன் படுத்தக் கருதாமையில் ஒன்றுபட்டாற் போல மேற்கூறிய அறிஞர் முதலிய மூவரும் பிறர்க்குதவு

மாற்றின் வேறுபடினும் தம்பொருளைத் தமக்கே பயன்படுத்திக் கொள்ளுதலைக் கருதாமையில் ஒன்றுபட்டாராதலும் பெறப்பட்டன.

செல்வர் ஒப்புரவு செய்யுமாறு கூறின விவை. (எ)

வறிஞர் ஒப்புரவு செய்யுமாறு கூறுவன வருமூன்று குறள்கள்:

உகஅ. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(இ-ள்.) கடன் அறி - (தம்முடைய) கடப்பாட்டை அறிந்த, காட்சியவர் - இயற்கை அறிவுடையவர், இடனில் - (உதவி செய்வதற்குரிய செல்வம்) விரிவற்ற, பருவத்தும் - காலத்திலும், ஒப்புரவிற்கு - ஒப்புரவு செய்தற்கு, ஒல்கார் - (உள்ளந்) தளரார்.

(இ - து.) ஒப்புரவு கடப்பாடாதலை அறிந்தவர் வறுமையிலும் ஒப்புரவு செய்வர்.

ஒப்புரவு கடப்பாடாதல் அதிகாரத் தொடக்கத்திலே கூறப்பட்டது. கடனைத் தீர்க்க வேண்டுமென்ற கருத்துடையவன் அது தீர்த்தற்கு வேண்டும் பொருளை முற்றுமுடைய னல்லனாயினும் தன் நிலைமைக் கேற்றவாறு சிறுகச் சிறுகக் கொடுத்தாயினும் கடன் கொடுத்தானுக்கு உழைத்தல் முதலியவாற்றால் ஆவன செய்தாயினும் அக்கடனைத் தீர்ப்பானன்றே? அவ்வாறே பிறர்க்குதவல் மக்கள் கடன் என்னும் உண்மையினை அறிந்தவன் அதற்குரிய பொருட் செல்வம் இலனாயினும் தனக்குள்ளதற் கேற்றவாறு பிறர்க்குதவுவன்; அதுதானும் இயலாதேல் மெய்யாலும் மொழியாலும் பிறர்க்குச் செய்யலான உதவிகள் பலவுள வாதலின் அவைகளைச் செய்வானே யன்றிப் பொருளில்லையே என்று உளந்தளர்ந்து அது காரணமாக ஒப்புரவு செய்தலைக் கைவிடான் என்பது பெறப்படும். 'வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி - பண்பிற் றலைப்பிரித லின்று' (குறள் - கூருரு) என்று ஆசிரியர் பிற்கூறுதலும் ஈண்டு நோக்கற் பாலது.

அறிஞர் வறிஞராயின் ஒப்புரவு செய்யுமாறு கூறிய திக் குறள். (அ)

நயனுடையார் வறியராயின் ஒப்புரவு செய்யுமாறு கூறுவது வருங்குறள் :

உகக. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு.

(இ - ள்.) *நயனுடையான் - (ஒப்புரவு செய்யும்) இனிமையுடையவன், நல்கூர்ந்தான் ஆதல் - வறுமையுற்றானாவது, செயுநீர - செய்யுந் தன்மைய (வான ஒப்புரவுகளை யெல்லாம்), செய்யாது - செய்யாமல், அமைகலா ஆறு - அமையமாட்டாத இயல்பு (நோக்கியாம்).*

(இ - து.) *இனிமைக்குண முடையார் வறிஞரானால் தம் வறுமைக்கு வருந்தார்; பிறர்க்குப் பொருளாற் செய்யத்தக்க ஒப்புரவுகளைச் செய்ய மாட்டாமை குறித்தே வருந்துவர்.*

*இனிமைக்குண முடையவன் என்றதால் அவன் தன் மொழியாலும் செயலாலும் பிறர்க்கு இனிய செய்தலாகிய ஒப்புரவிற் குறைபடா னாதல் பெறப்பட்டது. பிறர்க்கும் இன்பமே பயக்கும் கருத்துடைய னாதலால் இலன் என்னும் எவ்வம் உரைப்பானுக்குக் கொடுத்து அவ் வெவ்வத்தைப் போக்கமாட்டாமல் தான் அவ் விலனென்னு மெவ்வ முரைக்க வேண்டுதலின் அவனுக்கு வறுமை இருவாற்றானு மெவ்வ மாயிற்று. எவ்வம் - துன்பம்.*

*நயனுடையான் வறியனாயின் ஒப்புரவு செய்யுமாறு கூறிய திக் குறள்.* (க)

*பெருந்தகையான் வறியனாயின் ஒப்புரவு செய்யுமாறு கூறுவது வருங்குறள் :*

உக0. ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

(இ - ள்.) ஒருவன்—, ஒப்புரவினான் - ஒப்புரவு செய்தலால், கேடுவரும் எனின் - (பொருட்) கேடு வருமென்று சொன்னால், அஃது - அவ்வொப்புரவு, விற்றுக்கோள் - (ஒன்றை) விற்று (ஒன்று) கொள்ளுதல் (ஆகிய வாணிகமாம்), தக்கது உடைத்து - தகுதியை உடையது.

(இ - து.) ஒப்புரவு செய்தலினாற் பொருட் கேடுவருமென்று கருதினால் ஒப்புரவைக் கொடுத்துப் பயன் கொள்ளும் வாணிகமாகக் கொள்வதோ டொக்குமென்று கொண்டு அவ்வாறு கருதல் செய்யார் பெருந்தகையார்.

எனவே பெருந்தகையாளர் ஒப்புரவு செய்தலால் வருங் கேட்டைக் கேடாகக் கொள்ளார், ஆக்கமெனவே கொள்வர் என்பதாயிற்று. ஒருவன் என்பதை விற்றுக்கோள் என்பதோ டியைத்துப் பொருள் கொள்ளினுமாம். 'அக்கேடு ஒருவன் தன்னை விற்றாயினுங் கொள்ளுந் தகுதியை யுடைத்து' என்றார் **பரிமேலழகர்**.

வாணிகம் ஊதியங் கருதிச் செய்வது. ஒப்புரவு கடப்பாடாகக் கருதிச் செய்வது. ஆதலால் வாணிகத்திற்காம் ஊதியத்தை ஒப்புரவினால் கொள்ள விரும்புதல் ஏற்புடைத்தன் றாயிற்று. தக்கதெனத் தகுதி குறித்தமையின் ஈண்டுச் சுட்டப்பட்டார் பெருந்தகையாளராயினர். அவருடைய பெருந்தகைமையைக் கண்டு உலகமும் அவருடைய கேட்டைக் கேடாகக் கொள்ளாதென்பதும் இதனாற் பெறப்படும். என்னை? தகுதியுடையார் நடுவுடையாராதல் "தகுதியெனவொன்று நன்றே பகுதியாற்-பாற்பட் டொழுகப் பெறின்" (**குறள் - கககக**) என்றதனானும், அவர் கேடு கேடன்றாதல் 'கெடுவாக வையா துலக நடுவாக - நன்றிக்கட் டங்கியான் றாழ்வு' (**குறள் - ககள**) என்றதனானும் முன்னே பெறப்பட்டமையி னென்பது. (கo)

இவ் வதிகாரத்தில் முதல் மூன்று குறள்களால் ஒப்புரவினது சிறப்பும், அடுத்த குறளால் ஒப்புரவு செய்வாற்கும் செய்யாற்கு முள்ள

வேறுபாடும், அடுத்த மூன்று குறள்களால் அறிஞர் நயனுடையார் பெருந்தகையார் என அறிவின் பெருமையாலும் உள்ளத்தின் பெருமையாலும் அவை யிரண்டும் ஒத்தியலும் பெருமையாலும் மூவகைப்பட்ட இயல்பினர் செல்வமுற்ற காலத்தில் ஒப்புரவு செய்யுமாறும், இறுதி மூன்று குறள்களால் அம் மூவரும் வறுமை யுற்ற காலத்தில் ஒப்புரவு செய்யுமாறும் கூறப்பட்டன.

---

## உகூ. ஈகை

அஃதாவது, வறியராய் ஏற்றார்க்குக் குறியாது கொடுத்தல். ஒப்புரவாவது தன்னோ டொத்தார்க்கும் உயர்ந்தார்க்கும் தாழ்ந் தார்க்கும் பல்லாற்றானும் உலகநடை கருதி உதவிசெய்தலைக் கரு திற்று. இஃது அன்னதன்றி வறியராய்த் தன்மாட்டு வந்து இல்லை யென்று இரந்தவர்க்கு இல்லை யென்னாது கொடுத்துப் பொதுவின் அவர் வறுமைப்பிணி தீர்த்தலையும் சிறப்பின் அவர் பசிப்பிணி தீர்த் தலையுங் கருதிற்று. ஓராற்றான் இதுவும் ஒப்புரவி னடங்குமாயினும், 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' (மணிமேகலை) என்ப வாதலான் அச் சிறப்பு நீக்கி வேறாகக் கூறப்பட்டது. இதனான் அதி கார வியைபு காண்க. 'இது மறுமை நோக்கிய தாதலின் இம்மை நோக்கிய ஒப்புரவறிதலின்பின் வைக்கப்பட்டது' என்றார் **பரிமே லழகர்.** அறமாவன எல்லாம் இருமையு நோக்கியவே யாதல் **அறன் வலியுறுத்தலாற்** றெளியப்பட்டது. அற்றாக ஒன்று இம்மை நோக் கிற்று, ஒன்று மறுமை நோக்கிற் றெனல் ஏற்குமாறு காண்கிலேம். காண வல்லார் கொள்க.

இனி யொருசாரார் இது செல்வரால் செய்யப்படுவ தொன்றாத லால், நல்கூர்ந்தா ரல்லாதாராற் செய்யப்படும் ஒப்புரவின்பின் கூறப் பட்ட தென்பர். ஒப்புரவும் செல்வராற் செய்யப்படுவதாதல் மேலை யதிகாரத்திற் பல்லாற்றானும் கண்டோம். 'இலனென்னும் எவ்வ முரையாமை யீதல்' (உஉங) எனவும் 'சாதலி னின்னாத தில்லை யினிததூஉ-மீத லியையாக் கடை' (உஙo) எனவும் ஆசிரியர் இவ் வதிகாரத்திற்றானே கூறுதலானும், 'ஆற்றுவா ராற்றல் பசியாற்றல்' (உஉரு) 'அற்றா ரழிபசி தீர்த்தல்' (உஉசு) 'பாத்தூண் மரீஇ யவனை' (உஉஎ) 'தாமே தமியருணல்' (உஉக) என இவ்வாறெல்லாம் பசி தீர்த்தலையே சிறந்தெடுத்துக் கூறுதலான் அது ஈகை யெனப்படுதற் குரித்தாதலானும், அவ் வீகை யாவர்க்குமா மென்பது தானே தெளி யக்கிடத்தலோடு 'யாவர்க்கு மா முண்ணும்போ தொரு கைப்பிடி' (திருமந்திரம்) என இவ்வாறு வரும் ஆன்றோர் உரைகளாலும் தெளியக் கிடத்தலானும் செல்வரல்லார்க்கும் ஈகை உரித்தாதல்

பெறப்படும். ஆதலாற் செல்வராற் செய்யப்படுவது ஈகையெனக் கொண்டு கொள்ளும் அதிகார இயைபு இயையா தென்க

இனி, இவ் வதிகாரத்தில், ஈகையின் இலக்கணமும், ஈதலின் சிறப்பும், ஈயாமையின் இழிவும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் ஈகையி னிலக்கணங் கூறுகின்றார்.

உஉக. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(இ - ள்.) வறியார்க்கு - ஒரு பொருளும் இல்லாதார்க்கு, ஒன்று ஈவதே - (அவர் வேண்டியது) ஒன்றைக் கொடுப்பதே, ஈகை - ஈகையாவது; மற்றெல்லாம் - ஒழிந்த எல்லாக்கொடையும், குறி எதிர்ப்பை - குறிக்கப்பட்ட பயனைப் பின் கொடுத்தலாகிய, நீரது - தன்மையை, உடைத்து - உடையதாம்.

(இ - து.) பயன் கருதாது வறியார்க்குக கொடுப்பதே ஈகை.

எதிர்ப்பை - ஐகாரவீற்றுத் தொழிற்பெயர்; எதிர்கொடுத்த லென்னும் பொருட்டு. குறியெதிர்ப்பையாவது, அளவு குறித்து வாங்கி அவ்வாங்கிய வாறே கொடுத்தல். நீரது என்பதில் அது வென்பது பகுதிப்பொருள் விகுதி.

ஈகையின் இலக்கணங் கூறிய திக்குறள். (க)

ஈகையின் சிறப்புக் கூறுவன வரும் ஆறு குறள்கள்:

உஉஉ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

(இ - ள்.) கொளல் - ஏற்றல், நல்லா றெனினும்— நன்மை (பயக்கும்) நெறியென்பா ருளராயினும், தீது - (அது) தீயதாம், மேலுலகம் - (ஈந்தார்க்கு) மேலுலகம் (எய்துதல்), இல் எனினும் - இல்லை யென்பா ருளராயினும், ஈதலே நன்று - ஈதலே நல்லது.

(இ - து.) ஈதலே சிறந்த அறமாம்.

உம்மை ஈரிடத்தும் எதிர்மறைக்கண் வந்தது. கொளல் நல்லா றென்பா ரில்லை; ஈதலால் மேலுலகம் இல்லென்பா ரில்லை என்ற வாறு. ஏகாரம் பிரிநிலைக்கண்ணது; பிறவறங்களின் ஈதல் சிறந்த தென்றவாறு. கொளல் தீதாதலை இரவச்சம் என்னும் (௱ள) அதிகாரத்தாற் பிற்கூறுவராதலால் ஈகையின் நன்மை கூறவந்த இடத்தில் அதைக் கூறியது 'வந்தது கொண்டு வாராத துணர்த்தல்' (தொல்காப்பியம்-மரபியல் கக௦) என்னும் உத்தி.

ஈதல் ஒருவனுக்கு நன்றென்ற திக் குறள். (உ)

குலத்துக்குஞ் சிறப்பென்பது வருங்குறள்:

உஉ௫. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

(இ - ள்.) இலன் என்னும் - (யான்) வறியேன் (என்று இரப்பான்) சொல்லும், எவ்வம் - துன்பந் (தரும் சொல்லை), உரையாமை - (தான் பிறரிடத்துச்) சொல்லா மையும், ஈதல் - (அவ்வாறு தன்னிடத்துச் சொல்லி இரப்பா னுக்குக்) கொடுத்தலும், குலனுடையான் கண்ணே - நற் குடிப் பிறந்தவனிடத்தே, உள - உள்ளனவாம்.

(இ - து.) இரந்தார்க்கு இல்லை யென்னாது கொடுத்தல் நற் குடிப் பிறந்தவனுக்கே யாம்.

மேற்குறளில் 'கொளல் தீது; ஈதல் நன்று' என்றார். அவை யிரண்டனுள் முன்னதை ஒழிதற்கும் பின்னதைச் செய்தற்கும் உரியான் இவனென்பதை இக் குறளால் கூறினார். உரையாமை யீதல் என்பது உம்மைத்தொகை. இனி இதனை வினையெச்சத் தொடராகக்கொண்டு (1) இலனென்னு மெவ்வத்தை ஒருவன் தன் னிடத்துச் சொல்லாமல் அதற்குத் தானே முற்பட்டுக் கொடுத்தல் எனவும், (2) இலன் என்னு மெவ்வத்தைத் தன்னிடத்துக் கூறிப் பயன்பெறாமல் பிறனொருவனிடம் சென்று இரப்பான் உரையாமல் கொடுத்தல் எனவும். (3) இலனென்னு மெவ்வத்தைத் தன்னிடம்

இரப்பானுரைக்கத் தான் இரப்பானிடம் உரையாமல் கொடுத்தல் எனவும் பொருள் கூறுவாருமுளர். அவ்வாறு கொள்வார்க்கு உள வென்னும் பன்மைவினைக்குறிப்பு இடர்ப்பாடுதருதலின், அவ் விடர்ப் பாட்டை ஒழிக்க அவர் ஈயப்படும் பொருள் பலவாதலின் ஈதல் பொருட்பன்மைபற்றி வந்த பன்மை யென்பர்.

இரத்தல் துன்பந் தருவ தென்ற திக் குறள். (௩)

இரக்கப்படுதலும் ஈயாவிடத்துத துன்பமே யென்பது வருங் குறள்.

உ௨௪. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

(இ - ள்.) (இரத்தலேயன்றி) இரக்கப்படுதல் - இரக்கப் படுதலும், இன்னாது - இனிதாகாது, இரந்தவர் - இரத்தலைச் செய்தவர், இன்முகம் - (தாம் இரந்த பொருளைப் பெற்ற தால் நெஞ்சமுவந்து அவர் காட்டும்) இனிய முகத்தை, காணுமளவும் - (இரக்கப்பட்டோன்) பார்க்குந் துணையும்.

(இ - து.) இரந்தார்க் கீயாமை இன்னாது.

இரக்கப்படுதலும் என இரத்தலைத தழுவி நின்ற எச்சவும்மை யும், அளவும் என அக் காலம் முற்றையும் குறித்து நின்ற முற்றும் மையும் விகாரத்தாற் றொககன. இரக்கப்படுதல் தன்பா லொருவர் இரக்கத் தான் அவர்க்கு ஈயும் நிலையிலேனும் மறுக்கும் நிலையிலேனும் நிற்றல். தான் ஈய இரந்தவர் அதனால் மகிழ்ச்சியுறுமளவும் இரக்கப் படுதலாகிய தன் நிலை இன்னாதெனவே தான் மறுக்கும் நிலையினா யின் அது பெரிதும் இன்னாதாதல் சொல்ல வேண்டா வாயிற்று. இக் கருத்தானே பிறரும்,

'கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோரா சோர்வச்ச—மெல்லா
மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார்.' (நாலடி—௧௩௫)

என்றார். எனவே; இரப்பார் இரப்பவை யெல்லாங் கரவாது கொடுத் தல் வேண்டு மென்பதாயிற்று.

இரந்தவர் துன்பத்தை நீக்கவேண்டுமென்ற திது. (௪)

பசித்துன்பத்தை நீக்கல் சிறந்தது என்பது வருங்குறள் :

உகரு. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்.

(இ - ள்.) *ஆற்றுவார்* - (தவத்தால்) வலியவர்க்கு, *ஆற்றல்* - வல்லமையாவது, *பசி ஆற்றல்* - (தம்மையுற்ற) பசியைப் பொறுத்தல் ; (அவ் வல்லமைதான்) *அப் பசியை* - (பொறுத்தற் கரிய) அந்தப் பசியை, *மாற்றுவார்* - (ஈதலி னால்) ஒழிப்பாரது, *ஆற்றலின் பின்* - வல்லமைக்குப் பிற் பட்டதாம்.

(இ - து.) பிறர் பசியை ஆற்றுவோா, தம் பசியைப் பொறுக் கும் தவத்தினரினும் மேம்பட்டோர்.

தாமும் பசித்துப் பிறரையும் பசிதீர்க்க மாட்டாத தவத்தினர் ஆற்றலினும், தம் பசியையும் பிறர் பசியையும் தீர்கக வல்ல ஈவோர் ஆற்றல் மேம்பட்ட தாதலின் இவ்வாறு கூறினர்.

பசிப்பிணியைத் தீர்த்தல் வன்மையிற் சிறந்தது என்றதிக் குறள். (ரு)

அதுவே வைப்பிற் சிறந்த தென்பது வருங்குறள் :

உஉகூ. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

(இ - ள்.) *அற்றார்* - பொருளற்றவரது, *அழி பசி* - (எல்லா நன்மைகளையும்) அழிக்கும் பசிப்பிணியை, *தீர்த்தல்* - நீக்குக ; *அஃது* - அங்ஙனம் நீக்கல், *பொருள் பெற்றான் ஒருவன்* - பொருளைப் பெற்றவன் ஒருவன், *வைப்புழி* - (அப் பொருளைத் தனக்கு உதவ) வைக்குமிடமாகலான்.

(இ - து.) வறிஞர் பசியைத் தீர்க்கப் பயன்படும் பொருள் வேண்டுங்கா லுதவ வைத்த சேமநிதிபோலும்.

ஈதல் ஓர் அறமாதலானும், அறம் 'பொன்றுத்துணை' (குறள்-ள.சா) யாதலானும், பசிப்பிணி தீர்த்தற்குப் பயன்படும் பொருள் ஈகையாகிய அறமாகிப் பொன்றுத் துணையாதலானும் 'பசிதீர்த்தல் பொருள் வைப்புழி' என்றார் தீர்த்தல் - தல்லீற்று வியங்கோள்.

பிறர் பசியைத் தீர்க்கவென்ற திக் குறள். (சு)

அது செய்வானைப் பசிப்பிணி தீண்டாதென்பது வருங்குறள்.

உஉஎ. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

(இ - ள்.) (எஞ்ஞான்றும்) பாத்து ஊண் - பகுத்து உண்டலை, மரீஇயவனை - பழகினவனை, பசி என்னும் தீப் பிணி - பசி என்று சொல்லப்படும் கொடிய நோய், தீண்டல் அரிது - பற்றுதல் இல்லை.

(இ - து) பிறர்க்கு இட்டுத் தான் உண்ணுமவனைப் பசிப்பிணி அணுகாது.

பிணியாவது நோய்; உடம்பின் உறுப்புக்களைத் துன்பமின்றி இயங்க வொட்டாமற் கட்டிவைத்தாற் போலச் செய்தலின் அஃது அப்பெயர் பெற்றது. பசி, உடம்பின் அகவுறுப்புப் புறவுறுப்புக்களைக் கட்டிவைத்தாற்போலச் செய்தலோடு உள்ளத்தின் எழுச்சியையும் அறிவின் கிளர்ச்சியையும் தடுத்துக் கட்டிவைத்தாற்போலச் செய்து துன்புறுத்தலின் பசியைப் பிணியென வாளா கூறுது 'தீப்பிணி' என்றார். பிறர் நோயைத் தீர்க்கவல்லான் தன் நோயைத் தீர்க்க வல்ல ஞதல் சொல்லாதே யமைதலின், பிறர் பசியைத் தீர்ப்பான் தன் பசியையும் தீர்க்க மாட்டுவான் என்பதாயிற்று.

இவை யாறு பாட்டாலும் ஈதலின் சிறப்புக் கூறப்பட்டது. ()

ஈயாமையின் இழிவு கூறுவன வரும் மூன்று குறள்கள்:

உஉஅ. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ - ள்) *தாம் உடைமை - தாம் உடைய பொருளை, வைத்து - (ஈயாது தொகுத்து) வைத்து, இழக்கும் - (பிறகு அதைப் பிறர் கொள்ளத் தாம்) இழக்கும், வன்கணவர் - கொடியர், ஈத்து - (வறியார்க்கு வேண்டியவற்றைக்) கொடுத்து, உவக்கும் - (அவ் வறியவர்) உவத்தலான், (கொடுத்தவர் அடையும்) இன்பம் - இன்பத்தை, அறியார் கொல் - (நுகர்ந்து) அறியாரோ?*

(இ - து.) *பிறர்க்கு ஈயாதார் தம் பொருளை யிழப்பர்.*

உவகக்கும் என்பது காரணப்பொருட்டாய் வந்த பெயரெச்சம். அஃது இன்பம் என்னும் காரியப் பெயர்கொண்டு முடிந்தது. அறிந்தாராயின் மேலும் மேலும் அவ் வின்பத்தை நச்சி ஈதலைச் செய்வாரேயன்றிப் பொருளைச் சேர்த்துவைத்து இழக்க ஒருப்படார் என்பார் 'அறியார்கொல்' என்றார். ஒருமுறை கொடுத்து அதனால் வரும் இன்பத்தை நுகர்ந்தவர் பின் அது செய்யாமல் வைததிழவாராதலின் வைத்திழப்பார் ஒருபொழுதும் கொடுத்தறியா வன்கணராயினர். இதற்கு இவ்வாறன்றி அருளுடையார் எய்தும் இன்பத்தினைக் கண்டறியார்கொல்லோ என்று பொருள்கொண்டார் **பரிமேலழகர்.** ஈந்து எனற்பாலது ஈத்து என வலிக்கும்வழி வலித்தலாயிற்று.

செல்வமுடையார் ஈயாமையின் இழிவு கூறியதிது. (அ)
செல்வந் தேடுவார் ஈயாமையின் இழிவு கூறுவது வருங்குறள்.

உஉகூ. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

(இ - ள்.) *நிரப்பிய - (பொருளின் குறைவை) நிறைகக் வேண்டி, (வறியார்க்கு ஈயாது) தாமே தமியர்- தாமே தமியராக, உணல் - உண்ணுதல், (ஒருவர்க்கு) இரத்தலின் - (பிறர் பாற் சென்று) இரத்தலினும், மன்ற - நிச்சயமாக, இன்னாது - துன்பஞ் செய்வதாம்.*

(இ - து.) பொருள்சேர்க்கும் ஆசையால் பிறர்க்கீயாது தானே உண்டல் இரத்தலினும் இழிவாம்.

பொருளின் குறைவை நிறைத்தலாவது, இத்துணைப் பொருள் ஈட்டக் கடவேம் எனக் குறித்துக்கொண்டு அதனை ஈட்டுவதிலே நாட்டமாய் இவறிக் கூட்டுதல். இவறுதல் - உலோபஞ் செய்தல். நிரப்பிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதனை அகரவீற்றுப் பலவின் பெயராகக் கொண்டு 'தேடிய உணவுகளை' என்றுரைப்பாரு முளர். இரத்தற் குள்ளது அப்பொழுதை இழிவே; பின் நல்குர வில்லை. தமியருண்டற்கு அவை யிரண்டு முளவாமாகலின் 'இரத்தலின் இன்னாது' என்றார்.

பொருள் தேடுவார் ஈயாமையின் இழிவு கூறியதிது. (௯)

பொருள் இல்லார் ஈயககூடாமையின் இழிவு கூறுவது வருங் குறள்:

௨௩௦. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

(இ - ள்.) (ஒருவர்க்குச்) சாதலின் - சாதலினும், இன்னாததில்லை - துன்பந்தருவ தொன்று இல்லை; அதூஉம் - அச்சாதலும், ஈதல் இயையாக்கடை - (வறியார்க்குக்) கொடுத்தல் முடியாத விடத்து, இனிது - இனியதாம்.

(இ - து) வறியார்க்கீயமுடியாத வறுமையுழத்தலினும் சாதல் நல்லது.

'ஒத்ததறிவா னுயிர்வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்' (குறள்-உ௧௪) என முன்னுங் கூறினமையின், ஒப்புரவறிதலிற் சிறந்த ஈகையைச் செய்யமாட்டாமையினாலே செத்தாருள் வைக்கப்பட்டுப் பிறர்க்குப் பயன்படா யாக்கையைப் பூமிக்குச் சுமையாக வைத்துக்கொண்டு உயிர் வாழ்தலினும் சாதல் நல்லதாயிற்று. (௧௦)

இவ் வதிகாரத்தில், முதற் குறளால் ஈகையின் இலக்கணமும் அடுத்த ஆறு குறள்களால் ஈதலின் சிறப்பும், இறுதி மூன்று குறள்களால் ஈயாமையின் இழிவும் கூறப்பட்டன.

## உச. புகழ்

அஃதாவது, இல்வாழ்க்கைமுதல் ஈகையீறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப் பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து அவரிறந்தும் தான் இறவாது நிற்கும் நல்லுரை. இது பெரும்பான்மையும் ஈதல்பற்றி வருதலின் அதன்பின் வைக்கப் பட்டது.

இவ் வதிகாரத்தில், புகழின் சிறப்பும், புகழ் உடையாரது மேன்மையும், அஃதில்லாரது தாழ்வும், தொகுப்புரையும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் புகழது சிறப்புக் கூறு கின்றார்.

உடுக. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) ஈதல் - (வறியார்க்கு) ஈக; இசைபடவாழ்தல் - (அதனாற்) புகழுண்டாக வாழ்க; அதுவல்லது - அப்புகழல் லது, உயிர்க்கு - மக்களுயிர்க்கு, ஊதியம் - பயன், இல்லை - (பிறிதொன்று) இல்லை (யாகலான்).

(இ - து) மக்களாய்ப் பிறந்ததற்குப் பயன் புகழுண்டாக வாழ்தலே.

இசைபட வாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிற காரணங் களும் உளவேனும், அவையெல்லாம் 'பசிவந்திடப் பறந்துபோம்'. 'குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும் - பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉ - நாணணிகளையு மாணெழில் சிதைக்கும்..... பசிப்பிணி யென்னும் பாவி' என்றார் **மணிமேகலையினும் (கக-ம் காதை எகூ-அய)**. ஆதலான் அப் பசிப்பிணியைத் தீர்க்கும் ஈகை இசைபட வாழ்தற்குச் சிறந்த தாயிற்று. உயிர்க்கெனப் பொதுப்படக் கூறினாரேனும் மக்களுயிர்க்கே ஏற்றதாயினமை அறியற்பாற்று

புகழ்பட வாழ்க என்ற திக் குறள். (க)

புகழ்படவாழ்தல் ஈகையானே யாமென்பது வருங்குறள்:

உ௩உ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்.

(இ - ள்.) உரைப்பார் - சொல்லுபவர், உரைப்பவை எல்லாம் - சொல்லுபவை யெல்லாம், (யாவை யென்று நோக்கின்) இரப்பார்க்கு - (வறுமையால்) இரப்பவருக்கு, ஒன்று - (அவர் வேண்டியது) ஒன்றை, ஈவார்மேல் - கொடுப்பவர் மீது, நிற்கும் - நிற்கின்ற, புகழ் - புகழ்களே (யாதல் காணலாம்).

(இ - து.) உலகம் கூறுவதெல்லாம் ஈவாரது புகழே.

புகழ், உரையும் பாட்டுமென இருவகைப்படும். அவற்றுள் உரை எல்லார்க்கு முரியது; பாட்டோ புலவர்க்கே உரியது. எல்லார்க்கு முரிய உரையை எடுத்துக் கூறவே, புலவர்க்கே உரிய பாட்டும் இனம்பற்றிக் கொள்ளப்படும். படவே, பாடுவார் பாடுவன ஈவார்மே னிற்கும் புகழா மென்பதும் பெற்றாம். 'உரையும் பாட்டு முடையோர் சிலரே-மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே,' (புறம்-உ௭) என்புழி 'உரையும் பாட்டும்' என்பதற்குப் புகழும் பாட்டு மெனப் புறநானூற் றுரையாசிரியர் பொருளுரைத்தமையும் ஈண்டுக் கவனிக்கற்பாற்று. 'ஏற்றங் கியாத மிசைமெய்ப் பாடு - சீர்த்தி கீர்த்தி சொல் திகழ்புகழாகும்' என்பது பிங்கலம்.

இனி இதற்குப் (புகழ் பிறர்மேலும் நிற்குமென) உரைப்பார் உரைப்பவை யெல்லாம் (உரைக்க) ; புகழ் ஈவார்மேலே நிற்கும் என இரு முடிபாக்கிப் பொருளுரைப்பாரு முளர். அது ஈகையைச் சிறப்பித்ததன்றிப் புகழைச் சிறப்பித்த தாகாமை யுணர்ந்து கொள்க.

புகழ் ஈவார்மேல் நிற்குமென்ற திக் குறள். (உ)

அழியாது நிற்கு மென்பது வருங்குறள்.

உ௩௩. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

(இ - ள்.) ஒன்றா உலகத்து - (பொன்றாது நிற்றலைப்) பொருந்தாத உலகத்தில், உயர்ந்த புகழல்லால் - ஓங்கிய புக

மூல்லது, பொன்றாது நிற்பது - அழியாமல் நிலைநிற்பது, ஒன்று இல் - பிறிதொன்று இல்லை.

(இ - து.) நில்லா வுலகத்து நிற்பது புகழொன்றே.

உலக நிலையாமையினைத் துறவறவியலினும் (அதிகாரம் ௩௪) 'பன்னெறியானு நில்லாவுலகம்' எனத் தொல்காப்பியத்தினும் (புறத்திணை-௧௮) காண்க. இனிப் பரிமேலழகர் ஒன்றா உயர்ந்த எனக் கொண்டு இணையற ஓங்கிய எனப் பொருளுரைத்து, 'இணையற ஓங்குதலாவது கொடுத்தற்கரிய உயிருறுப்புப் பொருள்களைக் கொடுத்தமை பற்றி வருதலாற் றன்னோ டொப்பதின்றித் தானே உயர்தல். அத்தன்மைத் தாகிய புகழே செய்யப்படுவ தென்பதாம்' என்றார். ஈண்டுரைத்த வெல்லாம் உயர்ந்த என்பது கொண்டே கொள்ளக் கிடந்தன. 'இனி ஒன்றா என்பதற்கு ஒரு வார்த்தையாகச் சொல்லின் எனவும், ஒருதலையாகப் பொன்றாது நிற்பதெனவும் பொருளுரைப்பாரு முளர்' என அவர் கூறிய பிறர் மதங்களும் அறிக.

இவை மூன்று பாட்டானும் புகழது சிறப்புக் கூறப்பட்டது. புகழுடையாரது மேன்மை கூறுவன வருமிரு குறள்கள் :

உ௩௪. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

(இ - ள்.) (ஒருவன்) நிலவரை - நிலவெல்லைக்கண்ணே, நீள் புகழ் - (பொன்றாது நிற்கும்) உயர்ந்த புகழை, ஆற்றின் - செய்வானானால், புத்தேளுலகு - தேவர் உலகம், புலவரைப் போற்றாது - (அவனை யல்லது தன்னிடத்திலுள்ள) தேவரைப் பேணாது.

(இ - து.) தேவர்கள் தம்மவரைப் பேணாது தம்மிடத் தடைந்த புகழுடையோரையே பேணும்.

புகழுடம்பால் இவ் வுலகத்தினும் நிலை பெற்று, மறுமைப் பயனாகப் புத்தேளுடம்பெடுத்துத் தம்முலகினும் நிலைபெறும் புகழுடை

யார் போலவன்றிப் புத்தேளுடம்பொடு தம் உலகில் நிலைபெறுத லொன்றே பெற்றவர் தேவராதலின் அவர் புகழுடையார்போலச் சிறப்புடையா ரல்லராயினர். புலவர் என்பது தேவர்க்குரிய பொதுப்பெயர்களிலொன்று. புலவர் - ஞானிகள் எனக் கொண்டார் **பரிமேலழகர்.** ஞானியர்க்குரியது வீடேயன்றித் தேவருலகாகாமை காண்க. புகழுடையோர் தேவருலகடைதலைப் 'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் - வலவ னேவா வான வூர்தி - யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்து' (புறம் - உ௭) என வரும் ஆன் றோர் கூற்றானும் தெளிக. 'செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் - நல்விருந்து வானத்தவர்க்கு' என்ற குறளும் (அ௬) ஈண்டு நோக்கற் பாலது.

புகழுடையோர் தேவருல கடைந்து அவராற் பேணப்படுவ ரென்ற திக் குறள். (௪)

அவராற் பேணப்படுவதற்குக் காரணமாகப் புகழுடையோர்க் கெய்தும் இம்மைச்சிறப்பைக் கூறுவது வருங்குறள்:

உ௩௫. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

(இ - ள்.) வித்தகர்க்கு அல்லால் - அறிவுடையோர்க் கல்லாமல் (பிறருக்கு), நத்தம் (ஆகும்) - ஆக்கமாகும், கேடு - வறுமையும், (அரிது - இல்லை); உளதாகும் - வாழ்வதாகும், சாக்காடும் - இறப்பும், அரிது - இல்லை.

(இ - து) அறிவுடையோர் ஈந்து வறியராவதைத் தமக்கு ஆக்கமாகவும், ஈகையாற் புகழை நாட்டி இறத்தலை வாழ்வாகவும் கொள்வர்.

நந்து என்பது உயர் என்னும் பொருட்டாய தனிவினைப் பெயர். அஃதப் பொருட்டாதலை 'பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் - வரிசை வரிசையா நந்தும்' (நாலடி-கஉ௫) என்புழிக் காண்க அது நத்து என வலித்தலாய் அம்மிறுதி பெற்ற வினைப் பெயராய் நத்தம் என்றாயது. எனவே, நத்தமாவது உயர்வாயிற்று.

உயர்வு ஆக்கமாதல் கண்டு கொள்க. நந்தடியாக நத்தம் பிறந்தாற் போலப் பொருந்து, திருந்து, தியங்கு, மயங்கு, உறங்கு, அடங்கு, அஞ்சு, எஞ்சு, ஈண்டு, தோண்டு முதலியவற்றடியாப் பொருத்தம், திருத்தம், தியக்கம், மயக்கம், உறக்கம், அடக்கம், அச்சம், எச்சம், ஈட்டம், தோட்டம் முதலிய பெயர்கள் பிறந்தவாறு காண்க.

போல் என்பது உரையசை; அஃதாவது பொருட்பேறு குறியாது கட்டுரைச்சுவைபட வருவது; எனவே, அசைததலே பொருளாக வருவதாம். இது 'ஒப்பில போலியு மப்பொருட்டாகும்' என்னும் தொல்காப்பிய (இடையியல் - உ௮௦) சூத்திரத்தால் அமையும். ஈண்டு அப்பொருட் டென்றது உரையசை யாதற் பொருட்டு.

அரிது என்பது ஒருமை வினையாதலால், கேடென்பதனொடும் சாக்கா டென்பத னொடுந் தனித்தனியே கூட்டி உரைககப்பட்டது. ஆகும் என்பது முன்னுஞ் சென்று நத்தத்தோடியைந்தது. கொடுத்தலாற் பூதவுடம்பு வறுமையுறினும் புகழுடம்பு செல்வமுறுதலின் கேடு நத்தமாயிற்று. பூதவுடம்பு இறக்கினும் புகழுடம்பு நிலைபெறுதலின் சாககாடு உளதாயிற்று. வறுமையை ஆக்கமாகவும், இறப்பை இருப்பாகவும் மாற்றும் சதுரப்பாடுடைமையின் வித்தக ராயினர்.

இவ்விரண்டு பாட்டாலும் புகழுடையார் மேன்மை கூறப்பட்டது. (௫).

புகழில்லாரது தாழ்வு கூறுவன வரும் நான்கு குறள்கள் :

உ௩௬. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ - ள்.) தோன்றின் - (மக்களாய்ப்) பிறந்தால், புகழொடு - புகழுக்கேதுவாகிய குணத்தோடு, தோன்றுக - பிறக்கக்கடவர்; அஃது இலார் - அக்குணம் இல்லாதவர், தோன்றலின் - (மக்களாய்ப்) பிறத்தலினும், தோன்றாமை - பிறவாமை, நன்று - நல்லதாம்.

(இ - து.) புகழ்பட வாழாதார் பிறவிப்பயனை எய்தார்.

புகழ் - ஆகுபெயர். அஃதிலார் என உயர்திணையீற்றதாய்ச் சொன்னமையின் மக்களாய் என்பது பெறப்பட்டது. எனவே மக்களாய்ப் பிறவாமை நன்று என்பதாயிற்று. அதனடியாக, விலங்காய்ப் பிறத்தல் நன்று என்பது அருத்தாபத்தியாற் பெறக் கிடக்கும். பிறவாவிடின் வசைபெறுத லின்றாமாதலின் பிறவாமை நன்று என்றார்.

புகழொடு வாழமாட்டாதார் பிறவாமை நன் றென்றதிது. (௬)

பிறப்பின் இகழப்படுவ ரென்பது வருங்குறள் :

உ௬எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

(இ - ள்.) புகழ்பட - (தமக்குப்) புகழ் உண்டாக, வாழாதார் - வாழமாட்டாதார், (அது பற்றிப் பிறர் தம்மை இகழ்ந்த வழி, இவ்விகழ்ச்சி நம் மாட்டாமையான் வந்த தென்று) தந்நோவார் - தம்மை(த் தாமே) நோவாமல், தம்மை இகழ்வாரை - தம்மை இகழும் பிறரை, நோவது எவன் - நோவது ஏன் ?

(இ - து.) புகழ்பட வாழாதார் தம்மை இகழ்வாரை வெறுத்த லிற் பயனில்லை.

இகழ்ச்சிக்குரியரா யிருந்து இகழ்ச்சியைப் பெறப் பின்வாங்கு வதிற் பயனின் றென்பார் 'இகழ்வாரை நோவ தெவன்' என்றார்.

புகழ்பட வாழாதார் இகழப்படுவ ரென் ற திது. (எ)

அவ்வாறு இகழப்படுவதற்குக் காரணம் புகழ்பட வாழாமையே என்பது வருங்குறள்.

உ௬அ. வசையேன்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

(இ - ள்.) இசை என்னும் - புகழ் என்னும், எச்சம் - எச்சத்தை, பெறாஅவிடின் - (பெறுவது யாவர்க்கும் முடிவ

தாகவும் அது) பெறுவிட்டால், வையத்தார்க்கு எல்லாம் - உலகில் வாழும் மக்கள் எல்லாருக்கும், வசை என்ப - வசையாகும் என்று சொல்லுவர் (அறிவுடையோர்).

(இ - து.) இசையே யாவர்க்குமாம் எச்சம்.

தம்மாற் பெறப்பட்டுத் தமக்குப் பின் தம் பெயர் விளக்கும் மக்களை எச்சமென்ப. அங்ஙனமே தம்மால் ஆக்கப்பட்டுத் தமக்குப் பின் தம் பெயர் விளக்கி நிற்கும் புகழை எச்சமென்றார். புகழின் இன்மையே இகழ்ச்சியாதலின் பிறிதொரு காரணம் வேண்டா இகழப்படுதற் கென்பது கருத்து. ஈகையும் அது பற்றியாம் புகழும் செல்வர்க்கே யுரியவல்ல வென்பதை இதனானு முணர்க.

இசையிலாமை வசையா மென்ற திக் குறள். (அ)

இசையிலார் கூட்டுறவால் வசையிலா நிலமும் வசைபெறும் என்பது வருங்குறள் :

உ௬௯. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

(இ - ள்.) இசையிலா-புகழில்லாத, யாக்கை-உடம்பை, பொறுத்த நிலம் - சுமந்த பூமி, வசையிலா - பழிப்பில்லாத, வண்பயன்-வளப்பத்தையுடைய விளைவு, குன்றும்-குறையும்.

(இ - து.) புகழில்லாதவன் வாழுமிடத்தில் நிலத்தின் விளைவும் குறையும்.

எனவே, பாழ்நிலம் என அவர் வாழும் நிலமும் வசைபெறுவதாயிற்று. இசைபட வாழ்தலல்லது உயிர்க்கு ஊதியமில்லை யாதலின், உயிரிருந்தும் அதனாற் பயன் கொள்ளாத யாக்கை என்பது தோன்ற 'இசையிலா யாக்கை' என்றார். அவ் வியாக்கை பூமிக்குச் சுமையென்பார் 'யாக்கை பொறுத்த நிலம்' என்றார். விளைவாவன நெல்முதலிய. அவை குன்றுதற்கேது அவற்றைக் கொள்வான் அவற்றைப்பிறர்க்கீந்து பெறலாகும் பயனைப் பெறாமையும், அத்தகையானுக்குத் தாம் பயன்படலாலான வெறுப்பும்.

இவை நான்கு பாட்டாலும் புகழில்லாரது தாழ்வு கூறப்பட்டது. (கூ)

புகழுடையாரது மேன்மையினையும் அஃதில்லாரது தாழ்வினையும் தொகுத்துக் கூறுவது வருங்குறள் :

உசய. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

(இ - ள்.) வசை ஒழிய - (தமக்கு) வசையுண்டாகாமல், வாழ்வாரே - வாழ்பவரே, வாழ்வார் - (உயிரோடு) வாழ்பவராவர்; இசை ஒழிய - (தமக்குப்) புகழுண்டாகாமல், வாழ்வாரே - வாழ்பவரே, வாழாதவர் - (உயிரோடிருந்தும்) இறந்தவராவர்.

(இ - து.) புகழோடு வாழ்பவரே வாழ்பவர் ; ஏனையோர் செத்தாருள் வைக்கப்படுவா.

வசையொழிதலே இசையும் இசையொழிதலே வசையுமாதல் இதனுனும் பெறப்பட்டது. இசையொழிய வாழ்வார் வாழாதவர் என்றது மேல் இசையிலா யாக்கை என்றதை விளக்கியவாறு. 'வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் - தெய்வத்துள் வைக்கப் படும்' (குறள்-ருய) என இல்லறவியலின் தொடகக அதிகாரத் திறுதியிற் கூறி அவ்வியலின் முடிவதிகாரத் திறுதியாகிய ஈண்டு 'வசையொழிய வாழ்வாரே வாழ்வார்' என்றமையின் இல்லறத்தின் முடிவான பயன் இம்மையிற் புகழும் மறுமையில் அப் புகழாற் பெறப்படும் துறக்க வின்பமும் (குறள் - உகூச) ஆதல் பெறுதும். (கய)

இவ் வதிகாரத்தில், முதல் மூன்று குறள்களால் புகழின் சிறப்பும், அடுத்த இரண்டு குறள்களால் புகழுடையாரது மேன்மையும், அடுத்த நான்கு குறள்களால் அஃதில்லாரது தாழ்வும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறப்பட்டன.

இவ் வியல், (1) இல்லிருந்து (2) வாழ்க்கைத் துணை நலத்தோடு கூடி (3) மக்களைப் பெற்று (4) அன்பு பாராட்டி (5) விருந்தோம்பி

(6) இனியவைகூறி (7) செய்நன்றி யறிந்து (8) நடுவுநிலை தவறாமல் (9) அடக்கத்தோடு (10) ஒழுக்கம் பிழையாமல் (11) பிறனில் விழையாமல் (12) பொறை பூண்டு (13) அழுக்காறகற்றி (14) வெஃகாது, (15) புறங்கூறாது (16) பயனில சொல்லாது (17) தீவினை யஞ்சி (18) ஒப்புரவறிந்து (19) ஈகை செய்து (20) புகழ்பட வாழ்தலே இல்லறத்தின் இலக்கணமா மென்பது கூறிற்று.

இனி, ஆசிரியர் கடியப்படுவனவாகிய பிறனில் விழைதல் அழுக்காறு முதலியவற்றை அவை நின்றவாறே கூறி இவை கடியப்படுமெனக் கூறாது, கடியப்படுதலை உடம்பொடு புணர்த்திப் பிறனில்விழையாமை அழுக்காறாமை என இவ்வாறு எதிர்மறைவாய்பாட்டாற் கூறியது இஃது அறத்துப்பால் என்பது கருதியென்க. பின்வரும் துறவறவியற்கு மிஃது தொக்கும். என்னை? பிறனில் விழைதல் முதலாயின அறமெனப்படாமையினென்பது.

இல்லறவியன் முற்றும்.

# ௩. துறவறவியல்

அறமாவது இல்லறந் துறவறமென இருபகுதிப் படுவதாதல் முன்னர்க் கூறப்பட்டது. அவ்விரு பகுதியுள் முற்பகுதியான இல்லறங் கூறி முடித்துத் துறவறங் கூறுவா னெடுத்துக் கொண்டார், அருளுடைமை முதலாக அவாவறுத்த லிறுதியாகப் பதின்மூன்றதிகாரங்களாகப் பகுத்து அத துறவறத்தின் இயல் கூறுகின்றமையின் இது துறவறவியல் எனப்பட்டது. துறவு ஐம்புலன்களையும் வென்றடக்கிய வெற்றிநிலையாதலின் வாகைத் திணைப்பாற் படும். இவ் வெற்றி அருளுடைமையோடு கூடி எய்தப்படுவதொன்றாதலால் அருளுடைமை முதலாகத் துறவு கூறப்படுவதாயிற்று. ஆசிரியர் தொல்காப்பியனார் 'அருளொடு புணர்ந்த அகற்சி யானும்' (புறத்திணையியல் - உக) என்றதுங் காணக. இனி, அத் துறவறந்தான் அதனைமேற்கொண்டார் தம் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்கள் தூயவாதற் பொருட்டுக் காக்கும் விரதங்களும், அவற்றான் அவை தூயவாயவழித் தோன்றுவதாகிய ஞானமு மென இருவகைப்படும்.

## விரதம்

அவற்றுள், விரதங்களாவன, அறமாவனவே செய்வலெனவும் அறமல்லன ஒழிவலெனவும், ஐம்புலனையும் அடக்கி ஆள்வலெனவும் உறுதியோடு மேற்கொள்ளப்படுவன. அவை அருளுடைமை முதலாகக் கொல்லாமை யிறுதியாக ஒன்பதாயின. அவற்றை இயைபு நோக்கி முறைப்பட வைத்த ஆசிரியர் முதற்கண் அருளுடைமை கூறுகின்றார்.

---

## உரு. அருளுடைமை.

அஃதாவது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கண் மேலுஞ் செல்லும் உள்ள நெகிழ்ச்சி; யாதாயினும் ஓர் உயிர் இடர்ப் படுமிடத்துத் தன்னுயிர் வருந்தினாற்போல வருந்தும் ஈரமுடைமை. இல்லறத்தினின்று செய்து பழகிய அன்பின் முதிர்ச்சியே யிஃதாதல் 'அருளென்னு மன்பீன் குழவி' (குறள் - எருஎ) என்பதாற் பெறக் கிடந்தது. இவ்வாற்றான் இல்லறத்தையும் துறவறத்தையும் இயைபு படுத்தி நிற்பதாதலானும், துறவறத்தின் அடிப்படை யாதலானும் இஃது ஈண்டுக் கூறப்பட்டது.

இவ் வதிகாரத்தில் அருளுடைமையது சிறப்பும், அருள் செய்வார்க்குளதாகும் நன்மையும், அது செய்யார்க் குளதாகும் தீமையும், அருள் செய்தல் ஆமாறும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் அருளுடைமையது சிறப்புக் கூறுகின்றார்.

உசக. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்
பூரியார் கண்ணு முள. [செல்வம்

(இ - ள்.) செல்வத்துள் செல்வம் - செல்வங்கள் பல வற்றுள்ளும் (சிறந்த) செல்வமானது, அருட்செல்வம் - அருளான் வரும் செல்வமாம், பொருள் செல்வம் - பொரு ளான் வரும் செல்வங்கள், பூரியார் கண்ணும் - கீழ்மக்களி டத்தும், உளவாம் - உண்டாமாதலால்.

(இ - து) செல்வத்துட் சிறந்தது அருட்செல்வம்.

பூரியார் - கீழ்மக்கள். பூரியம் என்னுஞ் சொல் பல்கோடியின் மிக்கதோர் எண்ணைக் குறிப்பதாய் வழங்குகிறது. பல்கோடி மக்களில் மேன்மக்கள் சிலராயும் கீழ்மக்கள் பலராயு மிருப்பது கருதிக் கீழ்மக்களை எண்மிகுதி குறிக்கும் பூரியம் என்னும் சொல் லடியாகப் பூரியர் என வழங்கினர்போலும்; ஆராயற்பாற்று. பூரியர் கள் உயர்வில்லாக கீழ்மக்களாதலை 'வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப் பூரியர்க ளாழு மளறு' (குறள் - கூகக)
என்பதினுங் காண்க.

அருளான் வரும் செல்வமாவது, உயிர்களைக் காத்து அவ்வறத் தான் உயர்தல். உயர்ந்தாரிடத் தல்ல தில்லாத அருட் செல்வம், உயர்ந்தார் தாழ்ந்தார் இருவரிடத்தும் ஒப்ப உளவாகும் பொருட் செல்வங்களினும் சிறந்தவாறு காண்க. பூரியார் கண்ணும் என்ப தில் உம்மை பூரியார் இழிவு குறித்தலின் இழிவுசிறப்பும்மையும், சீரியார் கண்ணு முளவெனப் பொருள்தருதலின் இறந்தது தழீஇய எச்சவும்மையுமாம்.

அருளுடைமை செல்வமுடைமையா மென்ற திக் குறள். (க)

துணையுடைமையுமா மென்பது வருங்குறள்:

உசஉ. நல்லாற்ற ணாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை.

(இ-ள்.) அருள் - அருளை, நல் ஆற்றால் - நல்ல வழி யாலே, நாடி - தேடி, ஆள்க - செய்க; (எனெனில்) பல் ஆற்றால் - (அளவைகளும் ஒன்றோடொன் றொவ்வாத சம யங்களுமான) பல வழிகளால், தேரினும் - (உயிர்த்துணை யாவதியாதெதன) ஆராய்ந்தாலும், அஃதே - அவ்வருளே, துணை - (உயிர்த்) துணை (என்பது தெளியப்படும்).

(இ-து.) அருளே ஒருவனுக்கு உயிர்த்துணை.

நல்ல வழியாலே தேடிச் செய்தலாவது, ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பாரும், ஊரைப் பறித்து அறச்சாலை கட்டி உயிர்கட் கருளுடையே மென்பாரும் உளராதலின், அவர் போலாது, புலான் மறுத்தல் முதலாய அறநெறியிலே நின்று அவ்வாற் றாற் பக்குவப்பட்டெழும் அருளைச் செய்தல். அல்லாத அருள் போலியே யொழிய உண்மையாகா தென்பது கருத்து. இக் கருத்தானே தொடருமதிகாரத் தொடக்கத்தும் 'ஊனுண்பான் எங்ஙன மாளு மருள்' (உருக) என்றார் ஆசிரியர். இவ்வதிகாரத் தினும் உசச, உசரு, உசகூ-வது குறள்களான் இக்கருத்து வலி யுறுத்தப்படும். அளவைகளாவன காண்டல் கருதல் உரை என்னும்

இவை மூன்றும் இவை சார்பாக எழும் ஒப்பு முதலிய பிறவுமாம். சமயங்கள் ஒன்றோடொன்றெவ்வா வாதலே 'ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி-னன்றென்ப வாறு சமயத்தார்' எனக் கூறிய கல்லாடர் உரையானும், ஏனைச் சான்றோருரையானும் பிறவாற்றானும் அறிக.

'நல்லாற்றானடி யருளாள்க' என்பதற்கு 'அளவைகளானும் பொருந்து மாற்றானும் நன்றான நெறியிலே நின்று நமக்குத் துணையா மறம் யாதென் றாராய்ந்து அருளுடையாராக' என்று பொருளுரைத்தார் ஆசிரியர் பரிமேலழகர் ஈண்டுரைதத பொருளெல்லாம் 'பல்லாற்றாற் றேரினும்' என்பதாற் பெறக்கிடத்தல் கண்டு கொள்க.

இவை யிரண்டு பாட்டாலும் அருளது சிறப்புக் கூறப்பட்டது.

அருள்செய்தலான் ஆம நன்மைகள் இவையெனக் கூறுவன வரும் மூன்று குறள்கள் :

௨௪௩. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

(இ-ள்.) இருள் சேர்ந்த - இருள் திரண்ட, இன்னா உலகம் - துன்ப உலகமாகிய நரகத்துள், புகல் - புகுதல், அருள் சேர்ந்த - அருளோடு பொருந்திய, நெஞ்சினார்க்கு - உள்ளத்தவர்க்கு, இல்லை—.

(இ-து.) அருளுடையார்கசு நரகத்துன்பமில்லை.

அருளுடையோர் உயிர்க்குத் துன்பமில்லை யென்ற இக்குறள் (௩)

அதற் கேது கூறுவது வருங்குறள் :

௨௪௪. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(இ - ள்.) மன் உயிர் - நிலைபேறுடைய உயிர்களை, ஓம்பி - பேணி, அருள் ஆள்வாற்கு - அருள் செய்பவனுக்கு, தன் உயிர் - தன்னுடைய உயிர், அஞ்சும் - அஞ்சுதற்கேது வாகிய, வினை - தீவினைகள், இல் என்ப - உளவாகா என்பர் (சான்றோர்.)

(இ - து.) அருளுடையார் தீவினை செய்யார்.

உயிர் என்றது ஈண்டு ஆன்மாவை. ஆன்மா நித்தமாகலின் மன்னுயிர் என்றார். அஞ்சுதல் துன்பம் நோக்கி அஞ்சுதல். என்ப என்று சான்றோர்மேலேற்றிச் சொன்னார் 'நலலாற்றால் நாடி'ச் செய்யப்படுவதே அருள் என்ப தவர் துணிபென்றற்கு.

அருளுடையார் துன்பமுறாமைக்கு ஏது கூறிய திக்குறள். (௪) சான்று கூறுவது வருங்குறள் :

உ௪௫. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

(இ- ள்.) அருள் - ஆள்வார்க்கு - அருளுடையார்க்கு, அல்லல் இல்லை - துன்பம் இல்லை ; கரி - (அதற்குச்) சான்று, வளி வழங்கும் - காற்று இயங்குகின்ற, மல்லல் - வளப் பத்தையுடைய, மா - பெரிய, ஞாலம் பூமியே.

(இ - து.) அருளுடையார் துன்பமுறார் என்பதற்கு இந் நிலவுலகே சான்று.

நிலம் தன்னைக் குற்றியும் வெட்டியும் மிதித்தும் துவைத்தும் வருத்துவார்க்கும் பல்வகை வளங்களும கனிந்து விளைத்தலினாலே தன் பெருமைக்குச் சிறிதும் குறைவின்றி தன் நிலை துளங்கி வருந் தாதிருத்தல் கண்கூடான சான்றாயிற்று அந் நிலதது வீசும் காற்றோ ஒரொருகால் முரண்டெழுந்து அருள் சிறிதுமின்றி மரங் களைச் சாடியும் மலர்களை உதிர்த்தும் புட்களை வீழ்த்தும், விலங் கினங்களை வெருட்டியும் கலங்களைக் கவிழ்த்தும் பல்லுயிர்க்கும் பெருங்கேடு விளைப்பதோடு, நீரும் நெருப்பும் வெகுண்டெழுந்தால்

அவற்றிற்குத் துணைநின்று இன்னலைப் பெருக்கும் இயல்பிற்றாதலின் அஃதியாண்டும் ஒரு நிலையில் நில்லாது அங்கங்கோடி அல்லலுற்ற வண்ணமாய் இருத்தலால், அருளற்றார் அவ்வாறு அல்லலுழந்து கெட்டலைவார் என்பதற்குச் சான்றாகிறது. ஆதலின் 'வளிவழங்கு மல்லன்மா ஞாலங் கரி' என்றார்

இனி, ஆசிரியர் **பரிமேலழகர்** வளிவழங்கும் மல்லன்மா ஞாலங் கரி என்பதற்குக 'காற்றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று' எனப் பொருள்கூறி, அகலத்தில் 'சான்றாவார் தாங் கண்டு தேறிய பொருளைக் காணாதார்க்குத் தேற்றுதற் குரியவா. அருளாள்வார்க்கு அல்ல லுண்டாக ஒருகாலத்தும் ஓரிடத்தும் ஒருவருங் கண்டறிவா ரின்மையின், இன்மை முகத்தான் ஞாலத்தார் யாவருஞ் சான்றென்பாா, வளிவழங்கு மல்லன்மா ஞாலங் கரி யென்றார். எனவே, இம்மைகக ணென்பது பெற்றாம் ஞாலம் ஆகுபெயர்.' எனக கூறிச் சென்றார். **மணக்குடவரும்** ஞாலத்தை ஆகுபெயராகக கொணடார். குறித்தது ஆகுபெயர்ப் பொருளாயின், 'வளிவழஙகு மல்லன்மா' என நின்ற அடையெல்லாம் அவ் வாகுபெயர்ப் பொருளைச சிறப்பியாது இயற்பெயர்ப் பொருளைச் சிறப்பித்து நிற்றலாற் பெறக் கிடககும் பயன் யாதென்க. பயனின்றேனும் ஆகுபெயராய்க கொள்வதே பொருந்துமெனிற் கொள்க.

இவை மூன்று பாட்டானும அருளுடையார்க் குளதாகும் நன்மை கூறப்பட்டது (௫)

அருளில்லார்க் குளதாகும் தீமை கூறுவன வரும் நான்கு குறள்கள் :

உ௪௬. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

(இ - ள்.) அருள் நீங்கி - (உயிர்கண் மாட்டுச் செய்யத் தகும்) அருளை விட்டு, அல்லவை - (தவிரத் தகும்) கொடுமைகளை, செய்து ஒழுகுவார் - செய்து வருபவர், பொருள் நீங்கி -

(உறுதிப்) பொருளை விட்டு விலகி, பொச்சாந்தார் - (அதனால் வருங் கேட்டை) மறந்தவர், என்பர் - என்று சொல்வர் (சான்றோர்).

(இ - து.) அருளில்லாதவர் அறத்தை மறந்தவர்.

உறுதிப் பொருளாவது அறம். உயிர்க் குறுதியாவது அறமே யாதலானும், அவ்வறத்தைக் கைவிட்டவர் உறுதியின்றிக் கெட்டலைவா ராதலானும், அக் கேடு கருத்தி விருப்பின் அவர் அருளைக் கைவிடாராதலானும், அவர் தங் கேட்டை மறந்தவரே யாவர் என்பார் 'பொச்சாந்தார்' என்றார். பொச்சாப்பு-மறவி.

அருளில்லார் உறுதிப் பொருளைக் கைவிட்டவராவர் என்றது இக் குறள். (௬)

உறுதிப்பொருளைக் கைவிட்டமையான் அவர் வீட்டுலக இன்பத்தை இழப்பர் என்பது வருங்குறள்:

உ௪எ. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

(இ - ள்.) பொருள் இல்லார்க்கு - பொருள் இல்லாதவர்க்கு, இவ்வுலகம் - இவ்வுலக இன்பம், இல்லாகி ஆங்கு - இல்லையானாற் போல, அருள் இல்லார்க்கு - அருள் இல்லாதவர்க்கு, அவ்வுலகம் இல்லை - வீட்டுலக இன்பம் இல்லை.

(இ - து.) அருளில்லார்க்கு வீட்டின்பம் இல்லை.

அவ்வுலகம் இவ்வுலகம் என்பன ஆண்டு நுகரப்படும் இன்பத்துக்காதலின் ஆகுபெயர். இவ்வுலக இன்பங்கட்கெல்லாம் பொருள் காரணமானாற்போல அவ்வுலக இன்பங்கட் கெல்லாம் அருள் காரணமென்ப தாயிற்று. அருளைப்பற்றிக் கூறவந்தவிடத்தில் பொருளை அதற்குப் பயனுவமையாக்கிப் பொருளின் சிறப்பையும் அஃதின்மையின் கொடுமையையும் கூறினார்.

அருளின்மையைப் பொருளின்மையோ டொப்பிட்டுக் கூறியது. (எ)

பொருளின்மையினும் அருளின்மைக்குள்ள கொடுமை மிகுதி கூறுவது வருங்குறள்.

உசஅ. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

(இ-ள்.) பொருள் அற்றார் - பொருள் இல்லாதவர், ஒருகால் - ஒருகாலத்தில், பூப்பர் - (செல்வத்தாற்) பொலிவர்; அருள் அற்றார் - (அவ்வாறன்றி) அருள் இல்லாதவர், அற்றார் - அழிந்தவரே; மற்று ஆதல் அரிது - (பின் ஒரு காலத்தும்) உள்ளவராதல் இல்லை.

(இ - து.) அருளில்லாதார் எக்காலத்தும் நன்மையடையார்.

அறுதலாகிய வினையை மாற்றி அருமை குறித்தலில் மற்று வினைமாற்றின்கண் வந்தது. பொருளின்மை ஊழான் ஆயதாயின் அவ்வூழ் அகலுங்காலத்து அவ்வின்மையும் அகலுமாகலின் 'பொருளற்றார் பூப்ப ரொருகால்' என்றார். அருள் அன்னதன் றென்பார் 'அருளற்றார் அற்றார்மற் றாதலரிது' என்றார். கடைநின்ற அற்றார் என்பதில் தேற்றேகாரம் தொக்கது.

அருளில்லார் நன்மை எய்தா ரென்ற திக்குறள். (அ)

அவர் செய்யும் அறங்களும் நன்மை பயவா என்பது வருங் குறள்:

உசகூ. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

(இ - ள்.) அருளாதான் செய்யும் அறம் - அருள் செய்யாதவன் செய்யும் அறத்தை, தேரின் - ஆராயின், (அது) தெருளாதான் - ஞானமுறாதவன், மெய்ப்பொருள் - உண்மைப் பொருளை, கண்டற்றால் - உணர்தல் போலும்.

(இ - து.) அருளில்லாதவன் செய்யும் அறம் பயன்படாது.

மெய்ப்பொருளாவது அறிவு நூல்களிற் கூறப்படும் உள்பொருள். அறிவைத் தொழிற்படுத்தி வளர்த்து அது முற்றிப் பக்குவப்பட்டபின் அதைக் கருவியாகக் கொண்டு அறியத் தக்கது உண்மைப் பொருள். ஆகலின், அத்தகைய உண்மைப் பொருளை அறிவைப் பண்படுத்திப் பழகாத அறிவிலி அறியான். ஒருகால் அவன் அப் பொருளை ஆன்றோர் வாயிலாகக் கேட்பினும், அல்லது நூல்களிற் காணினும் அப் பொருளை உணர மாட்டாமையால் அதனாற் பெறத்தக்க பயனைப் பெறுதொழிவன். அவ்வாறே அருளில்லாதவன் அறஞ் செய்தலரிது; ஒருகாற் செய்யினும் எல்லா அறங்கட்கும் அடிப்படையான அருள் இல்லாமையால் அவன் செய்யும் ஏனை யறங்கள் நிலைபெறுவாய் அவனுககுப் பயன்படா தழியுமென்றவா றாயிற்று.

இவை நான்கு பாட்டாலும் அருள் செய்யாதார்க் குளதாகும் தீமை கூறப்பட்டது. (கூ)

அருள் செய்யுமாறு கூறுவது வருங்குறள் :

உருo. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

(இ - ள்.) தான் - (அருளில்லாதவன்) தான், தன்னின் - தன்னைவிட, மெலியார்மேல் - எளியவர்கள்மீது, செல்லுமிடத்து - (அவரை வருத்தச்) செல்லும் பொழுது, வலியார்முன் - (தன்னின் வலியார் தன்னை வருத்த வரும் பொழுது அவ்) வலியாரின் முன்னே, தன்னை - தான் அஞ்சி நிற்கும் நிலையினை, நினைக்க - நினைக்கக்கடவன்.

(இ - து.) தன்னினும் வலியார் தன்னை அருளின்றி வருத்தின் தன் நிலை யாதாமென்பதைக் கருதுபவன் தன்னினு மெலியாரைத் தான் வருத்தா தவர்க் கருள் செய்வான்.

மெலியார் என உயர்திணை வாய்பாட்டாற் கூறினாராயினும் அஃறிணைப் பாற்பட்ட ஏனை உயிர்களும் கொள்ளப்படும். அருள்

என்பது உயிர்கண்மாட்டுச் செலுத்தப்படும் உள்ள நெகிழ்ச்சி; சீவகாருணியம் என்பது வடநூல் வழக்கு. தன்னுயி ரஞ்சுமாற்றை நினைக்கவே இவ் வுயிருமவ்வாறே அஞ்சு மென்றுணர்ந்து அதன் மீது அருளுடையனு மென்பது கருத்து.

இவ் வதிகாரத்தில், முதல் இரண்டு குறள்களால் அருளுடைமையின் சிறப்பும், அடுத்த மூன்று குறள்களால் அருள்செய்வார்க்குள தாகும் நன்மையும், அடுத்த நான்கு குறள்களால் அது செய்யார்க்குள தாகும் தீமையும், இறுதிக குறளால் அருள் செய்யுமாறும் கூறப்பட்டன.



## உசா. புலான் மறுத்தல்

அஃதாவது ஊனுண்டலை ஒழிதல். ஊனாவது உயிர் நீக்கப் பட்டதாகலின், அதனை உண்டல், உயிர்கண்மாட்டுச் செல்லும் அருளுடைமைக்கு மாறாகலின் அஃது ஒழிதல் அருளுடைமைக்கு இயைபுடைத்தாயிற்று. இதனான் அதிகாரமுறைமை விளங்கும். அற்றேல், உயிர் நீக்கலாகிய கொல்லுதலைத் தவிர்த லன்றோ ஈண்டுச் சொலற்பாலது; அஃதொழிதது அதன் காரியமாய்ப் போதரும் புலான் மறுத்தலைக் கூறிய தென்னையோவெனின், ஊனுடை உயிர்களையே யன்றி ஓரறிவுயிர்களாகிய புன் மர முதலியவற்றையும் உண்ணலாகாதென விலககுவது கொல்லாமை யாகலின், அவ்வறத்தைக் கடைப்பிடித் தொழுகல் தவத்தின் முதிர்ந்து ஞானத்திற் கருகராய் நிற்பார்ககன்றி ஏனையோர்க் கரி தாகல் நோக்கி அருளுடைமை சாரபாகச் செய்யப்படும் விரதப்பகுதி யுள் எளிமையுடைய புலான்மறுத்தலை முதலினும் அருமையுடைய கொல்லாமையை ஈற்றினும் வைத்த முறைமை கண்டு கொள்க. அல்லதூஉம் தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூன் உண்ணலைத் தவிர்தலினும் தன்னுயிர் நீப்பினும் தான்பிறி தின்னுயிர் நீககும் வினையைத் தவிர்தல் அருமையுடைத் தாதலுங் காண்க.

இனி, இவ்வதிகாரததில் புலான் மறுத்தற்கும் அருளுடைமைக் கும் உள்ள இயைபும், புலாலுண்டலின் இழிவும், புலா லுண்ணாமை யின் சிறப்பும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர், முதற்கண் புலான் மறுததற்கும அருளுடைமைக்கும் உள்ள இயைபினைப் பல் லாற்றானும் விளக்குகின்றார்.

உருக. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

(இ - ள்.) தன் ஊன் பெருக்கற்கு - தன் உடம்பைப் பெருக்கச் செய்தற் பொருட்டு, தான்—, பிறிது ஊன் - மற் றோர் (உயிரின்) உடம்பை, உண்பான் - உண்ணுமவன், அருள் - (உயிர்கண்மாட்டு இரக்கமுடைமையாகிய) அருளை, எங்ஙனம் - எப்படி, ஆளும் - செய்வான்.

(இ - து.) ஊனுண்பான் அருள் செய்யமாட்டான்.

எனவே, பயனில்லாத உடல் பெருத்தலைப் பயனென் றெண்ணிக் கொடுமை செய்பவன் கொடியரிற் கொடியன் என்றவாறாயிற்று. ஊனைப் பெருக்க ஊனைத் தின்று ஊனே நாட்டமாய் உழல்பவன், உயிரைப் பற்றி உயிர்கண்மாட்டுச் செய்யப்படும் அருளுக்குப் புறம்பானவ னாதல் தேற்றம். 'எங்ஙனமாளு மருள்' என்றது அருளா னென்பதுபடநின்ற இகழ்ச்சிக் குறிப்பு.

ஊனுணபான் அருளாளான் என்ற திது (க)

அதனை உவமை முகத்தான் விளக்குவன வரும் இரண்டு குறள்கள் :

உருஉ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ - ள்.) பொருள் ஆட்சி - பொருள் செயல், போற்றாதார்க்கு - (அதனைப்) பேணாதவர்க்கு, இல்லை—, ஆங்கு - அது போலவே, அருள் ஆட்சி - அருள் செய்தல், ஊன் தின்பவர்க்கு - புலால் உண்பவர்க்கு, இல்லை - இல்லையாம்.

(இ - து.) பொருளைப் போற்றாதார் பொருள் செய்யாராதல் போல அருளைப் போற்றாமல் ஊன் உணபவர் அருள் செய்யார்.

பொருள் செயலாவது, பொருளைச் சேகரித்து அதனாற் பயன் கொள்ளுதல். பொருட்பயனை இழத்தற்குக் காரணம் அதனைப் போற்றாமை போல, அருட்பய னிழத்தற்குக காரணம் ஊனுண்டல் என்பதாயிற்று.

ஊனுண்பார் அருளாமையை உவமையான் விளக்கிய திக் குறள் : (உ)

அவ் வருளாமைக் காய காரணத்தை உவமையான் விளக்குவது வருங்குறள் :

உ௫௩. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றி
னுடல்சுவை யுண்டார் மனம்.

(இ - ள்.) ஒன்றின் - ஓர் உயிரின், உடல் சுவை உண்டார் - உடலைச் சுவைபட உண்டவரது, மனம் - உள்ளமானது, படைகொண்டார் - கொலைக்கருவியைக் (கையிற்) கொண்டவரது, நெஞ்சம் போல - உள்ளத்தைப் போல, நன்று ஊக்காது - (அந்த ஊனையே நோக்குவ தல்லது) அருளை நோக்காது.

(இ - து.) ஊனுண்டவர் உள்ளம் அருளை நாடாது.

படை கொண்டவர் அப்படையைக் கையாளுதலையே நாடுவ ராதலினானும், அங்ஙனம் கையாளுதல் பிறிதோ ருயிரைக கொல்லுதலை வேண்டுதலினானும் அவர் நாட்டமும் உயிர் கொல்லாமையாகிய அருளுடைமையும ஒன்றோடொன்று முரணாய் ஒருங்கு நில்லாவாயின. அவ்வாறே ஊன் சுவைத்து அவ் வின்பத்தை நுகர்ந்தவர் அதனை மேலுமேலு நுகர்தலையே நாடுவ ராதலினானும், அவ் வின்பத்தைத் தரும் ஊன் பிறிதோ ருயிரைக் கொன்றல்லது பெறப்படுவ தன்றாக லானும், அவர் நாட்டமும் உயிர்கொல்லாமையாகிய அருளுடைமையும் ஒன்றோ டொன்று முரணாய் ஒருங்கு நில்லா வாயின. எனவே, ஊன் உண்பார் அருளுடைய ராகா ரென்பதாயிற்று.

ஊனுண்டல் அருளுடைமை யாகாதென்பதை உவமையான் விளக்கின இவை யிரண்டு குறள்களும். (௩)

ஊனுணணாமைக்கும் அருளுடைமைக்கும் உள்ள இயைபினைத் தொடர்பு காட்டி விளக்குவது வருங்குறள்:

உ௫௪. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

(இ - ள்.) அருள் அல்லது யாதெனில் - அருளாகாதது யாதென்றால், கோறல் - (ஓர் உயிரைக்) கொல்லுதல்; (ஆத

லால், புலான் மறுத்தலில்) கொல்லாமை பொருள் - கொல்லாமையே கருத்து ; அல்லது - (கொல்லாமை) அல்லதாகிய கோறலே, அவ்வூன் தினல் - (கோறலாற் பெறும்) அந்த ஊனைத் தின்னுதல். (ஆதலால் ஊன்றினல் கடியப்படும்).

(இ - து.) புலாலுண்ணல் கொல்லுதலோ டொக்கும்.

கொல்லாமை கோறல் என்பன கோறல் கொல்லாமை என மொழிமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டன. இசையெச்சங்கள் வருவித் துரைக்கப்பட்டன. உயிரைக் கொன்றல்லது ஊன்பெற வியலாதாகலானும், ஊனின்பொருட்டாக உயிர் கொல்லப்படுவதாகலானும் கோறலும் ஊனுண்டலும் ஒன்றுக்கொன்று காரணமும் காரியமுமாகி ஒளியும் பரிதியும்போல் ஒன்றென நின்றன.

இனி இக் குறட்கு ஆசிரியர் பரிமேலழகர் கூறிய பொருள் வருமாறு :

'அருள் யாதெனிற் கொல்லாமை; அருளல்லது யாதெனிற் கோறல் ; ஆகலான், அக்கோறலான் வந்த ஊனைத் தின்கை பாவம்.

'உபசார வழக்காற் கொல்லாமை கோறல ஆகிய காரியங்களை அருள் அல்லது எனக் காரணங்களாக்கியும், ஊன்றின்கையாகிய காரணத்தைப் பாவமெனக் காரியமாக்கியுங் கூறினர். அருளல்லது கொடுமை. சிறப்புப்பற்றி அறமும் பொருளெனப் படுதலின், பாவம் பொருளல்ல தெனப்பட்டது. கோறல் என முன் நின்றமையின் "அவ்வூன்" என்றார்.

' இனி, இதனை இவ்வாறன்றி 'அருளல்லது' என்பதனை ஒன்றாக்கிக், கொல்லாமை கோறல் என்பதற்குக் கொல்லாமை யென்னும் விரதத்தை அழித்தல் என்றுரைப்பாரும் உளர்'

அருளல்லது கொல்லுதல் ; ஊன்றினல் (தன்னளவில்) பொருட்படுத்தப் படுவதன்று என உரைப்பினுமாம். கொல்லாமை மேற்கொண்டாராகவும், தாமே இறந்த உயிர்களின் ஊனைத் தின்ன ஒருப்படுவாரும் உளராகலின் அவர்க்கிது பொருந்தும்.

அருள் கொல்லாமை, அல்லது கோறல் என நிரனிறையாகப் பொருள்கோடல் ஆசிரியர் கருத்தாயின், யாதென்பதை அரு

ளொடும் கூட்ட வேண்டாது 'அருளல்ல தியாவெனில்' எனச் செய்யுள் செய்திருக்கக்கூடும், யாப்பும் ஓசையும் அதனு லழித லின்மையின். அது நோக்கி யாம் 'அருளல்ல தியாதெனிற் கோறல்; கொல்லாமை பொருள்' என மொழிமாற்றிப் பொருள் கொண்டா மென்பது. ஆண்டும், ஆற்ஞெழுக்குப் பெறப்படுவ தில்லையாலோ வெனின், ஆற்ஞெழுக்காய்ச் செல்லின் எவ்வாற்ருனும் யாப்பிடர்ப் படுவது கண்டு கொள்க.

ஊனுண்டல் கொலையோ டொக்குமென்ற திது. (௪)

நிரயத்து வீழ்க்கும் பயனுலு மவை யொக்கும் என்பது வருங் குறள் :

உ௫௫. உண்ணுமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணுத்தல் செய்யா தளறு.

(இ - ள்.) உயிர் நிலை - உயிர்கள் (பல்வகைப்பட்ட உடம்பின்கண்ணே) நிற்றல், (ஊன்) உண்ணுமை உள்ளது - ஊன் உண்ணுமையாகிய அறத்தின் கண்ணதா யுள்ளது; (ஆதலால்,) ஊன் உண்ண - (ஒருவன் அவ் வறத்தைக் கெடுத்து உயிர்களின்) ஊனை உண்பானுயின், அளறு - (மறுமையில் அவனை விழுங்கிய) நிரயம், அண்ணுத்தல் செய்யாது - (பின்பு அவனை வெளியே உமிழ) வாயைத் திறவாது.

(இ - து.) ஊனுண்பார் நிரயத்தில் வீழ்வர்.

கொலைப்பாவம் கொன்ருர்மே லல்லது உண்டார்மே லாகாதெனக் கருதுவாரை நோக்கிக் கூறியதிது. உயிர்கள் பாசநீங்கி வீடு பெறுதற்பொருட்டு இறைவனுல் யாக்கையொடு பொருத்தப் பட்டுப் பல்வேறு பிறப்பெடுக்கின்றன. அவ்வப்பிறவியில் செய்யும் வினைக்கீடாக அவற்றைப் பற்றிநின்ற பாசம் தேய்கின்றது. ஒரு பிறவியில் தேயக்கிடக்கும் பாசம் அப் பிறவியின் ஆயுள் எல்லைக்கும் அவ் வெல்லையிற் செய்யப்படும் வினைக்கும் எற்ற அளவாகின்றது. ஆகவே அவ்வெல்லை இயல்பின் முற்றுப்பெருமுன்னே வலிந்து

அதனை இடையறுப்பின், பாசநீக்கத்தின் அளவு குறைவுபட்டு, அக் குறைவுதீரப் பிறிதொரு பிறவி மிகையாக எடுத்தல் அவ்வுயிர்க்கு இன்றியமையாத தாகின்றதே; அவ்வாற்றால் அதற்குப் பிறவித் துன்பம் அதிகப்படுகின்றது. ஆகவே, உயிர்க்கொலைக்கு இடந்தரும் ஊனுண்பான், உயிர்களுக்குத் துன்ப மாக்குவனாகி, அது காரண மாக நிரயத்தி லாழ்வா னென்பது கருத்து. உண்ணின் எனற்பாலது உண்ண எனத் திரிந்து நின்றது.

ஊனுண்டலின் பயன் கொலைப்பயனோ டொக்கு மென்ற திது. (௫)

அதனை அளவையான் நிறுவுவது வருங்குறள்:

உ௫௬. தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(இ-ள்.) உலகு - உலகத்தவர், தினற் பொருட்டா - தின்னுதல் காரணமாக, (ஊன்) கொள்ளா தெனின் - ஊனைக் கொள்ளாராயின், விலைப்பொருட்டால் - பொருள் காரண மாக, ஊன் தருவார் - ஊனை விற்பார், யாரும் இல் - யாரும் இல்லையாம்.

(இ - து.) ஊனை வாங்குவா ரில்லையானால், ஊனை விற்பாரும் இல்லையாம்.

கொள்ளா தென்பது மணக்குடவர் கொண்ட பாடம். ஆசிரியர் பரிமேலழகர் கொல்லா தெனப் பாடங் கொண்டு பொருளுரைத்தார்.

உலகென்றது ஈண்டு உலகத்தில் வாழும் மக்கள்மே னின்றது. கொலை செய்வாரும் வேறே; ஊன் தின்பாரும் வேறே. அவர் செய்யும் பாவத்தின் பயனை இவர் நுகர்த லியாங்ஙனம் என்றானை நோக்கி, தினற்பொருட்டாக இவர் கொள்ளாரெனின் விலைப் பொருட்டா அவர் கொல்லாரன்றே. ஆதலின் அவர் கொலைக்கு இவரே காரணராய் அப் பாவப்பயனை நுகர்வர் என அருத்தாபத்திப் பிரமாணத்தால் அறிவுறுத்திய திது.

இவை ஆறுபாட்டாலும் அருளுடைமைக்கும் புலான்மறுத் தலுக்கும் உள்ள பல்வகை இயைபும் விளக்கப்பட்டது. (சு)

ஊனுண்டலின் இழிவு கூறுவது வருங்குறள் :

உருஎ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) புலால் - ஊனை, உண்ணாமை வேண்டும் - உண்ணாதிருத்தல் வேண்டும்; (ஏனெனில்), அது - அப்புலால், உணர்வார்ப் பெறின் - (தன் இயல்பை ஆராயும்) உணர் வுடையாரைப் பெற்றால், பிறிதொன்றன் புண் - வேறோரு டம்பின் புண்ணாம் (என அவரால் அறிந்து இழித்தொதுக் கப்படும்).

(இ - து.) புலாலுண்ணல் பிறிதோருடம்பின் புண்ணை உண் ணல்போலும்.

'முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி மன்னல் வேண்டும்' (தொல் - குற்றியலுகரப் புணரியல் - கஅ) என்பது விதியாதலால், 'அஃதுணர்வார்' என நிற்றற்பாலது ஆய்தங்கெட்டு 'அதுணர்வார்' என நின்றது. புலாலின் மெய்ம்மை இயல்பு உணராமையால் அதனை உண்கின்றனர் அறிவிலாரென்றவாறு.

புலாலுண்ணலின் இழிவு கூறியது இது. (எ)

புலாலுண்ணாமையின் சிறப்புக் கூறுவன வரும் மூன்று குறள்கள் :

உருஅ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(இ - ள்.) செயிரின் - (மயக்கமாகிய) குற்றத்தினின் றும், தலைப்பிரிந்த - நீங்கிய, காட்சியார் - அறிவினையுடை யோர், உயிரின் தலைப்பிரிந்த - உயிரினின்றும் நீங்கி வந்த, ஊன் - ஊனை, உண்ணார் - உண்ணமாட்டார்.

(இ - து.) அறிவுடையோர் ஊனுணூர்.

தலைப்பிரிதல் என்பது பிரிதல் என்னும் பொருட்டே யாதலின் ஒருசொன்னீர்மைத்து. உயிர் நீங்கிய து பிணமே யாதலின் ஊனின் அத்தன்மை கண்டறிந்தவர் 'உண்ணூர்' என்ருர்.

புலாலுணணூமை அறிவுடைமையென்ற திது. (அ)

அது வேள்வியினும் சிறந்த தென்பது வருங்குறள்:

உருகூ. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணூமை நன்று.

(இ - ள்.) அவி - (தீயின்கண் நெய் முதலிய) அவிகளை, சொரிந்து - பெய்து, ஆயிரம் வேட்டலின்-ஆயிரம் வேள்விகள் செய்தலினும், ஒன்றன் உயிர் - ஒரு விலங்கின் உயிரை, செகுத்து - நீக்கி (அவ்வுயிர் நின்ற ஊனை), உண்ணூமை - உண்ணூதிருத்தல், நன்று - நல்லது.

(இ - து.) எண்ணிறந்த வேள்விப் பயனிலும், புலான் மறுத்தலின் பயன் சிறந்தது

ஆயிரம் என்ற தீண்டு எண்மிகுதியை உணர்த்தியது. வேள்வி காரணமாகவும் உயிர்கள் கொல்லப்படுதலின், அதனையும் விலக்கக் கருதிய ஆசிரியர், அது வேதவழக்கொடுபட்ட தென்பதை உளங்கொண்டு, அதனற் பயனுண்டென்பதை மறுக்காது, அப் பயனிலும் புலான்மறுத்தலாற் பெறப்படும் பயன் பெரிதாதலைக் காட்டி, எளிதிற் பெறகிடைக்கும் பெரும்பயனை விட்டு அரிதிற் பெறகிடைக்கும் சிறுபயனை அவாவுதல் விளக்கிருக்க மின்மினிதீக் காய்வது போலுமாகலின் வேள்விகருதியும் உயிர்கொலை செய்தலைத் தவிர்க எனக் குறிப்பி னறிவுறுத்தியவாறு கண்டு கொள்க.

புலாலுண்ணூமையின் பயன் வேள்விப் பயனிலும் பெரிதென்றதிக்குறள். (கூ)

அப் பெரும்பயன் இஃதென்பது வருங்குறள்:

உகூ0. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

(இ - ள்.) கொல்லான் - (ஒருயிரையும்) கொல்லாதவனுமாய், புலாலை மறுத்தானை - (பிறரால் கொல்லப்பட்ட உயிரின்) ஊனை உண்ணாதவனுமாயவனை, எல்லா உயிரும் - எல்லா உயிர்களும், கைகூப்பித் தொழும் - கைகுவித்து வணங்கும்.

(இ - து.) புலாலுண்ணாதவன் எல்லா உயிர்களாலும் வணங்கப்படுவான்.

கொலைப்பாலதாதல் பற்றியே புலாலுணணல் விலக்கப்பட்டதாகலின், புலாலுண்ணலைத தவிர்வோன் கொலை செய்தலையும தவிர்தல் வேண்டுமென்பார் அதனையும் உடன்கூட்டிக 'கொல்லான் புலாலை மறுத்தானை' எனறார். இப் பொருள் உடையான் எலலா உயிராலும் கைகூப்பித் தொழப்படுவான் எனவே, அவன் மறுமைக கண தேவரின் மிக்கானும் என மேற்குறளிற் கூறிய பெரும்பயனைக குறிப்பித்தவாறாயிற்று எல்லா உயிரும என்றதால மககளேயன்றி ஏனை விலங்கினங்களும் தொழும் என்றதாயிற்று. அவை தொழுவது இவனால் தம் முயிர்கருக் கேடில்லை யென்பது கருதி. கை கூப்பலும் தொழுதலும் மக்களொழிந்த உயிர்களில்லையாயினும், கேட்குந போலவும் கிளக்குந போலவும் இயறறுந போலவும் அஃறிணை மருங்கினும் அறையப்படுவது அணியாகச் செய்யுட்கண அமைதலுடைத் தென்க. (கo)

இவ் வதிகாரத்தில், முதல் ஆறு குறள்களால் புலாலுணணாமை அருளுடைமையாகிய அறததோ டியைபுடைய தென்பதும், அடுதத ஒரு குறளால் புலாலுணடலின் இழிவும், இறுதிமூன்று குறள்களால் புலாலுணணாமையின் சிறப்பும் கூறப்பட்டன.



## உஎ. தவம்

அஃதாவது, உள்ளம் புலன்வழி செல்லாமல் அடங்கித் தன் வயப்பட்டு நிற்றற்பொருட்டு உண்டி சுருக்கலும் கடுவெயிலில் நிற்றலும கடும்பனியில் நிற்றலும் கடுமழையில் நிற்றலும் முதலியசெயல்களை மேற்கொண்டு அவற்றால் தம் உயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களுக்குத துன்பம் நேரிடாது அவற்றைப் பாதுகாததல். புலான் மறுத்து உயிர்களிடதது அருள் முதிர்ந்தவழிச் செய்யப்படுவதாகலின, இது புலான் மறுத்தலின்பின் வைக்கப் பட்டது.

இவ் வதிகாரததில், தவத்தின் இலககணமும், அதன் சிறப்பும், தவஞ் செய்வாரின் உயர்ச்சியும், தவஞ் செய்யாரின் தாழ்வும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் தவததின் இலக்கணம் கூறுகின்றார்:

உசுக. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

(இ - ள்.) தவத்திற்கு உரு - தவத்தினது உருவம், உற்ற நோய் நோன்றல் - (உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்கு) வந்த துன்பத்தைப் பொறுத்தலும், உயிர்க்கு உறுகண் செய்யாமை - (தாம் பிற) உயிர்கட்குத் துன்பஞ் செய்யாமையுமாகிய, அற்றே - அவ்வளவே.

(இ - து.) தம துன்பம் பொறுத்தலும் பிறர்க்குத் துன்பஞ் செய்யாமையுமே தவத்தின் இலககணம்.

தன்னய மின்மை, பிறர் துன்பந் துடைத்தல், வேட்கை யடக்கல் முதலிய பலவும் இவற்றுள் அடங்குமென்பார் அற்றே எனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினர். தவத்திற்கு உரு என்பது தவத்தினது உரு என்னும் பொருட்டாதலின் ஆறுவதன் பொருட்கண் நான்காவது வந்த வேற்றுமை மயக்கம்.

தவத்தின திலக்கணம் கூறிய திக குறள். (க)

தவத்தின் சிறப்புக் கூறுவன வரும் நான்கு குறள்கள் :

உகூஉ. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

(இ - ள்.) தவமும் - (செல்வம், குடிப்பிறப்பு, கல்வி முதலிய பயன்களே யன்றித்) தவந்தானும், தவமுடையார்க்கு ஆகும் - (முற்பிறப்பிற் செய்த) நல்வினையுடையார்க்கே உண்டாகும்; (ஆகலான்,) அஃது இலார் - அந் நல்வினையில்லாதவர், அதனை மேற்கொள்வது - அத் தவத்தைச் செய்ய முயல்வது, அவம் - வீணும்.

(இ - து.) முற்பிறப்பில் அறஞ் செய்யாதார் இப் பிறப்பில் தவஞ் செய்ய முயல்தல் வீணும்.

தவத்தி னடங்கும் அறங்கள் பலவாதலின், அவற்றுள் ஒரு சிலவற்றையேனும் முற்பிறப்பிற் செய்து பழகியவரே அப் பழக்கத்தால் அறிவும் ஆற்றலும் உடையாராய்த் தவம் முழுவதையும் முடிக்க வல்லவ ராதலின், 'தவமும் தவமுடையாாக காகும்' என்றார். ஏனையோர் அவ்வறிவும் ஆற்றலும் இல்லாமையால் தவத்தைக் கடைபோகச் செய்ய வல்லராகா ராகலின், 'அதனை அஃதிலார் மேற்கொள்வது அவம்' என்றார்.

தவம் முற்பிறப்பிற் சிறிதேனும் செய்து பழகியவர்கயே யாமென்றதிக் குறள். (உ)

ஆதலின் அந் நல்வினையில்லார் இப் பிறப்பிலேனும் அதனை மறவாது சிறிது செய்து பழகுக என்பது வருங்குறள் :

உகூஙு. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

(இ - ள்.) துறந்தார்க்கு - துறவறத்தை மேற்கொண்டவர்க்கு, துப்புரவு - உண்டி மருந்து உறையுள் முதலியன,

வேண்டி - (உதவுதலை) விரும்பி, மற்றையவர்கள் - (இல்லறத்தை மேற்கொண்ட) மற்றையோர், தவம் - (தாம்) தவம் (செய்தலை), மறந்தார்கொல் - மறந்தார் போலும்.

(இ - து.) இல்லறத்தார் தம்மா லியன்ற அளவாகத் தவஞ் செய்து பழகல் வேண்டும்.

துப்புரவு - நுகரப்படுவன. 'வேண்டிய வேண்டியாங் கெய்த லாற் செய்தவ - மீண்டு முயலப்படும்' (உகூரு) என மேலுங் கூறுவ ராதலின் தானஞ் சிறந்த தாயினும், அதனினுஞ் சிறந்தது தவமாத லினானும், அது பழக்கமுடையார்க்கே கடைபோகக் கைகூடத்தக்க அருமையுடைத் தாதலானும், மறு பிறப்பிலேனும் அதை முடியச் செய்யும் கருத்தோடு தாஞ் செய்யுந் தானத்தோடு தவத்தையும் ஒரு சிறிது செய்தல் பயனுடைத்தா மென்பதை இல்லறத்தார் மறத்தல் கூடாதென்பார் 'மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம்' என்றார்.

தானத்திற் றவஞ் சிறந்த தென்ற திது. (௩)

சிறந்ததாயதற்குக் காரணங் கூறுவது வருங்குறள்:

உகூச. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

(இ - ள்.) எண்ணின் - (தவஞ் செய்வார்) நினைப்பாராயின், ஒன்னார் - (தம் அறத்திற்கு அழிவுசூழும்) பகைவரை, தெறலும் - அழித்தலும், உவந்தாரை - (அவ் வறத்தைக் கண்டு) மகிழ்ந்(து உதவி செய்)தாரை; ஆக்கலும் - உயர்த்தலும், தவத்தான் வரும் - (அவர்) தவவன்மையாற் கைகூடும்.

(இ - து.) தவம் ஆக்கவும் அழிக்கவும் வல்லது.

முற்றத் துறந்தவர் யானென தென்னும் பற்றை அறவொழித்தவ ராதலின் அவர்க்கு ஒன்னாரும் உவந்தாரும் இருத்தல் கூடாதாகலின், அவராலாம் என்னாது 'தவத்தான் வரும்' எனத் தவத்தின்மே லேற்றிக் கூறினார். 'எண்ணின்' என்றதால் அவர்க்கு அவை எண்ணாமை இயல்பென்பது பெறப்படும்.

தவம் பிறரை ஆக்கவும் அழிக்கவும் வல்லதென்றதிக் குறள்.

அஃது உடையார்க்கும் அவர் வேண்டுவதைத் தரவல்லதென்பது வருங்குறள் :

உ௬ரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

(இ - ள்.) வேண்டிய - (செய்தால் தாம்) விரும்பிய பயன்களை, வேண்டியாங்கு - விரும்பியபடியே, எய்தலால் - அடையலா மாதலால், செய்தவம் - செய்யப்படுவதாகிய தவமானது, ஈண்டு - இப்பிறப்பிலே, முயலப்படும் - (அறிவுடையோரால்) முயன்று செய்யத்தக்கது.

(இ - து) தவத்தால் விரும்பியதைப் பெறலாம்.

இத்துணைச் சிறப்புவாய்ந்த தாகலினும், ஒரு பிறப்பிற்றானே முற்ற முடியச் செய்தற்கரிய தாகலினும், அதன் சிறப்பும் அருமையும் நோக்கித் தவத்தை இப் பிறபபிலேயே செய்யத் தொடங்குக என்பார் 'செய்தவமீண்டு முயலப்படும்' என்றார்.

இவை நான்கு பாட்டாலும் தவத்தினது சிறப்புக் கூறப்பட்டது. (ரு)

தவஞ் செய்வாரது உயர்ச்சி கூறுவன வரும் நான்கு குறள்கள்:

உ௬௬. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(இ - ள்.) தவம் செய்வார் - தவம் செய்பவர்களே, தம் கருமம் செய்வார் - தமது கருமத்தைச் செய்பவர் ஆவர்; மற்றல்லார் - அவரல்லாப் பிறர், ஆசையுட்பட்டு - ஆசையாகிய வலையுட்பட்டு, அவம் செய்வார் - (தமக்குப் பயன் படாத) வீண் கருமத்தைச் செய்பவ ராவர்.

(இ - து.) தவஞ் செய்வாரே தமது கருமத்தைச் செய்பவர்.

தவம் ஞானத்திற் கேதுவாய் உயிரைப்பற்றி அதனைப் பாச வலையினின்று நீக்கி நிலையான வீட்டின்பத்திற் புகுத்துவதாகலினு னும், தானுவது உயிரே யாகலினுனும் 'தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வா' ராயினர். ஏனையோர உடலையும் பொருளையும் தானென் றும் தனதென்றும் மயங்கி அவை விரிக்கும் நிலையில்லா இன்பங் களாகிய ஆசைவலையுட் பட்டுழல்தலின் 'மற்றல்லார் அவஞ் செய் வார்' ஆயினர்.

தவஞ் செய்வாரே நிலையான இன்பமெய்துவர் என்ற திக்குறள்.

துன்பஞ் சகித்தலாகிய தவம் இன்பத்திற் கேதுவாமாறு கூறு வது வருங்குறள்:

உகூஎ. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(இ-ள்.) சுட - (புடத்திலிட்டுச்) சுடச்சுட, பொன் - பொன்னுக்கு, சுடரும் போல் - ஒளி மிகுமாறுபோல நோற்கிற்பவர்க்கு - தவஞ் செய்வார்க்கு, துன்பம் - (அத் தவத்தால் வரும்) துன்பம், சுடச்சுட - வருத்த வருத்த, ஒளி விடும் - ஞானம் மிகும்.

(இ - து.) தவத்தில் வருந்த வருந்த ஞானம் வளரும்.

பாசநீக்கமே வீடாதலானும், பாசமாவது அறியாமை யாதலா னும் அறியாமை அகன்று அறிவு நிரம்பவே வீட்டின்பம் தானே எய்தும் என்பதாயிற்று. புறவிருளை நீக்கும் ஒளிபோல அகவிருளை நீக்குவது ஞானமாதலின் அஃது ஒளி யெனப்பட்டது. தீயின் வெம்மையில் பொன்னின் மாசு அழிந்து ஒளி மிகுமாறுபோலத் தவத்தின் வெம்மையில் உயிரைப்பற்றிய அறியாமை அழிந்து அறிவு மிகுமென்க.

'சுடச் சுடரும் பொன்போல்' எனப் பொன்னை உவமை போல வைத்துக் கூறினாராயினும், பொருள் கூறுமிடத்து ஒளி விடும் உயிர் என்னாது, உயிருக்குரிய ஒளிமிகும் என்று கூறினமை

யின், அக்கருத்துக் கிசையப் பொன்னுக்குரிய ஒளிமிகும் என்பது படப் பொன் சுடரும் போல் என வைத்து உரை கூறப்பட்டது.

தவஞ் செய்வார்க்கு ஞானம் மிகுமென்றது. (எ)

பெருமை மிகுமென்பது வருங்குறள் :

உகூ௮. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) தன் உயிர் - தனது உயிரானது, தான் அறப் பெற்றானை - தானென்று முனைத்தெழும் ஆணவ வலி கெடப் பெற்றவனை, ஏனைய - ஒழிந்தனவாக, மன் உயிர் எல்லாம் - (இவ்வுலகத்தில்) நிலைபெற்ற உயிர்கள் எல்லாம், தொழும் - வணங்கும்.

(இ - து.) தவமுடையார் பிறர் எல்ல ராலும் வணங்கப் படுவர்.

ஆணவ மகன்று இறைவனோ டொன்று தற்குரியார் இறைவனை போல வணங்கப்படுதற் குரியர் என்பதாயிற்று. தானற என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகர் தனக்குரித்தாக என்றார்.

தவமுடையார் இறைவனை போல்வ ரென்றது. (அ)

அவர் காலனையும் புறங்காண்ப ரென்பது வருங்குறள் :

உகூகூ. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

(இ - ள்.) கூற்றம் - காலனை, குதித்தலும் - கடத்தலும், கைகூடும்- ஆவதாம், நோற்றலின் - தவஞ்செய்தலான் (வரும்), ஆற்றல் - வல்லமையை, தலைப்பட்டார்க்கு உடையவர்க்கு.

(இ - து.) தவமுடையோர் காலனையும் வெல்வர்.

குதித்தலும் என்பதில் உம்மை, குதித்தலின் அருமை தெரித்த லின் சிறப்பும்மையும், ஞான மிகுதல் பெருமையுறல் முதலிய பிற வற்றையுந் தழுவி நிற்றலின் எச்சவும்மையுமாம்.

இவை நான்கு பாட்டானும் தவஞ் செய்வாரது உயர்ச்சி கூறப்பட்டது. (கூ)

தவஞ் செய்யாரது தாழ்வு கூறுவது வருங்குறள் :

உஎ0. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

(இ - ள்.) (உலகத்தில் ஞானிகள் சிலராக), இலர் - ஞானமில்லாதவர், பலர் ஆகிய காரணம் - பலரா யிருத்தற் குக் காரணம், (யாதெனின்,) நோற்பார் - தவஞ் செய்வார், சிலர் - சிலரும், நோலாதவர் - தவஞ்செய்யாதவர், பலர் - பலரு மாதலே.

(இ - து.) நுணணறிவுடையார் சிலராயிருததற்குக் காரணம் தவஞ் செய்வார் சிலராயிருததலே.

இன்மை ஈண் டறிவின்மையைக் குறிததது. தவஞ் செய்யா தார் அறிவில்லா மூடர் என அவரது தாழ்வு கூறப்பட்டது. (க0)

இவ் வதிகாரத்தில் முதற் குறளால் தவததின இலக்கணமும், அடுத்த நான்கு குறள்களால் தவத்தின் சிறப்பும், அடுத்த நான்கு குறள்களால் தவஞ் செய்வாரது உயர்ச்சியும், இறுதிக் குறளால் தவஞ் செய்யார் தாழ்ச்சியும கூறபபட்டன.

# உ அ. கூடாவொழுக்கம்

அஃதாவது சிற்றின்பஞ் சேராத ஒழுக்கம். இல்லறத்தில் நின்று காமந் துய்த்து அதனில் வெறுப்புத்தோன்றி அவ் வின்பத்தைத் துறந்து பேரின்பத்தை விழைந்து தவ வழிநிற்பதே துறவறமாகலானும், அருள் பூண்டு புலான் மறுத்துத் தவஞ் செய்வதெல்லாம் ஐம்புலனை அடக்கி உள்ளம உரம்பெற்று மெய்யுணர்ந்து வீடு பெறுதற் பொருட்டே யாகலானும், உள்ளம் நெகிழ்ந்து புலன்வழியோடுவதாகிய சிற்றின்பத்தை நாடாமல ஒழுகல வேண்டும என்னுமிது தவமுடைமையின் பின் வைக்கப்பட்டது. புலனை யொடுக்கித் தவஞ்செய்வார்க்க கல்லது பிறர்க்கு இது கூடாமைபற்றியும் இது தவமுடைமையின் பின் வைக்கப்பட்ட தென்க. இவ்வாற்றான் அதிகார இயைபு பெறப்பட்டது.

'கூடாவொழுக்கம்' என்பது, 'கொல்லா நலம்' 'பொய்யா வொழுக்கம்' எனபனபோல கூடாமையாகிய ஒழுக்கம் என்னும பொருள்பட நின்றது. கூடுதலாவது சிற்றின்பச் சேர்க்கை. கூடாமை யாவது அச் சேர்க்கை யொழிதல. இதற்கிவ்வாறன்றி (தவத்தோடு) பொருந்தாததாய தீயவொழுக்கம் எனப் பொருள் கொள்ளப்பட்டு வருகிறது. தீயவொழுக்கம் அறமன்றாதலின் அப்பொருள் பொருந்தாது. என்னை? அறவியல் கூறும் அதிகாரங்கள் அறங்களாதல் வேண்டி அழுக்காறு முதலியவாகக் கடியப்படுவன கூறுங்கால் அவற்றை எதிர்மறுத்து அழுக்காறாமை முதலியவாகச் சொன்ன நேர்ச்சி கெடுதலின் என்க. ஆயினும் இங்ஙனம் பொருள்கொள்ளுதல் அடிப்பட்ட சான்றோர் வழக்கொடு மாறுபடுதலின் அறிவான்ற பெரியோர் இதனை நன்காய்ந்து ஒவ்வுமேற் கொள்ளுக, ஒவ்வாதேற் றள்ளுக.

இனி, இவ் வொழுக்கம் தவம் மேற்கொண்டார்க்கு இன்றியமையாத தென்பதை உலகம் நன்கறியுமாதலால் அவர் அவ் வொழுக்கத்திற் பிழைக்கக் கருதுவாராயின் உலகறியப் பிழையாது மறைந்தொழுகிப் பிழைத்து உலகை வஞ்சிப்பர். ஆகலின் இவ்வ

திகாரத்தில் கூடாவொழுக்கத்திற் பிழைத்தலைக் கடியுமிடத்தெல் லாம் பிழைக்குமவ் வியல்பினைச் சுட்டியே கடியப்படும்.

இனி, இவ்வதிகாரத்தில் கூடாவொழுக்கம் பிழைத்தலின் இழிவும், கூடாவொழுக்கம் பிழைப்பாரின் இழிவும், அவரை அறியுமாறும், கூடாவொழுக்கம் பிழையாரது சிறப்பும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் கூடாவொழுக்கம் பிழைத்தலின் இழிவு கூறுகின்றார்:

உஎக. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

(இ - ள்.) (கூடாவொழுக்கத்தை மறைவிற் கைவிட் டொழுகும்,) வஞ்ச மனத்தான் - வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது, படிற்றொழுக்கம் - மறைந்த ஒழுக் கத்தை, பூதங்கள் ஐந்தும் - (அவ் வொழுக்கத்துக்குக் கரு வியான அவனது உடம்பின்கண் கலந்து நிற்கின்ற) ஐந்து பூதங்களும் (கண்டு), அகத்தே நகும் - (தம்) உள்ளே சிரிக்கும்.

(இ - து.) மறைவிற் கூடாவொழுக்கம் பிழைக்கும் தவசியை அவன் உடம்பே பழிக்கும்.

புறத்தவ வேடத்தால் கூடாவொழுக்கம் உடையவனாக அவன் தன்னைக் காட்டிக்கொள்ள, அவன் உள்ளம் அக் கூடா வொழுக் கத்தை மேற்கொள்ள வலியில்லாது கூட்டம் விழைதலின் 'வஞ்ச மனத்தான்' என்றார். விழைந்தவழி வெளிப்பட ஒழுகல் தன் வேடத்துக்கொவ்வாதாகலின் களவில் ஒழுகும் அவன் ஒழுக்கத் தைப் 'படிற்றொழுக்கம்' என்றும், அவ்வொழுக்கத்தை உலகம் அறியாவிடினும் புலன்வழிச் சென்று அவ்வொழுக்கத்திற் படிந்த அவன் உள்ளம் அதை நன்கறியுமாதலினானும், அவ் வொழுக் கத்தை அவன் மறைப்பதனையும் அவ் வுள்ளமே நன்கறியுமாதலினா னும் அஃது தவனுடைய பொய்மைகண்டு நகும் என்பார் 'பூதங்

களைந்து மகத்தே நகும்' என்றும் கூறினர். வெளி, வளி, நீர், நெருப்பு, மண் என்னும் பூதங்கள் சடமாதலின் அவை அறிதல் இல்லை; ஆகவே, அவற்றினைப்பற்றி எழும் புலன்களைக் கொள்க. புலன்கள் பூதங்களைப்பற்றி எழுங்கால், ஓசை வெளியினையும், வளி நாற்றத்தினையும், நீர் ஊற்றினையும், நெருப்பு ஒளியினையும், மண் நாற்றத்தினையும் பற்றி யெழு மென்க.

கூடாவொழுக்கம் பிழைத்தல் படிற்றொழுக்கம் என்ற திக் குறள். (க)

அது தன் னெஞ்சறி குற்றமா மெனபது வருங்குறள் :

உஎஉ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
　　　தானறி குற்றப் படின்.

(இ - ள்.) (தவ வேடங் கொண்ட ஒருவன்) தான் அறி குற்றம் - தான் (குற்றமென) அறிந்த (கூடுமொழுக்க மாகிய) குற்றத்தில், தன் நெஞ்சம் படின் - தன் உள்ளம் தாழுமாயின், வான் உயர் - வான் போல் உயர்ந்த, தோற்றம் - (அவனது புறத்தவ) வேடம், எவன் செய்யும் - (அவனுக்கு) என்ன பயனைச் செய்யும் ?

(இ - து.) தவமேற் கொண்டார்கு உள்ளம் தூயதின்றேல் புறவேடம் பயன் தராது.

காண்பார் உள்ளததில் உயர்ந்த மதிப்பைத் தோற்றுவிக்கும் தோற்றததை 'வான் உயர் தோற்றம்' என்றது 'வான்றோய் குடி' (நாலடி - ௱௬உ) என்றாற் போல்வதோர் இலக்கணை வழக்கு. ஒரு வேடங்கொள்வது ஒரு பயன் கருதி. தவவேடம் கொள்வது தவநெறி நின்று ஞானமுற்று வீடு பெறுதற்கு. நெஞ்சந் தானறி குற்றப்படவே, தவநெறி பிழைத்தது. அது பிழைக்க அதன் வழிநின்று பெறுவதாகிய பயனும் இல்லையாம். ஆகவே, அவர் வேடம் புறத்தாரை வெருட்டுதலல்லது அது கருதிய பயனைத் தரா தாயிற்று.

தவவலிமை வேடத்தா லாவதன் றென்றதிது. (உ)

அதனை உவமையான் விளக்குவது வருங்குறள்:

உ௭௩. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

வலியில் நிலைமையான் - (மனத்தைத் தன் வழிப் படுத்தி அதனாற் பெறப்படும் தவ) வலிமை யில்லாத இயல்பினையுடையான், வல்லுருவம் - (அத்தவ) வலிமையுடைய வரது (தவ) வேடத்தைக்(க் கொண்டு தன் மனத்தின் வழியே சென் றொழுகல்), பெற்றம் - (வலிமையில்லாத) பசு, புலியின்றோல் - (வலிமையுடைய) புலியின் தோலை, போர்த்து-மேற் போர்த்துக்கொண்டு, மேய்ந்தற்று - (மேயத்தகாத அயலார் பயிரைத் தன் மனப்படி சென்று) மேய்தல் போலும்.

(இ - து.) தவவேடங்கொண்டு கூடாவொழுக்கம் பிழைத்தல், பசுவானது புலித்தோல் போர்த்துப் பயிரை மேய்தல்போலும.

புலித்தோல் போர்த்துப் பசு மேய்தலின்மையின் இஃது இல்பொருளுவமை. 'வலியில் நிலைமையான்' என்ற அடையானும், 'மேயந்தற்று' என்னும் வினையுவமையானும், வல்லுருவத் தோடு வலியில்லாது மனம்போன வழி போதல என்பது பெற்றும். பசு புலித்தோல் போர்ததுப் பயிரை மேய்தலான் ஆய பயன், மெய் கண்டாராற் கடியப் பட்டுப் பட்டியிலடைபடுதலன்றிப் புலியின் வன்மை பெறுவ தின்றாறற்போல, தவ வேடங்கொண்டு கூடா வொழுக்கம் பிழைத்தலான் ஆய பயன் மெய்கணடாராற் கடியப்பட்டு நிரயத் தாழ்தலன்றித தவசியரின் வன்மை பெறுவ தின்று மென் பது கருதது. அன்றியும், புலிவேடங் கொள்ளாவிடின் அப் பசு வாயுறைபெற்றுச் சுகித்திருத்தல் கூடுவதுபோலத் தவவேடங் கொள்ளாவிடின் அவன் இல்லற நெறிநின்று கூடுமொழுக்கத்தில் தன் இச்சையை நிறைவேற்றிக் கொள்ளுதல் கூடுமென்க. எனவே, தவவேடங்கொண்டு கூடாவொழுக்கம பிழைப்பார் இல்லறமு

மின்றித் துறவறமுமின்றி இடையூச லாடிக் கெடுவ ரென்பதாயிற்று. புலி பசித்தாலும் புல்லைத் தின்னாதன்றே; அங்ஙனமே மெய்த்தவ மேற்கொண்டோர் வேட்கை எழினு மதன்வழி யொழுகா ரென்க. போலிவேடப் பசு, வேடத்தின் வலியால் பிறர் புனத்துத் துணிந்து சென்று மேய்தல்போல போலிவேடத்தவசி, வேடத்தின் வலியால் உற்றார்க்குரிய பொற்றொடிமகளிர்பால் துணிந்து சென்று அல்லவை செய்வானென்பது மிவ்வுவமையாற் பெறப்பட்டது.

வேடத்தின் வலியாற் சென்று தவறிழைத்தலைக் கடிந்த திக் குறள்: (௩)

வேடத்தின் வலியால் இருந்து தவறிழைத்தலைக் கடிவது வருங் குறள்.

உஎச. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) தவம் மறைந்து - தவவேடத்தின் கண்ணே மறைந்து நின்று, அல்லவை செய்தல் - (மனவலி யில்லாமையினாலே தவநெறியின) அல்லாதவற்றைச் செய்தல், வேட்டுவன் - வேடன், புதன்மறைந்து - புதலின் கண்ணே மறைந்து நின்று, புள் - பறவைகளை, சிமிழ்த்தற்று - பிடித்தல் போலும்.

(இ - று.) தவவேடங் கண்டு வரும் மகளிர்பால் அல்லவை செய்தல், புதலென் றெண்ணி வரும் புட்களைப் பிடித்தல் போலும்.

அல்லவை செய்தல் என்றது கூடாவொழுக்கம் பிழைத்தலை. தவவேடங் கொண்டானும், தவவேடமும், மகளிரும், அல்லவை செய்தலும் பொருட்பகுதியாகவும்; வேடனும், புதலும், புள்ளும், சிமிழ்த்தலும் உவமப் பகுதியாகவும் நிரலே வைத்து உவமஞ் சென்றவாறு கண்டுகொள்க.

தவமென்றது தவவேடத்துக் காதலின் ஆகுபெயர்.

அல்லவை செய்தலை உவமை காட்டிக் கடிந்த திக் குறள். (௪)

அல்லவை செய்தலைப் பயன்காட்டிக் கடிவது வருங்குறள்:

உஎரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவும் தரும்.

(இ - ள்.) (தம்மைப் பிறர் நன்கு மதித்தற்பொருட்டுத் தவவேடங்கொண்டு யாம்) பற்றற்றேம் - பற்றுக்கள் அற்றோம், என்பார் - என்று சொல்வோரது, படிற்றொழுக்கம் - களவொழுக்கம், (அப்பொழுது இனிதுபோலத் தோன்றினும், அதன்பின்) எற்று எற்று என்று - (யாம் செய்த காரியம்) எப்படிப்பட்டது என்று (தாமே எண்ணி எண்ணி வருந்தும் வகை அவர்க்கு), ஏதம் பலவும் தரும் - துன்பங்கள் பலவற்றையும் தரும்.

(இ - து.) அப்பொழுதை யின்பத்தைக் கருதிக் கூடா வொழுக்கம் பிழைக்கும் தவசியர், பின்னை ரெப்பொழுதும் வருந்துமாறு பல துன்பங்களுக் காளாவர்.

உண்மையிற் பற்றற்றவர் கூடா வொழுக்கம் பிழையா ராதலின், பிழைப்பார் பற்றற்றமை சொல்லளவல்ல தின்மையின் 'பற்றற்றே மென்பார்' என்றும், நிலையில்லாத சிற்றின்பத்தை விரும்பிச் செய்த காரியம் நிலையான பெருந்துன்பத்தை ஆக்கியதை நினைந்து நினைந்து அழுங்குவரென்பதைக் குறிக்க, 'எற்றெற்று' என்றும் கூறினர்.

இவை ஐந்து பாட்டானும் கூடாவொழுக்கம் பிழைத்தலின் இழிவு கூறப்பட்டது. (ரு)

கூடாவொழுக்கம் பிழைப்பாரின் இழிவு கூறுவன வரும் இரண்டு குறள்கள் :

உஎசு. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

(இ - ள்.) நெஞ்சில் துறவார் - (யான் எனதென்னும் இருவகைப் பற்றுக்களையும்) உள்ளத்தினின்று அகற்றாதவராய், துறந்தார்போல் - (அப் பற்றுக்களை) அகற்றியவர் போன்று, வஞ்சித்து வாழ்வாரின் - (உலகை) வஞ்சித்து வாழுமவர்போல, வன்கணார் இல் - கொடியவர் இல்லை.

(இ - து.) உள்ளத்துறவின்றிப் புறத்துறவு பூண்டொழுகுவார் கொடியர்.

வன்கண்மை—கொடுமை. உலகம் அவர் வேடத்தை நம்பி அவரை நன்குமதித்து அவர்க்கு ஆவன செய்ய, அவர் தமக்கு நல்லது செய்த அவ் வுலகத்துக்குத் தமது ஒழுக்கப்பிழைப்பால் அல்லது செய்தலின் அவரின் 'வன்கணாரில்' என்றார்.

பொய்த்தவ வேடத்தார் இயல்பு கூறிய திது. (௬)

அவ்வியல்பிற் குவமை கூறுவது வருங்குறள்:

உ௭௭. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

(இ - ள்.) புறம் - வெளி (வேடத்தால்), குன்றி - (செம்மையுடைமைபற்றிக்) குன்றிமணியை, கண்டனையரேனும் - கண்டாற் போல்வரேனும், அகம் - உள்ளம், குன்றி மூக்கின் - குன்றிமணியின் மூக்குப் போல, கரியார்- களங்கமானவரை, உடைத்து - (இவ் வுலகம்) உடையது.

(இ - து.) புறத்தே தவ வேடமும உள்ளத்தே அவ நினைவும் உடையாரும் உளர்.

குன்றி தூரத்திருந்து நோக்குவார்க்குச் செம்மை நிறமுடையதுபோல் தோற்றுகிறது; உண்மையில் முனை கறுப்புடையதாயுள்ளது. அவ்வாறே தூரத்திருந்து நோக்குவார்க்குச் செம்மையுடைய தவவேடமே புலப்படுத்து, உண்மையில் உள்ளங் களங்கமுடையராவாரு முளர் என்க. குன்றி ஒரு செடியின் வித்து. அது தன் நிறப் பகட்டால் அரிய மணியெனப் படினும், மணியொடு வைத்தெண்ணப்படாது. அங்ஙனமே கூடாவொழுக்கம் பிழைத்தோர்

தம் வேடப் பகட்டால் அரிய துறவியா ரெனப்படினும், துறவியா ரொடு வைத்தெண்ணப்படார் என்பது மிவ்வுவமையாற் பெற்றாம்.

செம்மை கருமை என்பன பொருளின்கண் உள்ளப் பண்பி னும், உவமையின்கண் நிறப் பண்பினுஞ் சென்றன. ஈரிடத்தும் பண்பொத்தலின் இது பண்புவமை.

'வாழும் படியொன் றுங் கண்டிலம் வாழியிம்மாம் பொழிற்றேன்
சூழுமுகச் சுற்றும் பற்றினவாற் றொண்டையங் கனிவாய்
யாழின்மொழி மங்கைபங்கன் சிற்றம்பல மாதரியாக்
கூழின் மலிமனமபோன் றிருளாநின்ற கோகிலமே'

என்னுந் திருக்கோவையாரினும் இருட்பண்பு மனத்தின்மேலும் நிறத்தின்மேலும் சென் றுவமையாயவாறு காண்க. கூழின் மலிமன மாவது உணவாற் செருக்கும் மனம் கோகிலம் - குயில்.

குன்றிமணி பலவும் மெய்ம்மணி சிலவுமாதல்போல, பொய்த் தவர் பலரும் மெய்த்தவர் சிலருமாவர் எனவுங் கொள்க. இது வருங் குறளால் தெளியப்படும் (எ)

உஎஅ. மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(இ - ள்.) மாசு மனத்தது ஆக - களங்கம் (தம்) உள் ளத்தின்கண்ணதா யிருக்க, (பிறருக்கு) மாண்டார் - (தவத் தான்) மாட்சிமைப்பட்டவரை(ப் போல), நீராடி - நீரின் முழுகி(க் காட்டி), மறைந்து - (தமது வேடத்தினும் புற ஒழுக்கத்தினும்) மறைந்து, ஒழுகும் - (கூடாவொழுக்கம் பிழைத்து) ஒழுகும், மாந்தர் - மக்கள், பலர் - (உலகத்திற்) பலர்.

(இ - து.) புறத்தூய்மையன்றி அகத்தூய்மையில்லாத தவ வேடத்தார் பலர் உளர்.

நீராடுதல் புறத்தூய்மை கருதியும் புறத்தார் மயங்குதல் கருதியு மாம். அகத்தூய்மை மெய்யொழுக்கத்தா லாவது. ஆகலின், ஒருவர் நீராடுதலைக் கண்டு அத்துணையால் அவர் அகத்தூய்மை

யுடையாரென மயங்கற்க என்பது கருத்து. மேலும், 'புறந்தூய்மை நீரானமையு மகந்தூய்மை - வாய்மையாற் காணப் படும்' (குறள்-உகூஅ) என்றது காண்க.

மாசாவது காம மயக்கம். உள்ளமாசு அறிவுநீராற் றீர்வ தன்றிப் பூதநீராற் றீர்வதன்று அம் மாசு தீராது, புறமாசு தீர்க்கும நீராடி அப் புறதூய்மையில் மறைந்தொழுகுவார் மாண்டா ரல்ல ரென்பார், 'மனத்தது மாசாக மாண்டார் நீராடி மறைந் தொழுகு மாந்தர்' என்றார். இக கருத்தானே திருமந்திர நூலுடையாரும்,

> 'உள்ளத்தி னுள்ளே யுணர்வெனுந் தீர்த்தநீ
> மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
> பள்ளமு மேடும் பறந்து திரிவரிக
> கள்ள மனமுடைக் காசினி யோரே'

என்றருளிச் செய்வா ராயினர்.

இனி, 'மாண்டார் நீராடி' என்பதற்கு மாட்சிமைப் பட்ட வாது தன்மையைப் பூண்டு எனப் பொருள்கொள்வதும் பொருந் தும்.

இவை மூன்று பாட்டானும் கூடாவொழுக்கம் பிழைப்பாரின இழிவு கூறப்பட்டது. (அ)

கூடாவொழுககம் பிழையாரையும் பிழைததாரையும் வேறு பிரித் தறியுமாறு கூறுவது வருங்குறள்:

> உஎகூ. கணைகொடி தியாழ்கோடு செவ்விதாங் கன்ன
> வினைபடு பாலாற் கொளல்.

(இ - ள்.) கணை - அம்பு, கொடிது - (வடிவாற் செவ்வி தாயினும், செயலாற்) கொடியது; யாழ்கோடு - யாழின் கொம்பு, செவ்விது - (வடிவால் வளைந்ததாயினும், செயலால்) செம்மையானது, ஆங்கன்ன - அவ் வகையே, (தவஞ் செய் வோரையும் கொடியர் இவர் செவ்வியர் இவர் என்று பிரித் தறியும் வழி அவர் வடிவு நோக்கிப் பிரியாது) வினைபடு

பாலால் - (அவர்) செயல் பட்ட பகுதியாலே (அறிந்து), கொளல் - கொள்க.

(இ - து.) தவசியரை அவர் செயலான் அறிக.

கணைக்குச் செயல் கொல்லுதல்; யாழுக்குச் செயல் இசைத்து இன்பம் பயத்தல். அவ்வகையே தவசியர் செயல் கூடாவொழுக்கம் பிழைக்குமாயின் அவரைப் பொய்த்தவரென்றும், பிழையாதாயின் அவரை மெய்த்தவரென்றும் கொள்க எனபதாயிற்று.

கூடாவொழுக்கம் பிழைபாரைப் பிழைத்தாரின் வேறுபிரித் தறியுமாறு கூறிய திக குறள். (கூ)

கூடாவொழுக்கம் பிழையாது சிறப்புக கூறுவது வருங குறள்:

உஅ௰. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

(இ - ள்.) (தவஞ்செய்வோர்) உலகம் பழித்தது - உயர்ந்தோர் (தவத்திற் கொவ்வா தெனக்) கடிந்த கூடும் ஒழுக்கத்தை, ஒழித்து விடின் - நீக்கி(க் கூடாவொழுக்க முடையரா)ஞல், (அவர்க்கு) மழித்தலும் - (தலைமயிரைச்) சிரைத்தலும், நீட்டலும் - வளர்த்தலு மாகிய (புறவேடம்), வேண்டா - வேண்டுவதில்லை.

(இ - து.) மெய்த்தவருக்குப் புறவேடம் இன்றியமையாத தன்று; வேடமின்றியே அவர் தாம் கருதிய பயனைப் பெறுவர்.

மழித்த லென்பதே தலைமயிரை யுணர்த்தலின் அது கூறு ராயினர். இதனாற் கூடாவொழுக்கம் பிழையாதார்க்கு வேடமும் வேண்டாவென அவர் சிறப்புக் கூறப்பட்டது. (க0)

இவ் வதிகாரத்தில் முதல் ஐந்து குறள்களாற் கூடாவொழுக் கம் பிழைத்தலின் இழிவும், அடுத்த மூன்று குறள்களால் அது பிழைத்தாரின் இழிவும, அடுத்த குறளால் அவரை அறியுமாறும், இறுதிக் குறளால் அது பிழையாரின் சிறப்பும் கூறப்பட்டன.

## உ௯. கள்ளாமை

அஃதாவது பிறருடைமையை அவரை வஞ்சித்துக் கொள்ளாமை. இல்லறத்தார்க்காயின், அரசொடு பட்டு நிரைகோடல் முதலியன மறநிலையறமாயக் கடியப்படாதாகலின், இது துறவறத்திற்கே சிறப்பின் உரியதாயிற்று. ஒருசாரார்க்குக் காமங் கடியப்படா வாறு போலக் களவுங் கடியப்படாமை குறித்தன்றே காமநூலே யன்றிக் களவுநூலும் உளதாயிற் றென்க. காமமும் பொருளுங் கடிந்து வீடு ஒன்றே கருதிய அறமாதலின் துறவறத்திற்குப் பொருள் பற்றி நிகழும் களவு கடியப்பட்டதாயிற்று. காமம்பற்றிய வொழுக்கங் கடிவதாகிய கூடாவொழுக்கங் கூறிப் பொருள்பற்றிய ஒழுக்கங் கடிவதாகிய கள்ளாமை கூறலின் அதிகார இயைபு பெறப்பட்டது.

இவ் வதிகாரத்தில், களவின் இழிவும், களவாடலின் தீமையும், களவாடுவார் தன்மையும், அவர்க்குறுங் கேடும், தொகுப்புரையும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் களவின் இழிவு கூறுகின்றார்.

உ௮க. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. [தொன்றுங்

(இ - ள்.) எள்ளாமை - (பிறர் தன்னை) இகழாதிருத்தலை, வேண்டுவான் என்பான் - விரும்புபவன் என்பவன், எனைத் தொன்றும் - யாதொரு பொருளையும்; கள்ளாமை - (உடையாரை) வஞ்சித்துக் கொள்ளுதலை(க் கருதுதற்கும் இடங் கொடாது), தன் நெஞ்சு - தன்னுடைய உள்ளத்தை, காக்க - காக்கக் கடவன்.

(இ - து.) கள்ளக் கருதுதலும் இழிவாம்.

துறவோராவார் பொருளையும் இன்பையும் அறத் துறந்தோ ராதலின் அவர் பொருளை விழைதலே குற்றம்; களவிற் கொள்ள விழைதல் அதனினும் குற்றமாமன்றே. ஆகலின், 'எனைத்தொன் றுங் கள்ளாமை காக்க தன் னெஞ்சு' என்றார். நெஞ்சு என்றமை

யால் கருதுதல் வருவித் துரைக்கப்பட்டது. இகழாமை விரும்பின் கள்ளுதல ஒழிக எனவே களவு இகழ்சசிக் குரியதாயிற்று. நெஞ்சி னல் நினைப்பதும் இழிவெனவே செய்தல் இழிவாதல் கூறுதே அமையும். இகழ்ச்சிக் கிடங்கொடா தாற்றிய வழியே துறவறம் சிறந்த தாதல், 'அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும் - பிறன்பழிப்ப தில்லாயி னன்று' (குறள்-சுகூ) என்பதாற் பெறப் பட்டது காணக

கள்ளக் கருதுதல் இழிவென்ற திகுறள். (க)

அது தீதுமாமாதலின் கருதற்க என்பது வருங்குறள்.

உஅஉ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

(இ - ள்.) (அறபல்லவற்றைச் செய்தலே யன்றிச் செய்ய விரும்பி) உள்ளத்தால் - நெஞ்சால், உள்ளலும் தீதே - நினைத்தலும் தீதேயாம்; (ஆகையால்) பிறன் பொருளை - பிற னொருவன் பொருளை (அவன் அறியாவகையில்), கள்வேம் - வஞ்சித்துக் கொள்வோம், எனல் - என்று கருதற்க.

(இ - து.) களவு செய்தலைக் கருதற்க.

உள்ளத்தால் என வேண்டாது கூறினர், துறவறம் உள்ளத் தையே பற்றி நிகழ்வதென அதன் சிறப்புணர்த்தற்கு. உள்ளலும் என்பதில் உம்மை இழிவுசிறப்பு. எனல் என்பது எதிர்மறை வியங் கோள். (உ

இவை யிரண்டுபாட்டானுங் களவின் இழிவு கூறப்பட்டது.

களவு செய்தலின் தீமை கூறுவன வரும் இரு குறள்கள்:

உஅங. களவினு லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

(இ - ள்.) களவினல் - களவுசெய்தலினல், ஆகிய ஆக்கம் - உண்டான செல்வம், ஆவது போல - வளர்வதுபோல

(த் தோன்றி), அளவு இறந்து - (தன்) எல்லையைக் கடந்து கெடும் - அழியும்.

(இ - து.) களவினால் வந்த பொருள் பாவத்தையும் பழியையும் கொடுத்து ஒழியும்.

எல்லையைக் கடத்தலாவது, இல்லறத்தார்க்கு நன்மை விளைக்கும் தன் எல்லையைக் கடந்து துறவறத்தார்க்குத் தீமை விளைத்தல். தவத்தாலாம் ஞான ஆக்கத்தைத் தேட முற்பட்டார்க்குக் களவினாலாகிய பொருளாக்கம் கேடு விளைக்குமென்பார் இவ்வாறு கூறினார். அளவறிந்து என்று பாடமோதி, அவர் பயன் கொள்ளும் காலவளவினையறிந்து அக் காலத்திற் பயன்படாது கெடுமென்று பொருள் கொள்வாருமுளர்.

களவான் வந்த பொருள் அழியுமென்றது. (ங)

துன்பமுந் தருமென்பது வருங்குறள்:

உஅச. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

(இ - ள்.) களவின்கண் - பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்வதின்கண்ணே, கன்றிய - மிகுந்து (சென்ற), காதல் - விருப்பம், (அப்பொழுது இனிது போலத் தோன்றித் தான்) விளைவின்கண் - பயன்கொடுக்குங் காலத்தில், வீயா - அழியாத, விழுமம் - துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

(இ - து.) களவினை விரும்புதல் துன்பத்தைத் தரும்.

கன்றுதலால் விருப்பம் செயலாகிப் பாவமும் பழியும் பயக்குமாதலின் 'கன்றிய காதல் விளைவின்கண் வீயா விழுமந் தரும்' என்றார்.

இவை இரண்டு பாட்டாலும் களவு செய்தலின் தீமை கூறப்பட்டது. (ச)

களவு செய்வார் தன்மை கூறுவன வருமைந்து குறள்கள்:

உ௮௫. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(இ - ள்.) அருள் கருதி - அருளினது (உயர்ச்சியை) அறிந்து, அன்புடைய ராதல் - (அவ்வருளின்மீது) பற்று டையவராதல், பொருள் கருதி - (பிறரது) பொருளை (வஞ்சித்துக் கொள்ள) எண்ணி, பொச்சாப்பு - (அவரது) சோர்வினை, பார்ப்பார்கண் - (எதிர்) பார்ப்பா ரிடத்து, இல் - உண்டாகாது.

(இ - து.) களவு கருதுவார் அருளுடைய ராகார்.

தமக்குரிய பொருளையும் துறந்து அருள் செய்து தவமாற்றி வீடுபெறவமென்று வந்தவர், பின்னர் பிறர்க்குரிய பொருளை வஞ் சித்துக்கொள்ள அற்றம் பார்ததல் அவர் அறிவின் மயககத்தாலன்றி இல்லை. அததுணை மயககமுடையார் துறவறததிற்குப் பற்றுக் கோடானது அருள் என்றறிந்து ஒழுகும் தெளிவுடையராதல் கூடா தென்பதாம்.

களவு கருதுவார் அருளுடையாராகா ரென்ற திது. (௫)

நேருடையருமாகார் என்பது வருங்குறள் :

உ௮௬. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

(இ - ள்.) களவின்கண் - களவு செய்தலின் கண்ணே, கன்றிய காதலவர் - மிகுந்த விருப்பமுடையவர், அளவின் கண் - நியாயத்தின் கண்ணே, நின்று ஒழுகல் - நின்று நடத் தலை, ஆற்றார் - செய்யமாட்டார்.

(இ - து ) களவு கருதுவார நியாயநெறியில நடவார்.

அளவாவது, நேர்மை அல்லது நியாயம், நியாயத்தின் கணணே ஒழுகலாவது, பிரமாணஙகளால் நேர்மையாவ திது வெனத் துணிந்து அவ்வழி யொழுகுதல்.

களவு கருதுவார் அளவறிந் தொழுகா ரென்றதிது. (௬)
ஒழுகாமைக்குக் காரணம் கூறுவது வருங்குறள்:

உ௮எ. களவேன்னுங் காரறி வாண்மை யளவேன்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

(இ - ள்.) அளவு என்னும் - நியாயம் என்னும், ஆற்றல் - பெருமையை, புரிந்தார்கண் - விரும்பினாரிடத்து, களவு என்னும் - களவு என்று சொல்லப்படுகின்ற, கார் அறிவு - இருண்ட அறிவினை, ஆண்மை - உடையராதல், இல் - இல்லை.

(இ - து.) நியாயம் விருமபினார் களவாடார்.

இருணட அறிவாவது மயகக அறிவு. மயக்க அறிவின் காரணததா லான களவென்னுங காரியத்தைக காரணம் போலவும், ஆற்றல் என்னும் காரியத்துககுக காரணமான அளவைக் காரியம் போலவுங் கூறியது உபசாரவழக்கு. அளவு மயகக மகற்றுவதாத லினால் அஃதுடையார் மயக்க அறிவின் பயனாகிய களவுசெய்தல் இல்லை யென்க.

களவு கருதுவார் நியாயமுடைய ராகா ரென்றதிது. (எ)
அவர் வஞ்சமுடையராவ ரென்பது வருங்குறள்.

உ௮௮. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

(இ - ள்) அளவு அறிந்தார் - நியாயத்தைப் பயின்றவரது, நெஞ்சத்து - உள்ளத்தில், அறம்போல - அறம் (நிற்பது) போல, களவறிந்தார் - களவைப் பயின்றவரது, நெஞ்சில் - உள்ளத்தில், கரவு நிற்கும் - வஞ்சனை நிற்கும்.

(இ - து.) களவு பயில்வார வஞ்சு உள்ளததாராவர்.

களவும் துறவும் இருளும் ஒளியும் போல ஒருங்குநில்லா வென்பது இவை யைந்து பாட்டானும் பெறப்பட்டது. எனவே இவை களவு பயில்வார் தன்மை கூறிய வாயின. (௮)

அவர்க்குறுங் கேடு கூறுவது வருங்குறள்.

உ௮௯. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்று தவர்.

(இ - ள்.) களவல்ல - களவல்லாத, மற்றைய - பிற வற்றை, தேற்றாதவர் - அறியாதவர், அளவல்ல - நியாய மல்லாதவற்றை, செய்து—, ஆங்கே - அவ்வளவிலே, வீவர் - அழிவர்.

(இ - து.) களவு பயில்வார் அறமல்லவற்றையே செய்து கெடு வார்.

அளவல்லவாவன, கூட்டவிழைச்சி, புலாலுணவல், பொய்மை முதலியன. நல்லதொன்று முணர்ந்து செய்யாரென்பார் 'ஆங்கே வீவர்' என்றார்.

கள்வர் கெடுமாறு கூறிய திக் குறள். (௯)

அல்லார் நன்மையுறுவ ரென்பது வருங்குறள்.

உ௯0. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

(இ - ள்.) கள்வார்க்கு - களவு பயில்வார்க்கு, உயிர் நிலை - (தம்மின் வேறல்லாத) உடம்பும், தள்ளும் - தவறும்; கள்ளார்க்கு - களவு கருதாதவர்க்கு, புத்தேள் உலகு - (நெடுந் தூரத்ததாகிய) தேவருலகும், தளளாது - தவறாது.

(இ - து.) களவு செய்வார இருமையிலும் துன்புறுவர்; களவு செய்யாதவர் இருமையிலும் இன்புறுவர்.

உயிர்நிலை உடம்பாதல் முன்னர்க் (குறள்-௮0, உ௫௫) கூறப் பட்டது. 'உயிர்நிலையும்' 'புத்தேளுலகும்' எனற்பால சிறப்பும்மை தொக்கு நின்றன. உடம்பு தவறுதலாவது, இன்பந் தரத்தக்க உடம்பு அரசனாலும் பிறராலும் ஒறுக்கப் பட்டுத் துன்பமுறுதல். புத்தேளுலகு தவறாதலாவது, கிடைத்தற்கரிதெனும்தேவருலகு கிடைத்தல்.

இதனால் இருவர் பயனும் தொகுத்துரைக்கப்பட்டது. (௧0)

இவ்வதிகாரத்தில் முதல் இரண்டு குறள்களால் களவின் இழிவும், அடுத்த இரணடு குறள்களால் களவு செய்தலின் தீமையும், அடுத்த நான்கு குறள்களால் களவு செய்வார் தன்மையும், அடுதத குறளால் களவு செய்வார்கருறுங் கேடும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறப்பட்டன.

---

## ௩௰. வாய்மை

அஃதாவது, மெய்ம்மை. இஃது பெரும்பான்மையுங் கூட்ட விழைவும் பொருள்விழைவும் பற்றி நிகழ்வதாய பொய்ம்மையை விலக்கலின், கூடா வொழுக்கங் கள்ளாமைகளின் பின் வைக்கப்பட்டது எனவே, அதிகார இயைபு பெறப்பட்டது.

இன்பமும் பொருளும் சார்பாக இயலும் இல்லறத்திற்கு இது முற்ற முடிவ தரிதாதலின், துறவறத்திற்கே சிறப்பின் உரிய தாயிற்று.

இவ்வதிகாரத்தில், வாய்மையினது இலக்கணமும், வாய்மை வழுவலின் தீமையும், வாய்மை வழுவாமையின் நன்மையும், வாய்மையின் சிறப்பும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் வாய்மையின திலககணங் கூறுகின்றார்.

௨௯௧. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

(இ - ள்.) வாய்மை எனப்படுவது - மெய்ம்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, யாது எனின் - யாது என்று வினவினால், (அது) தீமை - (பிறர்தோர் உயிர்க்குத்) தீங்கு, யாதொன்றும் - ஒருசிறிதும், இலாத - (தருதல்) இல்லாத (சொற்களை), சொலல் - சொல்லுதல், (என்க).

(இ - து.) வாய்மையாவது பிறிதோருயிர்க்குத் தீங்கு பயவாத சொற்களைச் சொல்லுதல.

'அன்பினைந்திணைக் களவெனப்படுவது' எனவரும் இறைய னார் களவியல் முதற் சூத்திரத்திற் போந்த 'எனப்படுவது' என்னுஞ் சொற்றொடர்க்கு ஆசிரியா நக்கீரனார் உரைதத உரைப் பகுதி ஈண்டும் பொருந்தும். அப்பகுதி வருமாறு: "எனப்படுவது என்றது எற்றிறகோ எனின், செயயுளின்பத்தின் பொருட்டு வந்த தென்னும் ஒருவன்; அற்றன்று, அதனான் ஒரு பொருள் உரைப்பன என்னும் ஒருவன். அதனான் ஒரு பொருளுரைப்பான் பக்கம் வலியுடைத்து.

அஃதியாதோ எனின்......என்றற்குச் சிறப்புடைத் தென்றவாறு. 'ஊரெனப்படுவ துறையூர்' என்றவிடத்துப் பிறவும் ஊருண்மை சொல்லி அவற்றுளெல்லாம் உறையூர் சிறப்புடைமை சொல்லுப ..... இது மேன்மக்களாற் புகழப்பட்டு ஞானவொழுக்கத்தோ டொத்த இயல்பிற் றாகலானும் பழிபாவ மின்மையானும் எனப்படுவதென்று விசேடிக்கப்பட்டது.'

'தீமையிலாத சொலல் வாய்மை' எனவே, தீமையுள்ளன நிகழ்ந்தனவாயினும் சொல்லப் படுவன வல்ல என்ப தாயிற்று. (க)

நன்மையுள்ளன நிகழாதனவாயினும் சொல்லப்படுமென்பது வருங்குறள் :

உகூஉ. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

(இ - ள்) புரை தீர்ந்த - குற்றம் நீங்கிய, நன்மை பயக்கும் எனின் - நன்மையை(ப் பிறர்க்கு)த் தருமாயின், பொய்ம்மையும் - பொய்ம்மைச் சொற்களும், வாய்மை யிடத்த - மெய்ம்மைச் சொற்களைச் சேர்ந்தவையாம்.

(இ - து.) நன்மைதரும் பொய்யும் மெய்யேயாம்.

புரைதீர்ந்த நன்மை பயக்கும் பொய்ம்மையாவன நோயுற்றுக் கிடப்பா னொருவன் தன் நிலையை அயிர்த்து தன்னுழை நின்றாரை உசாவின், உண்மைநிலை கூறின் அவன் நோய் மிகுமென்றஞ்சி அவர் கூறும் பொய்ம்மையும் அவை போன்ற பிறவுமாம்.

இவை யிரண்டு பாட்டாலும் வாய்மையின் இலக்கணம் வரையறுக்கப்பட்டது. (உ)

வாய்மை வழுவலின் தீமை கூறுவது வருங்குறள் :

உகூஙு. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(இ - ள்.) (ஒருவன்) தன் நெஞ்சு அறிவது - தன் உள்ளம் அறிவதொன்றை, பொய்யற்க - (பிறர் அறிந்திலரென்று) பொய்யாதொழியக் கடவன்; பொய்த்தபின் - பொய்த்தானாயின், தன் நெஞ்சே - (அதனை அறிந்த) தன் உள்ளமே, தன்னைச் சுடும் - (அப்பாவத்திற்குக் கரியாய் நின்று) தன்னைத் துன்புறுத்தும்.

(இ - து) நெஞ்சாரப் பொய் சொன்னால் அந் நெஞ்சே அவனை வருத்தும்.

நெஞ்சு கரியாதலை,

'கண்டவ ரில்லென வுலகத்து ளுணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பவு மறையாவாம்
நெஞ்சத்திற் குறுகிய கரியில்லை யாகலின்'

என வருங் கலி (ஐந்தாவது நெய்தல்-அ) யானு முணர்க.

வாய்மை வழுவலின் தீமை கூறிய திக் குறள். (ரு)

வாய்மை வழுவாமையின் நன்மை கூறுவன வரும் நான்கு குறள்கள் :

உகூச. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

(இ - ள்.) உள்ளத்தால் - (தன்) உள்ளத்திற்கு ஏற்ப, பொய்யாது - பொய் கூறாது, ஒழுகின் - (ஒருவன்) ஒழுகுவானாயின், (அவன்) உலகத்தார் - உயர்ந்தோர், உள்ளத்துள் எல்லாம் - உள்ளத்தின்கண் எல்லாம், உளன் - உளனாம்.

(இ - து.) வாய்மை வழுவானை உலகம் போற்றும்.

உள்ளத்திற்கு எனற்பாலது உள்ளத்தால் என நின்றது வேற்றுமை மயக்கம். பொய் கூறாதொழுகலாவது வாய்மை வழுவா தொழுகல்.

வாய்மை வழுவான் போற்றப்படுவான் என்றதிது. (ச)

தலைமைப் படுவான் என்பது வருங் குறள் :

உகூரு மனத்தோடு வாய்மை மொழியிற் றவத்தோடு
தானஞ்செய் வாரிற் றலை.

(இ - ள்.) (ஒருவன்) மனத்தொடு-தன் மனத்தோடு பொருந்த, வாய்மை மொழியின் - வாய்மையைச் சொல்வா ஞயின், (அவன்) தவத்தொடு தானம் செய்வாரின் - தவமும் தானமும் ஒருங்கு செய்வாரினும, தலை - சிறப்புடையன்.

(இ - து.) வாய்மை வழுவாதவன் தானமும் தவமும் செய் வாரினும் சிறந்தவன்.

மனத்தொடு வாய்மை மொழிதலாவது, நெஞ்சறியப் பொய் சொல்லாமை. தானமுந் தவமும் புறமாகிய மெய்யாலா மாதலின் அகமாகிய மனத்தொடு பட்ட வாய்மை அவற்றினும சிறப்புடைய தாயிற்று.

வாய்மை வழுவாமை சிறப்பா மென்றதிது. (ரு)

புகழுமா மென்பது வருங்குறள் :

உகூசு. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

(இ - ள்.) (ஒருவனுக்கு இம்மைக்கு) பொய்யாமை அன்ன - பொய்யாமையை ஒத்த, புகழ் இல்லை - புகழ்க்கார ணம் இல்லை ; (மறுமைக்கு) எய்யாமை - வருந்தாமல், எல்லா அறமும் - எல்லா அறங்களையும், தரும் - (அப்பொய்யாமை தானே) கொடுக்கும்.

(இ - து.) வாய்மைவழுவாமை புகழையும் அறத்தையும் தரும்.

புகழ் என்னும் காரியப் பெயர், தன் காரணமாகிய பொய் யாமைக காதலின் ஆகுபெயர். எய்யாமை என்பது மையீற்று

வினையெச்சம். எய்யாமை யெல்லா வறமுந் தருதலாவது, இல்லறமும் துறவறமும் மெய்வருந்தாமற் கைகூடல்.

வாய்மை வழுவாமை எல்லா அறமுந் தருமென்றதிது. (சு)

வாய்மை வழுவிற் பிறவறங்கள் பயன்படா என்பது வருங் குறள் :

உகள. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(இ ள்.) பொய்யாமை - பொய்யாமை (யென்னும் அறத்தை), பொய்யாமை ஆற்றின் - பொய்யாமற் செய்தால், பிற அறம் - பிற அறங்களை, செய்யாமை - செய்யாமையாகிய குறைவை, செய்யாமை - செய்யாதிருந்தமை, நன்று - நன்மையாம்.

(இ - து.) வாயமை வழுவா வழியே பிற அறங்கள் பயன் படும்.

எனவே, வாய்மை யொழிய ஏனையறங்களைத தவறாது செய்யினும் அவை பயன்படா எனபதாயிற்று.

இனி இதற்கு ஆசிரியர் பரிமேலழகர், 'ஒருவன் பொய்யாமையையே பொய்யாமையையே செய்ய வல்லனாயின், அவன் பிறவறங்களைச் செய்யாமையே செய்யாமையே நனறு' எனப் பொருளுரைத்து மேலதைப் பிறர்மதமாகக் கூறிச் சென்றார். அவர் கொணடபொருட்கு வாய்மையுடையார் பிறவறங்களைச் செய்தல் தீதெனவாதலின் அது பொருந்துமாறு காண்கிலேம்.

இவை நான்கு பாட்டானும், வாய்மை வழுவாமையின் நன்மை கூறப்பட்டது. (எ)

வாய்மையின் சிறப்புக கூறுவன வரும் மூன்று குறள்கள் :

உகஅ. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

(இ - ள்.) (ஒருவனுக்கு) புறம் தூய்மை - உடம்பு தூய தாந் தன்மை, நீரான் அமையும் - நீராலே உண்டாகும்; (அதுபோல) அகம் தூய்மை - உள்ளம் தூயதாந் தன்மை, வாய்மையால் - மெய்ம்மையினுலே, காணப்படும் - (உண்டாகக்) காணப்படும்.

(இ- து.) உடலை நீர் சுத்தப்படுத்துதல்போல, உள்ளத்தை வாய்மை சுத்தப்படுத்தும்.

புறந் தூய்தாதற்கு நீரல்லது வேறு காரணம் இல்லாதவாறு போல, அகந் தூயதாவதற்கு வாய்மையல்லது காரணம் இல்லை யென்றவாறுயிற்று. புறந்தூய்மை யிதனுனும், அகந்தூய்மை யிதனுனும் என இரண்டுமாமாறு கூறவே துறவியர்க்கு இரண்டும் வேண்டும் என்பதும் பெற்றும். இக் குறட்கருத்தைத் தழுவிப் பிற்காலத்து நூல் செய்தாரும் ' வாய்மையா லகந்தூய்மையா மற்றிலை புறத்தைத்-தூய்மை செய்வது நீரலாற் சொல்லின் வேறுளதோ' என்றார்.

வாய்மை மனமாசகற்றும் என்ற திக் குறள். (அ)

மன இருளகற்று மென்பது வருங்குறள் :

உகூகூ. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

(இ - ள்.) சான்ருேர்க்கு - (அறிவறமாகிய வற்ருல்) நிறைந்தவர்க்கு, எல்லா விளக்கும் - (புறவிருள் போக்கும்) விளக்குகள் எல்லாம், விளக்கு அல்ல - விளக்காகா ; (அக விருள் அகற்றும்) பொய்யா விளக்கே - பொய்யாமையாகிய விளக்கே, விளக்கு - விளக்காம்.

(இ - து.) சான்ருேர்க்கு வாய்மையே விளக்கு.

புறவிருள் கடியும் விளக்காவன, ஞாயிறுந் திங்களும் தீயு மணியு முதலாயின. அக இருளாவது அறியாமை.

இனி, இதற்குக் கல்வி முதலியவற்ருன் வரும் விளக்கமெல் லாம் விளக்கமல்ல ; வாய்மையான் வரும் விளக்கமே விளக்கமென் றுரைப்பாரு முளர்.

பொய்யாத விளக்கம் எனற்பாலது பொய்யா விளக்கமெனக் குறைந்து நின்றது; இது கூடாவொழுக்கம் கொல்லாவிரதம் என்பன போலப் பண்புத்தொகைப் பொருட்டாய் வந்த பெயரெச்சம்.

வாய்மை விளக்கிற் சிறந்த தென்ற திது. (௧)

அறத்திற் சிறந்த தென்பது வருங்குறள்:

௩௦௦. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

(இ-ள்.) யாம் —, மெய்யாக் கண்டவற்றுள் - மெய்ந் நூல்களாகக் கண்ட நூல்களுள், எனைத்தொன்றும் - யாதொரு தன்மையானும், வாய்மையின் - வாய்மையினும், நல்ல - சிறந்தன (வாகச் சொல்லப்பட்ட), பிற - வேறு (அறங்கள்), இல்லை —.

(இ-து.) வாய்மையிற் சிறந்த அறமில்லை.

மெய்யுணர்த்தும் நூல்கள் மெய் எனப்பட்டன. அவையாவன: அறிவு நூல்கள். அவை பிறதிறத்தாற் றம்முள் வேறுபடினும் வாய்மையின் சிறப்புணர்த்துந் திறத்தின் வேறுபடாவென்பதாம்.

இவ் வதிகாரத்தில், முதல் இரண்டு குறள்களால் வாய்மையினதிலக்கணமும், அடுத்த குறளால் வாய்மை வழுவலின் தீமையும், அடுத்த நான்கு குறள்களால் வாய்மை வழுவாமையின் நன்மையும், இறுதி மூன்று குறள்களால் வாய்மையின் சிறப்பும் கூறப்பட்டன.

---

## ௩௧. வெகுளாமை

அஃதாவது சினங் கொள்ளாமை. சினங் கொள்ளுதல் தாம் துன்புற்ற வழியன்றே? துன்பத்தைப் பொறுத்தல் தவப் பகுதி யாயிற்று. ஆதலின், தவநெறி நின்றார் பிறரால் தமக்குண்டான துன்பத்தைப் பொறுது அப் பிறர்மீது சினங்கொள்ளுதல் ஒவ்வாதாயிற்று. அன்றியும், 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது' (குறள் - ௨௯) என்பவாகலான், அவரான் வெகுளப்பட்டார் கெடுதல் உளதாயிற்று. தவநெறி நின்றார்க்குப் பிறவுயிர்கண்மாட் டருளுடைமையும் இன்றியமையாத தாயிற்று. ஆகவே, பிறவுயிர்க்குக் கேடு பயக்கும் வெகுளியைச் செய்தல் அருளுடைமைக்கு மாறாய் அவர்க்கு ஒவ்வா தாயிற்று. இங்ஙனம் இவ் விருவாற்றானும், தவத்திற் குருவாகிய 'உற்ற நோய் நோன்றல்; உயிர்க்குறுகண் செய்யாமை' (குறள் - ௨௬௧) எனனும் இரண்டுங் கெடுதலின் துறவறத்தார்க்கு வெகுளுதல் கூடாதாயிற்று.

இல்லறத்தார்க்காயின் ஒரோருகால் சினவயப் படுதல் மறநிலை யறத்தொடுபட் டமையும். இறைமாட்சியும் படைச்செருக்கு மெல்லாம் வெகுளி விரவா தாதல் அரிதன்றே.

'யாதொன்றுந் தீமையிலாத சொலல்' ஆகியது வாய்மையே யன்றி வெகுளாமையு மாதலின் இது வாய்மையின் பின் வைக்கப் பட்டது.

இவ் வதிகாரத்தில், வெகுளாமைக் கிடமும், வெகுளலின் தீங்கும், வெகுள்வார் உறுந் தீங்கும், வெகுளாமையின் நன்மையும், வெகுளாதார்க்குறு நன்மையும், தொகுப்புரையும் முறையே கூறு வான் வைத்த ஆசிரியர் முதற்கண் வெகுளாமைக்கு இடங் கூறு கின்றார்.

**௩0௧. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்**
**காக்கினென் காவாக்கா லென்.**

(இ - ள்.) செல் இடத்து - (தன் சினம்) பலிக்குமிடத்து, காப்பான் - (அச் சினம் எழாமல்) தடுப்பவனே, சினம் காப்பான் - சினத்தைத் தடுக்க வல்லவனாவான்; அல் இடத்து - (தன் சினம்) பலியாத இடத்தில், காக்கின் என் - காத்தால் என்ன, காவாக்கால் என் - காவாவிட்டால் என்ன?

(இ - து.) தன்னினும் மெலியாரைச் சினவாதவனே வெகுளாமை என்னும் அறத்தைச் செய்பவனாவான்.

செல்லிடம் அல்லிடம் என்றது தவத்தான் தன்னின் மெலியாரையும் வலியாரையும். பிறர்க்குத் தீங்கு பயத்தல் கருதியன்றே வெகுளி விலக்கப்பட்டது. தன்னின் வலியார்மாட்டுச் செய்த வெகுளி அவர்க்குத் தீங்கு பயத்தல் இன்மையின் ஆண்டு வெகுளி செய்யாவழியும் அறனில்லை யென்பார் 'காக்கினென் காவாக் காலென்' என்றார்.

இது வெகுளாமைக்கு இடங் கூறியது. (க)

வெகுளலின் தீங்கு கூறுவன வரு மூன்று குறள்கள்.

௩0௨. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

(இ - ள்.) செல்லாவிடத்து - தன்னின் வலியார் மாட்டு, சினம் - (ஒருவன் செய்யும்) வெகுளி, தீது - (அவனுக்கே) தீதாம்; செல்லிடத்தும் - தன்னின் எளியார் மாட்டு வெகுளி செய்யினும், அதனின் தீய - அதனினும் தீமையாவன, பிற இல் - வேறு இல்லை.

(இ - து.) வலியார் மாட்டுச் செய்யும் வெகுளி தனக்கே தீமை பயக்கும்; மெலியார் மாட்டுச் செய்யும் வெகுளி அதனினும் மிக்க தீமையைப் பயக்கும்.

வலியார்மாட்டு வெகுளி செய்தலால் வரும் தீமை இம்மைக்கண் நேருவதே; மெலியார்மாட்டு வெகுளி செய்தலால் வரும்

தீமையோ இம்மைக்கட் பழியும் மறுமைக்கட் பாவமும் ஆதலின் 'இல்லதனிற் றீய பிற' என்றார். எனவே வெகுளி யாண்டு மாகா தென்பதாயிற்று. இக் கருத்தானே பிற்காலத்துச் சான்றோரும்,

'பெரியவர் தம்மைக் காய்ந்தான்
　பிறங்கல்கல் லியகோ லொப்பான் ;
புரிவன புரியப் பட்டுப்
　புலம்புவ னொதார்க் காய்ந்தான் .
எரிநர கதனில் வீழ்வன்
　இழிந்தவர்க் காய்ந்தா னென்றால்
ஒருவர்தம் மிடத்துஞ் சீற்றம்
　உறாமையே நன்று மாதோ'

என்று கூறுவாராயினர்.

வெகுளாமைக் கிடங் கூறிய மேற்குறளோ டிதற்குள்ள இயைபு காண்க.　　　　(உ)

வெகுளியின் பயன் அளவால் வேறுபடுமாறு கூறிய திக்குறள். பயன் அளவால் வேறுபடினும் தன்மையால் வேறுபடுவதில்லை யென்பது வருங்குறள் :

௩0௩. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
　　பிறத்த லதனான் வரும்.

(இ - ள்.) யார் மாட்டும் - (வலியார், மெலியார், ஒப்பார்) யாரிடத்தும், வெகுளியை - வெகுளி செய்தலை, மறத்தல் - நினைத்தலும் ஒழிக; தீய பிறத்தல் - தீயனவெல்லாம் உளவாதல், அதனான் வரும் - (வெகுளி கருதும்) அதனால் வரும் (ஆகலான்).

(இ - து.) எக்காலத்தும் யாரிடத்தும் வெகுளிசெய்ய நினைப்பதும் தீமை பயக்கும்.

மறத்தல் என்பது வியங்கோள். 'நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல-தன்றே மறப்பது நன்று' (குறள்-கoஅ) என இல்லறத்தார்க்கே விதிக்கப்பட்டமையின் துறவறத்தார்க்கு வெகுளியை மறத்தல் இன்றியமையாத தாயிற்று.

வெகுளி தீய பயக்கு மென்ற திது. (ரு)

அத் தீய இவை யென்பது வருங்குறள் :

ங0ச. நகையு முவகையுங் கோல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

(இ - ள்.) நகையும் உவகையும் - (அருளான் உளவாகிய) முகத்தின்கண் நகையினையும் அகத்தின்கண் உவகையினையும், கொல்லும் சினத்தின் - அழிக்கும் இயல்புடைய சினத்தைப்போல, பிற பகையும் - வேறு பகைகளும், உளவோ - (துறவோர்க்கு) உண்டோ ? (இல்லை.)

(இ - து.) வெகுளி அருளையழிக்கும்; முகமலர்ச்சியை ஒழிக்கும்; உவகையைக் கெடுக்கும்: அதனினும் கொடிய பகை துறவோர்க்கு வேறில்லை.

துறவியர்க்குப் புறப்பகை இல்லையாயினும், உட்பகையாய் நின்று அருள் முதலியவற்றை அழித்துப் பிறவித் துன்பத்தையும் தருதலின், அவர்க்குச் சினத்தின் மிக்க பகை இல்லையாயிற்று.

இவை மூன்று பாட்டானும் வெகுளியது தீங்கு கூறப்பட்டது.

வெகுள்வார்க்குறுந் தீங்கு கூறுவன வரும் மூன்று குறள்கள் :

ங0ரு. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கோல்லுஞ் சினம்.

(இ - ள்.) (துறவியான ஒருவன்) தன்னைத் தான் காக்கின் - தன்னைத் தானே (துன்பமெய்தாமற்) காக்க விரும்பினானாயின், சினம் காக்க - சினம் (என்னும் உட்பகை உள்

ளெழாமல்) காக்கக் கடவன்; காவாக்கால் - காவானாயின், சினம் - அச் சினம், தன்னையே கொல்லும் —.

(இ - து.) தன்னுள் எழுந்த சினம் தன்னையே கொல்லும்.

தன்னையே கொல்லுதலாவது, தன் உயிர் வீடுபெறுதலை அழித்தல். மேலைக குறளில சினம் தன் துணையை அழிக்கும் எனக் கூறி ஈண்டுத் தன்னையும் அழிக்கு மென்ற இயைபு காண்க.

துணையையுந் தன்னையும் சினமழிக்கு மென்ற திது. (ரு)

இனத்தையும் அழிக்கு மென்பது வருங்குறள்:

௩௦௬. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யின
மேமப் புணையைச் சுடும். [மென்னு

(இ - ள்.) சினம் என்னும் - சினம் என்று சொல்லப் படும், சேர்ந்தாரைக் கொல்லி - சேர்ந்தாரைக் கொல்லும் நெருப்பு, (தன்னைச் சேர்ந்தாரையே யன்றி) இனமென்னும் - (அவர்க்கு) இனமாகிய, ஏமப் புணையை - காவற் கலத்தையும், சுடும் —.

(இ - து.) சினம் தனக்கு இடமானவரையும் அவர்க்குத் துணை யான அருள் முதலிய வற்றையுமேயன்றி அவர்கருக காவலாய மைந்த பெரியோர் நல்லுரையையும அழிககும்.

பொருளின் தொழிலாகக் கூறப்பட்ட 'சுடும்' என்னும் வினைப் பண்பாலும், உவமமாய் நின்ற சேர்ந்தாரைக கொல்லி என்னும் சொற்றொடரிற் பெறக்கிடக்கும் வினைப் பண்பாலும் சேர்ந்தாரைக் கொல்லி என்றது நெருப்பாதல் பெறுதும். சேர்ந்தாரைக் கொல்லி யாவது தான் சேர்ந்த விடத்தைக் கொல்லுந் தொழிலது என்றவாறு. எனவே, இச் சொற்றொடர் ஒருசொல் நீர்மைத்தாய்க் காரணப் பெயராயிற்று. 'சேர்ந்தாரை' என ஒரு பாலின்மேல் வைதது்க் கூறினாராயினும் ஒருமொழியொழி தன் இனங்கொளற் குரித்தாத லால் ஏனைப் பாலுங் கொள்ளப்படும்.

'சினம், இனமென்னும் ஏமப்புணையைச் சுடும்' என்றாலே கருதிய பொருள் பயக்கும். 'சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என மிகைபடக் கூறியது, நெருப்பு சேர்ந்தாரையே கொல்லும்; சினம் சேராதாரையுங் கொல்லும் எனத் தாம் வேண்டியது முடித்தற்கு. ஈண்டு இனமென்றது, தம்மினும் தவஞானங்களான் மிகுந்து தமக்கு உறுதி பயக்கும் நன்மதி புகட்டுவாரை. வெகுளியின் தீமையை அறிவுறுத்தி அவரை அதனின்று மீட்கத் தகக்கவர் அவராதலின் அவர் ஏமப்புணை போல்வா ராயினர். ஆயினும் அவர் கூறும் நல்லுரையெல்லாம் வெகுண்டார் செவியில் ஏருவாகலின், அவ் வேமப் புணையும் வெகுண்டார்க்குப் பயன்படுதல் இல்லையென்பார் 'ஏமப்புணையைச் சுடும்' என்றார். உருவகநோக்கிச் சுடும் என்றாராயினும் கெடுக்கும் அல்லது அகற்றும் என்பது பொருளாகக் கொள்க.

நல்லுரை கூறும் பெரியாரைப் புணை என்ற ஏகதேச உருவகத்தால், அவர் பிறவிக்கடலை நீந்தி வீடென்னுங் கரைசேர விழைவாரை வீடுசேர்க்க வல்ல பெரியா ரென்க. சினம் அவர் துணையை அகற்றும் எனவே, அது தனக்கிடந் தந்தவனைப் பிறவிக் கடலுள் வீழ்த்து அவனை எடுக்க வல்லாரையும் எடுக்க வொட்டாதகற்று மென்பது பெற்றாம்.

வெகுள்வார் பல்லாற்றானும் தீங்குறுவ ரென்றறிது. (௬)

தீங்குறுதல் தவறுதல் இல்லையென்பது வருங்குறள் :

௩௦௭. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(இ - ள்.) சினத்தை - வெகுளியை, பொருள் என்று (தன் ஆற்றல் உணர்த்துவதொரு) குணமென்று, கொண்டவன் - (கருதி அதைத் தன்னிடத்தே) கொண்டவன், கேடு - கெடுதல், நிலத்து அறைந்தான் - (தன் கைவன்மை உணர்த்துவமென்று கருதி) நிலத்தை அறைந்தவனது, கை - கையானது, பிழையாதற்று - (கெடுதல்) தவறாதவாறு (தவறாது).

(இ - து.) வெகுளிசெய்வார் தவறாது கெடுவர்.

ஈண்டுக் குணம் பொருளெனப்பட்டது. பிழையாததற்று எனற்பாலது பிழையாதற்று எனக் குறைந்து நின்றது.

இவை மூன்று பாட்டானும் வெகுள்வார் தீங்குறுதல் கூறப்பட்டது. (எ)

வெகுளாமையின் நன்மை கூறுவது வருங்குறள் :

௩௦அ. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

(இ - ள்.) இணர் - பல சுடர்களையுடைய, எரி - (பெரு) நெருப்பு, தோய்வன்ன - (தன்மீது வந்து) படிதலை யொத்த, இன்னா - துன்பங்களை, செயினும் - (தனக்கு ஒருவன்) செய்தாலும், வெகுளாமை புணரின் - (அவனைச்) சினவாமை கூடுமாயின், நன்று - (அது) நன்மையாம்.

இணர் - கொத்து. இன்னாமையின் மிகுதி தோன்ற 'இணரெரி யன்ன வின்னா' என்றார். முற்றத் துறந்த முனிவரே யாயினும் பொறுக்கக் கூடாத அளவு துன்புறுத்தப்படின் வெகுள்வர் என்பது தோன்றப் 'புணரின்' என்றார். இக் கருத்தானே முன்னும் 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி-கணமேயும்' என்றார்.

வெகுளி செய்யாமையின் நன்மை கூறியது இது. (அ)

வெகுளி செய்யார்க்குறும் நன்மை கூறுவது வருங்குறள்:

௩௦௯. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

(இ - ள்.) (தவஞ் செய்பவன்) உள்ளத்தால் - (தன்) மனத்தில், வெகுளி - சினத்தை, உள்ளான் எனின் - (ஒரு காலும்) நினையானாயின், உள்ளிய எல்லாம் - (அவன், தான்) கருதிய பேறுகள் அனைத்தையும், உடன் எய்தும் - ஒருங்கே பெறுவான்.

(இ - து.) வெகுளியை மனத்தாலும் நினையாதவர் எண்ணிய பேறெல்லாம் ஒருங்கடைவர்.

'உள்ளத்தால்' என்னும் விதப்புக் கிளவிக்கு 'உள்ளத்தா லுள்ளலும் தீதே' (குறள் - உஅஉ) என்றவழி உரைத்தாங்கு உரைத்துக்கொள்க. ஒன்றை ஒருவன் உள்ளா துதல், அதற்கு மாறாகிய பிறிதொன்றை உள்ளுதலா னன்றி ஆகாது. ஆகவே, வெகுளி உள்ளா துதல், அதற்கு மாறான அருள் முதலியவற்றை இடைவிடாது உள்ளுதலாறு மென்க. தவத்தால் 'வேண்டிய வேண்டியாங் கெய்தல்' (குறள் - உசரு) ஆமாகலின், அது முடிக்கும் வெகுளாமையால் 'உள்ளியவெல்லாம் உடனெய்தும்' என்க.

வெகுளி செய்யாதார் நன்மையுறுதல் கூறிய திது. (கூ)

அவர் நன்மையும் ஏனையார் தீமையும் தொகுதத்துக் கூறுவது வருங்குறள்:

> ௩௧௰. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
> துறந்தார் துறந்தார் துணை.

(இ - ள்.) (சினத்தை) - சினத்தின் கண்ணே, இறந் தார் - மிகுந்தவர், இறந்தார் அனையர் - (உயிருடையராயினும்) செத்தாரோ டொப்பர்; சினத்தைத் துறந்தார் - சினத்தை விட்டவர், துறந்தார் துணை(யர்) - வீடுபெற்றவரோ டொப்பர்.

(இ - து) வெகுளி செய்வார் வீடெய்தார்; வெகுளி செய்யார் வீடெய்துவர்.

'சினத்தை' முன்னுஞ் சென்று உருபு மயங்கிப் பொருள் தந்தது. சினத்தை உடையார்க்கு வீடெய்துதற்குரிய உயிர் நின்ற தாயினும் அது மயககிற் கட்டுண்டு வீடெய்தாமை ஒருதலை யென் பார் அவரை 'இறந்தா ரனையர்' என்றும், சினத்தை விட்டார்கு வீட்டைத் தடுக்கும் உடம்பு நின்றதாயினும், அது கழிந்த துணையே

அவர் வீடெய்தல் ஒருதலை யென்பார் அவரைத் 'துறந்தார் துணை' என்றுங் கூறினர். (௰)

இவ் வதிகாரத்தில் முதற் குறளால் வெகுளி செய்யாமைக்கு இடமும், அடுத்த மூன்று குறள்களால் வெகுளி செய்தலின் தீங்கும் அடுத்த மூன்று குறள்களால் வெகுளி செய்வார் உறும் தீங்கும், அடுத்த குறளால் வெகுளி செய்யாமையின் நன்மையும், அடுத்த குறளால் வெகுளி செய்யார் உறும் நன்மையும், இறுதிக் குறளால் தொகுப்புரையும் கூறப்பட்டன.

---

## ௩௨. இன்னா செய்யாமை

அஃதாவது, ஒருயிர்க்குத் துன்பந் தருவனவற்றைச் செய் யாமை. தனக்கு ஒருவன் தீங்கு செய்தவழி அவனை வெகுளா தொழியினும், அத் தீங்கை உள்ளத்தில் வைத்து அவனுக்கு இன்னல் செய்தல் கூடுமன்றே? அதுவும் விலக்குதற்கு இது வெகுளாமையின் பின் வைக்கப்பட்டது. எனவே அதிகார இயைபு பெறப்பட்டது.

பிறவுயிர்க்குத் தீங்கு செய்தல் செற்றம் பற்றியே யன்றி ஒரு பயன் நோக்கியேனும் மறவியாலேனும் ஆம். எவ்வாற்றானும் அஃது ஆகாதென்பதற்குச் செற்றம் பற்றி நிகழும் வெகுளியையும், பயன் நோக்கி நிகழும் புலாலுண்ணலையும், அவ் விருவாற்றானும் ஆதலோடு மறவியானும் ஆகற்பாலதாகிய கொலையினையும் விதந் தோதியும் ஓதவைத்தும் அவற்றிடைப் பொதுப்பட இஃது ஓது கின்றார்.

இவ்வதிகாரத்தில, பயனோக்கி இன்னா செய்யாமையினையும், செற்றம் பற்றி இன்னா செய்யாமையினையும், மறவிபற்றி இன்னா செய்யாமையினையும், பொதுவகையான் இன்னா செய்யாமையினையும் இன்னா செய்தலின் தீப்பயனும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் பயனோக்கி இன்னா செய்யாமையினைக் கூறு கின்றார்.

௩௧௧. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) சிறப்பு - (யோகமாகிய) சிறப்பு, ஈனும் - தரத் தக்க, செல்வம் - (அணிமா முதலிய) செல்வங்களை, பெறி னும் - (பிறர்க்கின்னா செய்து) பெறலாமாயினும், (அவை பெறுதல் கருதியும்) பிறர்க்கு இன்னா செய்யாமை - பிறர்க்குத் துன்பந் தருவனவற்றைச் செய்யாதொழிதல், மாசற்றார் கோள் - தூயவர் கொள்கை.

(இ - து.) எத்துணைப் பெரும்பேறு வருவதாயினும் பிறர்க்குத் துன்பஞ்செய்தல் ஒழிக.

யோகத்தால் வருவனவன்றிப் பிறர்க்கின்னா செய்தலான் வருவனவல்ல செல்வம் எனப் பொருள்தருதலின் உம்மை எதிர் மறைப் பொருட்டு.

சிறப்புடையதனைச் சிறப்பென்றது ஆகுபெயர். தவத்தினரை நோக்கிச் சொல்லப்பட்டதாகலின் சிறப்பினை யோகமென்றும் செல்வத்தினைச் சித்தியென்றுங் கொண்டு பொருளுரைக்கப்பட்டது

பயனோக்கிய இன்னா செய்தலை விலக்கிய திது. (௧)

செற்றம்பற்றி இன்னா செய்தலை விலக்குவன வரும் மூன்று குறள்கள்.

௩௱௧௨. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) கறுத்து - (தம்மீது) செற்றங் கொண்டு, இன்னா செய்த - (ஒருவன் தமக்குத்) துன்பந் தருவனவற்றைச் செய்த, அக்கண்ணும் - அவ்விடத்தும், மறுத்து - (அவனை ஒறுத்தல் கருதி) மீண்டு, இன்னா செய்யாமை - துன்பந் தருவனவற்றை(த் தாம் அவனுக்குச்) செய்யாமையும், மாசற்றார் கோள் - தூயவர் கொள்கை.

(இ - து ) செற்றம் பற்றியும் பிறர்க்கின்னா செய்தலை ஒழிக.

மேற் குறளில் ஒன்றை மாசற்றார்கோள் என்று சொல்லி, மீண்டுப் பிறிதொன்றனையும் அவர் கோள் என்றலின், முன்னதைத் தழுவிச் 'செய்யாமையும்' என நிற்க வேண்டிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது.

இன்னா செய்தார்க்கு மின்னா செய்யற்க வென்ற திது. (௨)

காரணமின்றி இன்னா செய்தார்க்கும் இன்னா செய்யற்க வென்பது வருங்குறள் :

௩௱௩. செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

(இ - ள்.) செய்யாமல் - (தான் முன்பு ஓர் இன்னாமையும்) செய்யாதிருக்க, செற்றார்க்கும் - (தன்மேற்) செற்றங் கொண்டவர்க்கும், இன்னாத செய்தபின் — (தவசி) துன்பந் தருவனவற்றைச் செய்தால், (அச் செயல் அவனுக்கு) உய்யா விழுமம் தரும் - தப்ப முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

(இ - து.) காரணமின்றி ஒருவன் தனக்கு இன்னாசெய்யினும் தான் அவனுக்கு இன்னாசெய்தல் துன்பத்தைத் தரும்.

பின் என்பது ஒருசார் வினையெச்ச ஈறு. (தொல்காப்பியம் - வினையியல் சூத்-௩௨). அது தரும் விழுமமாவது தவமிழந்து பழியும் பாவமும் எய்துதல்.

இன்னா செய்தார்க்குச் செய்யத் தகாதது இது வென்ற திக் குறள். (௩)

அவர்க்குச் செய்யத் தகுவது கூறுவது வருங்குறள் :

௩௱௪. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

(இ - ள்.) (தவம் மேற்கொண்டோர்), இன்னா செய்தாரை - (தமக்கு) இன்னா செய்தவரை, ஒறுத்தல் - ஒறுத்தலாவது, அவர் நாண - அவர் (தாமே) நாணுமாறு, நல் நயம் செய்து - (அவர்க்கு) இனிய உவகைகளைச் செய்து, விடல் - (அவர் தமக்குச் செய்த இன்னலையும் தாம் அதுபற்றி அவரை ஒறுக்கும் கருத்தையும் ஒருங்கே மறந்து) விடுதல்.

(இ - து.) துன்பஞ் செய்தாரைத் தவசிகள் ஒறுத்தலாவது அவருக்கு இனிய செய்து அவர் செய்த இன்னலையும் தாம் அவரை ஒறுத்தலையும் மறந்து விடுதல்.

விடல் நெஞ்சை விட்டொழிதலைக் குறித்தது. துன்பஞ் செய்தார்க்கு இன்பஞ் செய்யின் அவர் நாணுவராதலின் அந் நாணமே அவருக்கு ஒறுத்தல் ஆயிற்று.

இவை மூன்று பாட்டானும் செற்றம் பற்றி இன்னா செய்தல் விலக்கப்பட்டது. (௪)

மறவியான் இன்னா செய்தலை விலக்குவது வருங்குறள் :

௩கரு. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

(இ - ள்.) (துறந்தார்), பிறிதின் நோய் - பிறிதோர் உயிருக்கு உண்டாம் துன்பத்தை, தம் நோய் போல் - தமக்கு வந்த துன்பத்தைப் போல(க் கருதி), போற்றாக்கடை - (குறிக்கொண்டு) காவாத விடத்து, அறிவினான் - (வீடுபேற்றிற்குக் கருவியாகத் தாம் வளர்க்கும்) அறிவினாலே, ஆகுவது - ஆகும் பயன், உண்டோ - உளதோ ? (இல்லை).

(இ - து.) எவ் வுயிரையும் தம் முயிரைப் போற் கருதி அவற்றிற்குத் துன்பம் நேராது காவா விட்டால் ஞானமடைந்தும் பயன் இல்லை.

'குறிக்கொண்டு காத்தலாவது, நடத்தல் இருத்தல் கிடத்தல் நிற்றல் உண்டல் முதலிய தந் தொழில்களானும் பிறவாற்றானும்,' உயிர்கள் உறத் தக்க துன்பங்களை அவை உறாமற் காததல். இது பெரும்பான்மையும் எறும்பு முதலிய அஃறிணை யுயிர்ககண் நுண்ணிய வுடம்புடைய வற்றைப் பற்றிச் செயப்படுவதாய் வருதலின் 'பிறிதின்நோய்' என அஃறிணை வாய்பாட்டாற் கூறினார். ஒருயிர் உடம்பெடுத்துக கழித்தற் பாலதாகிய வினையை அது கழித்தற்கு முன்னே, அதனை உடம்பினின்று பிரித்தல் அசற்கும் ஏதமாய்த் தனக்கும் ஏதமாய் முடியுமாற்றை அறிந்து, அதை விலகல் வேண்டி மறந்தும் பிறவுயிர்க்கு இன்னல் இழைத்தலைத் தவிராவிடத்து அவ்வறிவாற் பயனில்லை யென்பார் 'அறிவினா னாகுவதுண்டோ' என்றார்.

மறவியானும் பிறவுயிர்க் கின்னாசெய்தலை விலக்கியது இக்குறள்.

இன்னாசெய்தலைப் பொதுவகையான் விலக்குவன வரும் மூன்று குறள்கள் :

௩௱௧௬. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

(இ - ள்.) (துறவியானவன்), இன்னா என - (மக்கட்குத்) துன்பந் தருவன என்று, தான் உணர்ந்தவை - தான் அறிந்தவற்றை, பிறன்கட்செயல் - பிறன்மாட்டுச் செய்தலை, துன்னாமை வேண்டும் - பொருந்தாமை தக்கது.

(இ - து.) துன்பந்தருவன என்று அறிந்த செயல்களைப் பிறர்க்குச் செய்தலாகாது.

இன்பதுன்பங்கள் உயிர்க்குணமாதலின் அவை காட்சியளவையான் அறியப்படா, உள்ளத்தான் உணரப்படும் என்பத றிவித்தற்கு 'இன்னாவெனத்தா னுணர்ந்தவை' என்றார்.

இன்னா செய்தல் கூடா தென்ற திது. (௬)

இன்னா செய்யக் கூடா தென்பது வருங்குறள் :

௩௱௧௭. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்
மாணாசெய் யாமை தலை. [தானு

(இ - ள்.) மாணா - துன்பந்தருஞ் செயல்களை, யார்க்கும் - (வலியார் மெலியார்) யார்க்கும், எஞ்ஞான்றும் - (ஆற்றல் உற்ற பொழுதாயினும் அற்றபொழுதாயினும்) எப்பொழுதும், எனைத்தானும் - (சிறிதாயினும் பெரிதாயினும்) எவ்வளவும், மனத்தானும் - (புறத்தாலன்றேனும்) அகத்தாலுங்கூட, செய்யாமை - செய்யாதிருத்தல், தலை - சிறப்பு.

(இ - து.) யாண்டும் எவர்க்கும் எவ்வளவும் துன்பஞ் செய்ய நினைத்தலுங் கூடாது.

உள்ளத்தின் வழியது வினையாதலால் நினைத்தலுங் கூடா தென்றார்.

இன்னா செய்தலை உள்ளத்திற் கொள்ளற்க என்றது. (எ)

கொள்வது உள்ளமயக்கத்தாலா மென்பது வருங்குறள்:

௩௧௮. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

(இ - ள்.) (பிறர் செய்யும் இன்னாதன), தன் உயிர்க்கு —, இன்னாமை - துன்பந்தருவனவாம் தன்மையை, அறிவான் - (துய்த்து) அறிகின்றவன், மன் உயிர்க்கு - நிலைபேறுடைய (பிற) உயிர்கட்கு, இன்னா - துன்பந் தருஞ் செயல்களை, தான் செயல் - தான் செய்தல், என்கொலோ - என்ன காரணத்தால்.

(இ - து.) பிறர்க்கு இன்னா செய்தல் அறியாமையாலே ஆவது.

ஒருவன் தான் பிறர்க்குச் செய்யக் கருதும செயலைப் பிறர் தனக்குச் செய்யின் தான் துனபுறவேண்டி வருமன்றே; அவ்வாறே தான் கருதிய செயலைப் பிறர்மாட்டுச் செய்யின் அவர் துன்புறுவர் என்பது அனுமானத்தான் எளிதில் அறியக் கிடப்பதொன்று. அங்ஙனமாகவும், ஒருவன் பிறர்க்கின்னா செய்தல் அறிவின் மயக்கத்தினாலே யன்றி வேறன்று என்பார் ' என்கொலோ ' என்றார்.

இவை மூன்று பாட்டானும் இன்னா செய்தல் பொதுவகையான் விலக்கப்பட்டது. (அ)

இன்னா செய்தலான் ஆம் தீங்கு கூறுவன வரும் இரு குறள்கள்:

௩௧௯. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

(இ - ள்.) (துறந்தவர்), பிறர்க்கு இன்னா - பிறர்க்குத் துன்பந் தருவனவற்றை, முற்பகல் - முற்பொழுதில், செய்யின் - செய்தால், தமக்கு இன்னா - தமக்கு இன்னாதன, பிற்பகல் - பிற்பொழுதில், தாமே வரும் - (அவர் செய்யாமல்) தாமே வரும்.

(இ - து) பிறர்க்குத் துன்பம் செய்பவர் விரைவில் தாமே துன்பமுறுவர்.

பகல்முன் பகல்பின் என்பன முன்பகல் பின்பகல் என மாறி நின்றனவாகக் கொண்டு அவை 'முன்பின்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை' எனக் கூறி அதற்கேற்ப 'ஒரு பகலது முற்கூற்றின்கண்' எனவும் 'அதன் பிற்கூற்றின்கண்' எனவும் பொருளுரைத்தார் ஆசிரியர் பரிமேலழகர். பகல் என்றது ஈண்டுப் பொழுதை உணர்த்தி நின்றது. எனவே, நெருநற் பொழுது நாளைப் பொழுது என்பனபோல இவையும் பண்புத் தொகையெனக் கோடல் இழுக்காது. ஆய்ந்து கொள்க.

தாமே வரும் என்றது வருகலின் விரைவும் எளிமையும் குறித்து. 'தானே வரும்' என்பது பாடமாயின் அச் செயல்தானே தமக்கு இன்னாதனவாய் வருமென உபசாரவழக்காக்கி ஆக்கம் வருவித்துரைக்க' என்றார் பரிமேலழகர். தானே என்று பாடங் கொண்ட மணக்குடவர், பிற்பொழுதிற்றானே எனப் பொருளுரைத்தார்.

இன்னா செய்தலின் விளைவு கூறியது இது. (௯)

அவ்விளைவை வற்புறுத்தி அஃதொழிக என்பது வருங்குறள்:

௩௨௦. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(இ - ள்.) நோய் எல்லாம் - இன்னாதன வெல்லாம், நோய் செய்தார் மேலவாம் - (பிறிதோருயிர்க்கு) இன்னா

செய்தவர் மேலனவாம் ; (ஆதலால்,) நோயின்மை வேண்டு பவர் - (தம்முயிர்) துன்பமுறாமையினை விரும்புபவர், நோய் செய்யார் - (பிறவுயிர்க்குத்) துன்பந்தருவனவற்றைச் செய் யார்.

(இ - து.) தாம் துன்பமுறாமையை விரும்புவார் பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யாதிருக்கக் கடவர்.

நோய் துன்பமும் பிணியு மாதலின், நோய் நோய் எனப் பல்காற் சொன்னது துன்பமிகுதி உணர்த்தவும், வீடு கருதுவார் பிணிவயப் படுதலின் ஒவ்வாமை அறிவுறுக்கவும் வேண்டியாம். சொற்பின்வருநிலை யென்னும் அணி கருதியுமாம். வித்தின் விளைவு வேறாகாமையின் நோய் விதைத்தார்க்கு விளைவது நோயே யென்பார் 'நோயெல்லா நோய் செய்தார் மேலவாம்' என்றார். (௧௦)

இவ் வதிகாரத்தில், முதற் குறளால் பயனோக்கி இன்னா செய்யாமையும், அடுத்த மூன்று குறள்களால் செற்றம்பற்றி இன்னா செய்யாமையும், அடுத்த குறளால் சோர்வினான் இன்னா செய்யாமை யும், அடுத்த மூன்று குறள்களால் பொதுவகையால் இன்னா செய் யாமையும், இறுதி இரண்டு குறள்களால் இன்னா செய்தலின் தீங்கும் கூறப்பட்டன.

---

## ௩௩. கொல்லாமை

அஃதாவது புல்முதல் மக்களீறாக உள்ள எவ்வுயிரையுங் கொல்லுதலைச் செய்யாமை. இது மேற்கூறிய புலாலுண்ணாமை கள்ளாமை வெகுளாமை இன்னாசெய்யாமை முதலிய விரதங்கள் அனைத்தினும் செய்தற் கருமையுடைத்தாதல்பற்றி விரதப் பகுதியின் ஈற்றிற் கூறப்பட்டது. உயிரை வருத்தல் கொல்லாமற் கொல்லுதல் எனப்படுமாகலான் அதனை முன் விலக்கிப் பின் கொல்லுதலை விலக்கினார். இவ்வாற்றான் அதிகார இயைபு பெறப்பட்டது.

இவ்வதிகாரத்தில் கொல்லாமையின் சிறப்பும், கொல்லாமை மேற்கொண்டார் சிறப்பும், அவர் பெறும் பயனும், கொல்லுதலின் தீமையும், கொல்வார் உறும் தீமையும் முறையே கூறுவான்வைத்த ஆசிரியர் முதற்கண் கொல்லாமையின் சிறப்புக் கூறுகின்றார்.

௩௨௧. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(இ - ள்.) அறவினை - அறங்கள் எல்லாமாகிய செய்கை, யாது எனின் - யாதென்று (ஒருவன்) வினவின், கொல்லாமை - கொல்லாமையாம் (என்க); கோறல் - கொல்லுதல், பிறவினை எல்லாம் - பாவச்செய்கைகள் எல்லாவற்றையும், தரும் - விளைக்கும்.

(இ - து) கொல்லுதல் வேறு பல பாவங்களையும் உடன் தருதலின் கொல்லாமையே சிறந்த அறமாம்.

அறம் ஒருமைச் சொல்லொடு முடிந்தும் பன்மைப் பொருளைத் தருதலின் சாதியொருமை எனப்படும். அறமாவது நல்லது செய்தலும் அல்லது ஒழிதலுமாகலின் அல்லதொழிதலாகிய கொல்லாமையும் அறவினையாயிற்று. கொல்லுதல் இன்னாசெய்தல் முதலிய பாவங்களையும் உடன்கொண்டதாகலின் 'கோறல் பிறவினை யெல்லாம் தரும்' என்றார். கொல்லாமை, அருளுடைமை முதலிய

பிறவறங்களை உடன்கொண் டதாதலின் அஃது எல்லா அறங்களு மாம் எனப்பட்டது.

கொல்லாமை சிறந்த அறம் என்றது இது. (௧)

அது கைகூடச் செயற்பால திஃதென்பது வருங்குறள் :

௩௨௨. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(இ - ள்.) (துறவி,) பகுத்து உண்டு - (தான் உண்பதனைப் பசித்த உயிர்கட்குப்) பகுத்துக் கொடுத்து உண்டு, பல்லுயிர் - பலவகைப்பட்ட உயிர்களையும், ஓம்புதல் - காப்பாற்றுதல், நூலோர் - அறநூலுடையோர், தொகுத்தவற்றுள் எல்லாம் - (துறவிக்குரியவாகத்) தொகுத்துக் கூறிய அறங்கள் அனைத்தினும், தலை - சிறந்த அறமாம்.

(இ - து.) பசியாலேனும் தன் சோர்வாலேனும் உயிர்கள் இறவாமற் பாதுகாத்தல் துறவிக்குச் சிறந்த அறமாம்.

பல்லுயிரும் எனற்பாலது பல்லுயிர் என முற்றும்மை தொக்கு நின்றது. ஓம்புதல் சோர்ந்தும் ஓர் உயிருக்கும் இறுதிவாராமற் குறிக்கொண்டு காத்தல். உயிர் உடம்பில் நிற்றற்கு இன்றியமையாதது உணவாதலால், அவ்வுணவு கொடுத்தல் உயிருக்கு இறுதி வாராமற் காக்கும் செயல்களுட் சிறந்ததாயிற்று. அச் சிறப்புத் தோன்றத் தன்னுயிரைக் காக்க உண்ணுதலோடு அதனையும் எச்சமாக்கி ஓம்புதலொடு முடிய வைத்தார். 'எல்லா நூல்களினும் நல்லன வெடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கியல்பாகலின், ஈண்டும் பொதுப்பட நூலோர் என்றும், அவரெல்லார்கும் ஒப்பமுடிதலான் இது தலை என்றுங் கூறினார்.'

உயிர்களைக் கொல்லாது காத்தல் அறங்களுட் சிறந்ததென்றதிக்குறள். (௨)

சிறந்ததாதலோடு இணையற்றதுமா மென்பது வருங்குறள் :

௩௨௩. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

(இ - ள்.) (நூலோர் தொகுத்த அறங்களுள்), ஒன்றாக - (தன்னோ டிணையாவ தின்றித்) தானேயாக, நல்லது கொல்லாமை - நல்லதாவது கொல்லாமை; பொய்யாமை - பொய்யாமை யென்னும் அறம், அதன் பின்சார - (அக் கொல்லாமை யொழிய) அதன் பின்னாக நிற்க, நன்று - நல்லதாம்.

(இ - து.) கொல்லாமை இணையில்லாத அறம்.

நூலோர் தொகுத்த அறங்களால் என்பது மேலைக் குறளால் அதிகாரப்பட்டு வந்தது. எடுத்துக்கொண்டது கொல்லாமை பாயினும், 'பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற - செய்யாமை செய்யாமை நன்று' (குறள் - ௨௯௭) எனவும் 'யாமெய் யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும் - வாய்மையி னல்ல பிற' (குறள் - ௩௱) எனவும் மேற்கூறியவாற்றான், அறவறங்களுட் சிறந்தது கொல்லாமையேயன்றி அதனோ டொப்பப் பொய்யாமையு மாம் எனப்படுமன்றே, அது படாமைப் பொருட்டுக் கொல்லாமை யின் 'பின்சாரப் பொய்யாமை நன்று' எனப்பட்டது. பொய்யாமை சிறந்த அறமாயினும் நன்மை பயக்கும்வழிப் பொய் மெய்யா யும், தீமை பயக்கும்வழி மெய் பொய்யாயும் திரிவுபடுதலின், யாண்டுந் திரிவுபடாத கொல்லாமை அதனினும் சிறந்து தலைமை பெறுவ தாயிற்று.

கொல்லாமை நல்ல அறமென்றது இது.    (௩)

அதனையுடையதே நல்ல ஒழுக்க மென்பது வருங்குறள்:

௩௨௪. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

(இ - ள்.) (வீடடைதற்கு) நல் ஆறு எனப்படுவது - நல்ல நெறி என்று சொல்லப்படுவது, யாது எனின் - யாது என்று (ஒருவன்) வினவின், யாதொன்றும் - யாதோர் உயிரையும், கொல்லாமை சூழும் - கொல்லாமை (யாகிய அறத்தினைக் காக்கக்) கருதும், நெறி - நெறியாம் (என்க).

(இ - து.) கொல்லாமை காக்கும் நெறியே நன்னெறி.

'யாதொன்றும்' என்றது ஓரறிவுயிராகிய புல்பூண்டு முதலியவைகளையும் அகப்படுத்தற்கு. எனவே, உயிரை அறவழித்தல்லது பெறவலாத மூலை, கீரை முதலியவற்றை உணவின் பொருட்டுக் கொள்ளுதல் துறவிகட் கொவ்வாதாயிற்று. புன்மேன நடத்தல் முதலியவும் அன்னவாம்.

இவை நான்கு பாட்டானும் கொல்லாமையின் சிறப்புக் கூறப்பட்டது. (௪)

கொல்லாமை மேற்கொண்டாரது சிறப்புக் கூறுவது வருங் குறள் :

௩௨௫. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

(இ - ள்.) நிலை அஞ்சி - (பிறவியிற் கட்டுண்டு) நிற்றலை அஞ்சி, நீத்தாருள் எல்லாம் - (அக் கட்டினின்று விடுபெறுதல் கருதி இல்வாழ்க்கையைத்) துறந்தார் அனைவருள்ளும், கொலை அஞ்சி - கொல்லுதலாகிய மறத்தை அஞ்சி, கொல்லாமை சூழ்வான் - கொல்லாமையாகிய அறத்தை மறவாதவன், தலை - தலைமையுடையவன்.

(இ - து.) துறவியருள் கொல்லாமை மேற்கொண்டவன் உயர்ந்தவன்.

பல்வகைப் பிறவியும் பல்வகைத் துன்பத்திற்கிட மாதலறிந்து அத்துன்பத்திற் கஞ்சி அதனினின்று விடுபட வேண்டி இல்லமும்

பொருளுமாயவற்றைத் துறந்தோராதலின் 'நிலை யஞ்சி நீத்தார்' என்றார். நீத்தார் சமயவேறுபாட்டாலும் கொள்கை வேறுபட்டா லும் பலவகைப்படுவராதலின் அவ் வகையார் எல்லாரையும் உள் ளடக்கி 'நீத்தாரு ளெல்லாம்' என்றார்.

கொல்லான் உயர்ச்சி கூறியது இது. (௫)

கொல்லான் உறும் பயன் கூறுவது வருங்குறள் :

௩௨௬. கோல்லாமை மேற்கோண் டொழுகுவான் வாழ்
செல்லா துயிருண்ணுங் கூற்று. [நாண்மேற்

(இ - ள்.) கொல்லாமை - கொல்லாமையை, மேற் கொண்டு ஒழுகுவான் - (விரதமாக) மேற்கொண்டு ஒழுகு பவனது, வாழ்நாண்மேல் - வாழ்நாளின்மேல், உயிர் உண் ணும் கூற்று - உயிரைக் கவரும் கூற்று, செல்லாது - (கவ ரச்) செல்லாது.

(இ - து.) கொல்லாமை மேற்கொண்டார் நீடு வாழ்வார்.

வாழ்நாண்மேற் கூற்றுச் செல்லாது என்றது வாழு நாட்களில் ஒருவன் முடிக்கக் கருதிய பயன் முடியாமுன்னே கூற்று அந் நாட்களை இடைபுகுந்து கூறுபடுத்திக் கொள்ளச் செல்லாது என்ற வாறு. உரமிகுந்த நிலம் பயன் மிகுதியாகக் கொடுப்பதே யன்றி விரைந்துங் கொடுத்தல்போல, அறமும் பாவமும் மிக்கவழிப் பெறப்படும் பயனாகிய நன்மையும் தீமையும் அளவின் மிதவதே யன்றி மறுமை நோக்கி நீட்டியாது இம்மையிற்றானே போதரும் என்னும் அறநூற் றுணிபு பற்றி ஆசிரியர் இல்லறம் துறவறம் இரண்டற்கும இம்மைப் பயனும் மறுமைப் பயனும் உடன்பட்டுக் கூறுவராதலின் ஈண்டு இவ்வறத்திற்குரிய இம்மைப்பயன் கூறு வாராயினர்.

அற்றே லஃதாக ; பிறவிக் கஞ்சி வீடுபேறு வேண்டித் துறவு பூண்டார்க்கு,

'வினைக்கு வந்தது வினைக்குவிளை வாயது
புனைவன நீங்கிற் புலால்புறத திடுவது
மூத்துவிளி வுடையது தீப்பிணி யிருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
யவலக் கவலை கையா றழுங்கல்
தவலா வுள்ளந் தன்பா லுடையது' —(மணிமேகலை)

மக்கள் யாக்கையாக, அதனை நீட்டிப்பதாற் பயன் யாதோவெனின், அஃதே? நன்று கூறினீர்! முள்ளினை முள்ளா னகற்றுமாறு போலவும், வெம்மையை வெம்மையா னாற்றுமாறு போலவும், வைரத்தை வைரத்தா னறுக்குமாறு போலவும், யாக்கை யெடுத்தலை யாக்கையானே விலக்க வேண்டுதலின் யாக்கை நீட்டித் தல் பயனுடைத்தேயா மெனக. என்னை? ஞானமலது கதி கூடா தாகலானும் ஞானம் பெறுதற்கு உடம்பு கருவியாகலானு மென்பது. ஆகலா னன்றே,

உடம்பா ரழியி னுயிரா ரழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பினை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே.

என நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்ததூஉ மென்க. எனவே, கொல்லாமை மேற்கொண்டார் மெய்ஞ்ஞானஞ் சேர்ந்து வீடுபெறு வாரென்பதும் உடன் முடிந்தது. முடியவே, இஃது இம்மைப் பயனே யன்றி மறுமைப் பயனுங் கூறிய தாயிற்று.

கொல்லாமையான் ஆம் பயன் கூறிய திது. (௬)

கொல்லுதலின் குற்றங் கூறுவன வரு மிரு குறள்கள் :

௩௨௭. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(இ - ள்.) தன் உயிர் நீப்பினும் - (கொலை செய்யா வழித்) தன் உயிர் ஒழியுமாயினும், பிறிதோர் இன் உயிர் - வேறொன்றன் இனிய உயிரை, நீக்கும் வினை - ஒழிக்குந் தொழிலை, தான் செய்யற்க - (துறவியானவன்) தான் செய்யாதொழியக் கடவன்.

(இ - து.) துறவி தன்னுயிர் போவதானாலும் பிறவுயிரைக் கொல்லுதல் ஆகாது.

கொல்லா அறம் உயிரை வளர்க்கும் என்பது மேற் பெறப் பட்டமையின், பிறிதோருயிரைக் கொன்று தன் உயிரை வளர்க்க வேண்டுவது அவ்வற மேற்கொண்டானுக் கில்லை. ஆகவே, பிறிதோருயிரைக் கொல்லாவழி அவன் உயிர் நிலைக்குமே யன்றி நீங்காதாதலின், 'நீப்பினும்' என்ற உம்மை எதிர்மறை மேற்று.

தன் உயிரைக் காத்தல் கருதியுங் கொலலற்க என்ற திக குறள். (எ)

ஆக்கங் கருதியும் கொல்லற்க என்பது வருங்குறள்.

௩உ௮. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

(இ - ள்.) (வேள்வியில் உயிரைக் கொன்றால்), நன்று ஆகும் ஆக்கம் பெரிது - (துறக்கம் சித்தி முதலிய) இன்பந் தரும் செல்வங்கள் பெரிதும் உண்டாம், எனினும் - என்று சொல்வாருளராயினும், சான்றோர்க்கு -(அருளுடைமை முதலாகிய அறங்களான்) நிறைந்தார்க்கு, கொன்று ஆகும் ஆக்கம் - (ஓருயிரைக்) கொன்று பெறப்படும் செல்வம், கடை - இழிவுடையதாம்.

(இ - து.) துறவி வேள்வியினுங் கொல்லலாகாது.

எத்துணைப் பெருஞ் செல்வமாயினும் வீடுபேறுபோல முடிவில்லாத இன்பம் பயப்பதாகா தாகலின், வீடுபேற்றை அவாவித் துறந்தார்க்கு அது கடையாயிற்று.

இவை யிரண்டுபாட்டாலும் கொல்லுதலின் தீங்கு கூறப்பட்டது. (அ)

கொல்வார்க்கும் வரும் தீங்கு கூறவ வரும் இரு குறள்கள்:

௩௨௯. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

(இ - ள்.) கொலை வினையராகிய மாக்கள் - கொலைத் தொழிலையுடையராகிய மாந்தர், (தாம் அத்தொழிலின் கீழ்மையை அறியும் உணர்வுடைய ரல்லராயினும்), புன்மை தெரிவார் அகத்து - (அக்) கீழ்மையை அறிவார் உள்ளத்து, புலை வினையர் - புலைத்தொழிலினர் (என மதிக்கப்படுவர்).

(இ - து.) கொலைசெய்வார் புலையர்.

புலையர் இழிஞராயது தந் தொழிலால். ஆசிரியர் மேற் 'பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா - செய்தொழில் வேற்றுமை யான்' (குறள் - ௯௭௨) என்பராதலாற் சிறப்பு மிழிவுந் தொழிலா னாதல் பெறப்பட்டது. ஆகவே, கொலைவினையர் அவ் வினையால் இழிஞ ராயினர். நன்மை தீமை பகுத்துணரமாட்டா மக்களை விலங்கொடு சேர்த்து 'மாக்கள்' என்பர் ஆசிரியர் தொல் காப்பியனார். 'மாவு மாக்களு மையறி வினவே' என்னும் தொல் காப்பிய மரபியல் ௩௨-ம் சூத்திரத் துரையில் பேராசிரியரும் 'ஐயறி வுடையன விலங்கும் அவைபோல்வன ஒருசார் மானிடங்களுமாம்' எனவும் 'மாவென்பன நாற்கால் விலங்கு; மாக்களெனபபடுவார் மனவுணர்ச்சி யில்லார்' எனவும் கூறிச் சென்றார். 'விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல் - கற்றாரோ டேனை யவர்' என்னும் சாய்) குறளும் ஈண்டறியற்பாற்று.

கொலை செய்வார் இம்மையில் இழிவுறுவார் என்ற திக் குறள். (க)

மறுமையிலுந் துன்புறுவா ரென்பது வருங்குறள் :

௩௩௰. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(இ - ள்.) செயிர் உடம்பின் - நோயுடம்புடனே, செல்லாத் தீ வாழ்க்கையவர் - வறுமை மிகுந்த கொடிய வாழ்க்கையினை உடையார், (இவர் முற்பிறப்பின்கண்), உயிர் - உயிர்களை, உடம்பின் - (அவை நின்ற) உடம்பினின்று, நீக்கியார் - நீக்கினவர், என்ப - என்று சொல்வர் (வினை விளைவுகளை அறிந்தோர்).

(இ - து.) கொலை செய்வார் மறுமையில் நோயும் வறுமையுமுற்றுத் துன்புறுவார்.

செயிர் - குற்றம். உடம்பிற்குக் குற்றமாவது நோயாதலால் செயிருடம்பு நோயுடம்பெனப்பட்டது.

செல்லா வாழ்க்கை, தீவாழ்க்கை எனக் கூட்டுக. செல்லா வாழ்க்கையாவது நுகர்தல் செல்லா வாழ்க்கை. அஃதாவது வறுமை வாழ்க்கை. நுகர்தல் செல்வதற்குக் கருவியாவது செல்வம் எனப் பட்டமை காண்க.

முற்பிறப்பி லறம் பிழைத்தார் இப்பிறப்பிற் றுன்புறுதலை,

'தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து நாற்கதியிற்
சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
முயலா தாரே'.

என்றவிடத்துங் காண்க. எண்டு நோயென்றது தீர்தற்கரிதாய்க் காண்டற் காகாப் பெருநோயை. துறவியாக்கு வறுமையாவது உண்ண வூணுங் கிட்டாமற் போதல்.

இவ் வதிகாரத்தில், முதல்நான்கு குறள்களால் கொல்லாமையின் சிறப்பும், அடுத்த குறளால் கொல்லாமை மேற்கொண்டார் சிறப்பும், அடுத்த குறளால் கொல்லாமையின் பயனும், அடுத்த இரண்டு குறள்களால் கொல்லுதலின் தீங்கும், இறுதி இரண்டு குறள்களால் கொலை செய்வார் உறும் தீங்கும் கூறப்பட்டன.

விரதமெனப் படுபவை யாவும் அருளுடைமை முதற் கொல்லாமையீறாகச் சொல்லப்பட்ட இவற்றுள் அடங்கும். அஃதறிந்து அடக்கிக் கொள்க.



## ஞானம்

ஞானமாவது வீடு பயக்க வல்ல அறிவு. களை நீக்கி நீர் பாய்ச்சி னல்லது பயிர் செழித்துப் பயன் தருதல் இல்லையாதல் போல ஆகாதன ஒழித்து ஆவன செய்தாலல்லது அறிவு விளக்கமுற்று வீடுபயத்தல் இல்லையாதலின், ஆகாதன ஒழிதலும் ஆவன செய்தலு மாகிய விரதம் முற்கூறி அதன் பயனாகப் பெறப்படும் அறிவு விளக்கத்தினை நிலையாமை முதல் அவாவறுத்தல் இறுதியாக நான் கதிகாரமாகக் கூறுவான் தொடங்கி முதற்கண் நிலையாமை கூறு கின்றார்.

### ௩௪. நிலையாமை

அஃதாவது, தோன்றுவன யாவும் நிலையாத தன்மை. அறிவு என்ற மாத்திரையே அறிவானும் அறியப்படுவதும் உண்டாதல் பெ றப்படும். அறிவு அகம்; அறியப்படுவது புறம். அகத்தையும் புறத்தை யும் தொடர்புபடுத்தி நிற்பது புலன். ஆகவே, புலன்வழியல்லது புறப் பொருள்களை அறியுமாறில்லை. புறப்பொருள்கள் உண்டென் னும் உணர்ச்சிதானும் புலன்வழியல்லது பெறுமாறில்லை. எனவே, அறிவால் அறியப்படும் புறப்பொருள்களெல்லாம் புலனுக்குத் தோன் றுவன என்பது முடிந்தது. தோன்றும் அப்பொருள்கள் கானல் நீர்போலத் தோன்றி மெய்யுணர்ந்தவழிக் கெடுதலின் அறிவின் மயக்க உணர்ச்சியே யன்றிப் பொருளென வேறில்லை என்பாரும், பொருள் கள் இடத்தானும் காலத்தானும் வரையறுக்கப்படுதலானும் காலம் கணந்தோறும் வேறுபடுதலானும் அதன் வரையறையுட்படும் பொ ருள்களும் அதனொடு நிலைவேறுபட்டுக் கணந்தோறும் பிறந்திறக்கு மென்பாரும், தோன்றியது அழியக்காண்டலினானும் உள்ளது அழி தலும் இல்லது தோன்றலும் கூடாமையானும் பொருள்கள் நிலையா கவே யுள்ளனவேனும் அந்நிலை மாறுதலுடையன வென்பாருமாகப் பொருட்டன்மை கூறுவார் பலதிறத்தாராவர். அவரெல்லார்க்கும்

அவற்றது நிலையாமை உடம்பாடாகலின், சமயக்கணக்கர் மதிவழி கூறாது பொருளிது வென்ற பொய்யில் புலவர், யாவர்க்கும் உடம்பாடாகிப் பொதுப்பட நின்ற அந்நிலையாமையினையே ஈண்டுக் கூறுகின்றார். பற்றறுதல் அப் பற்றுக்கிடமான பொருள்களின் தன்மையுணர்ந்தல்லது கூடாதாகலின் அத்தன்மையாகிய நிலையாமை முதற்கட் கூறப்படுவதாயிற்று. நிலையாத தன் உடம்பின் பயனைக் கருதி நிலையான ஓர் உயிரை அதன் உடம்பினின்று பிரித்தலாகிய கொல்லுதலைச் செய்யாமை கூறி நிலையாமை கூறியதில் அதிகார இயைபு காண்க

இனி, இவ் வதிகாரத்தில், நிலையாமை உணர்தலின் இன்றியமையாமையும், செல்வ நிலையாமையும், யாக்கை நிலையாமையும், முறையே கூறுவான் வைகத ஆசிரியர் முதற்கண் நிலையாமை உணர்தலின் இன்றியமையாமை கூறுகின்றார்.

௩௩௧. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(இ - ள்) நில்லாதவற்றை - நிலைத்தல் இல்லாத பொருள்களை, நிலையின - நிலைத்தல் உடையன, என்று உணரும் - என்று கருதுகின்ற, புல்லறிவு ஆண்மை - குறுகிய அறிவினையுடையாதல், கடை - (துறந்தார்க்கு) இழிவாம்.

(இ . து.) நிலையில்லாத பொருள்களை நிலையுள்ளன என்று கருதுதல் அறிவீனம்.

பொருள்கள் நிலையாமை சிற்றறிவினரும் உணரக் கிடப்பதொன்று. அதுதானும் அறியாமை புல்லறிவு. பிறவிவாய்ப்படுதல் துன்பத்திற்கேதுவாம் என்பதுணர்ந்து அதனினின்றுவிடுதலைபெறக் கருதித் துறவுமேற்கொண்டார் நிலையாமை உணராத புல்லறிவினராதல் அவர்க்கு மிகவும் இழிவா மென்பார் 'புல்லறி வாண்மை கடை' என்றார். எனவே, நிலையாமை உணர்தல் துறவியர்க்கு இன்றிமையாத தென்பது கூறிற்றாயது இது. (க)

உயிருக்குப் புறமாவது உடம்பும் உடம்புக்குப் புறமாவது ஏனைப் பொருள்களுமாதலின், அவற்றின் நிலையாமையினை விதந்து கூறுவார், பொருள் தன்னின் வேறென்பது எளிதினுணரக் கிடத்தலின் அது நிலையாமையினை முதற்கண் வைத்து வருமிரு குறள்களாலு மது கூறுகின்றார்:

௩௩உ. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(இ - ள்.) பெருஞ் செல்வம் - (ஒருவனிடத்துத்) திரண்ட செல்வம் (வருதல்), கூத்தாட்டு - கூத்தாடுதல் செய்கின்ற, அவை - அவையின்கண், குழாத்தற்றே - (காண்போர்) கூட்டம் (திரண்டு வருதல்) போலும்; (அது) போக்கும் - அச் செல்வம் போதல், அது - அக் காண்போர் கூட்டம், விளிந்தற்று - (கூத்து முடிந்தவழிக் கலைந்து) போதல் போலும்.

(இ - து.) செல்வம் ஓரிடத்தில் நிலைத்திருப்ப தன்று.

'பெருஞ் செல்வம்' எனவே இந்திரபதவி முதலியவும் அடங்கின. 'போக்கும்' என்ற இறந்தது தழீஇய எச்சவும்மையால் வருதல் என்பது பெற்றும். கூத்தாட்டங் காரணமாக மக்கள் பலவழியாலும் ஓரிடத்துத் திரண்டுவந்து, அக்காரணம் நீங்கவும் அவரும் நீங்குமாறுபோல, உம்மையிற் செய்த நல்வினை காரணமாகச் செல்வம் பலவழியாலும் ஒருவனிடத்தே திரண்டு வந்து, அந் நல்வினை நீங்கத் தானும் நீங்கும் என்றவாறாயிற்று.

செல்வத்தின் தன்மை கூறிய திது. (உ)

அத் தன்மை யறிந்து அதனைப் பயன்படுத்துமாறு கூறுவது வருங்குறள்:

௩௩௩. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

(இ - ள்.) செல்வம்—, அற்கா - நிலையாத, இயல்பிற்று - தன்மையுடையது; (ஆதலால்) அது பெற்றால் - (ஒருவன்) அச் செல்வத்தைப் பெறுவானாயின், (அதனாற் செய்யத்தக்க அறங்களாகிய) அற்குப - நிலையாயினவற்றை, ஆங்கே-(பெற்ற) அப்பொழுதே, செயல்-செய்யக் கடவன்.

(இ - து.) செல்வம் உள்ளபோதே அறஞ் செய்க.

அல்கா எனற்பாலது அற்கா எனத் திரிந்து நின்றது. அல்கல் - நிலைத்தல். வினையடி அல்கு. அதனடியாகப் பிறந்த அல்கா அல்குப என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமும் அகரவீற்றுப் பன்மை வினையாலணையும் பெயரும் அற்கா அற்குப எனத் திரிந்துநின்று நிலையாத நிலைப்பன எனப் பொருள்பட்டன. 'அல்கலென்பது தங்கலு நாளும்' என்பது பிங்கலம்.

'அது பெற்றால்' என்றதென்னையோ, துறவிக்கன்றே இது கூறியது, செல்வத்தை விட்டு வந்து அது தேடும் முயற்சியினையும் கைவிட்ட துறவி அது பெறுமாறில்லை பாலோ வெனின், ஊழான் ஒரோருகால் அது பெறுதலு முண்டென்றற் கன்றே மேற்குறளில் செல்வம் பெறுவது ஊழ்வலியா னென்பதனை உவமவாயிலான் அறிவுறுத்தினா ரென்க. அச்செல்வத்தைத் தந்த ஊழ் முடியின் அச் செல்வமும் முடியுமாதலினானும், ஊழ் முடிதல் இன்ன பொழுதென்பது அறிய வாராதாதலினானும், பெற்ற அப்பொழுதே பயன்படுத்தாது நெடுநீர்மை செய்யின் அஃதொழியுங் காலத்துப் பயன்படாது வறிதே ஒழியுமாதலினானும் 'அது பெற்றா லற்குப வாங்கே செயல்' என்றார். நிலையான அறங்களாவன பயனோக்காது செய்யப்படுவன. அவை வீடு பயக்கும். பயனோக்கிச் செய்யப்படும் அறங்கள் துறக்கம் முதலிய நிலையில்லாப் பயன்களையே தரும்.

இவை யிரண்டு பாட்டானும் செல்வ நிலையாமை கூறப்பட்டது. (௩)

யாக்கை நிலையாமை கூறுவன வருமெழு குறள்கள் :

௩௩௪. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) உயிர் - (உடம்போடு கூடிய) உயிர், உணர்வார்ப்பெறின் - (தன் தன்மையை) உணர்வாரைப் பெற்றால், நாள் என - நாள் என்று, ஒன்றுபோல்-(அறுக்கப்படுவதான காலவரையறை) ஒன்றைப்போல, காட்டி-தன்னைத் தோற்றுவித்து, ஈரும்-(காலத்தை) அறுத்துச் செல்கின்ற, வாளது-வாளின் வயப்பட்டதாம்.

(இ - து.) அறிவுடையோர் நாளை நாளாகக் கருதாது உடம்போடு கூடிய தம் உயிரை அறுப்பதொரு வாளாகக் கருதுவர்.

காலம் என்னும் அருவப்பொருள் முதலீறற்றதானதால் ஒரு வரையறைக்குட்பட்ட கண்டப் பொருளன்று: அவ்வாறாகவும் அதனை ஞாயிற்றினியக்கமும் ஞாலத்தின் சுழற்சியும் முதலியன பற்றி நாள் மதி ஆண்டு என இத்தொடக்கத்தனவாகவும் இறப்பு நிகழ்வு எதிர்வு எனவும் வரையறுத்துக் கூறுதல் உலகியலுணர்வுக்கு வேண்டப்படுவதாயிற்று. வரையறைப்படாத அது வரையறைப்பட்டாற் போலக் கூறப்படும் இப் பெற்றி தெரிப்பான் வேண்டி 'நாள் என ஒன்றுபோற் காட்டி' என்றார். காலத்துக்கு உளதான அப் போலித் தோற்றம் பொருள்களின் நிலையாமை காரணமாக உண்டானமை உய்த்துணரப் புலனும். ஆகவே, 'நாள்' என்னும் அக் காலவரையறை உயிர் ஓர் உடம்பின் நிலையா தாதலை விளக்கி நின்றது.

இனி, இக்குறளில் 'நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும் வாள்' என்னும் அப்பகுதிக்கு, 'நாள் என்பது ஒரு பொருள் போலத் தோன்றி உயிரை ஈர்வதொரு வாளாம்' என்று பொருள் கூறுவாரும் உளர். என என்பது இடைச்சொல். அதற்கு என்பது எனப் பெயர்ச்சொல்லாகப் பொருள்கூறுதல் பொருந்தாது. அதனாலும், வாளது என்பது குறிப்புமுற்றான ஒருசொல். அதனை வாள் அது என இருசொல்லாகப் பிரித்தற்கு உணர்வார் என்னும்

வருமொழி இடங்கொடாது. என்னை? 'முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி மன்னல் வேண்டு மல்வழியான' (தொல் - எழுத் - ௪௨௩.) என்பது விதியாதலால் வருமொழி முதல் உயிராதல் நோக்கி அஃது என நிற்றற்பாலது 'அது' என நிற்றல் கூடாமையான் என்பது. அதனானும் அவர் உரை பொருந்தாது. இத் தடைகளுக்கு விடை ஓராற்றாற் கூறக் கூடுமாயினும், காலம் அருவப்பொரு ளாதலே யன்றிப் பொருள் அல்லதெனப் படாதாகவும், அதனைப் பொருளல்லது போலக் குறிப்பிட்டு 'ஒரு பொருள் போலத் தோற்றி' என்ப தொவ்வாமையாதல் காட்டி அவர் உரை மறுக்கப்படும்.

உயிர் உடம்பில் நிற்றல் நிலையன் றென்றதிது. (௪)

ஆதலின் நிற்கும்போதே நல்வினை செய்க என்பது வருங் குறள்:

௩௩௫. நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

(இ - ள்.) நாச் செற்று - (உரையாட வலாவண்ணம்) நாவை அடக்கி, விக்குள் மேல்வாராமுன் - விக்குள் எழுவதற்கு முன்னே, நல்வினை - (வீடுபேற்றைத் தரத்தக்க) அறத்தை, மேற்சென்று - விரைந்து, செய்யப்படும் - செய்தலே தக்கது.

(இ - து.) உயிர் நீங்கும் காலத்தில் பேசுதலும் முடியாதாகையால் முன்னதாகவே விரைந்து அறஞ்செயல் வேண்டும்.

சாங்காலத்தே விக்குள் மேல் நோக்கி வருதல் ஒருதலையாகலானும், அக்காலத்துச் செய்தலே யன்றிப் பேசுதலும் முடியாதாகலானும் 'வாராமுன்' என்றும், அதுதான் இன்ன பொழுது வரும் என்பது தெரியாதாகலான் விரைந்து அறத்தைச் செய்க என்பார் 'மேற்சென்று' என்றுங் கூறினர். மேற்செல்லுதல் - விரைதல். நல்வினையை விரைந்து செய்க என உடம்பின் நிலையாமை நல்வினை செய்யும் வகையின்மேல் வைத்துக் கூறப்பட்டது.

விரைந்து அறஞ்செய்க என்றதிது. (௫)

ஒருநாள் தாமதித்தலும் ஆகா தென்பது வருங்குறள் :

௩௩௬. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) நெருநல் - நேற்று, உளன் ஒருவன் - உள்ள வனாகிய ஒருவன், இன்று இல்லை - இன்று இல்லையாயினான், என்னும் - என்று சொல்லும், பெருமை - (நிலையாமை) மிகுதியை, இவ்வுலகு உடைத்து - இவ்வுலகம் உடையது.

(இ - து.) நேற்றைக் கிருந்தா னொருவன் இன்றைக் கிறந்தான் என்று சொல்லும்படி அவ்வளவு நிலையாமை மிகுந்துள்ளது இவ் வுலகம்.

உளன் - குறிப்புவினையாலணையும் பெயர், உளனொருவன் - இருபெய ரொட்டுப் பண்புத்தொகை. முதல்நாள் இருந்தவன் மறுநாள் இருப்பது நிலையில்லை யெனவே, மேற் செய்யப்படும் நல்வினையைச் செய்ய ஒருநாளேனும் தாமதித்தல் கூடா தென்பதாயிற்று.

ஒருநாளளவு உடம்பு முயிரும் கூடியிருத்தல் தானும் நிலையன் றென்றதிது. (௬)

ஒரு கணமளவு நிற்றல் தானும் நிலையன் றென்பது வருங்குறள்:

௩௩௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

(இ - ள்.) ஒரு பொழுதும் - ஒரு கணத்தளவும், வாழ்வது அறியார் - (தம் உயிர் உடம்போடு கூடி) வாழ்தலை அறிந்து துணிய முடியாதவர், (ஆயினும், அவர்) கோடியும் அல்ல - கோடியளவுமன்றி, பல - (அதனினும்) பல (வாகிய நினைவுகளை), கருதுப - நினையாநிற்பர்.

(இ - ள்.) மறுகணத்தளவும் தம் உயிர் உடம்பில் நிற்கு மென்று துணியமாட்டாத மக்கள், தாம் என்றும் இறவாதவர்கள் போலக் கட்டும் மனக்கோட்டை மிகப் பெரிது.

பொதுவாகக் காலத்தை யுணர்த்தும் பொழுது என்னுஞ் சொல் தன்னோடு புணர்ந்த இழிவுசிறப்பும்மையால் கால அளவில் குறுகியதாகிய கணத்தை உணர்த்திநின்றது.

பிராரத்த வினையின் அளவே வாழ்க்கையி னளவாகலின் அவ் வினையின் அளவு அறியப்படாதாகவே வாழ்க்கையின் அளவும் அறியப்படா தாயிற்று. இக் கருத்தானே பிற்காலத்துச் சான்றோ ரான பட்டினத்தடிகளும் 'வினைப் போகமே யொரு தேகங் கண் டாய், வினைதானொழிந்தால் - தினைப்போதளவு நில்லாது கண்டாய்' என்று கூறியருள்வா ராயினர்.

பலவாகிய நினைவுக ளாவன, இவ்விவ் வின்பங்கள் நமக்குரியன, இவ் வகையில் அவற்றைத் தேடுவோம், அதற்கு இவ் விவ் விடை யூறுகள் உளவாம். அவற்றை இவ் விவ்வா றகற்றுவோம், நீக்கிக் கருதியவற்றை இவ்விவ்வா றடைவோம், இவ்விவ்வாறு துய்ப்போம் என இவ்வாறெல்லாம் நினைக்கும் நினைவுகள்.

இனிக் கருதுப என்பதனை அறியார் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்த பகரவீற்றுப் பலர்பான் முற்றாகக் கொள்ளாது, அகரவீற்று அஃறிணைப் பன்மை வினையாலணையும் பெயராகக் கொண்டு, கருதுவன கோடியுமல்ல பல என அதனைப் பலவென்னும் பெயர்ப் பயனிலையான் முடித்துப் பொருள் கூறலுமாம்.

> 'உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
> எண்பது கோடிநினைந் தெண்ணுவன— கண்புதைந்த
> மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
> சாந் துணையுஞ் சஞ்சலமே தான்'

என்ற பிற்காலத் தௌவைப் பிராட்டியார் கூறிய வெண்பா ஈண்டு நோக்கற்பாலது.

உயிர் உடம்பில் நிற்றல் கணப்பொழுதில் நீங்கினும் நீங்கு மென்றதிது. (எ)

அதனினும் விரைவாய் நீங்குமென்பது வருங்குறள் :

௩௩௮. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

(இ-ள்.) குடம்பை - (தான் நிற்றற்கு இடமான) கூடு, தனித்து ஒழிய - (தன்னைவிட்டுத்) தனித்து நீங்க, புள் - (அக் கூட்டில் நின்ற) பறவை, பறந்தற்றே - (அதனை விட்டுப்) பறந்து போதல்போலும், உடம்போடு உயிரிடை - உடம்பிற்கும் உயிர்க்கும் உள்ளதான, நட்பு - தொடர்பு.

(இ-து.) நாம் பார்த்திருககும் பொழுதே புள் கூட்டைவிட்டுப் பறந்துபோதல்போல, உடம்பைவிட்டு உயிர் விரைந்து நீங்கும்.

தனித்தொழிய என்றதனால் சென்ற பறவை திருமபிவந்து அதனிற் புகாதவாறு கூடு சிதைந்தொழிந்தமை பெற்றாம். தம் உடம்பென்று பற்றுவைத் தொழுகும் மக்கள் அவ்வுடம்பைச் சிதையவிட்டு அதன்பாற் பற்றில்லார்போல இறந்தொழிதலைக் குறிப்பிக்க, இல்லாத நட்பை உள்ளது போலக் கூறினார். இது மூடனொருவனைச் சுட்டி 'இவன் நுண்ணறி விருந்தவா றென்னையோ' என்பதுபோலக் குறித்தபொருளை எச்சமாககிக் கூறுவதோர் இலக்கணை. 'தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்' என்பது தொல்காப்பியம் (எச்சவியல் - ௩௪). அறிவாயும் அருவமாயும் நித்தமாயும் உள்ள உடலுக்கும், சடமாயும் உருவமாயும் அநித்தமாயும் உள்ள உடலுக்கும் வினையானுய தொடர்பன்றி நட்பானுந் தொடர்பு கூடாமை தேற்றம்.

இனி, இக் குறளிற் போந்த குடம்பை என்பது கூடு எனவும் முட்டை யெனவும் பொருள்படும் பலபொருளொருசொல். 'குடம்பை முட்டையுங் கூடு மாகும்' என்பது பிங்கலம். இவ் விருபொருளும் ஈண்டைக்குப் பொருந்துவன வாதலால், ஒன்றைக் கொண்டு மற்றதை மறுப்பா ரிருவேறுதிறத்த ராயினர் ஆசிரியர்

கூடென்று கொண்டார் மணக்குடவர். முட்டையென்று கொண்டு மற்றதை மறுத்தார் ஆசிரியர் பரிமேலழகர். இவர் கூறும் மறுப்புரையாமாறு: 'குடம்பை யென்பதற்குக் கூடென்று உரைப் பாருமுளர். அது புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுத லுடைமையானும் உடம்பிற்கு உவமை யாகாமை யறிக'.

புள்ளுடன் தோன்றாமையின் குடம்பை கூடாகா தெனின், முட்டையி னீங்கிய பார்ப்புப் பறவாமையின் குடம்பை முட்டையு மாகாதாதல் வேண்டும். அல்லதூஉம், முட்டை உருச் சிதையாமல் பார்ப்பு அதனினீங்குமா றில்லை. யாக்கை உருச்சிதையாமல் உயிர் நீங்குமா றுண்டு. அது நீங்கிய பின்னர் யாக்கை சிதைவதே ஒருதலை. அதுவேயுமன்றி, யாக்கையைக் கூடென்பது மரபன்றி முட்டை யென்றல் மரபன்று. 'கூடுவிட்டிங் - காவிதான் போன பின்பு' என்ற செய்யுள் வழக்குங் காண்க. இதுவேயுமன்றி, இக் குறட்கருத்தை அடியொற்றி வரும்,

'கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரான் மாந்தர்கள் - வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து'

என்னும் நாலடியார் (௩௰) செய்யுளில் யாக்கைக் குவமையாயது கூடே யாதல் காண்க.

இவை ஒவ்வும்; கூட்டின் நீங்கிய புள் மீண்டு மதனிற் புகுதலுண் டாயவாறுபோல யாக்கையி னீங்கிய உயிர் மீண்டு மதனிற் புகுத லுண்டோ வெனின், பெரும்பான்மையில்லையேனும் சிறுபான்மை யுண்டென்பது, கணவனுயிர் மீட்ட சாவித்திரி சரிதையானும், 'மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்' என்னும் ஆன்றோர் உரையானும் பிறவாற்றானும் அறியக் கிடக்கின்றது. இறந்தாரை உயிர்ப்பித்த திருவிளையாடல்கள் நீங்கிய உயிர் மீண்டும் யாக்கையிற் புகுதலை உடன்பட்டார்க்கன்றி இல்லையாம். அது கூடாமற் போவதற்கு

முதன்மையாய் நின்ற காரணம் யாக்கை சிதைந்தொழிதலே யாதலும் உணர்க.

இவையாவும் ஒருபுறமிருக்க, என்பினை நரம்பிற் பின்னி யாக்கப்பட்ட யாக்கைக்கு, அவ் வகையே குச்சியுங் கோலுமிணைத்து நாரிற் பின்னி யாக்கப்பட்ட புட்கூடு உவமமாமன்றி, உறுப்புக் களான் யாக்கப்படாத முட்டை உவமமாதல் இல்லை. ஆகவே குடம்பைக்குக் கூடென்று பொருள் கோடலே சிறக்குமாறு காண்க. 'ஆசிரியர் புள் கூட்டில் மீண்டு புகுவதனை விலக்கவன்றே தனித்து ஒழிய என அக் கூட்டின் சிதைவு குறிப்பிட்டா ரென்க.

உயிர் உடம்பின் நீங்குவ தியல்பென்ற திது. (அ)

உயிர் உடம்பிற் புகுவது மியல்பென்பது வருங்குறள்:

௩௩௯. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(இ-ள்.) சாக்காடு - (ஒருவன்) சாதல், உறங்குவது போலும் - தூங்குவதை ஒக்கும்; பிறப்பு - பிறத்தல், உறங்கி - (முன்னே) தூங்கி, விழிப்பது போலும் - (பின்) விழிப் பதை ஒக்கும்.

(இ-து.) சாதலும் பிறத்தலும் உறங்குவதும் விழிப்பதும் போலும்.

சாக்காடு, பிறப்பு என்பன தொழிற்பெயர்.

தூங்குவதும் விழிப்பதும் உடம்பு நலம்பெறுதற்கு இன்றியமை யாதனவாய், இயல்பாகி, விரைந்து மாறி மாறி வருதல்போல, சாத லும் பிறத்தலும் உயிர் பாசக்கட்டகன்று பதியோ டொன்றி நலம் பெறுதற்கு இன்றியமையாதனவாய், இயல்பாகி, விரைந்து மாறி மாறி வருமென்பது கருத்து. 'பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்த லும் - உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்' (மணி மேகலை காதை ௬௬ வரி ௮௬) என்றார் சாத்தனாரும். தோன்றிய யாவும் அழிவன வாதலின் பிறந்தன யாவும் இறப்பனவே யாமென

நிலையாமை யாக்கைக்கு இயற்கை யாயினவாறு புலப்படுத்துவார் பிறப்பும் உடன்கூறினர்.

யாக்கையில் உயிர் நிலையாய் நிற்பதில்லை யென்றதிது. (௯)

நிலையாய் நிற்பதற் குரியவிடம் வேறுண்டோ என்னும் வினவை யெழுப்பி வருமதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்வது வருங் குறள்:

௩௪௦. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
துச்சி லிருந்த வுயிர்க்கு.

(இ - ள்.) உடம்பினுள் - (பலவகையான) உடம்பு களுள், துச்சில் இருந்த - ஒதுக்குக் குடியிருந்தே (காலத்தைக் கழித்து வரும்), உயிர்க்கு - உயிர்கட்கு, புக்கில் - புகுந்து (நிலைத்திருக்கத் தக்கதொரு) வீடு, அமைந்தின்று கொல்லோ - அமைந்தில்லையோ ? (உண்டு).

(இ - து.) உயிருக்கு நிலையிடம உடம்பன்று ; வீடே.

பிறவிதோறும் யாக்கை மாறி மாறி வருதலின், அவை உயிருக்கு நிலையான இடமாகாது சிறிதுபொழுது தங்கியிருப்பதற்கான ஒதுக்கிடமாயின. தாம் தங்கும் ஒதுக்கிடத்தைத் தமக்குரிய நிலையிடமாகக் கருதியிருப்பார் வேறு நிலையான இடந்தேடாது நிலையில்லா அவ் வொதுக்கிடைத்தையே பற்றி யிருப்பாராகலின், அவர்க்கு அதன் நிலையாமை அறிவுறுத்து வேறு நிலையான இடந் தேடிப் புகுமாறு கூறியதிது. இது கூறவே அவருக்குத் தம் யாக்கையின் மாட்டும் அதனைச் சார்ந்த புறப்பொருள்கண் மாட்டும் இருந்த பற்று விட்டுத் துறவுள்ளம் பிறக்கு மாதலின், வருமதிகாரந் துறவெனத் தோற்றுவாய் செய்த தாயிற்று. (௧௦)

இவ் வதிகாரத்தில், முதற்குறளால் நிலையாமை பொதுவகை யானும், அடுத்த இரண்டு குறள்களால் செல்வ நிலையாமையும் எஞ்சிய எழுகுறள்களால் யாக்கை நிலையாமையும் சிறப்பு வகையானும் கூறப்பட்டன.

---

## ௩௫. துறவு

அஃதாவது புறமாகிய செல்வத்தின்கண்ணும், அகமாகிய யாக்கையின் கண்ணும உளதாகிய பற்றினை விடுதல். செல்வம் யாக்கை என்னும் அவற்றின் நிலையாமை உணர்ந்தன்றி இஃது ஆகாதாகலின், நிலையாமை கூறி இது கூறுகின்றார். எனவே அதிகார இயைபு பெறப்பட்டது.

இவ்வதிகாரத்தில் எனதென்னும் புறப்பற்றை விடுதலும், யான் என்னும் அகப்பற்றை விடுதலும் அவ் விருவகைப்பற்றையும் விடுதலானும் நன்மையும், விடாமையாலாந் தீமையும், விட்டார் சிறப்பும் விடாதார் இழிவும், விடுதற்கு உபாயமும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் எனதென்னும் புறப்பற்றை விடுமாறு கூறுகின்றார்:

௩௪௧. யாதனின் யாதனி னீங்கியா னோதல்
லதனி னதனி னிலன்.

(இ - ள்.) (ஒருவன்) யாதனின் யாதனின் - யாதொரு பொருளினின்றும் யாதொரு பொருளினின்றும், நீங்கியான் - நீங்கியவனானவன் ; (அவன்) அதனின் அதனின் - அப் பொருளினால் அப்பொருளினால், நோதல் இலன் - துன்பமுறுதல் இல்லாதவனாவான்.

(இ - து.) ஒருவன் எவ்வெப்பொருளிற் பற்றை விடுகிறானோ அவ்வப்பொருளால் அவனுக்குத் துன்பமில்லையாம்.

விட்ட அளவில் துன்பம் குறையு மெனவே, முற்றும் விட்டால் துன்பம் சிறிதும் இல்லையாம் என்பது பெறப்படும். யாதனின் யாதனின் எனவும் அதனின் அதனின் எனவும் வந்த அடுக்குகள் பன்மை குறித்தன. ஒன்றின் நீங்குதலாவது அதனிற் பற்றுவிடுதல்.

'ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பம் - காத்தல்
குறைபடிற் றுன்பம் கெடிற்றுன்பந் துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்' (நாலடி—உஅ0)

என்பதாகலான் பொருளான் நோதல் உளதாயிற்று. நீங்கிய அளவாகத் துன்பமில்லை யெனவே, முற்றும் விடுதற் கேலாவிடிற் சிறிது சிறிதாக விடுக என்றதாயிற்று.

துறத்தலால் துன்ப மகலு மென்ற திது. (க).

துறத்தலால் இன்ப மெய்து மென்பது வருங்குறள் :

௩௪௨. வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

(இ - ள்.) (ஒருவன்) துறந்தபின் - (எல்லாப் பொருள் களையும்) துறந்தால், ஈண்டு - இம்மையிற்றானே, இயற்பால - உண்டாகத்தக்க (இன்பங்கள்), பல - பலவாம் ; உண்டாக வேண்டின் - (அவை) உண்டாகவேண்டுமானால், துறக்க - (உடனே) துறக்கக் கடவன்.

(இ - து.) இன்பங்களை வேண்டுவான் காலநீட்டியாமல் பொருட் பற்றை விடல் வேண்டும்.

இன்பங்கள் என்பதும் உடனே என்பதும் வருவித் துரைக்கப் பட்டன. யாக்கை நிலையாமை அறிந்தா னாகையால், விரைந்து துறக்க என்பார் 'துறக்க' என்றார். துறவியர் இம்மைக்கண் அடையலான இன்பங்கள் பொருள் காரணமாக மனமொழிமெய்கள் அலையாது நிற்றலானும் அவை நன்னெறிககட் செல்லுதலானும் வருவன.

இம்மையின்பம் வேண்டுவார் செயற்பாலது கூறிய திது. (உ)

வீட்டின்பம் வேண்டுவார் செயற்பாலது கூறுவது வருங்குறள் :

௩௪௩. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

(இ - ள்.) (வீட்டை விரும்புவார்க்கு) ஐந்தன் - (செவி முதலிய) ஐம்பொறிகளுக்கும் உரியவாய, புலத்தை - (ஓசை முதலிய) ஐம்புலன்களையும், அடல்வேண்டும்-(நுகராது) கெடுத்தல் வேண்டும்; (கெடுக்கும்போது) வேண்டிய எல்லாம் - (அப்புலன்களை நுகர்தற்குத் தாம்) படைத்த பொருள்களை யெல்லாம், ஒருங்கு - ஒருமிக்க, விடல் வேண்டும் - விடுதல் வேண்டும்.

(இ - து.) வீட்டின்பம் வேண்டுவோர் புலன்களை அடக்கிப் பொருட் பற்றையும் அறவிடுதல் வேண்டும்.

புலம் என்றது அவற்றை நுகர்தலை. பொருள்கண்மேற் செல்லும் பற்று ஐம்புல நுகர்ச்சி காரணமாக எழுவதொன் றாதலால், அவ் வைம்புலன்களையும் எழவொட்டாது அடக்கினால், வேறாய்ப் பலவாய் விரிந்து கிடக்கும் பொருள்களின்மீது செல்லும் பற்று முற்றும் எஞ்சா தொழியுமாதலின், 'அடல்வேண்டு மைந்தன் புலத்தை' என்றார். மேற்குறள் இம்மையின்பம் வேண்டினாரை நோக்கியதாகலின், இது மறுமையின்பம் வேண்டுவாரைக் குறித்த தாயிற்று. வீட்டின்பம் ஞான ஏதுவாகப் பெறப்படுவதொன் றாத லால், இம்மையின்பம் வேண்டினாரைப் பற்றாகிய காரியத்தை அழிக்கக் கூறி, வீட்டின்பம் வேணடினாரை, அதனோடு புலனாகிய காரணத்தையும் அழிகக்க் கூறிய தகுதி கண்டுகொள்க.

வீடு வேண்டித் தவஞ் செய்வார் புலன்களால் நுகரப்படும் பொருள்களை முற்றத் துறக்கவேண்டுமென்ற திக் குறள். (௩)

அதுவே தவத்தின ரியல்பு என்பது வருங்குறள்:

௩௪௪. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) நோன்பிற்கு - தவஞ் செய்வார்க்கு, ஒன்று - (பற்றப்படுவது) ஒரு பொருளும், இன்மை - இல்லாதிருத்தல், இயல்பாகும் - இயல்பாம்; (அஃதன்றிப் பற்றப்படு

வது ஒரு பொருளேனும்) உடைமை - உடைத்தாயிருத்தல், பெயர்த்தும் - மீண்டும், மயலாகும் - (தவத்தைப் போக்குதற்கான) மயக்கத்துக்கு ஏதுவாகும்.

(இ - து) தவஞ் செய்வார்க்கு ஒரு பொருளினும் பற்றுக் கூடாது.

ஒன்றும் எனற்பாலது இழிவுசிறப்பும்மை தொக்கு ஒன்று என நின்றது. நோன்பு உடையாரை நோன்பு எனறதும், மயற்காரணத்தை மயல் என்றதும், ஆகுபெயர். மற்று - அசை. உம்மை அதனிற்பிரித்துப் 'பெயர்தது' என்பதனோடு கூட்டப்பட்டது.

மேல, 'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி - வலைப் பட்டார் மற்றை யவர்' (குறள்—௩௪௮) என்பாராதலின் துறவு பூண்டார் பிறவி வலையினின்று மீண்டார் எனப்படுவர். அவர் எல்லாப் பொருள்களையும்விட்டு ஒரு பொருளைமட்டும் விடாராயினும், அப் பொருள் சார்பாக விட்டன வெல்லாம் மீண்டுவந்து அவர் தப்பிவந்த வலையில அவரை மீண்டும் புகுத்தும் என்பார் 'மயலாகும் மற்றும் பெயர்த்து' என்றார்.

இவை நான்குபாட்டானும் என தென்னும் புறப்பற்றை விடுதல் கூறப்பட்டது. (௪)

யான் என்னும் அகப்பற்றை விடுதல் கூறுவது வருங் குறள்:

௩௪௫. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

(இ - ள்.) பிறப்பறுக்கலுற்றார்க்கு - பிறப்பறுத்தலை மேற்கொண்டார்க்கு, உடம்புமிகை - (அதற்குக் கருவியாகிய) உடம்பும் மிகையாம்; (ஆகவே) மற்றுந் தொடர்ப்பாடு- (உடம்புத்துணைத்தொடர்புமில்லா) வேறு சிலவற்றின் தொடர்பு (உளதாதல்); எவன் - யாதாம்?

(இ. - து.) வீடுபெற விரும்புவார்க்கு உடம்பும் உயிர்ச் சுமையாம்.

உடம்பு மிகையென் றுணர்ந்தார்க்கன்றி அவ் வுடம்பைத் தானாகவும் தனதாகவும் கருதிப் பற்றுவைத் தொழுகுதல் ஒழியா தாகலின் 'உடம்பு மிகை' என்றார். எனவே அதன்பாற் பற்றொழிக என்றதாயிற்று. உடம்பென்றது உருவுடம்பையேயன்றி அருவுடம்பையும் குறிக்கும். அருவுடம்பு நுண்ணுடம்பு சூக்கும சரீரம் மானசிக சரீரம் என்பன ஒருபொருளன.

புறப்பற்றே யன்றி அகப்பற்றையும் விடுதல் கூறிய திது. (ரு)

இருவகைப் பற்றையும் விட்டார் எய்தும் பயன் கூறுவது வருங் குறள்:

௩௪௬. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(இ - ள்.) யான் எனது என்னும் - (தானல்லாத உடம்பை) யான் என்றும் (தன்னோடு தொடர்பில்லாத பொருளை) எனது என்றும் கருதும், செருக்கு (பற்றுச் செய்வதற்குக் காரணமான) மயக்கத்தை, அறுப்பான் - கெடுப்பவன், வானோர்க்கு - தேவர்க்கும் (எய்தற்கரிதாய்), உயர்ந்த உலகம் புகும் - உயர்ந்த வீட்டுலகத்தை அடைவான்.

(இ - து.) யானெனதென்னும் இருவகைப் பற்றையும் விட்டவன் வீடுபெறுவான்.

செருக்கு - மயக்கம் - அறியாமை. செருக்கறுத்தல் ஆசிரியர் கடைக்கணிப்பினாலும் தவமுயற்சியானும் யோகப் பயிற்சியானும் எய்தும் ஞானத்தாலாம். வானோர்க்கும் எனற்பாலது சிறப்பும்மை தொக்கு நின்றது.

பற்றறுத்தா ரெய்துவது கூறிய திக் குறள். (௬)

பற்றறாதார் எய்துவது கூறுவது வருங்குறள்:

௩௪௭. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

(இ - ள்.) பற்றினை - (இருவகைப்) பற்றுக்களையும், பற்றி - (இறுகப்) பற்றிக்கொண்டு, விடாதவர்க்கு - விடாதிருப்பவரை, இடும்பைகள் - (பிறவித்) துன்பங்கள், பற்றி விடா - (இறுகப்)பற்றி விடாவாம்.

(இ - து.) யானெனதென்னும இருவகைப் பற்றுக்களையும் விடாதவரைத் துன்பங்கள் விடாமற் பற்றிக்கொள்ளும்.

இறுகப் பற்றுதல் - பற்று மிகுதல். விடாதவரை என்னும் பொருளது விடாதவர்க்கு என நின்றது வேற்றுமை மயக்கம்.

பற்றுறாமையின் பயன் கூறிய திது. (எ)

பற்றறுதல் பற்றறாமை இரண்டின் பயனையும் ஒருங்கு கூறுவன வரும் இரு குறள்கள்:

௩௪௮. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ - ள்.) தீரத் துறந்தார் - (பற்றுக்களை) முற்றத் துறந்தவர்கள், தலைப்பட்டார் - (வீட்டினை) அடைந்தவர்; மற்றையவர் - அங்ஙனந் துறவாதவர், மயங்கி—, வலைப் பட்டார்-பிறவிவலையிற் பட்டாராவர்.

(இ - து.) தீரத் துறந்தார் வீடுபெறுவர்; மற்றவர் பிறவி வலையுட் படுவர்.

'வாராக் காலத்து வினைச்சொற் கிளவி - யிறப்பினு நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்று - மியற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' (**தொல்காப்பியம் - வினையியல் - ௪௪**) என்பவாதலான், ஈண்டுத் தெளிவு பற்றித் 'தலைப்பட்டார்' என வாராக் காலத்து வினைச்சொற்கிளவி இறந்த காலத்தாற் கூறப்பட்டது. பிறப்புகளுக் காரணம் அறியாமையாகிய மயக்கமாதலின் 'மயங்கி' என்றார்.

துறந்தார் வீடுபெறுவார், ஏனையார் பிறவிவலையிற் படுவ ரென்றதிக் குறள். (அ)

அதைக் காரணங் காட்டி விளக்குவது வருங்குறள்:

௩௪௯. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

(இ - ள்.) பற்று அற்றகண்ணே - (ஒருவன்) பற்றுக்கள் அற்றபொழுதே, (அப் பற்றறுதி), பிறப்பு அறுக்கும் - (அவன்) பிறப்பை அறுக்கும்; மற்று - அப் பற்றுக்கள் அறாதபொழுது, நிலையாமை காணப்படும் - (அப் பற்றுக்களாற் பிறந்திறந்து வருகிற) நிலையாமையே (பயனாகக்) காணப்படும்.

(இ - து.) பிறப்புக்குக் காரணம் பற்றாதலால், பற்றைவிட்டவர் பிறவிவலையிற் படார்; ஏனையோர் படுவர்.

பிறப்புக்குக் காரணம பற்று; பற்றின் காரியம் பிறப்பு. காரணம் அற்றாற் காரியமும் அதனுடன் அறுவது முறையாதலால், காரணமாகிய பற்றை யறுத்தவன் காரியமாகிய பிறப்பையும் அறுத்தவனாகி அவ்வாற்றாற் பிறவியினின்று வீடு பெறுவானும் என்பார் ' பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் ' என்றார். எனவே, மேற் குறளிற் கூறிய ' தலைப்பட்டார் தீரத் துறந்தார் ' என்று தெளிவுபெறக் கூறியதனை ஈண்டுக் காரணங்காட்டி விளக்கினா ராயிற்று.

பற்று என்னும் காரணம் அறாத பொழுது, பிறவி என்னும் காரியமும் அறுமாறில்லையாதலாலும், அப் பிறவி நிலையாதாதல் தெளியப் பட்டதாதலாலும், நிலையாதான பிறவிவலையிற் படுவர் பற்றறாதார் என்பார் ' மற்று நிலையாமை காணப்படும் ' என்றார். எனவே, மேற் குறளில் 'மயங்கி வலைப்பட்டார் மற்றையவர் ' என்றதையும் காரணம் காட்டி விளக்கினா ராயிற்று.

இவை யிரண்டுபாட்டானும், பற்றற்றவர் வீடுபெறுவ ரென்பதும் பற்றறாதவர் பிறவிவலையிற் படுவரென்பதும் சேர்த்துக் கூறப்பட்டன. (௯)

பற்றறுமாறு கூறுவது வருங்குறள்:

௩௫0. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(இ - ள்.) பற்றற்றான் பற்றினை - கடவுளடியாகிய புணையை, பற்றுக - விடாது பற்றுக; அப் பற்றை - அப் புணையை, பற்று விடற்கு - (வேறு பயனைக் கருதாது) பற்று அறுதல் வேண்டி, பற்றுக - பற்றக்கடவை.

(இ - து.) பற்றறவேண்டி இறைவனடியைப் பற்றினாற் பற்றறும்.

பற்றினை என்பதினும் அப்பற்றை என்பதினும் பற்று என்பது பற்றப்படுவதாகிய புணையை உணர்த்தி நின்றது. பற்றற்றான் பற்று எனத் தொகையுருவகமாய், பற்றற்றானாகிய பற்று என விரியும்.

இறைவன் இயல்பாகவே பாசங்களி னீங்கியோனாதலால் 'பற்றற்றான்' என்றார். கடவுள்வாழ்த்திற் போலவே ஈண்டும் பொதுவகையால் இறைவனைச் சுட்டுதல் குறிக்கொளற்பாற்று. 'அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் - பிறவாழி நீந்த லரிது' (அ) எனவும், 'பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார் - இறைவ னடிசேரா தார்' (௧0) எனவும் ஆசிரியர் முற்கூறியதற் கேற்ப ஈண்டுப் 'பற்றற்றான் பற்றினை' என்பதற்கு இறைவன் திருவடியாகிய புணையை எனப் பொருள் கூறப்பட்டது. வானோர் சிறப்பும் இம்மை நலமும் வேண்டி இறைவனடியைப் பற்றுதல் பிறவிக்கேதுவாமாகலின், வீடு வேண்டிப் பற்றுக என்பார் 'அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்றார். கடவுள்வாழ்த்தில் இவ்வாறெனை விதவாது பொதுவாக 'இறைவனடியைப் பற்றுக' என்றார், அது பாயிரமாதலான், இல்லறந் துறவறம் இரண்டிற்கும் பொதுவினிற்றல் வேண்டி. ஈண்டுத் துறவறத்திற் காவ திஃதென்பார், பொதுவகையான் முற்கூறிப் பின் 'அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என விதந்து கூறினார்.

பற்றுவிடப் பற்றுமாறு தியான சமாதிகளானும்.

குருடனுக்குக் குருடன் வழிகாட்டுமாறில்லையாதலின், பற்றற வேண்டிற் பற்றற்றானைப் பற்றுக என்றார். பற்றற வேண்டினமையின் உயிர்கள் அநாதியே பற்றுடையனவாதல் பெறப்பட்டது. இறைவன் அநாதியே பற்றற்றவனாதலும் பாயிரத்தே பெறப்பட்டது. உயிரைப் பற்றிய பற்று இறைவனைப் பற்றவே அறுமென்பது ஈண்டுப் பெறப்பட்டது.

'பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாச மநாதி ;
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாச நிலாவே'

என்ற திருமந்திரத் திருவாக்கு ஈண்டு நோக்கற்பாலது. (௩௦)

இவ் வதிகாரத்தில், முதல் நான்கு குறள்களால், புறப்பற்றைத் துறத்தலும், அடுத்த குறளால் அகப்பற்றைத் துறத்தலும், அடுத்த குறளால் இருவகைப் பற்றையும் துறந்தாருறும் நன்மையும், அடுத்த குறளால் அவற்றைத் துறவாருறும் தீமையும், அடுத்த இருகுறளால் அவ் விருதிறத்தார் உறும் இருதிறப் பயனும் இறுதிக் குறளால் துறக்குமாறும் கூறப்பட்டன.

---

## ௩௬ மெய்யுணர்தல்

அஃதாவது உண்மை யறிதல். உண்மையும் பொருளும் ஒரு பொருளனவாதல் முன்னே கூறப்பட்டது. (குறள் - ரு). ஈண்டு அறிதல் மனத்தான் அறிதல்; பொறியானறித லன்று. இக் கருத்தானே ஆசிரியர் மேல் 'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே-மெய்யுணர் வில்லா தவர்க்கு' (௩௫௪) என்றதுங் காண்க. பொய்யும் மெய்யும் பகுத்தறிய வல்லது இம்மன உணர்வே. பொறியுணர்வால் உணரப்பட்ட உலகமும், பொறியுணர்வால் உணரப்படாது மனவுணர்வால் உணரப்படும் இறைவனும், பொறியுணர்வும் மனவுணர்வுங் கொண்டு உலகையும் இறைவனையும் உணரும் உயிருமாய இம் மூன்றையன்றி அறியலான பொருள் வேறில்லை யன்றே? இம் முப்பொரு ளுண்மையினை மனவுணர்வான் உணர்தலே ஈண்டு மெய் யுணர்த லெனப்பட்டது. இதனை வடநூலார் தத்துவ ஞான மென்ப. பொறியின் வேறாக மனவுணர்வென்பதுதான் யாதோ வெனின், ஓரறிவு முதலாக ஆறறிவி றுதியாக உடைய உயிர்களை அவைகொண்ட அறிவுபற்றிப் பகுத்தோதும் **தொல்காப்பிய மரபியல் (உஏ)** சூத்திர உரைக்கண்ணே **பேராசிரியர்** 'ஐயுணர்வின்றிக் கனாப்போலத் தானே உணர்வது மனவுணர்வெனப்படும்' எனக் கூறுமாற்றான் அது பெறப்படும். அவ் வுரை காண்க.

உண்மை முப்பொருளும் என்பாரும், இரண்டென்பாரும், ஒன்றென்பாரும், மூன்றெனவும் இரண்டெனவும் ஒன்றெனவும் ஆகியும் ஆகாதும் நிற்கும் ஒன்றென்பாருமாகப் பல்வேறு திறத்தினர் நூலோர். ஆசிரியர் யாண்டும் யாவர்க்கும் பொதுப்படக் கூறுமாறே ஈண்டும் அப் பலதிறத்தார்க்கும் வேறுபடநின்ற மெய்யைக் கூறாது பொதுப்பட்ட மெய்யுணர்தலையே கூறுவாராயினர்.

உலகைப் பற்றிக் கண்டது நிலையாமையாயிற்று. அதனான் உண்மை உணரப்படாமையும் தெளியப்பட்டது. ஆகவே, உணரப்

படும் உண்மை, உலகைவிட்டு இறைவனைப்பற்றி உணரப்பட வேண்டிய தாயிற்று. ஆதலால், உலகை விடுமாறு கூறி, இறைவனைப் பற்றுமாறும் கூறி இம்மெய்யுணர்தல் கூறினார். எனவே அதிகார இயைபு பெறப்பட்டது காண்க.

இனி இவ் வதிகாரத்தில், மெய்யுணர்தற்கான காரணமும், மெய்யுணர்தலின் சிறப்பும் மெய்யுணர்தலின் இலக்கணமும், மெய்யுணர்தற்கருவியும், மெய்யுணர்தலின் பயனும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் மெய்யுணர்தற்கான காரணங் கூறுகின்றார்.

௩௫௧. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு.

(இ - ள்.) பொருள் அல்லவற்றை - உண்மையல்லாதவற்றை, பொருள் என்று - உண்மை என்று, உணரும் - கருதுகின்ற, மருளான் - மயக்க உணர்ச்சியால், மாணாப் பிறப்பு - (இன்ப) மாட்சியில்லாத பிறவி, ஆம் - உண்டாம்.

(இ - து.) உண்மை யல்லவற்றை உண்மையென்றுணர்தலால் பிறவித் துன்பம் உண்டாம்.

இல்லதை உள்ளதென்று கருதுவது மயக்கத்தாலாம் உணர்ச்சியாகலின் 'பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும் மருள்' என்றார். 'உணரும்' என்னும் பெயரெச்சங் காரியப் பொருட்டு.

மெய்யுணராமை பிறப்பிற் கேதுவா மென்றது இக் குறள். (க)
மெய்யுணர்தல் வீட்டிற் கேதுவா மென்பது வருங்குறள்.

௩௫௨. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(இ - ள்.) மருள் நீங்கி - மயக்கத்தின் நீங்கி, மாசறு - குற்றமில்லாத, காட்சியவர்க்கு - (மெய்) உணர்வுடையார்க்கு, (அம் மெய்யுணர்வு) இருள் நீங்கி - (ஆணவ)

இருளை நீக்கி, இன்பம் பயக்கும் - வீட்டின்பத்தை உண்டாக்கும்.

(இ - து.) மெய்யுணர்தல் வீட்டின்பத்தைத் தரும்.

நீக்கி எனற்பாலது நீங்கி என எதுகை நோக்கித் திரிந்தது; நீங்க என்னும் செயவெனெச்சம் நீங்கி என்னும் செய்தெனெச்சமாகத் திரிந்தது எனினும் அமையும். மாசறு காட்சி என்றது மெய்யுணர்வை.

மெய்யுணராவழித் துன்பமும் மெய்யுணர்ந்தவழி இன்பமும் ஆதலின், இவை யிரண்டு பாட்டும் மெய்யுணர்தற்குக் காரணம் கூறிய வாயின. (உ)

மெய்யுணர்தலின் சிறப்புக் கூறுவன வருமிருகுறள்கள்:

௩௫௩. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

(இ - ள்.) ஐயத்தின் நீங்கி - மயக்க உணர்ச்சி நீங்கி, தெளிந்தார்க்கு - மெய்யுணர் வெய்தினார்க்கு, வையத்தின் - (தாம் எய்திநின்ற) நிலவுலகத்தினும், வானம் - (எய்தக் கடவதாய் நின்ற) வீட்டுலகம், நணியது உடைத்து - அருகாதல் உடையது.

(இ - து.) மெய்யுணர்தல் சேய்த்தாய வீட்டுலகத்தை அணித்தாய நிலவுலகத்தினும் அணியதாகச் செய்யும்.

மெய்யுணர்விற் பழகப் பழக, உலகிய லுணர்வு கெட்டு வருமாதலின், உலகம் சேய்த்தாக வீடு அணித் தாயிற்று. ஐயமெல்லாம் மயக்க உணர்ச்சியானு மாகலினானும், மயக்கஉணர்ச்சி மெய்யுணர்வில்வழி உளதாவதாகலானும், மயக்கஉணர்ச்சி யில்வழி உளதாவது மெய்யுணர் வாகலானும், அம் மெய்யுணர்வு தெளியப்படுதலானும், 'ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு' என்றார்.

மெய்யுணர்ந்தார் வீட்டுலகத்தை அடைந்தவராவர் என்றதிக் குறள். (௩)

மெய்யுணராவழி அறிவிருந்தும் பயனில்லை யென்பது வருங் குறள்:

௩டுச. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(இ - ள்.) ஐ உணர்வு - (மனத்தோடு கூடிய) ஐம்புல அறிவை, எய்தியக்கண்ணும் - அடைந்த பொழுதும், மெய் உணர்வு இல்லாதவர்க்கு - உண்மை யறிதல் இல்லாதவர்க்கு, பயம் இன்றே - (அவ்வறிவா லாம்) பயன் இல்லை.

(இ - து.) மெய்யுணராவிட்டால் அறிவிருந்தும் பயன் இல்லை.

விலங்கொடு மக்கட்கு ஒப்ப உள்ளது ஐம்புல உணர்ச்சி. விலங்கின் மக்கட்கு ஏற்றமா யுள்ளது, ஐம்புலன்களால் உணரப்பட்டவற்றுள் மெய்யும் பொய்யும் பகுத்தறியவல்ல மன உணர்ச்சி. ஆகவே, மெய்யறிதலில்லாவழி மன உணர்ச்சி இருந்தும் இல்லையேயாம். அஃதில்லையாகவே, அதற்கு உபகாரப்படுதல் நோக்கி நின்ற ஐம்புல அறிவு பயன்படுமாறில்லை. ஆதலால், 'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பய மின்றே' என்றார். ஐயுணர் வெய்தியும் பயனின் றெனவே, ஐயுணர்வடக்கியும் பயனின்றாம் மெய்யுணராவழி என்பது தானே பெறப்படும். ஆகவே, புலன்களை யடக்கி அவற்றால் அறியப்படுவன வெல்லாம் அறிந்தாலும் மெய்யுணர்ச்சி யின்றேற் பயனின்று மென்பதாயிற்று.

இவை யிரண்டு பாட்டாலும் மெய்யுணர்தலின் சிறப்புக் கூறப்பட்டது. (ச)

மெய்யுணர்தலின் இலக்கணங் கூறுவது வருங்குறள்:

௩டுரு. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) எப்பொருள் - யாதொரு பொருள், எத்தன்மைத்தாயினும் - (தோற்றத்தில்) யாதோர் இயல்பினை

தானாலும், (அத் தோற்றத்தையே பொருள் எனக் கருதி யொழியாது), அப் பொருள் - (பொய்யாகிய தோற்றமும் மெய்யாகிய பொருளும் கூடிநின்ற) அந்தப்பொருளி னின்று, மெய்ப்பொருள் - மெய்யாகிய பொருளை, காண்பது அறிவு - உணர்வதே (ஐம்புலன்களோடு கூடி மக்கட்குச் சிறப்பாய் நின்ற மன) அறிவாம்.

(இ - து.) உண்மையுந் தோற்றமும் பகுத்துத் தோற்றத்தைத் தள்ளி உண்மையைக் கொள்வதே மன அறிவு.

தோற்றத்தை நீக்கி உண்மையை உணர்தலாவது, விரிநெடுங் கருங் குழல் நெருங்குறப் பின்னி, அக் குழ லணிபெற நறு மலர் சூடி, கண்கவர் வனப்பிற் பொன்னிற வடிவம் நன்னிறப் பட்டின் நலம்பெற யாத்து, நஞ்சொடு பயில்விழிக் கஞ்சனந் தீட்டி, ஒளிவிடு முகத்திற் கிருள்கடி விளக்கென இருசெவிப் புறத்தும் திருமணி மிடற்றும் நுண்ணிடை வருந்தவும் மெல்லடி புலம்பவும் இருகாங் குலுங்கவும் தோடு மாரமும் துடியிடை யணியும் சிலம்பும் வளையு மாய்ச் செம்பொ னழுத்திய மணிக்கலன் பலபல மனமருள் திறத்திற் பூண்டொரு பெண்மகள் தோன்றின், அத் தோற்றம், 'பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத தியாத்துத் - தூசினு மணி யினுந் தொல்லோர் வகுத்த - வஞ்சகம்' என்று தெரிந்து, மாயை யின் விளைவாய் ஓர் உயிர்க்குச் சிறிது காலம் உறைவிடமாய் அதனாற் றொழிற்பட இறைவனாற் கூட்டுவிக்கப்பட்ட ஐம்பூதச் சேர்க்கையே ஆடையணிகளோடு கூடிய ஒரு பெண்மகள் என நின்றவாறு அறிதல். அறியவே, உள்பொருளாய் நின்றவை மாயையும் உயிரும் இறைவனுமன்றிப் பிறிதில்லை என்பது தெளியப்படும். அது தெளியப் பெண்ணெனப் பேரும் உருவும் கொண்டு நின்ற தோற்றம் நிலையன்றென்பதும் தெளியப்படும். அது தெளிய அவ் வுருவின்கட் செல்லும் அவாவும் அறும். ஆகவே, துறவறத்தின் முடிவறமாகி நின்ற அவாவறுத்தற்குக் கருவியாயிற்று மெய்யுணர்வு.

அம் மெய்யுணர்வின் இலக்கணங் கூறிய திக் குறள். (௫)

மெய்யுணர்வு பெறுமாறு கூறுவன வருமுக் குறள்கள்:

௩௫௬. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

(இ - ள்.) கற்று - (மெய்யுணருமாற்றை ஆசிரியர் பாற்) கற்று, ஈண்டு - உயர்ந்த, மெய்ப்பொருள் கண்டார் - மெய்யாகிய பொருளை உணர்ந்தவர், மற்று ஈண்டு - மீண்டும் இந் நிலவுலகில், வாரா நெறி - பிறவாத நெறியை, தலைப் படுவர் - எய்துவர்.

(இ - து.) பிறவியறுதற் கேதுவான மெய்ப் பொருளுணர்ச்சி ஆசிரியரை வழிபட்டுக் கற்றலாலும்.

'கற்று' என்றதனால் ஆசிரியர் வாயிலாக மெய்யுணரக் கற்றல் பெறப்பட்டது. ஈணடு - உயர்ந்த; இஃது இப் பொருட்டாதல் மேல் (௨௩ - குறளுரையில்) உரைத்தாம். ஆண்டுக் கூறிய வெல்லாம் ஈண்டொவ்வும். வீடுபேற்றிற்குக் காரணமாய மெய்யுணருமாறு மூன்று: அவை, கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்பன. இவை கேள்வி விமரிசம் பாவனை எனவும்படும்.

அவற்றுள், கேட்டல் கூறிய திக் குறள். (௬)

சிந்தித்தல் கூறுவது வருங்குறள் :

௩௫௭. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ - ள்.) (ஆசிரியர்பாற் கற்ற,) உள்ளது - மெய்ப் பொருளை, உள்ளம் - (ஒருவனது) உள்ளம், ஒருதலையாக - ஒருமுகப்பட்டு, ஓர்த்து - (நூலானும் கருதலானும்) ஆராய்ந்து, உணரின் - உணருமாயின், (அவனுக்கு) பிறப்பு - பிறவி, பேர்த்து - மீண்டும் (உள்ளதாக), உள்ள வேண்டா - நினைக்கவேண்டா.

(இ - து.) கேட்ட மெய்ப் பொருளைச் சிந்திக்க மெய்யுணர் வுண்டாகிப் பிறப்பறும்.

'உள்ளது உள்ளம் ஒருதலையா ஓர்த்துணரின்' என இயையும். ஒருதலையா ஆராய்தலாவது மனங்குவிந்து ஆராய்தல்.

சிந்தித்தல் கூறிய திக் குறள். (எ)

தெளிதல் கூறுவது வருங்குறள்:

௩௫௮. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) பிறப்பு என்னும் பேதைமை - பிறப்பிற்கு முதற்காரணமான அறியாமை, நீங்க - கெட்டொழிய, சிறப்பு என்னும் - வீட்டிற்கு நிமித்த காரணமான, செம்பொருள் - செவ்விய பொருளை, காண்பது - (உள்ளத்தில் தெளிய) உணர்வதே, அறிவு - மெய்யுணர்வாம்.

(இ - து.) ஆசிரியர்பாற் கேட்டு உள்ளத்தில் ஆராய்ந்த மெய்ப்பொருளின் உண்மையைத் தெளிய உணர்தலே பிறவியைக் கெடுத்து வீட்டைத் தரவல்ல மெய்யுணர்வாம்.

பிறப்புக்கு முதற்காரணமான பேதைமையினையும், வீட்டுக்கு நிமித்த காரணமான செம்பொருளையும், 'பிறப்பென்னும் பேதைமை' எனவும், 'சிறப்பென்னும் செம்பொருள்' எனவும் காரியம் போலக் கூறியது உபசார வழக்கு. சிறப்பு - பெருமை; எல்லாப் பொருளினும் சிறந்ததாதலால் வீடு சிறப்பெனப்பட்டது. செம்மையாகிய எண்குணங்களோடு உள்ளதாகிய கடவுளைச் செம்பொருள் என்றார். அதனைக் காண்கையாவது, உயிர் தன் அறியாமை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல். இதனைச் சமாதி யெனவும் சுக்கிலத் தியானமெனவுங் கூறுவர்.

இவை மூன்று பாட்டானும் மெய்யுணருமாறு கூறப்பட்டது. (அ)

மெய்யுணர்தலானும் பயன் கூறுவன வருமிரு குறள்கள்:

௩௫௯. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

(இ - ள்.) சார்பு - (ஒருவன், தனக்குப்) பற்றுவதான செம்பொருளை, உணர்ந்து - (உள்ளவாறு) அறிந்து, சார்பு கெட - (தான் கொண்டிருந்த இருவகைப்) பற்றுக்களும் (தலைகாட்டாது) கெட்டொழிய, ஒழுகின் - (செம்பொருளைப் பற்றி) ஒழுகவல்லனாயின், சார்தரும் - (முன் அவனை) அடைதற்குரியனவாய் நின்ற, நோய் - துன்பங்கள், அழித்து - (சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகிய அவ்வொழுக்கத்தை) அழித்து, மற்று - மீண்டும், சார்தரா - (தன்னை) அடைய மாட்டாவாம்.

(இ - து.) மெய்யுணர்ந்து பற்றற ஒழுகுபவனைத் துன்பங்கள் சாரமாட்டா.

சாரப்படுவதாகிய செம்பொருளையும், சார்வனவாகிய இருவகைப் பற்றுக்களையும் சார்பு என்றது ஆகுபெயரால். துன்பங்களாவன ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் நுகர்ந்தன போக எஞ்சி நின்றவை. அவை ஒளிமுன் இருள்போல, மெய்யுணர்தலின் முன் கெடுதலின் 'அழித்துச் சார்தரா' என்றார். தீவினையேயன்றி நல்வினையும் பிறப்பிற் கேதுவாதலின் அதுவும் 'நோய்' எனப்படும். மேற் பிறப்பறும் என்றார், ஈண்டு அஃது அற்றவழி அவ்வுயிரான் நுகரக்கிடந்த வினைப்பயன்கள் யாது செய்யும் என்று ஐயம் நிகழின், அவை விளக்குப் புக இருள்மாய்ந்தாங்கு மாய்ந்தொழியும் என ஐயமறுத்தவாறு.

பிற்காலத்துச் சான்றோரான உய்யவந்த தேவ நாயனார் இக்குறளை மேற்கொண்டு, 'சார்புணர்ந்து சார்புகெட வொழுகி னென்றமையால்' என்றனர்.

ஈட்டிய வினைப்பயன்கள் கெடு மென்ற திது. (௯)

ஈட்டக் கடவ வினைப்பயனுமில்லை யென்பது வருங்குறள்:

௩௬0. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

(இ - ள்.) (மெய்யுணர்ந்தார்க்கு) காமம் வெகுளி மயக்கம் - விருப்பு வெறுப்பு அறியாமை (என்னும்), இவை மூன்றின் - இக் குற்றங்கள் மூன்றனுடைய, நாமம் கெட - பெயருங்கூடக் கெடுதலான், (அவற்றின் காரியமாக உண்டாகும்) நோய்கெடும் - துன்பங்களும் இல்லையாம்.

(இ - து.) மெய்யுணர்ந்தார்க்கு மூக் குற்றங்களும் ஒழிதலின் அவற்றான் வரும் துன்பங்களும் இல்லை.

வடநூலார், உயிரைப் பற்றும் குற்றங்கள் அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் என ஐந்தென்பர். இவற்றுள் அகங்காரம் அவிச்சையினும், அவா ஆசைக்கண்ணும் அடங்குதல் நோக்கி ஆசிரியர் காமம் வெகுளி மயக்கம் இவை மூன்று எனக் கொண்டார். நாமம் என்புழி இழிவுசிறப்பும்மையும், நோய் என்புழி இறந்தது தழீஇய எச்சவும்மையும் தொக்கனகெடின் எனச் செயின் என் வாய்பாட்டெச்சமாய்த் நிற்றற்பாலது கெட எனச் செய என் வாய்பாட்டெச்சமாய்த் திரிந்து நின்றது.

'காரணமாய குற்றங்களைக் கெடுத்தார் காரியமாய வினைகளைச் செய்யாமையின் அவர்க்கு வரக்கடவ துன்பங்களும் இல்லையாயிற்று. முன்கிடந்த துன்பங்களும் மேல் வரக்கடவ துன்பங்களும் இலவாதல் மெய்யுணர்வின் பயனாதலின் இவையிரண்டு பாட்டும் இவ்வதிகாரத்தவாயின. இவ் வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்த உடம்பும் அதுகொண்ட வினைப்பயன்களுமே என்பது பெற்றாம்.' (௧0)

இவ் வதிகாரத்தில், முதல் இரண்டு குறள்களால் மெய்யுணர்தற்கான காரணமும், அடுத்த இரண்டு குறள்களால் மெய்யுணர்வின் சிறப்பும், அதிகார நடுவாகி அடுத்து நின்ற குறளால் மெய்யுணர்வினது இலக்கணமும், அடுத்த மூன்று குறள்களால் மெய்யுணர்தலாமாறும், இறுதி இரண்டு குறள்களால் மெய்யுணர்தலின் பயனும் கூறப்பட்டன.

## ௩௭. அவாவறுத்தல்

அஃதாவது புலன்வழி ஓடும் உள்ளத்தை ஓடாது நிறுத்தல். யானெனதென்னும் பற்றினை யறுத்து மெய்யுணர்வு தலைப்பட்டா ரேனும் அவர்களுக்கு எடுத்த உடம்பும் அது கொண்ட வினைப்பயன் களும் நின்றனவன்றே. ஆதலின், துறக்கப்பட்ட புலன்கண்மேல் பல் பிறப்பிடைப் பயின்று வந்த பழைய பயிற்சி வயத்தான் ஒரோ வழி நினைவு செல்லுதல் கூடும். அதுவும் பிறவிக்கேதுவாமாதலின் கூடாதென்றற்கு இது கூறப்பட்டது. புலன்வழியோடுதற் கிட னின்றி மெய்ப்பொருளுணர்தலிலே இடைவிடாது உள்ளத்தை நிறுத்தினார்க்கன்றி இஃதாகாமையின் இது மெய்யுணர்தலின் பின் வைக்கப்பட்டது. எனவே அதிகார இயைபு பெறப்பட்டது.

இவ் வதிகாரத்தில், அவாவறுத்தற்கான காரணமும், அவா வறுத்தலின் சிறப்பும், அவாவறுக்குமாறும், அவாவறுத்தார் சிறப் பும், அவாவின் குற்றமும், அவாவறுத்தார் பெறும் பயனும் முறையே கூறுவான் வைதத ஆசிரியர் முதற்கண் அவாவறுத்தற்கான காரணங் கூறுகின்றார்:

௩௬௧. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

(இ - ள்.) எல்லா உயிர்க்கும் - (உடம்பெடுத்த) உயிர்கள் எல்லாவற்றிற்கும், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், தவாஅ - கெடாது (வருகின்ற), பிறப்பு - பிறவியை, ஈனும் வித்து - உண்டாக்கும் காரணம், அவா என்ப - அவாவாகும் என்று சொல்லுவர் (நூலோர்).

(இ - து.) அவா பிறவியை உண்டாக்கும்.

ஒன்றை விரும்பலும் உள்ளத்தின் வினையேயாதலால் அவ் வினைப் பயன் நுகர்ந்தன்றி ஒழியாது. அவ் விருப்பம் புலன்வழி நுகர்வதின்மேலாயின், அதன் பயனை நுகரப் புலனோடு கூடிய உடம்பினை எடுததே ஆகவேண்டும். ஆதலின் பிறப்பிற்கு அவா காரணமாயிற்று.

பிறவிக்குக் காரணம் அவாவென்பதிது. (௧)

பிறவாமைக்குக் காரணம் அவாவின்மை என்பது வருங்குறள்:

௩௬௨. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

(இ - ள்.) (மெய்யுணர்வு பெற்ற ஞானி ஒருவன்) வேண்டுங்கால் - (ஒன்றை) வேண்டினால், பிறவாமை வேண்டும் - பிறவாதிருத்தலையே வேண்டுவான் ; அது - அப் பிறவாமை, வேண்டாமை - (ஐம்புல நுகர்ச்சியை) வேண்டாமையை, வேண்ட - விரும்ப, வரும் - (அவனுக்குத் தானே) எய்தும்.

(இ - து.) மெய்யுணர்ந்தவன் விரும்பும் பிறவாமை அவாவறுத்தலினால் உண்டாம்.

மெய்யுணர்தலான் ஆம் பயன் நிலையான இன்பத்தை உணர்ந்து, அதை அடைய விரும்பி நிலையாத இன்பங்களை ஒழித்தல். பிறவி நிலையாத சிற்றின்பங்களுக்கும் துன்பங்களுக்கும் இடமாவது பிறவி ஒழியின் அவையும் ஒழியும். ஆகவே, மெய்யுணர்ந்தான் விரும்பற்பாலது பிறவாமையே என்பார் 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' என்றார். மற்று - செயப்படுபொருளாய் நின்ற பிறவாமையை எழுவாயாக மாற்றினமையின் வினைமாற்றின்கண் வந்தது.

இக் குறளை மேற்கொண்டு உய்யவந்த தேவநாயனார், தாமியற்றிய திருக்களிற்றுப்படியாரில், 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்' என்றார்.

அவா பிறப்பிற்குக் காரணமாதலினுனும் அவாவறுத்தல் பிறவாமைக் கேதுவாமாகலானும், பிறவாமையே வேண்டப்படுவதொன்றாகலானும் இவை யிரண்டு பாட்டும் அவாவறுத்தற்கான காரணம் கூறிய வாயின. (௨)

அவாவறுத்தலின் சிறப்புக் கூறுவது வருங்குறள்:

௩௬௩. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

(இ - ள்.) வேண்டாமை அன்ன - (புலன்நுகர்ச்சியை) விரும்பாமை போன்ற, விழுச் செல்வம் - மேலாகிய செல்வம், ஈண்டு இல்லை - (காணப்படும்) இவ்வுலகத்தில் இல்லை; யாண்டும் - (இவ் வுலகத்திலேயன்றி வானுலகங்களாகக் கூறப்படும் வேறு) எவ்வுலகத்திலும், அஃது ஒப்பது - அவ் வேண்டாமைக்கொப்பானது, இல் - இல்லை.

(இ - து.) அவாவறுத்தலுக்கு ஒப்பாகிய செல்வம் இவ்வுலகத்திலுமில்லை, வேறெவ்வுலகத்திலுமில்லை.

எல்லாராலுந் தெளியப்பட்டதாதலின் இவ்வுலகச் செல்வம் முற்கூறப்பட்டது.

அவாவறுத்தலின் சிறப்புக் கூறிய திது. (௩)

அவாவறுத்தலின் சிறப்பும் அஃது ஆமாறும் கூறுவது வருங்குறள்:

௩௬௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

(இ - ள்.) தூஉய்மை என்பது - (அறியாமையாகிய மாசினின்று நீங்கிய) தூய்மை (யாகிய வீடு) என்று சொல்லப்படுவது, அவாவின்மை - அவாவில்லாமை; அது - அவ்வவா இல்லாமை, வாஅய்மை வேண்ட - மெய்ப்பொருளை விரும்ப, வரும் - எய்தும்.

(இ - து,) அவாவறுத்தலாகிய தூய தன்மை மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்திருத்தலான் வரும்.

அவாவின்மை உயிரைப் பாசத்தினின்று நீக்கித தூய்தாக்கி வீடு சேர்த்தலின் வீடு தூயதும் அதனைத் தருவது அவாவின்மையும் ஆயின. காரியமாகிய தூய்மையைக் காரணம்போலவும் காரணமாகிய அவாவின்மையைக் காரியம் போலவும் கூறியது உபசார வழக்குப்பற்றி. மெய்ப்பொருளை விரும்புதலாவது மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்தல். மற்று குறிப்புவினைப்பெயர்ப் பயனிலையாய் நின்ற அவாவின்மையினை எழுவாயாக மாற்றினமையின் வினைமாற்றின்கண் வந்தது.

அவாவறுக்குமாறு கூறிய திக் குறள், (௪)

அவாவறுத்தார் சிறப்புக் கூறுவது வருங்குறள் :

௩௬௫. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

(இ - ள்.) அற்றவர் என்பார் - (பிறவி) அற்றவர் என்று சொல்லப்படுவார், அவா அற்றார் - அவா அற்றவர்களே ; மற்றையார் - (அவா அறாது ஏனைப் பற்றுக்களை அறுத்த) மற்றவர்கள், அற்றாக - (அவா அற்றார் பிறவியை முற்ற அறுத்த) அவ்விதமாக, அற்றது - (பிறவி) அற்றது, இலர் இல்லையாவர்.

(இ - து.) ஆசையற்றவர்க்கே பிறவி முற்ற அறும்; மற்றவர்க்கு அவ்வாறு அறாது.

எனவே ஆசையறாது ஏனைத் துறவறங்களெல்லாம் முற்றச் செய்தும் பயனில்லை யென்பதாயிற்று.

அவாவறுத்தாரது சிறப்புக் கூறிய திது, (௫)

அவாவின் குற்றங் கூறுவது வருங்குறள் :

௩௬௬. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

(இ - ள்.) ஒருவனை - (விரத மனைத்துங் காத்து ஞானமும் பெற்றான்) ஒருவனை, வஞ்சிப்பது - (அவன் எய்தற்பாலதாகிய வீட்டினின்று நீக்கிப் பிறவி வலையிற் சிக்குவித்து) வஞ்சிப்பது, அவா - ஆசையாம்; (ஆதலால்) அஞ்சுவது - (அவ்வவாவினை) அஞ்சிக்காப்பதே, அறம் - துறவறமாம்.

(இ - து.) துறவறம் பூண்டவனை வஞ்சித்துக் கெடுப்பது ஆசையாதலால் அதனை அஞ்சிக் காப்பதே துறவறமாம்.

ஒரும் என்பன இரண்டும் அசைநிலை. காத்தலாவது, அவ்வவாவுக்கு இடங்கொடாது இடைவிடாது மெய்ப்பொருளைச் சிந்தித் திருத்தல்.

அவாவின் குற்றங் கூறிய திது. (௬)

அவாவினை அறுத்தலான் ஆம் பயன் கூறுவன வரும் நான்கு குறள்கள் :

நூ௬௭. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

(இ - ள்.) (ஒருவன்), அவாவினை ஆற்ற அறுப்பின் - அவாவினை முற்றக் கெடுப்பானாயின், (அவனுக்கு) தவாவினை - (பிறவி வலையிற்பட்டுக்) கெடாமைக்கு ஏதுவான செயல், தான் வேண்டுமாற்றான் - தான் விரும்புமாறே, வரும் - உண்டாம்.

(இ - து.) ஆசை யொழிந்தால், வீட்டிற் கேதுவான செயல் தானே யுண்டாம்.

வீட்டிற்கேதுவான செயல் மேற்கூறிய மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்திருத்தல். வித்து மரத்திற்குக் காரணமாயும் மரம் வித்திற்குக் காரணமாயும் இருததல் போல மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்தலும் அவாவினை அற அறுத்தலும் ஒன்றற் கொன்று காரணமாய் நிற்றலின், முன் மெய்ப்பொருளை இடைவிடாது சிந்திக்க அவாவறும் (குறள் - நூ௬௨) என்று கூறி ஈண்டு

அவாவற மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்தலாம் என்பார் 'தவாவினை தான்வேண்டு மாற்றான் வரும்' என்றார். தவாவினை-காரியப் பொருட்டாய் நின்ற ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத் தொடர்.

அவாவறுத்தார்க்குப் பிறவியில்லை யென்ற திது. (எ)

ஆகவே, அவர்க்குத் துன்பமுமில்லை யென்பது வருங்குறள்:

௩௬௮. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

(இ - ள்.) அவா இல்லார்க்கு - அவா இல்லாதார்க்கு, துன்பம் இல்லாகும் - துன்பங்கள் (உண்டாதல்) இல்லையாம்; அஃது உண்டேல் - (துன்பங்கட்குக் காரணமான பிற காரணங்களெல்லாம் இல்லையானாலும்) அவ்வவா ஒன்றும் உண்டானால், (அதனால் எல்லாத் துன்பங்களும்), தவாஅது - முடிவின்றி, மேன்மேல் வரும் - இடைவிடாமல் உண்டாம்.

(இ - து.) அவாவறுத்தார்க்குத் துன்பங்கள் ஒருசிறிதும் உண்டாகா; அறாதார்க்குத் துன்பங்கள் முடிவின்றி வளரும்.

மேற்குறளில் அவாவறுத்தார்க்குப் பிறவியில்லை யெனக்கூறி, அதனாற் பிறவித் துன்பமும் இல்லாதொழிதல் ஈண்டுக் கூறினார். தவாது - கெடாது; அஃதாவது முடிவின்றி.

அவாவறுத்தார்க்குத் துன்பமில்லை யென்ற திது. (அ)

இன்பம் உண்டா மென்பது வருங்குறள்:

௩௬௯. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ-ள்.) அவா என்னும் - அவா என்று சொல்லப்படுகின்ற, துன்பத்துள் துன்பம் - மிக்க துன்பம், கெடின்-கெடுமாயின், ஈண்டும் - (வீடு பெற்ற வழியே யன்றி உடம்

போடு நின்ற) இவ்வுலகத்தினும், இன்பம் - இன்பமுறுதல், இடையறாது - இடை சிறிதும் நீங்காது.

(இ - நு.) அவாவற்றவர்க்கு இவ் வுலகத்தில்தானே நிலையான இன்பமுண்டாம்.

ஈண்டு துன்பத்துக்குக் காரணமாகிய அவா காரியமாக உபசரிக்கப்பட்டது. துன்பத்துள் துன்பமாவது, தன்னை நோக்கப் பிற துன்பங்களெல்லாம் இன்பமெனத்தக்கவாறு நின்ற மிகுந்த துன்பம். ஈண்டும் என்பதற்குப் பெருகும் எனப் பொருள்கொண்டு இடையறாது என்பதை எச்சமாக்கி அது கொண்டு முடியவைத்தலும் ஒன்று.

அவாவறுத்தார்க்கு இம்மையே நிலையான இன்பம் உண்டாமென்றறிது. (௯)

அவர்க்கு வீட்டின்பமும் ஒருதலையான் எய்தும் என்பது வருங் குறள் :

௩௭௦. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

(இ - ள்.) ஆரா இயற்கை - (ஒருகாலும்) நிரம்பாத இயல்புடைய, அவா - ஆசையினை, நீப்பின் - (ஒருவன்) நீக்குவானாயின், அந்நிலையே - (அந்நீப்பு அவனுக்கு) அப்பொழுதே, பேரா இயற்கை - அழியாத இயல்பிற்றாய வீட்டின்பத்தை, தரும் - கொடுக்கும்.

(இ - நு.) அவாவறுத்தார் வீட்டின்பம் எய்துதல் நிச்சயம்.

ஆசை நிரம்பாமையாவது மேன்மேல் வளர்தல். அழியாத இயல்பினதாகியதால் வீட்டின்பத்தைப் 'பேராவியற்கை' என்றார். அது பெறுதல் ஒருதலை யென்பார் 'அந் நிலையே தரும்' என்றார். இக்கருத்தானே பிற்காலத்துச் சான்றோரான ஆழ்வாரும்,

'நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந் திரிய மெல்லாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா
ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றா
லன்றே யப்போ தேவீடும்
அதுவே வீடு வீடாமே'

என்றருளிச் செய்வா ராயினர்.

இவை நான்கு பாட்டானும் அவாவறுத்தார் எய்தும் பயன் கூறப்பட்டது. அப்பயனாவது மக்கட் பிறப்பின் முடிவான பயனாகிய வீடடைதலே என்பதும் கூறப்பட்டது. (௧௦)

இவ் வதிகாரத்தில், முதல் இரு குறள்களால் அவாவறுத்தற்கான காரணமும், அடுத்த குறளால் அவாவறுத்தலின் சிறப்பும், அடுத்த குறளால் அவாவறுத்தற்கான நெறியும், அடுத்த குறளால் அவாவறுத்தார் சிறப்பும், அடுத்த குறளால் அவாவின் குற்றமும், இறுதி நான்கு குறள்களான் அவாவறுத்தலின் பயனும் கூறப்பட்டன.

இவ்வாற்றான், வீடுபயத்தற் சிறப்பிற்றாய துறவறமாவது, அருளுடைமை யடியாகப், புலான்மறுத்தல், தவம், கூடா வொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை யிறுதியாகிய விரதங்களை மேற்கொண்டு அவ்வாற்றாற் பிறந்த ஞானத்தால், நிலையாமையறிந்து, துறவு பூண்டு, மெய்யுணர்ந்து, அவாவறுத்த லாயிற்று.

---

## ௪. ஊழியல்.

அஃதாவது அறவினையும் அறமல்வினையுமாகிய இருவினைப் பயன் செய்தவனையே அணுவுந் தவறாது சென்றடையும் முறைமையினைக் கூறும் இயல். ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஒருபொருட் சொற்கள். இல்லறமுந் துறவறமும் ஊழ்வழியாகி ஊழ்வழி வந்து ஊழின் முடிவனவாகலின் இஃது அவற்றின்பின் வைக்கப்பட்டது. அல்லதூஉம், மக்கள் செய்யும் அறவினைப் பயன் தெய்வத்தை நிமித்தகாரணமாகவும் ஊழைத் துணைக்காரணமாகவுங் கொண்டு எய்தப்படுதலின், அறப்பாலின் முதற்கண் தெய்வத்தையும் இறுதிக்கண் ஊழையும் நிறுத்தினாரென்றலுமாம். அறக் கடவுள் எனப்பட்டு ஊழ் தெய்வமாதலும் ஈண்டு நோக்கற்பாலது. அல்லதூஉம், அறத்தின் காரியமாகிப் பொருள் இன்பங்கட்குக் காரணமாகி நிற்கும் இயைபுநோக்கி அறப்பாலுக்கும் பொருளின்பப் பால்களுக்கும் இடையே வைக்கப்பட்டதெனலுமாம்.

### ௩௮. ஊழ்

இதன் பொருள் முன்னே சொல்லப்பட்டது. அவாவறுக்க அதனோடனறுவது ஊழாதலால் இஃது அவாவறுத்தலின்பின் வைக்கப்பட்டது. எனவே அதிகார இயைபு பெற்றும்.

இவ் வதிகாரத்தில், பொருட்குக் காரணமாகிய ஊழினையும், இன்பத்துக்குக் காரணமாகிய ஊழினையும், அவ் விருவகை ஊழின் வலியினையும் முறையே கூறுவான் வைத்த ஆசிரியர் முதற்கண் பொருட்குக் காரணமாகிய ஊழ் கூறுகின்றார்:

௩௭௧. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(இ - ள்.) (ஒருவனுக்குக்) கைப் பொருள்—, ஆகூழால்- உண்டாதற்குக் காரணமாகிய ஊழால், அசைவின்மை - சோம்பலின்மை, தோன்றும் - உண்டாகும்; போகூழால் - (அப் பொருள்) அழிந்து போதற்குக் காரணமான ஊழால், மடி - சோம்பல், தோன்றும் - உண்டாம்.

(இ - து.) பொருளுண்டாக விதியிருந்தால் முயற்சியும், பொருள் அழிய விதியிருந்தால் சோம்பலும் உண்டாகும்.

ஆகு ஊழ் போகு ஊழ் என்பன வினைத்தொகைத் தொடராய்ப் புணர்ந்து நின்றன. அசைவு - மடி - சோம்பல். பொருள் ஆதற்கும் அழிதற்கும் காரணமான முயற்சியினையும் சோம்பலினை யும் ஊழே உண்டாக்கும் என்பது கருத்து.

முயற்சியும் சோம்பலும் ஊழாலு மென்ற திது. (க)

அறிவும் அறியாமையும் ஊழாலு மென்பது வருங்குறள்:

௩௭௩. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

(இ - ள்.) (ஒருவனுக்கு) அறிவு - (பொருள் செயற்குக் கருவியான) அறிவு (இருக்குமாயினும்), இழவூழ் - (பொருளை) இழத்தற்குக் காரணமான ஊழ், உற்றக்கடை - (வந்து) பொருந்தியபோது, பேதைப்படுக்கும் - அவ்வூழ் (அவ்வறிவினை) அறியாமையாக்கும்; ஆகலூழ் - (பொருள்) உண்டாதற்குக் காரணமான ஊழ், உற்றக்கடை - (வந்து) பொருந்தியபோது, அகற்றும் - (அவ்வூழ் அவ்வறிவினை) அகலச் செய்யும்.

(இ - து.) ஊழே ஒருவனை அறிவுடையவனாகவும் அறிவில்லா தவனாகவும் செய்யும்.

பொருள் என்பது மேலைக் குறளால் அதிகாரப்பட்டு வந்தது. உற்றக்கடை யென்பது மூன்றுங் கூட்டப்பட்டது. பொருள்

செயற்கு முயற்சியே யன்றி அறிவுங் காரணமாயிருத்தல்பற்றி மேற் குறளில் முயற்சியினையும் இக்குறளில் அறிவினையும் எடுத்தோதினார்.

ஊழ் இயற்கை யறிவையும் வேறுபடுக்குமென்றது இது. (௨)

செயற்கையறிவையும் கீழ்ப்படுக்கு மென்பது வருங்குறள்:

௩௭௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

(இ - ள்.) (பேதைப்படுக்கும் ஊழுடையானொருவன்) நுண்ணிய நூல் பல - நட்பமான பொருள்களை உணர்த்தும் நூல்கள் பலவற்றையும், கற்பினும் - கற்றானாயினும், மற்றும் - பின்னும், தன் உண்மை - தன் ஊழினாலாகிய, அறிவே - பேதைமையறிவே, மிகும் - மேற்படும்.

(இ - து.) பலநூல்களைக் கற்றாலும் நல்லூழ் இல்லையானால் அறியாமையே முற்படும்.

பொருளினது நுண்மை நூலின்மேல் ஏற்றப்பட்டது. பேதைமை அறிவாவது மயக்க அறிவு. அது மிகுதலாவது, வேண்டுங் காலத்து நூல்வாயிலாகக் கற்ற அறிவு வந்து கைகொடுக்காது மறையத் தனக்கு இயற்கையின் ஊழானமைந்த மயக்க அறிவே முற்படுதல். 'காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா' (சிந்தாமணி - கனகமாலையா ரிலம்பகம் - ௭௬) என்புழியும் கற்றவை கைகொடாவாதல் காண்க.

செயற்கை யறிவும் ஊழான் மறையுமென்றது இது. (௩)

அறிவு பொருள்செயற்குத் துணைக்காரணம் ஆமேனும் பொருள் ஆவதும் அழிவதும் ஊழால் என்பது வருங்குறள்:

௩௭௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

(இ - ள்.) உலகத்து —, இயற்கை - (ஊழானாகிய) இயற்கை, இரு வேறு - வேறு வேறான இரண்டு வகை;

(ஆகலான்), திரு - செல்வமுடையாராதலும், வேறு - வேறு, தெள்ளியராதலும் வேறு - அறிவுடையாராதலும் வேறு.

(இ - து.) விதிவசத்தால் அறிவிலார் செல்வராயும் அறிவுடையார் வறியராயும் இருப்பர்.

பொருள் செயற்கு அறிவும் கற்றற்குப் பொருளும் துணைக் காரணமேனும், ஊழ்வலியால், வறியர்க்கமைந்த அறிவு அவரைச் செல்வராக்குதற்குப் பயன்படாது அறிவிலாரைச் செல்வ ராக்குதற்கும், அறிவிலார்க் கமைந்த செல்வம் அவர் அறிவைக் கல்வியால் வளர்த்தற்குப் பயன்படாது வறியர் அறிவைக் கல்வியால் வளர்த்தற்கும் பயன்படு மென்பதாயிற்று.

செல்வராதல் அறிவினானன்று என்றது. (௪)

தொழில் முதலிய பிறவற்றானு மன்றென்பது வருங்குறள்:

௩௭௫. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(இ - ள்.) செல்வம் செயற்கு - பொருளை ஆக்குதற்கு, நல்லவை யெல்லாம் - ஆவன எல்லாம், தீயவாம் - (ஊழ் வயத்தான்) ஆகாதனவாய் (நின்று அப்பொருளை ஆக வொட்டாமல் அழிக்கும்); தீயவும் - ஆகாதனவும், நல்ல வாம் - (ஊழ்வயத்தான்) ஆவனவாய் (நின்று அப்பொருளை ஆக்கும்).

(இ - து.) ஊழ்வலியால் செல்வத்திற்கு ஆவன ஆகாதன வாயும், ஆகாதன ஆவனவாயும் மாறும்.

பொருள்செயற்கு ஆவன அறிவும் முயற்சியுமேயன்றித் தொழில் காலம் இடம் கருவி முதலிய பிறவுமுண்டு. அவை யெல்லாம் இருப்பினும் போகூழாயின் பொருள் அழியும்; அவை யொன்று மில்லையேனும் ஆகூழாயின் பொருள் ஆகும் என்ப தாயிற்று. ஆகவே, ஊழ் தொழில் முதலிய துணைக்காரணங்கள் பிறவற்றையும் வேறுபடுக்கும் என்பது பெறப்படும்.

செல்வமாதல் துணைக்காரணங்களா லன்று என்றது இக் குறள். (௫)

காவலானு மன்றென்பது வருங்குறள் :

௩௭௬. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

(இ - ள்.) பால் அல்ல - ஊழ் (காரணமாகத் தமக் குரியவை) அல்லாதவை, பரியினும் - வருந்திக் காப்பினும், ஆகாவாம் - (தம்மிடத்து) நில்லாவாம், தம - (ஊழ்காரண மாகத்) தமக்குரியவை, உய்த்து-(புறத்தே) கொண்டுபோய், சொரியினும் - உகுத்தாலும், போகா - (தம்மைவிட்டுப்) போகாவாம்.

(இ - து.) வருந்திக் காக்கும் பொருள் அழிவதும் காவாத பொருள் நிற்பதும் ஊழினல்.

செல்வம் நிலைப்பதும் அழிவதும், முயற்சி, அறிவு, தொழில், காலம் முதலிய துணைக்காரணங்களாலும் காத்தலினலும் ஆவன வல்ல என்பதாயிற்று.

இவை ஆறுபாட்டாலும் பொருட்குக் காரணமாகிய ஊழின் வலி கூறப்பட்டது. (௬)

இன்பங்கள் உளவாதற்கும் இலவாதற்கும் காரணமான ஊழின் வலி கூறுவன வரும் மூன்று குறள்கள் :

௩௭௭. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(இ - ள்.) கோடி - (ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருள்கள்) கோடியை, தொகுத்தார்க்கும் - (முயன்று) சேர்த்துவைத்தவர்க்கும், வகுத்தான் - தெய்வம், வகுத்த வகையல்லால் - வகுத்த வகையா லல்லாமல், துய்த்தல் - (தாம் சேர்த்தவற்றை) நுகர்தல், அரிது - இல்லையாம்.

(இ - து.) அனுபவிக்கத்தக்க பொருள்கள் பலவற்றைச் சேர்த்துவைத்தாலும் விதியினளவாகவன்றி அவற்றை அனுபவித்தல் இயலாது.

தெய்வம் அவரவர் செய்தவினை அவரவர்க்கே என வகுத்து வைத்திருத்தலின் தெய்வத்தை வகுத்தான் என்றார். ஈண்டுத் தெய்வமாவது ஊழ். 'இசைத்தலு முரிய வேறிடத்தான' (தொல் - சொல் - கிளவி - ருக) என்பதால் உயர்திணையாகச் சொல்லப் பட்டது. தொகாதார்க்கேயன்றித் தொகுத்தார்க்கும் எனப் பொருள் தருதலின் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

பொருள் சேர்த்தும் அதனாலாம் இன்பத்தை அனுபவித் தற்கும் ஊழ் வேண்டுமென்றது. (எ)

அஃதில்லையேல், துன்பத்தினின்று தப்புதற்கும் ஊழ் வேண்டுமென்பது வருங்குறள் :

௩௭அ. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
ஊட்டா கழியு மெனின்.

(இ - ள்.) துப்புரவு இல்லார் - (வறுமையான் இன்ப) நுகர்ச்சி இல்லாதவர்கள், உறற்பால - (தாம்) அடைதற்பால வாகிய துன்பங்களை, ஊட்டா - (ஊழ்) அடைவியாது, கழியுமெனின் - ஒழியுமானால், துறப்பார் - துறக்குங் கருத் துடையாராவர்.

(இ - து.) வறியர் துறவு மேற்கொள்ளாது வறுமைப் பிணி யான் வருந்துவதற்குக் காரணம் ஊழே.

துறப்பார் - எதிர்கால வினைமுற்று. இல்லார் எதிர்மறை குறிப்புவினைப் பெயர். 'யாதனின் யாதனி னீங்கியா னோதல், லதனி னதனி னிலன்' (குறள் - ௩௪௧) என்பதாகவும், தம் கருத்தின் றிப் பொருள்கள் பலவும் தம்மி னீங்கியனவாகவும், அவர் அவற்றின் மேற் பற்றுவைத்துப் பிறர் இல்லத்து 'உப்பிற்குங் காடிக்குங் கூற் றாய்' (குறள் - ௧௦௫௦) வறுமைப் பிணி யுழத்தல், ஊழின் வலியான் என்பது எஞ்சி நிற்றலான் 'மன்' என்னு மிடைச்சொல் ஒழியிசைக்

கண் வந்தது. 'கழிவே யாக்க மொழியிசைக் கிளவியென் - றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே' (சொல் - இடை - ௬) என்பது தொல்காப்பியம்.

துன்பநுகர்ச்சி ஊழான் அமைந்ததாகையால் அதைத் தப்புதல் முடியா தென்ற திது. (அ)

ஆகவே, துன்பங்களை வெறுப்பதிற் பயனில்லை யென்பது வருங் குறள் :

ஙஎகூ. நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

(இ-ள்.) நன்று ஆங்கால் - நல்வினை விளையும்போது (அவ் வினைவான இன்பங்களை நீக்கும் வகைதேடாது), நல்லவா - (அவற்றை) நல்லனவாக (க் கருதி இயைந்து), காண்பவர் - நுகர்பவர், அன்று ஆங்கால் - (நல்வினை) அல்லாததீவினை விளையும்போது, (அவ் விளைவான துன்பங்களை உள்ளமியைந்து அனுபவியாது), அல்லற் படுவது - (உள்ளம்) துன்பமுறுதல், எவன் - ஏன்?

(இ - து.) நல்வினையின் பயனை மனமொப்பி அனுபவிப்பவர் தீவினையின் பயனை வெறுத்தல் அறிவன்று.

தமக்குறுவன தாமே செய்த இருவினையின் பயனே யன்றி வேறல்ல. ஆகவே, இருவினைப் பயனும் மனமொப்பி அனுபவிக்கற் பால; அனுபவியாது ஒழிதலும் இயலாது. ஆகவும் ஒன்றை மன மொப்பி அனுபவித்து, மற்றதை அனுபவிக்கும்போது மன மொப் பாது துன்புறுதல் அறிவன்று என்பதாம். இக் கருத்தானே பிற்காலத்துப் புலவர் ஒட்டக்கூத்தரும்,

'இன்பதது ளிறுமாந்து தோணேக்கி யீன்றமத
துன்பத்து ளழுந்துவார் தொல்லுலகி லறியாதார்
இன்பத்துன் பங்களை யெய்தியபோ திவையெல்லா
முன்பற்று விடாதவினைப் பயனென்பர் முழுதுணர்ந்தோர்'

என்பாராயினர்.

இவை மூன்று பாட்டானும் இன்பதுன்பங்கட்குக் காரணமான ஊழின்வலி சொல்லப்பட்டது. (௯)

பொருளின்பங்கட்குக் காரணமான ஊழின் வலியைப் பொதுவகையாற் கூறுவது வருங்குறள் :

௩௮௦. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) ஊழின் - ஊழினும், பெருவலி - மிக்க வலிமையுடையன, யாவுள - (வேறு) எவை உள்ளன? (ஒன்றுமில்லை. ஆதலால்,) மற்றொன்று - (அதனை விலக்குதற் பொருட்டு அதற்குமாறான) பிறிதொன்றை, சூழினும் - ஆராயினும், தான் - அவ்வூழ்தானே, முந்துறும் - (அச்சூழ்ச்சி வாயிலாகவேனும் பிறிதொரு வாயிலாகவேனும் வந்து அச் சூழ்ச்சியின்) முற்பட்டு நிற்கும்.

(இ - து.) மதிவலியின் விதிவலி பெரிது.

பெருவலி - அடையடுத்த பண்பாகு பெயர். 'சூழ்தல் - பலருடனும் பழுதற எண்ணுதல்' என்றார் பரிமேலழகர். சூழினும் - என்பதில உம்மை, செய்யின் முந்துறுதலே யன்றிச் சூழினும் முந்துறும் எனப் பொருள் தருதலால, இறந்தது தழீஇய எச்சவும்மை.

இவ் வதிகாரத்தில் முதல் ஆறு குறள்களால் பொருள்பற்றி ஊழின் வலியாமாறும், அடுத்த மூன்று குறள்களால் இன்பம் பற்றி ஊழின் வலியாமாறும், இறுதிக் குறளால் பொதுவகையான் ஊழின் வலியாமாறுங் கூறப்பட்டன. (௰)

ஊழியன் முற்றும்.

ஊழியலொடு முடிந்த இவ் வறத்துப்பாலிற் பாயிரவியலாற் கடவுளானாய வுலகம் உயர்ந்தோர் வகுத்த அறத்தின் வழியதாதலும், அடுத்து நின்ற இல்லறவியலான் அவ் வறத்தின் முற்பகுதியாய்ச் சிறந்துநிற்பது இல்லற மாதலும், அடுத்து நின்ற துறவறவியலான் அறத்தின் முடிவான பயனாய் எஞ்சிநின்ற பகுதி துறவற மாதலும், இறுதியினின்ற ஊழியலான் அறத்தாறு ஊழாதலும் கூறப்பட்டன.

'பாயிர நான்கில் லறமிருபான் மூன்றே
தூய துறவறமொன் றூழாக—வாய
வறத்துப்பா னால்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால வள்ளுவனார் தேர்ந்து.'

எறிச்சலூர் மலாடனார்.

அறத்துப்பால்
முற்றும்.

# திருக்குறள் அறத்துப்பால்
## பாட்டு முதற்குறிப்பகராதி

### அ

---

# அறத்துப்பால் பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| கஎ | க௦ | தொல்-சொல்-உரி கூசா | தொல்-சொல்-உரி கூஅ |
| உய | உஅ | மிகாததற்குச் | மிகாததற்குக் |
| உச | உக | தொருத்துக் | தொகுத்துக் |
| சங | கஅ | இழுக்கர | இழுக்கா |
| சசா | உரு | பிறவி துன்பங் | பிறவித் துன்பங் |
| ௱ | கச | உதவி உதவிவரைத் தன்று | உதவிவரைத் தன்று உதவி |
| ௱ | கச | செய்யப்பட்டார் | செயப்பட்டார் |
| ௱ரு | கஉ | வயப்பட்டதாக | வயப்பட்டதாக லானும் |
| ௱உய | உச | (க) | (கூ) |
| ௱உங | க௦ | எக்சத்திற்கும் | எச்சத்திற்கும் |
| ௱உசா | கச | நடுவோரீஇ | நடுவொரீஇ |
| ௱உஅ | ச | சன்றோர்க் | சான்றோர்க் |
| ௱ஙசா | உஉ | சுட்புண் | சுட்டபுண் |
| ௱ருக | உய | செல்தலுமாம் | செய்தலுமாம் |
| ௱சாங | ங | தன்னிடதே | தன்னிடத்தே |
| ௱சாச | கரு | குகள் | குறள் |
| ௱சாரு | உக | வாயினுற் | நாவினுற் |
| ௱எஉ | ச | அறுக்காறு | அழுக்காறு |
| ௱எங | உஅ | பெருகுதலினி னின்று | பெருகுதலி னின்று |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௱௭௪ | ௩ | இவ்லை | இல்லை |
| ௱௮௩ | ௩ | வெஃகாதர்க்கு | வெஃகாதார்க்கு |
| ௱௮௪ | ௯ | அல்லா தூஉம் | அல்ல தூஉம் |
| ,, | ௧௫ | முதற்கட் றங்கூறாமை | முதற்கட் புறங் கூறாமை |
| ௱௮௯ | ௨௫ | அறியாதாவர் | அறியாதவர் |
| ,, | ௨௮ | புறங் றுவார் | புறங்கூறுவார் |
| ௱௯௰ | ௧௭ | ஏதிலர் | ஏதிலார் |
| ௨௱ | ௨௬ | அல்லா தூஉம் | அல்ல தூஉம் |
| ௨௨௦ | ௨௭ | ௨௧௦ | ௨௨௦ |
| ௨௨௯ | ௨௫ | நிறைகக்வேண்டி | நிறைக்கவேண்டி |
| ௨௬௫ | ௨௪ | தலைப்பட்டார்க்கு | தலைப்பட்டவர்க்கு |
| ௩௱௭ | ௧௦ | அறிவுறுக்கவும் | அறிவுறுத்தவும் |
| ௩௧௨ | ௩ | பட்டாலும் | பாட்டாலும் |
| ௩௧௫ | ௧௮ | தொரல்காப்பியனார் | தொல்காப்பியனார் |
| ௩௩௫ | ௧௦ | பற்றாறாமையின் | பற்றறாமையின் |
| ,, | ௨௧ | வராக்காலத்து | வாராக்காலத்து |